**திரிசிராமலைக் கோவை**

ஆசிரியர்
**அமிர்தம். சுந்தரநாதபிள்ளை**
திருச்சிராப்பள்ளி




உரையாசிரியர்
குன்றக்குடி ஆதீனப்புலவர். தமிழாகரர்.
சைவத்தமிழ்மணி. சைவத்தமிழ் அறிஞர்.
சித்தாந்தச் செல்வர்
வித்துவான். **க. கதிரேசன்.** எம். ஏ; பி.எட்,
பூவாளூர். 621 712.
அலைபேசி : 098651 93754.


**திரிசிராமலைக் கோவை - தோரணவாயில்**

திரிசிராமலை என்பது இன்றைய திருச்சிராப்பள்ளியின் நடுவில் உள்ள மலையைக் குறிக்கும். இதனை அகநானூறு ;

" கறங்குஇசை விழவின் உறந்தைக் குணாது

நெடும்பெரும் குன்றத்து "  ( 4. 14 - 15 )
என்றுகுறிக்கிறது. இம்மலை மூன்று அடுக்குகளில் கோயிலுடையது. தரைத்தளத்தில் அருள்தரு மாணிக்கவிநாயகர் திருக்கோயிலும், நடுத்தளத்தில் அருள்தரு செவ்வந்தி விநாயகர், அருள்தரு மட்டுவார்குழலம்மை உடனாய தாமானவர் என்னும்தாயானஈசர் திருக்கோயிலும், உச்சியில் அருள்தரு உச்சிப்பிள்ளையார் திருக்கோயிலும் அமைந்துள்ளன. தரைத்தளத்திற்கும் நடுத்தளத்திற்கும் இடையில் முறையேஸ்ரீ மௌன மடமும் அடுத்து நூற்றுக்கால்மண்டபமும் ; இடைத்தளத்திற்கும் உச்சித்தளத்திற்கும் இடையில் மகேந்திரவர்ம பல்லவனின் குடைவரையுமுள்ளன.

அருள்தரு தாயுமான ஈசனைத் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், மாணிக்கவாசகர், ஐயடிகள் காடவர்கோன், திருப்புகழில் அருணகிரியார், தாயுமான அடிகள் முதலியோர் போற்றிப்பரவியுள்ளனர். சைவ எல்லப்பநாவலர் இயற்றிய செவ்வந்திப் புராணம் இத்தலச்சிறப்பினை எடுத்துரைப்பது. இம்மலையில் எழுந்தருளியுள்ள அருள்தரு தாயுமானவரைப் போற்றுன மதுரை நான்காம் தமிழ்ச்சங்கத்தின் செந்தமிழ்ப்பிரசுரமாக வெளிவந்த **சிராமலைக்கோவை**. திரிசிராப்பள்ளிக் குன்றின் குடைவரை மண்டபத்தில் கல்வெட்டில் வரையப்பெற்ற **திரிசிராமலை அந்தாதி** ( மு. இராகவ ஐயங்கார் அவர்கள் உரையுடன் கி. பி. 2014 இல் வெளிவந்தது. இந்நூலினை எனக்கு 24. 12. 2014இல் உவந்தளித்தவர்கள் திருச்சிராப்பள்ளி மௌனமடத்தின் அன்றைய கட்டளைத்தம்பிரான் சுவாமிகள் வணக்கத்திற்குரிய முனைவர் கயிலை குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் ( - வணக்கத்திற்குரிய தருமைஆதீனம் இன்றைய 27 ஆவதுகுருமகாசந்நிதானம் அவர்கள் ஆவார்கள்.) **திரிசிராமலைக்கோவை** முதலியன திரிசிராமலைக்கோவையாம் இந்நூலினையும் எனக்கு 29 - 12 - இல் வாழ்த்துடன் உவந்தளித்தவர்களும் இவர்களே.

திரிசிராமலைக் கோவை என்னும் இந்நூலின் ஆசிரியர் சிராமலையில் வாழ்ந்த தமிழறிஞர் அமிர்தம் பிள்ளையின் திருமகன் சுந்தரநாதம் பிள்ளை ஆவார். தந்தையாரிடம் மிகச்சிறப்பாகத் தமிழ்கற்றுத் திருச்சிராப்பள்ளியில் கல்லூரிப் பேராசிரியராக விளங்கியவர். இவர் இயற்றிய பிறநூல்கள் " ஆதிவயலூர் வெண்பா அந்தாதி, திருவாவடுதுறை ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகர்மீது " பொன்விடு தூது " பெத்தாச்சி செட்டியார் மீது " புலவர் ஆற்றுப்படை " ஆகியனவாகும்.

திரிசிராமலைக்கோவை என்றும் இந்நூலுக்குச் சாத்துக்கவி வழங்கியவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள், திருப்பாதிரிப்புலியூர் ஞானியாரடிகள் என்று போற்றப்பெறும் ஸ்ரீ ல ஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள், காஞ்சிபுரம் மகாவித்துவான் ஸ்ரீமான் சி. இராமசாமி நாயுடு போன்ற பெரும்புலமையர் பலர் என்பதொன்றே இக்கோவையின் சிறப்பை உணர்த்தும்.

இந்நூலாசிரியரைப் போற்றிப்புரந்தபுரவலர், வள்ளல் T. R. இராமநாராயணன் பிள்ளை அவர்கள் தஞ்சைமாவட்டம் தென்பாதி கிராமத்தில் பிறந்தவர். இவர் தமிழ் ஆங்கிலம் இரண்டிலும் நல்ல புலமையும் பெற்றவர், அன்றைய எஸ். பி. ஜி கல்லூரியில் ( இன்று பிஷப் ஹீபர் கல்லூரி ) Vernacular Translator ஆகப் பணிபுரிந்தார். பின்னர் தூயவளனார் கல்லூரியில் சிறிதுகாலம் தமிழாசிரியராகப் பணியாற்றினார். இவரது காலம் 1876 - 31- 10 - 1931. கம்பருக்குச் சடையப்ப வள்ளல் வாய்த்தது போல் இந்நூலாசிரியர்க்கு வாய்த்தவர் இராமநாராயணன் பிள்ளை ஆவார். எனவே இவ்வள்ளலின் உயர்குணங்களையும் தனிச்சிறப்புகளையும் இந்நூலெங்கும் பரக்கக் காணலாம்.

பெரும்புலமையராம் இவர் தனது பெயர், பணி இவற்றை இந்நூலின் பா 261இல்
. " கூடல் அழகர்சா மிப்பேர்ப் புலவன் குறித்துபணி
நாட விரும்பும் சிராமலை அண்ணல் "  என்று குறிக்கிறார்.

சொற்சுவை, பொருட்சுவை, அணிநலன்கள், தொடைநலன்கள் முதலியபல்வகைச் சிறப்புகளுடன் மணக்கும் இந்நூல் 1917 ஆம் ஆண்டில் முதல்பதிப்பாக வெளிவந்தது என்றும், பின்னர் நூல்பிரதி கிடைக்காத நிலையில் அரிதின் முயன்று தேடி ஒரேஒருபிரதி மட்டும் கிடைத்ததாகவும் அதன் அருமை கருதிச் செப்பம்செய்து தருமாறு அருமை நண்பர் திருக்குறள் செம்மல், புலவர் திரு மு. வைத்தியநாதன் அவர்களைகேட்டுக்கொண்டு அவர் செப்பம்செய்துதர இதனை,அருமை நண்பர் உறையூர் வாழ் திருக்குறள் சு. முருகானந்தம் அவர்கள் செப்டம்பர், 2009 இல் தமது பதிப்பகத்தில் வெளியிட்டு மகிழ்ந்துள்ளார்.

அவ்வெளியீட்டில் நூலாசிரியர் அமிர்தம். சுந்தரநாதம்பிள்ளை அவர்களைஆதரித்தும், முதல் பதிப்பு வெளிவரப் பொருள்தந்தும் ஊக்குவித்த வள்ளல் டி. ஆர். இராமநாராயணன் பிள்ளை, இவரது மகனும் இரண்டாம்பதிப்பாக வெளிவர உதவியவரும் ஆகிய டி. ஆர் சீனிவாசன், மற்றும் டி. ஆர். திருவேங்கடம் பிள்ளை, டி ஆர் ரெங்கராசன் ஆகியோரின் புகைப்படங்கள், வள்ளல் - புரவலர் டி.ஆர். இராமநாராயணன் பிள்ளை, நூலாசிரியர் அமிர்தம். சுந்தரநாதம்பிள்ளையின் வாழ்க்கைக்குறிப்பு ஆகியன இடம்பெற்றுள்ளன.

மேலும் அதில் சிராமலைக்கோவை நூன்முகம், ஸ்ரீலஸ்ரீ ஞானியாரடிகள், காஞ்சீபுரம் மகாவித்துவான் ஸ்ரீமான். சி. இராமசாமி நாயுடு அவர்கள், சித்தாந்த சரபம் அட்டாவதானம் சிவஸ்ரீ கல்யாண சுந்தர யதீந்தர சுவாமிகள், திராவிடன் பத்திரிகை அதிபர் ஸ்ரீ டி. பக்தவச்சலம் பிள்ளை, சோழமாதேவி வித்துவன் ஸ்ரீ.அ. குப்புசாமி பிள்ளை, ஸ்ரீரங்கம் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் பிரம்மஸ்ரீ குருசுப்பிரமணிய ஐயர், தஞ்சை இலக்கணப்பெரும்புலவர் ஸ்ரீ மு. கோவிந்தசாமி பிள்ளை, திருச்சி செயிண்ட் ஜோசப் கலாசாலைத் தமிழ்ப்பேராசிரியர் ஸ்ரீ சடகோப ராமானுஜாச்சாரியார் , பழனி ஸ்ரீ சுப்பிரமணிய பாகவதர் ஆகியோர் தந்த சாத்துக்கவிகள் இடம்பெற்றுள்ளன.

வள்ளல் டி. ஆர். ராமநாராயணபிள்ளை தன்னை ஆதரித்த வகையை, இந்நூலின் இறுதியில் வாழ்த்துக்குப்பின் இந்நூலாசிரியர் அமிர்த. சுந்தரநாதன்பிள்ளை எழுதிக் கையொப்பமிட்டுத்தந்துள்ள காய் - காய் - காய் - காய் - மா - தேமா என்ற கட்டளையில் அமைந்த விருத்தம் தெளிவாக்கும்.

இத்துணைச் சிறப்புகளும் ஒருசேரப்பெற்ற இந்நூலினை, எனக்கு வாழ்த்துஎழுதித் தந்தருளிய தருமை ஆதீன 27 ஆவது குருமகாசந்நிதானம் அவர்களின் பொன்னாதிருவடிகளை வணங்கி மகிழ்கிறேன்.

இந்நூலினை; நூலாராய்ச்சி, செய்யுள்களைச் சந்திபிரித்து, குறிப்புரை, பொழிப்புரை, இன்றியமையா விளக்க மேற்கோள், அணிசுட்டல், இலக்கணக்குறிப்பு ஆகியன தந்து அமைத்துள்ளேன்.

குருவருளுக்கும் திருவருளுக்கும் என்வணக்கங்கள் உரியன.

அன்புடன்
வித்துவான் க. கதிரேசன். என். ஏ; பி.எட்
குன்றக்குடி ஆதீனப்புலவர்
பூவாளூர். 621 712

****************************************************

## திரிசிராமலைக்கோவை நூல் ஆராய்ச்சி.

( 1 ) இத்தலத்து இறைவன் அருள்தரு மட்டுவார்குழல் அம்மை உடனாய தாயுமானவர். மெய்ப்பொருள் நோக்கில் உயிர்க்குலத்துக்குத் தாயாக விளங்குகிறவன், வரலாற்று நோக்கில் இரத்தினாவதி என்ற வணிகப் பெண்ணுக்கு மகப்பேறு பார்க்க அப்பெண்ணின் தாயாகவந்து பேறுபார்த்தான் என்ற தலபுராணச்செய்தி,

" வணிகன் மனைக்குஒரு தாயாய் மருத்துவம் வந்துஅமைத்த
கணிநற் சிராமலை நாதன் " ( பா. 8 )
" தருக்கொள் சிராமலைத் தாயான செல்வர் " ( பா. 293 )
" தாயான செல்வன் சிராமலை யன்ன " ( பா. 322 )
" பெண்ணார் மகிழப் பெருந்தாய் எனவந்த பெற்றியனே " ( பா. 365 )

என்று இது போற்றப்பெறுகிறது.

( 2 ) சாரமாமுனிவர், அருள்தரு தாயுமானவருக்குத் தேவலோகத்தில் இருந்து கொண்டுவந்த செவ்வந்தி மலர்களைப் பத்திமையுடன் நாடோறும் சாத்தி வழிபட்டதால் அவர்க்கு அருள்புரிந்தவன் என்பதால் இப்பெருமான் செவ்வந்தி நாதன் என்றதிருப்பெயராலும் அழைக்கப்பெறுவதை;

" ...................................................................... வழுத்(து)உயர்செவ் ,
வந்திக் கடவுள் எனைச்செய் திலரேபுன் வந்திஎன்றே. ( பா. 362 )

( 3 ) சாரமாமுனிவர் பூசனைக்கு வைத்திருந்த செவ்வந்திமலர்களை உறையூர் மன்னன் பராந்தகன் கவர்ந்து தன்மனைவிக்குச் சூட்டியதால் முனிவர் இட்ட சாபத்தால் மண்மாரியால் உறையூரும் பராந்தகனும் அழிந்தது.

" மண்மழை யால்வன் பராந்தகன் வீய மகிழ்ந்த இறை " ( பா. 307 )
" செவ்வந்திக் காக உறந்தையின் மண்மாரி சீறிவிடுத்(து)
எவ்வம் துடைத்த சிராமலைச் செல்வன் " ( பா. 13 )

( 4 ) கோழி, யானையை வென்றதால் உறையூரைக் கோழியூர் என்பது.

" கோழிக்கு யானைபின் னிட்ட பதிஅரன் " ( பா. 54 )
" ஆழிசூழ் பாரில் சிறந்த சிராமலை யாய்வரைப்பால்
கோழியூர் ஆளும் இறைஎன எண்ணியோ " ( 230 )

( 5 ) கல்லால்கீழ் சிவபிரான் இருந்து நான்குமுனிவர்க்கு உபதேசித்தது.
" வல்லார் ஒருநால்வர் தேற முனநாள் வயங்குபெரும்
கல்லால் இருந்து முனம்யோகு செய்த கடவுள் " ( பா. 29 )

( 6 ) தான்தோழனாகக்கொண்ட சுந்தரர் பொருட்டுப் பரவையார் மனைக்குச் சிவபிரான் தூது சென்றது.
" பண்தீரப் பண்கவிச் சுந்தரன் தூதாப் பரவைஅகம்
புண்தீரச் சென்ற சிராமலையான் " ( பா. 12 )
" ...................................................................ஈச்சுரர்முன்
வெவ்வாய்க் கொடுஇரு ளில்தூதாப் பெண்அகம் ஏகியபோல் " ( 457 )

( 7 ) சங்கிலியார்க்காகச் சுந்தரர் வேண்ட மகிழமரத்தில் இடம்கொண்டது.
" வேல்விழிச் சங்கிலிக்காக மகிழிடம் மேவியவன் " ( பா. 35 )

( 8 ) இயற்பகயாரிடம் இல்லாளை வேண்டியது.
" இல்லாளைத் தாஎன்று இயற்பகை பாலே இரந்தமலை
வில்லாளன் " ( பா. 18 )

( 9 ) திண்ணனார் செருப்பணிந்த தன்காலினைக் குடுமித்தேவர் கண்இருக்கும் இடம் அறிய வைத்தது..
" வேடன் செருப்படி தாங்கி உலகில் விளங்கமுன்
நீடுஅன்பு எழில்இவை சொற்ற சிராமலை அத்தன் " ( பா. 45 )

( 10 ) வந்தியின் பிட்டுண்ண ஆசைப்பட்டது.
" பிட்டு ஆசைகொண்டு பெருநீர் அடைத்தபிரான் " ( பா. 120 )

( 11 ) விசயனுடன் மற்போர் விற்போரிட்டது .
" மல்வில் எனும்போர் இரண்டும்முன் பாண்டவ மன்னொடுசெய்
சொல்லில் விளங்குஇறை " ( பா. 247 )

( 12 ) இராவணனைக் கொன்ற இராமபிரானின் பிரமகத்தி பாவம் தீர்த்தது.
" கோதண்ட ராமன் பணியக் கொலைப்பவக் கூறொழித்த
மூதண்டம் ஓங்கு சிராமலை யான் " ( பா. 181 )

( 13 ) மோகினியாகிய திருமாலைத்தழுவிச் சாத்தனை - ஐயனாரைத்தந்தது.
" மாலாய பெண்ணைத் தழுவிமுன் சாத்தனை மன்அளித்தோன் " ( பா. 311 )

( 14 ) சிவபிரானுக்குரியது திருவைந்தெழுத்து.
" அஞ்சுஅக் கரத்தன் சிராமலையான் " ( பா. 155 )

( 15 ) உமையம்மை சிவபிரானின் கண்பொத்தியது.
"......................................................சிராமலைக் கூத்தன்உயர்
நாட்டம் முனம்உமை பொத்த எழுந்த நடுங்குஇருள் " ( பா. 189 )

( 16 ) அப்பரடிகட்கும் திருஞானசம்பந்தர்க்கும் சிவபிரான் திருவீழிமிழலையில் பொற்காசளித்தது.
" பாடும் புலவர் மகிழப் பொற்காசு பண்டுஅளித்தோன் ( பா. 34 )

( 17 ) காரைக்கால் அம்மையாருக்கு மாங்கனி தந்து அவர்துயர் தீர்த்தது.
" சூதக் கனிதந்து காரையூர் மாதின் துயர்ஒழித்த
வேதப் பொருளாம் சிராமலைப் பெம்மான் " ( பா. 108 )

( 18 ) தண்டாயுடபாணிப் பெருமானால் வணங்கப்பெற்றவன்.
" தண்டா யுதன்பணி ஆறுமு கன்தொழும் சாமி " ( பா. 290 )

( 19 ) முருகனுக்கு அத்தை திருமகள்.
" கந்தன்அத் தைக்குஒப்பு எனும்மின்னே " ( பா. 401 )

( 20 ) காஞ்சி மாஅடியில் கந்தன்.
" கச்சியின் மாஅடி நின்ற குயிலைக் கலந்த இறை " ( பா. 352 )

( 21 ) முருகன் வள்ளிக்கும் தெய்வயானைக்கும் கணவன்.
" வள்ளிக்கும் யானைக்கும் கொண்கனென் சாமி மயில " ( பா. 356 )

( 22 ) முருகனுக்குத் துணை சிவபிரான்.
" தொண்டன்நல் ஆறு முகற்குத் துணையாம் சுடருருவான் "( பா. 370 )

( 23 ) விநாயகர் பாரதம் எழுதியது.
" பாரதம் கோட்டால் எழுதிய யானையப் பண்டுஅளித்த
பூரதன் " (பா. 47 )

( 24 ) அப்பரடிகள் கற்புணைகொண்டு கரையேறியது.
" அலைகடந்து அப்பர் கரைஏறச்செய்தோன் " (பா. 360 )

( 25 ) திருஞானசம்பந்தர் மயிலையில் பூம்பாவயை உயிர்ப்பித்தது.
" இங்குஅம்(பு)என் கண்ணி விரகால் இறந்தபின் என்உருவை
அங்கம்பெண் செய்புல வோர்எனச் செய்வார் " (பா. 111 )

( 26 ) ஆலிலையில் கண்ணன்.
" வடஆல் இலைத்துயில் மால் " ( பா. 141 )

( 27 ) முதலைவாய்க் கசேந்திரனைத் திருமால் மீட்டது.

" கராமலை அத்தன் வலிகெடு யானையைக் காத்தருள் அன்(பு)
அராமலைப் பள்ளியன்." ( பா. 403 )

( 28 ) தேவர்கள் இறக்கும் உயிரினத்தவரே.

" தேவர்என் றேதருக் கும்சாம் பிராணிகள் " ( பா. 271 )

( 29 ) சிராப்பள்ளி மலையில் மகேந்திரபல்லவன் குடைவரை.

" பல்லவர் கோன்பணி கொண்டசிராமலை " ( பா. 260 )

( 30 ) சைவ சித்தாந்தக் கருத்துகள்.

" உமைஒரு கூறுஉகந்து ஆண்டருள் மெய்யன் " ( பா. 32 )
" பாசத் தளைஅறுத்து ஆளும் பண்ணவன் " ( பா. 328 )
இதுபோல் சித்தாந்தக்கருத்துகள் நூலெங்கும் விண்மீன்கள்போல் ஒளிர்கின்றன.

( 31 ) இராசராச சோழன் காலத்தில் சிராமலை அவனது ஆட்சியில் இருந்தது.

" ஈதுஒரு வண்மையன் ராசரா சச்சோழன் இன்புடனே
தீதுஒரு வக்கோல் தனிஓச் சியநல் திருப்பதியே " ( பா. 350 )

( 32 ) அருந்ததி கற்பில் மேலானவள்.

" திருந்துஅதி வான்கற்(பு) உணர்ந்து விணில்போய்த் திகழும்அந்த
அருந்ததி யாள் அரும்தூ திஅரும்து திஆயினளே " ( பா. 405 )

( 33 ) பெண்களுக்கு உயிரினும் நாணும், நாணினும் கற்பும் சிறந்தது.

" பெண்ணுக்குத் தன்உயி ரின்நாண் சிறந்தது பேண்அதினும்
எண்ணுக்கு மிக்கதாம் கற்புச் சிறந்ததா ஏத்துவரே ". ( பா. 337 )

( 34 ) தன்னுடன் பழகியவர் ( மகள் ) பிரியநேரின், அவள் பழகிய பொருள்களை இடத்தைப்பார்க்கும்போது தாய்க்குத் துக்கம் மேலிடும் என்ற உளவியல் கருத்து.

" ........................................................சிராமலை வண்வரைக் கூர்பொழிலை
விண்டநற் கிள்ளையை ஊஞ்சலைப் பந்தை வியன்கழங்கைக்
கண்டநல் தாயும் வருந்துவள் " ( பா. 370 )

( 35 ) கண்ணகி, நளாயினி ஆகியோர் தத்தம்கணவனைக் குறைகூறவில்லை.

" காட்டுஆம் நளாயினி கண்ணகி காதையைக் காதுஉறமுன்
கேட்டுஆம் பயனென் சிராமலை நல்வரைக் கேகயமே
கூட்டுஆம் புருடன் குறைகாணல் தூற்றல் கொளத்தகுமோ
நாட்டுஆம் பலில்தங்கு தேன்வரின் தள்ளுமோ தாமரையே " ( பா. 413 )

( 36 ) சனியின் செயலால் தமயந்தி நளனைப்பிரிந்தது.

" தமையந்தி முன்னம் நளனைப் பிரிந்த தகைமையதோ
இமைஅந்த நேரத்து அவர்வந்(து)அடைவர் இதுநெடிதோ " ( பா. 165 )

( 37 ) கேட்கக்கூடாததைக் கேட்கநேரில், பெரியோர் " சிவசிவ " எனல்.

" ................................................................................................நம் நிறைஇழைக்கு
வாசத் திருவுடல் எய்த்துச் சிவசிவ மாறிஉரு
பேசத் தளர்ந்த(து)என் கூ(று)ஒளி யா(து)உயிர்ப் பேரணங்கே . ( பா . 328 )

( 38 ) கார்காலத்தில் வேங்கைமரம் பூக்கும், காந்தள் மலர் மலரும், இந்திர கோபமென்னும் பூச்சி பரவலாகக் காணப்படும்.

" பொன்னணி வேங்கை சொரியக் கரம்காந்தள் பூண்(டு)எடுக்க
மன்நனி கோபம் பரவ எழிலி வருநிலையை " ( பா. 395 )

( 39 ) வேங்கைமலர் சொரியும் முழுநிலாக்காலமே திருமணநன்னாள்.

" கணிபொன் சொரிந்த கலைமதி ஊருற்ற காலம்இதே
மண்பொன் கொழிக்கும்பொன் னித்தென் சிராமலை மாண்வரைப்பால்
அணிபொன் வரைப்புய மன்றலை ஆக்குவர் ஆர்ந்(து)எமரே. " ( பா. 257 )

( 40 ) மன்மதனின் ஐங்கணைகளுள் ஒன்றான மாம்பூவை ஐந்தாம் கணைஎனல்.

" வேள்தனின் ஐந்தாம் கணைதனைக் கொண்டு ... " ( பா. 325 )

( 41 ) நொச்சிமலர் மலர்ந்து நள்இரவில் உதிரும்.

" நொச்சி மலர்உதிர் நள்ளிருள்வாய் " ( பா. 342 )

( 42 ) மலை எதிர் கூவுதல். ( எதிரொலி ) .

" வில்ஆர் மலைஎதிர் கூவிடு மோகுறி மே(வு)இடத்தே. " ( பா. 64 )

( 43 ) கூடற் சுழி பலமுறை இட்டுபார்த்தல் - நம்பிக்கை.

" நொந்தது நொந்தது கூடல் வளைத்துஒரு நுண்விரலும்
தந்தது தந்தது செந்நீர் அதுதவிர் தாரவர்தேர்
வந்தது வந்தது " ( பா. 455 )

( 44 ) காக்கை கரைந்தால் விருந்தினர் / சென்றவர் வருவார் என்ற நம்பிக்கை.

" கருங்கொடி யேமகள் எம்பால் வரநீ கரைகுவையே " ( பா. 364 )

( 45 ) புலி பாயும்போது மண்குழியாகுமாறு கால்பதித்துத் தாவிப்பாயும்.

" ................................................................................................ காயுழுவை

அயல்மிதித் தேகுழி மண்கொளப் பாயும் " ( பா. 368 )

( 46 ) தாவும் புலியின் காலடிச்சுவடு வாழைக்கனி பதித்த சுவடு ஒக்கும்.

´வாழைக் கனிபதித் தன்ன அதுபுலி வல்அடியே " ( பா. 376 )

( 47 ) மீனத்தில் புதன் நின்றால் விளைவு - அவதூறு உண்டாதல் - சோதிடம் .

" மீனத்தி லேபுதன் உற்ற(து) எனஅலர் மீத்தொடுக்கும். ( பா. 414 )

( 48 ) கற்றது போதும் என்று வாளாவிருத்தல் பிழை. கற்கக்கற்க அறிவு வளரும்.

" பெற்றது கல்வியில் போதுமென்று எண்ணல் பிழைஅறிவு
கற்றது தன்அளவு ஊறும் " ( பா. 449 )

( 49 ) செல்வம் கடையானது.

" கடைக்கனம் கொண்டபொன் தேடநீ எண்ணல்என் கற்றவரே . " ( பா. 470 )

( 50 ) இருமலுக்குப் பனிபகை - மருத்துவம்.

" காந்தர் இருமின் பனியாகும் என்பகை. " ( பா. 458 )

( 51 ) சிராமலையைச் சுற்றிலும் உள்ள ஊர்களைக் குறிப்பிடல்.

ஆனைக்கா - 416; எறும்பீச்சுரம் - 418; பொன்மலை, உய்யக்கொண்டான்மலை - 419. கோழியூர் - உறையூர் - 13.

( 52 ) வள்ளல் இராமநாராயணனின் கொடிஇலச்சினை சிங்கம்.

" சிங்கக் கொடிதிகழ் ராமநா ராயணன் " ( பா.390 )

( 53 ) திருக்குறள் கருத்துகளை எடுத்தாளுதல்.

" .................................................................................. உள்அணைநாண்
கோன்மலி காமக் கடற்பெருக் கால்உடை கொண்டதுவே' ( பா.19 )

" கண்ணுக்கு அணிகலம் கண்ணோட்டம் " ( பா.109 )

" கண்ணொளி காட்டும் கதிர்முன் குருடாய்க் கறைஇருட்டில்
நண்ஒளி ஊட்டுகண் கூகை " ( பா.229 )

( 54 ) உருவகப்பொருள்களைமட்டுமே கூறி உரிய உறுப்புகளை உணர்த்துதல்.

" நிலவுசெந் தாமரை நீலம் தரளம் நிறைந்துஒளியே
குலவும் குமுத மலரும் எழில்இணைக் கோங்குஅரும்பும்
கலவும் படிகொண்டு ஒருவல்லி ஒல்கிக் கனம்தருகால்
சுலவும் சிராமலை யான்வரைக் காவிடைத் தோன்றியதே. " ( பா. 1 )

" காரும் மதியும் கவின்மீனும் முத்தும் களித்துவரும்
சேரும் துணைவரை காந்தளும் தாங்கிஓர் தேவவல்லி " ( பா. 2 )

( 55 ) இடைக்குறை, முதற்குறை, மொழி இறுதிப்போலி முதலியவற்றை ஆங்காங்கு தளைகருதியும், ஓசை இன்பம் கருதியும் ஆண்டுள்ளதை நெடுகக் காணலாம்.

( 56 ) அணிநலன்கள் : உவமை, எடுத்துக்காட்டுஉவமை, உருவகம், முற்றுருவகம், தற்குறிப்பேற்றம், செம்மொழிச்சிலேடை, முறைநிரல் நிறை, விலக்கு, கலவை ஆகிய அணிகள் ஆங்காங்குச் சிறப்புற இடம்பெற்றுள்ளன.

******************************

உ

## சிராமலைக்கோவை

**********

**விநாயகர்** - காப்பு

சீரார் சிராமலை யார்க்(கு)ஒரு கோவையைச் செந்தமிழால்

பேரார் புலவர் களிக்கு நயத்தாற் பெரி(து)உரைக்கக்
காரார் வரைமகள் பங்கன் புதல்வன்ஐங் கைக்கடவுள்
ஏரார் திருமலர்த் தாளிணை என்நா இசைத்திடுமே.

**குறிப்புரை** : சிராமலையார்= அருள்தரு மட்டுவார்குழலம்மை உடனாய தாயுமான ஈசர். பேர் ஆர்= புகழ்வாய்ந்த. பெரிது நயத்தால் உரைக்க= மிகுந்த நயங்களுடன் கூற. கார் ஆர்= மேகம் தவழும். பங்கன்= உடம்பின் பாதியில் உடைய சிவபிரான். ஐங்கைக் கடவுள்= ஐந்து கரத்து விநாயகர். ஏர்= அழகு. திரு= தெய்விகம். இணைதாள்= இருதிருவடிகள். இசைத்திடும்= போற்றிக்கூறும்.

**பொழிப்புரை** : சிறப்புப்பொருந்திய அருள்தரு மட்டுவார் குழலம்மை உடனாய தாயுமான ஈசனுக்கு ஒருகோவை நூலினை, புகழ்வாய்ந்த புலவர்கள் சுவைத்துக் களிக்கும் மிக்க நயங்களுடன் சொல்ல, மேகம் தவழும் இமயமலை அரசன் இமவான் மகளைத்தன் உடம்பின் பாதியில்பெற்ற சிவபிரானுக்கு மகனாகிய ஐந்துகரத்து ஆனைமுகக் கடவுளின் தாமரைமலர் போன்று அழகிய தெய்வத்தன்மைவாய்ந்த திருவடிகளை என்நா போற்றிக்கூறும்.

**தலவிநாயகர்** - காப்பு

பூதலம் போற்றும் சிராமலைத் தாயான புங்கவர்க்குக்
காதல்அம் கோவை அணிதமி ழால்சொலக் கான்மலிந்து
மீதலம் முட்(டு)அவ் வரைவாழ்செவ் வந்தி விநாயகனார்
ஓதல்அ ரும்மலர்த் தாள்என் உளத்(து)ஓங்(கு)ம் உள்நிறைந்தே.

**குறிப்புரை** : பூதலம்= உலகம். புங்கவர்= ஈசன். அம்காதல்= நிறைந்த அன்பு. கான்= புகழ். மீதலம்= வானுலகம். அவ்வரை= சிராமலை. செவ்வந்தி விநாயகர்= தலவிநாயகர். ஓதல்= சொல்லுதல். என் உள்நிறைந்து உளத்து ஓங்கும். உளத்து= கருத்தில்

**பொழிப்புரை** : உலகுபோற்றும் திரிசிராமலையில் எழுந்தருளியுள்ள அருள்தரு தாயான ஈசர்க்கு, நிறைந்த அன்புடன் கோவைநூலினை அழகிய தமிழில் இயற்ற, புகழ்மிகுந்து வானத்தைமுட்ட ஓங்கிய சிராமலையில் எழுந்தருளியுள்ள செவ்வந்தி விநாயகரின் சொல்லுதற்கரிய தாமரைமலர் போன்ற திருவடிகள் என்மனத்தில் நிறைந்து, கருத்தில் சிறந்துவிளங்கும்.

**தந்தையார் துதி**

பாவை இடத்(து)அமர் தாயான செல்வன் பரிந்(து)உவக்கப்
பாவை விளக்(கு)ஒரு கோவை பகருவன் பாரில்என்அப்
பாவை தமிழ்ப்புல வோர்தம் அரசைப் பதிந்(து)உளத்துப்
பாவைக்(கு) இடும்சீர் அமிர்தத்தை ஏத்திப் பதம்பணிந்தே.

**குறிப்புரை** : பாவை இடத்து= அருள்தரு மட்டுவார்குழல் அம்மையுடன். பரிந்து உவக்க= அன்புடன் மகிழ. பாவை விளக்கு= பாடலுக்கு ஒளிசெய்யும். கோவை= கோவைநூல். உளத்துப் பதிந்து. பாவைக்குச் சீர் இடு= பாடலுக்குச் சிறப்புத்தரும் அமிர்தம் அப்பாவை= அமிர்தம் என்றபெயருடைய தந்தையை.

**பொழிப்புரை** : இவ்வுலகில் அருள்தரு மட்டுவார்குழல் அம்மையுடன் அமர்ந்த தாயான ஈசன் அன்புடன் மகிழ, தமிழ்ப்புலவர்களுக்கு அரசனை, பாடலுக்குச் சிறப்புத்தரும் அமிர்தம் என்னும் பெயருடைய என்தந்தையை மனத்தில் பதிந்து, அவர்திருவடிகளை வணங்கி, பாடல்களுக்கெல்லாம் ஒளிசெய்யும் கோவைநூலினைக் கூறுவேன்.

**இலக்கணக்குறிப்பு** : பாவை இடத்து - உருபுமயக்கம்.

## நூல்
## கைக்கிளை
*******************

### காட்சி

( 1 ) நிலவுசெந் தாமரை நீலம் தரளம் நிறைந்(து)ஒளியே
குலவும் குமுத மலரும் எழில்இணைக் கோங்(கு)அரும்பும்
கலவும் படிகொண்(டு) ஒருவல்லி ஒல்கிக் கனம்தருகால்
சுலவும் சிராமலை யான்வரைக் காவிடைத் தோன்றியதே.

**குறிப்புரை** : கைக்கிளை= ஒருபால் காமம் / ஒருபால் அன்பு. நிலவு செந்தாமரை= ஒளிரும் செந்தாமரை மலர் ( முகம் ) நீலம்= கருங்குவளை மலர் ( விழி ). தரளம்=முத்து ( பல் ). குமுதமலர்= செவ்வாம்பல் ( இதழ் ). எழில் இணைக்கோங்குஅரும்பு= அழகிய இரண்டு தென்னங்குரும்பை ( முலைகள்). கலவும்படிகொண்டு= கலந்து விளங்குமாறு கொண்டு. ஒரு வல்லி= ஒப்பற்ற கொடி ( கன்னிப்பெண் ) ஒல்கி= அசைந்து. கனம் தரு கால் சுலவு= மேகக்கூட்டத்தைக் கொண்டுவரும் காற்று சுழன்றுவீசும். கா= சோலை.

**பொழிப்புரை** : மேகக்கூட்டத்தைக் கொண்டுவரும் காற்று சுழன்றுவீசும் அருள்தரு தாயுமான ஈசனின் மலைக்கண் உள்ள ஒருசோலையில்; ஒளியுடைய முகமாகிய செந்தாமரைமலர், கருங்குவளை மலர்களாகிய விழிகள், நிறைந்த முத்துக்கள் ஆகிய பற்கள், ஒளிவிளங்கும் செவ்வாம்பல் ஆகிய உதடுகள், அழகிய இரண்டு தென்னங்குரும்பைகளாகிய முலைகள் இவையனைத்தும் தன்னிடம் கலந்து விளங்குமாறு கொண்டு, ஒப்பற்ற கொடியாகிய கன்னிப்பெண் தோன்றினாள்.

**இலக்கணக்குறிப்பு** : செந்தாமரை, நீலம், தரளம், குமுதமலர், கோங்கரும்பு, வல்லி - உருவகங்கள். செந்தாமரை நீலம் தரளம் - எண்ணும்மைத்தொகைகள். குமுதமலரும் கோங்கரும்பும் - எண்ணும்மைகள்.

( 2 )

### இதுவுமது

காரும் மதியும் கவின்மீனும் முத்தும் களித்துவரும்
சேரும் துணைவரை காந்தளும் தாங்கிஓர் தேவவல்லி
நீரும் மதியும் சுமந்(து)அருள் தாயான நின்மலனின்
ஓரும் வரைப்பொழில் கற்பக நீழலில் உற்(று)உளதே.

**குறிப்புரை** : கார்= கரியமேகம் ( கூந்தல் ) மீன்= கெண்டைமீன்கள் ( கண்கள் ) முத்து - முத்துக்கள் ( பற்கள் ), களித்து வரும்= செருக்குடன் நிமிர்ந்துள்ள. சேரும்= ஒன்றுடன் ஒன்று நெருங்கிய. துணை வரை= இரு மலைகள் ( முலைகள் ). காந்தள்= செங்காந்தள் மலர்கள் ( உள்ளங்கைகள் ) தேவவல்லி= கற்பகக்கொடி. நின்மலன்= இயல்பாகவே மலமில்லாதவன் - தாயான ஈசன். ஓரும்= தெளிந்த - அழகிய. வரைப்பொழில்= மலையகத்துச் சோலை. கற்பக நீழல்= கற்பகமர நிழல்.

**பொழிப்புரை** : கரிய மேகமாகிய கூந்தலும், அழகிய கெண்டைமீன்களாகிய கண்களும், முத்துக்களாகிய பற்களும். செருக்குடன் நிமிர்ந்து தம்முள்நெருங்கிய இரு மலைகளாகிய முலைகளும், மிகச்சிவந்த செங்காந்தள் மலர்களாகிய உள்ளங்கைகளும் பெற்று, வானுலகக் கற்பகக்கொடி ஆகிய ஒப்பற்ற கன்னி ஒருத்தி; கங்கையும் பிறையும் சுமந்து அருள்பாலிக்கும் இயல்பாகவே மலமில்லாத தாயான ஈசனின் மலையில் உள்ள அழகிய சோலையில், கற்பகமர நிழலில் வந்துள்ளது.

**இலக்கணக்குறிப்பு** : கார், மதி, மீன், முத்து, துணைவரை, காந்தள், தேவவல்லி - உருவகங்கள். நீர்= சினையாகுபெயர்.

( 3 )

### இதுவுமது

சிங்கம் களி(று)அம் புலிமான் பிடியும் திகழ்தரவே
தங்கும் படிக்கொண்(டு) ஒருதோகை தாயான தற்பரனின்
பொங்கும் புகழ்நற் சிராமலைக் கண்ஓர் பொழில்அகத்தே
எங்கும் இலாவியப்(பு) ஈதென்(று) இயம்ப இருந்ததுவே.

**குறிப்புரை** : சிங்கம்= ஆண்சிங்கம் ( இடுப்பு ) களிறு= ஆண்யானையின் மத்தகம் ( முலைகள் ). அம்புலி= பிறை ( நெற்றி ) மான் - மருட்சி. பிடி = பெண்யானை ( நடை ) தோகை= மயில் ( சாயல் ) தற்பரன்= தன்னையன்றி வேறு தலைவனில்லாதவன். ஈது- இது.

**பொழிப்புரை** : ஆண்சிங்கத்தின் இடுப்பும் ( சிற்றிடை ) , ஆண்யானையின் மத்தகங்களும் ( முலைகள் ) பிறைநிலவும் ( நெற்றி ) பெண்யானையின் நடையும் ( ஒசிந்தநடை ) ஆகியன கொண்டு ஒப்பற்ற அழகிய மயிலாகிய கன்னிஒருத்தி, மேன்மேல்வளரும் நல்லபுகழுடைய தாயான ஈசனது சிராமலையின் அழகிய சோலைக்கண், எவ்விடத்தும் இல்லாத வியப்புஇது என்று கூறுமாறு இருக்கின்றது.

( 4 )

### ஐயம்

மலையோ அலையோ உரகர் நிலையோ வளம்மிகுவான்

தலையோ அலது சிராமலைத் தாயான தற்பரன்சார்
நிலையோ கணிவளம் சேர்சிராப் பள்ளின் நீள்பதியோ
சிலையோ எனும்புரு வத்(து)இம்மின் மேவிய சீர்பதியோ.

**குறிப்புரை** : மலை= இம்மலை. அலை= கடல். உரகர் நிலை= நாகருலகம். வான்தலை= வானுலகம். தற்பரன் சார்நிலை= சிவலோகம். கணிவளம்= நன்செய்வளம். சிலை= வில். மின்= மின்னற்கொடி.

**பொழிப்புரை** : வில்லோ என்னுமாறு வளைந்த புருவமுடைய இந்த மின்னற்கொடிபோன்றவள் வாழும் இடம்; மலையோ ( மலையில் வாழ்கிறவளா ) ? கடலோ ( கடற்கன்னியா ) நாகருலகமோ ( நாககன்னியா ) ? வளம்மிக்க வானுலகமோ ( தேவமகளா ) ? சிராமலையில் எழுந்தருளியுள்ளவனும் தனக்குப் பிறர்யாரும் தலைவனில்லாதவனுமான சிவபிரானின் - உலகமோ ( சிவலோகமோ ) ? நன்செய்வளம் உடைய புகழ்வாய்ந்த சிராப்பள்ளியா ? அறியேன் என்று தலைவன் ஐயுற்றான்.

**இலக்கணக்குறிப்பு** : மலையோ ..........பதியோ - ஓகாரங்கள் வினாப்பொருளன.

( 5 ) **துணிவு**

தருகா ரணக்கொடை ராமநா ராயணன் தன்உளத்தும்
பெரு(கு)ஆ ரணத்தும் ஒளிர்தாயு மான பெருந்தகைவாழ்
குரு(கு)ஆரும் சோலைச் சிராப்பள்ளி இம்மின் குணமலர்த்தாள்
உருகா தரத்திற் சுமந்(து)என் உளஐயம் ஓட்டியதே.

**குறிப்புரை** : தரு கொடை காரணம்= கற்பகமரத்தின் கொடைபோல் கொடுக்கும் விருப்பம். ராம நாராயணன்= கொடைவள்ளல் ஆகிய ராம.நாராயணன். பெருகு ஆரணம்= சிறப்புமிகுந்த வேதம். பெருந்தகை= ஈசன். குருகு ஆரும்= பறவைகள் வாழும். இ குணமின் மலர்த்தாள் உரு= இந்த நற்குணம்வாய்ந்த மின்னல்போன்றாளின் உருவத்தை - உடம்பை. காதரத்தின்= விருப்புடன். உள= மனம்

**பொழிப்புரை** : கற்பகமரத்தின் கொடைபோல் கொடுக்கும் விருப்பமுடைய ராம. நாராயண வள்ளலின் மனத்திலும், சிறப்புமிக்க வேதத்திலும் ஒளிரும் தாயுமான ஈசன் வாழும் இவ்விடத்தில், பறவைகள் வாழும் சோலைகளுடைய சிராப்பள்ளி நிலமானது, இந்த நற்குணம்வாய்ந்த மின்னல் போன்றவளின் உடம்பை விருப்பத்துடன் சுமந்திருப்பது, இவள்யார் என்பதுபற்றி என்மனத்தில் எழுந்த ஐயத்தை ஓட்டி, இவள் இவ்விடத்தவளே என்று உறுதிப்படுத்தியது

**விளக்கம்** : இக்கவிஞரின் புரவலராகிய வள்ளல் ராம. நாராயண பிள்ளையை இந்நூலில் ஆங்காங்கே இவர் போற்றிக்கூறுவதைக் காணலாம். தமயந்தியை மணக்க விரும்பிய தேவர்கள்சிலர், நளனுடன் கூட அவன் உருவிலேயே வந்து சுயம்வரமண்டபத்தில் அமர்ந்திருந்தனர். நளனை மணக்க விரும்பிய தமயந்தி, தேவர்களிடமிருந்து நளனை அவனது "கண்இமைத்த லால்அடிகள் காசினியில் தோய்தலால், வண்ண மலர்மாலை வாடுதலால் " பிரித்தறிந்து உண்மை நளனுக்கு மாலையிட்டாள் என்பார் புகழேந்திப் புலவர். அதுபோல் இங்குத் தலைவியைச் இச்சோலை சுமந்துள்ளதால் இவள் இந்நிலத்தவளே என்றான் தலைவன்.

( 6 ) **இதுவுமது**

பூதலம் இம்மின் தளிர்த்தாள் சுமந்தும் பொறிஅளிகள்
ஏதம்இல் இம்மான் மலர்த்தொடை மூசியும் எண்தருப்போல்
போதவும் ஈந்தருள் ராமநா ராயணன் போற்றிசெயும்
வேத முடியான் சிராப்பள்ளிப் பெண்ணா விளக்கினவே.

**குறிப்புரை** : பூதலம்= நிலம். இம்மின் தளிர்த்தாள் சுமந்தும்= இந்த மின்னல்போன்றவளின் மாந்தளிர் போன்ற பாதத்தை தாங்கிக்கொண்டிருப்பதாலும் - நிலத்தில் பாதம் பாவி இருத்தல். ஏதம் இல்= குற்றம் இல்லாத. மலர்த்தொடை= மலர்மாலை. பொறிஅளிகள்= புள்ளிகளுடைய வண்டுகள். மூசியும் போதவும்= மொய்த்தும் வெளியேறியும். எண்தரு= மதிக்கத்தக்க கற்பகமரம். வேதமுடி= உபநிடதம்.

**பொழிப்புரை** : நிலம்; இம்மின்னல் போன்றவளின் பாதங்களைச் சுமந்தும், புள்ளிகளுடைய வண்டுகள் இந்த மான்போன்றவள் சூடியுள்ள மலர்மாலையில் மொய்த்தும் வெளியேறியும் விளங்கியதால், அவை இவளை, மதிக்கத்தக்க கற்பகமரம்போல் பிறர்க்கு வழங்கும் ராம. நாராயணன் வணங்கும் திரிசிராப்பள்ளிப் பெண்ணாக விளக்கின.

**விளக்கம்** : நிலத்தில் பாதம்படிதல், சூடியுள்ளது பூவுலக மலர்மாலையாதலின் வண்டுகள் மொய்த்தல் ஆகியவற்றால் இவள் பூவுலகினளே என்று துணிந்தான். (வானுலக மலரில் வண்டுகள் மொய்க்கா என்பர்.)

( 7 ) **குறிப்பறிதல்**

வெண்பாற் கடல்முன் இறைக்கும் இமையா விழியவர்க்கும்
எண்(பு)ஆய நஞ்சும் அமுதும் நிரல்பட ஈந்த(து)இமப்
பண்(பு)ஆர் மலைமகள் பங்கன் சிரகிரிப் பாவைஇவள்
கண்(பு)ஆம் கடலோ இரண்டும்எற் கேதரும் காணுறவே.

**குறிப்புரை** : முன் இறை= முதன்மையான இறைவன் - சிவபிரான். இமையா விழியவர்க்கும்= கண்ணிமைத்தல் இல்லாத தேவர்கட்கும். நிரல்பட= முறையே. இமப்பண்பு ஆர்மலை= குளிர்ந்த தன்மையுடைய பனிமலை. மகள் - இமயமலை இமவான் மகள் பார்வதிதேவி.. பங்கன்= உடம்பின் பாதியில் உடைய சிவன். சிரகிரிப்பாவை= திரிசிராமலைப் பெண். கண்பு= பார்வை. இரண்டும்= நஞ்சும் அமுதும் - நோயும் மருந்தும். எற்கே= எனக்கு. காணுறவே= எண்ணும்போது.

**பொழிப்புரை :** வெண்ணிறப் பாற்கடல் இறைவர்களுள் முதன்மையான சிவனுக்கும், கண்கள் இமைக்காத தேவர்களுக்கும் முறையே நஞ்சும், அமுதமும் தந்தது. குளிர்ந்த பனிமலையாகிய இமயமலையரசன் இமவான் மகளாகிய பார்வதிதேவியை இடப்பாகம்கொண்ட தாயுமானவனின் சிராமலைவாழ் இப்பதுமையின் - பெண்ணின் பார்வையாகிய கடல், எனக்கு நஞ்சினையும் அமுதினையும் - நோயினையும் அதுதீர்க்கும் மருந்தினையும் எண்ணும்போது ஒருசேரத்தந்தது.

விளக்கம் : " இருநோக்கு இவள்உண்கண் உள்ளது ஒருநோக்கு, நோய்நோக்கு ஒன்றுஅந் நோய் மருந்து " என்ற திருக்குறள் ( 1091 ) கருத்து இச்செய்யுளில் அமைந்துள்ளது.

( கைக்கிளை முற்றிற்று. )

## இயற்கைப் புணர்ச்சி

*************************

### ( 8 ) இரந்து பின்நிற்றற்கு எண்ணல்

வணிகன் மனைக்(கு)ஒரு தாயாய் மருத்துவம் வந்(து)அமைத்த
கணிநற் சிராமலை நாதன்வரைவாய்இக் காரிகையைப்
பணிவுற்(று) அரைப்பணம் நாம்இரப் போம்மறுப் பாள்எனிலோ
அணிசொற் கனமும் தனமும் படைத்தாட்(கு) இங்(கு) ஆம்இழிவே.

**குறிப்புரை :** இயற்கைப்புணர்ச்சி= தலைவனும் தலைவியும் முயற்சியின்றிச் சந்தித்துக்கூடுதல். = " வடகடல் இட்ட ஒருநுகத்து ஒருதுளை, தென்கடலிட்ட ஒருகழிசென்று கோத்தாற்போல " - இறையனார் களவியல் உரை. வணிகன் மனைக்கு= செட்டிஒருவன் வீட்டுக்கு. ஒரு= ஒப்பற்ற. மருத்துவம்= மகப்பேறு மருத்துவம். அமைத்த= செய்த. நற்கணி= நல்ல நன்செய்வளம். அரைப்பணம்= இடையிலுள்ள படம்- அல்குல். சொற்கனம்= மிக்க புகழ். தனம்= கொங்கை. இங்கு இழிவுஆம்.

**பொழிப்புரை :** செட்டிஒருவனது வீட்டுக்கு ஒப்பற்ற தாயாக வந்து அவன்மகளுக்கு மகப்பேறு மருத்துவம் செய்த வளமான நன்செய் நிலம்சூழ்ந்த சிராமலை ஈசனின் இம்மலைக்கண் வாழும்இவளைப் பணிந்துபேசி, இவளது அல்குல் இன்பத்தைப்பெறுவோம். இவள் மறுத்தால், மிக்கபுகழும் அழகிய கொங்கைகளும் பெற்ற இவளுக்குத்தான் இழிவு என்று நினைத்தான்.

**விளக்கம் :** நிறைமாதக் கர்ப்பிணியாய் கணவனொடு உறையூரில்இருந்த இரத்தினாவதி என்கிற எமது இனத்துச் செட்டிப்பெண்ணுக்கு மகப்பேறுமருத்துவம் பார்க்கவந்த அவள்தாய், காவிரியின் வெள்ளம்கடந்து உறையூர் செல்லவியலாத நிலையில் சிராமலையானைச் சிந்திக்க, அப்பெருமான் அத்தாய்வடிவுடன் இரத்தினாவதி வீட்டுக்கு வந்து அப்பெண் நலமுறமகவீன மருத்துவம் செய்தான். இதனால் அவனைப் போற்றிய அனைவரும் அவனைத் " தாயானவன் " என்றனர். அண்டங்களுக்குத் தந்தையான அவன் தாயாகவும் வந்ததைக் குறிக்கும் வகையில் உம்மைசேர்த்து இன்று " தாயுமானவன் " என்று பெயர் வழங்குகிறது. இவ்வரலாற்றைத் திருவாசகம் " தாயான ஈசற்கே சென்றூதாய் கோத்தும்பீ " என்று குறிப்பதால் இது மாணிக்கவாசகர்க்கு முற்பட்டகாலத்தில் நிகழ்ந்த மிகமிகப் பண்டையவரலாறு எனலாம். இந்நிகழ்ச்சியைப் போற்றும் வகையில் ஆண்டுதோறும் சித்திரைத்திங்களில் நிகழும் பெருந்திருவிழா - ஐந்தாம் திருநாளில் இதுகொண்டாடப்பெறுகிறது. அந்நாளில் பெருமானுக்கும் இவ்வம்மைக்கும் திருமுழுக்கு, அலங்காரம் முதலிய பல்வகைச் சிறப்புகள் நிகழும். இரவு அறுபத்து மூவர், ஐம்பெரு மூர்த்தியர், இரத்தினாவதி அம்மை முதலியோர் மலைமேலுள்ள நான்கு , அடிவாரத்தது நான்கு ஆகிய எட்டுத்திருவீதிகளில் திருவீதிஉலா வருவது சிறப்பான பத்திமைததும்பும் நிகழ்வாகும். இந்த ஐந்தாம் திருநாள் நிகழ்ச்சி, பண்டுதொட்டு இன்றும் எம்இனத்தவரால் வழிவழி பெரும்விழாவாகச், சிறப்பானவழிபாடுகளுடன் அம்மலைமேல் உள்ள பெருமானுக்கும், மலையில் பெருமான் திருச்சுற்றில் உள்ள இரத்தினாவதி அம்மைக்கு நிகழ்த்திக் கொண்டாடப்பெறுகிறது. " தாயாகி வந்துஒரு பேதையைக் காத்த தனிமுதலோன், வேயான தோள் உமை பங்கன் சிராமலை மேவி " ( சிராமலைக்கோவை. 74 )

### ( 9 ) இரந்து பின்நிலை நிற்றல்

கல்விலாக் கொண்(டு)அணி பூரதம் ஊர்ந்தோன் களித்(து)அமரும்
நல்விலாம் துய்ய சிராமலைப் பாங்(கு)ஒளிர் நன்மயிலே
சொல்இரா என்னும் களிற்றான் கணைகளால் சோரும்என்மேல்
வல்லதாம் கண்வேல் எறிந்தாய் வரும்பழி மற்(று)உனக்கே.

**குறிப்புரை :** கல்= மேருமலை. விலா- வில்லாக. அணிபூ ரதம்= அழகிய பூமியாகிய தேர். ஊர்ந்தோன்= ஏறிய சிவபிரான். நல்விலாம்= நல்ல ஒளியுடைய. சொல்= விடைகூறு. இராஎனும் களிற்றான்= இரவு ஆகிய யானைமேல்வரும் மன்மதன். சோரும்= வருந்தும். கண்வேல்= கண்களாகிய வேல். உனக்கே பழிவரும்.

**பொழிப்புரை :** மாமேருமலையை வில்லாகக் கொண்டு அழகிய பூமியாகியதேர் ஏறிய சிவபிரான் களிப்புடன் எழுந்தருளியுள்ள நல்ல ஒளிபொருந்திய தூய சிராமலையின் பக்கம் ஒளியுடன் விளங்கும் அழகிய மயில்போன்றவளே ! இரவுஆகிய யானைமேல் ஏறிவரும் மன்மதனின் மலரம்புகளால் - விரகத்தால் வருந்தும் என்மேல் உனது வலிமைவாய்ந்த பார்வையாகிய வேலினை எறிந்தாய். அதனால் வரும்பழி உன்னையேசாரும். விடைசொல்.

**இலக்கணக்குறிப்பு** : கல்விலா, நல்விலா - விலா - இடைக்குறை - செய்யுள்விகாரங்கள். களிற்றான் - வினையாலணையும் பெயர். கண்வேல்= உருவகம். மற்று - அசைச்சொல்.

(10 )

**இதுவுமது**

பூவார் சிராமலை நாதன் வரைப்பொழில் பூங்கொடியே
ஏவார் மலர்க்கணை மாரன் தொடைகட்(கு) இலக்(கு)எனையே
ஓவா(து) அமைத்(து)உள் மதியும் கவர்ந்தாய் உயங்கமயல்
தாவா(து) அளித்தாய் உயஇதழ் ஊறல்நீ தந்தருளே.

**குறிப்புரை** : ஏ ஆர்= எய்வதற்குரிய. தொடைகட்கு= தொடுக்கும் செயலுக்கு. எனையே ஓவாது இலக்கு அமைத்து. இலக்கு= குறி. உள் மதியும்= உள்ளமும் அறிவும். உயங்க= மயங்க. தாவாது= கெடாது - முழுமையாக. உய= உய்ய - உயிர்பிழைக்க. இதழ் ஊறல்= வாய்இதழ் நீர்.

**பொழிப்புரை** : தாயுமானவனின் மலைக்கண்ணதான பூக்கள்மிக்க சோலையில் நிற்கும் அழகியகொடி போன்றவளே ! எய்வதற்குரிய மலர்அம்புகளுடைய மன்மதனின் அவற்றைத்தொடுக்கும் செயலுக்கு என்னைக்குறியாக இடைவிடாது அமைத்து எனது உள்ளத்தையும் அறிவையும் கவர்ந்துகொண்டாய். நான்வருந்துமாறு மையலை முழுமையாகத் தந்தாய். அதனால் இப்போது உனது வாய்இதழ்ஊறும் நீரும் தந்தருள்.

**நயம்** : மயக்கம்தெளியத் தண்ணீர் தருவதுபோல், உன்மேல் மயங்கியஎனக்கு உன்இதழ்நீர்தாஎன்றான்.

( 11 )

**முன்னிலை ஆக்கல்**

வடதிசைக் கோன்எனும் ராமநா ராயண வள்ளல்இயல்
திடமனத்(து) ஓங்கும் சிராமலை யான்வரைச் சீர்அணங்கே
விடல்அரும் ஆயம்விட் டேகண் பகைநீலம் மென்நகத்தால்
இடம்உறக் கொய்யா(து)என் புண்ணியம் போல்நின்றீர் என்தவமே.

**குறிப்புரை** : வடதிசைக்கோன்= குபேரன். இயல் திடமனம்= குணமாகிய உறுதியான மனம். விடல் அரும் ஆயம்= நீங்குதற்கரிய பாங்கியர். கண்பகை நீலம்= உன்கண்களுக்குப் பகையாகிய நீலமலர். இடம் உற= வலிமையுடன். நின்றீர்= நிற்கிறீர்.

**பொழிப்புரை** : குபேரன் என்னுமாறு செல்வச்சிறப்புடைய ராம நாராயண வள்ளலின் குணமாகிய உறுதியான மனத்தில் சிறந்து விளங்கும் சிராமலையானது மலைவாழ் அழகியபெண்ணே ! நீ நீங்குதற்கரிய உன்பாங்கியர் கூட்டத்தை விட்டுவிலகி, உன்கண்களுக்குப் பகையாகிய நீலமலர்களை மென்மையான நகத்தால் வலிமையுடன் கொய்யாது என்புண்ணியம்போல் நான்காண நிற்பது என் தவமேயாகும்.

( 12 )

**வண்டோச்சி மருங்கணைதல்**

பண்தீரப் பண்கவிச் சுந்தரன் தூதாப் பரவைஅகம்
புண்தீரச் சென்ற சிராமலை யான்வரைப் பொன்அளிகாள்
கண்டீர் முலைப்பொறை மின்இடை இற்றிடும் காண்அறுகால்
வண்டீர் இவள்குழல் அண்டீர் வரும்பழி மற்(று)உமக்கே.

**குறிப்புரை** : பண்தீர= தன் தகுதிகெட. பண்கவி= பண்ணொடு பொருந்திய பாடல். அகம்= இல்லம். புண்தீர= சுந்தரர் துன்பம்கெட. பொன் அளிகாள்= அழகிய வண்டுகளே. முலைப்பொறை= முலையின்பாரம். மின் இடை= மின்னல்போன்று மெலிந்த இடுப்பு. அறுகால்= ஆறுகால்கள். அண்டீர்= நெருங்காதீர். உமக்கே பழிவரும். பண்தீரச் சென்றஎன்று கூட்டுக.

**பொழிப்புரை** : பண்ணொடு பொருந்திய பாடலிசைக்கும் சுந்தரர்மனைவிபரவையாரின் இல்லத்திற்குச் சுந்தரரின் தூதுவனாகத் தன்தகுதிகெடச்சென்ற சிராமலையானின் மலைப்பக்கத்துச் சோலையில் உள்ள ஆறுகால்களுடையஅழகிய வண்டுகளே ! இவளது முலைப்பாரத்தைக் காணுங்கள். நீவிர் இவள்கூந்தலில் அமர்ந்தால் இவளின் மின்னல்போன்ற இடுப்பு ஒடிந்துபோகும். எனவே இவள் கூந்தலை நெருங்காதீர் என்று வண்டோச்சி நெருங்கினான்.

**இலக்கணக்குறிப்பு** : கண்டீர் - முன்னிலைப் பன்மைவினைமுற்று. மின் இடை - உவமத்தொகை. காண் - அசைநிலை. அண்டீர் - முன்னிலை எதிர்மறைப் பன்மைவினைமுற்று.

( 13 )

**மெய்தொட்டுப் பயிறல்**

செவ்வந்திக் காக உறந்தையின் மண்மாரி சீறிவிடுத்(து)
எவ்வம் துடைத்த சிராமலைச் செல்வன் எழில்பதத்தைப்
பவ்வம் திகழ்பிறப்பு ஓட்ட அடைதல் பகர்குறிஆங்(கு)
உவ்வந்த இப்பாவை பாதம் தைவரக்கை கொண்டதுவே.

**குறிப்புரை** : செவ்வந்திக்காக= செவ்வந்தி மலரின் பொருட்டு. உறந்தை= உறையூர். சீறி= சினந்து. எவ்வம்= துன்பம். பதம்= திருவடி. பவ்வம் திகழ்= கடல்போன்ற. ஓட்ட= ஒழிக்க. குறி= பிறப்பின் குறிக்கோள். ஆங்கு= அதுபோல. உவ்வந்த= இசைவுடன் வந்த. பாதம் தைவரவே கைகொண்டது= பாதத்தை தடவித்தரவே கைகொண்டதன் பயன்.

**பொழிப்புரை** : கடல்போன்ற பிறப்பினை ஒழிப்பதற்கு, செவ்வந்திமலரை சூட்டாமல் தடுத்த காரணத்தால் சினந்து தடுத்த உறையூரில் மண்மாரி பொழியச்செய்து சாரமாமுனிவரின் துன்பம்துடைத்த சிராமலைச் சிவபிரானின் அழகிய திருவடிகளைச் சரண்அடைவதே பிறப்பின் குறிக்கோளாகும். அதுபோல இசைவுடன் வந்துள்ள இந்தப்பதுமை போன்றவளின் பாதத்தைக் கையால் தடவித்தருவதே நான் கைபெற்ற பயன் என்று தொட்டான்.

**விளக்கம்** : சாரமாமுனிவர், இறைவனுக்குச் சாத்தும்பொருட்டு வைத்திருந்த செவ்வந்திமலர்களை, அக்கால உறையூர் அரசன் தன்மனைவிக்காகப் பறித்துச்சென்றதால், சினந்த முனிவர் மண்மாரியால் அழிக என்று சாபமிட உறையூர் மண்மாரியால் அழிந்தது என்ற செய்தி குறித்தார்.

**இலக்கணக்குறிப்பு** : வந்தஎன்ற சொல்லின் முன்வந்த உ என்ற முன்னொடு இசைவைக்குறிக்க வந்தது. ஆங்கு - உவமைச்சொல். இச்செய்யுள் உவமையணி.

( 14 )

### பொய்பாராட்டல்

ஏந்(து)எழில் தாயான செல்வன் சிராமலை யின்அணங்(கு)உன்
கூந்தற்(கு) உவமையும் மாமுகக்(கு) ஒப்பும் கொளஅலவோ
காந்து மினைச்சுமந் தேகார் அலைவதும் காண்திருவைப்
போந்து கமலம் சுமந்(து)ஒர்தா ளில்தவம் பூண்பதுமே.

**குறிப்புரை** : ஏந்து= சிறந்த. மாமுகம்= அழகியமுகம். அலவோ= அல்லவா. காந்து= ஒளிரும். கார்= மேகம். மின்= மின்னல். திருவைப்போந்து= திருமகளையடைந்து. சுமந்து= தாங்கி. ஓர்தாள்= ஒற்றைக்கால்.

**பொழிப்புரை** : சிறந்த அழகிய தாயான செல்வனது சிராமலைவாழ் பெண்ணே ! உனது கூந்தலுக்கு உவமையாக வேண்டியல்லவா ஒளிரும் மின்னலைச் சுமந்தமேகம் அலைகிறது, உன்முகத்துக்கு ஒப்புமையாகவேண்டி தாமரைமலர் திருமகளையடைந்து அவளைச் சுமந்துகொண்டு தவம் செய்கிறது. இவற்றைக் காண்பாயாக.

**விளக்கம்** : மின்னலாகிய வெண்மையை போக்கிக்கொள்ள மேகம் அலைகிறது என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் தற்குறிப்பேற்றவணி.

( 15 )

### இடம்பெற்றுத்தழால்

விண்ணும் புகழ்நற் சிராமலை நாதன் வியன்வரைவாய்
எண்ணும் விழிவாள் பிளந்தபுண் ஆற்றி இனி(து)உயயாம்
நண்ணும் முலைஒற்றிட் டேவாய் அமுது நனிசுவைத்தே
உண்ணும் படிஇள மாதவிப் பந்தலும் உற்(று)உளதே.

**குறிப்புரை** : வியன்வரைக் கண்= பெருமைபொருந்திய மலையில். எண்ணும்= மதிக்கத்தக்க. விழிவாள்= கண்ணாகிய வாளாயுதம். உய= பிழைக்க. யாம் நண்ணும்= நாம் அடையவேண்டிய. நனி= மிக. உண்ணும்படி யாம் நண்ணும் இளமாதவிப்பந்தல் உளது என்க.

**பொழிப்புரை** : வானுலகமும் புகழும் சிறந்த சிராமலைப்பெருமானின் பெருமைபொருந்திய மலையில், மதிக்கத்தக்க உன்விழியாகிய வாள் பிளந்த புண்ணினை ஆற்றி நான் இனிதுபிழைப்பதற்கு, முலைகளால் ஒற்றவும், வாய்அமுதம் மிகவும் சுவைப்பதற்கும் நாம் அடையவேண்டிய இடமாக இளையமாதவிக்கொடி படர்ந்தஇடம் இங்கு உள்ளது.

( 16 )

### வழிபாடு மறுத்தல்

பொன்னித்தென் பாலாம் சிராமலைத் தேவன் பொழில்அகத்தே
மன்னித் திகழும் அலையே அசோ(கு)அடை மாதவியே
துன்னிய கற்(பு)எற்(கு) அளித்(து)அவர் சோகம் துடைத்(து)இடமிங்(கு)
உன்னிய தாம்முறை ஈந்தே அருள்வீர் உயர்உறவே.

**குறிப்புரை** : அலை= இடம். துன்னிய= நெருங்கிய - சிறந்த. எற்கு= எனக்கு. சோகம்= துன்பம். இங்குஇடம் உன்னியதாம் முறை= இங்கு இடத்தினை நான் நினைத்தவாறு.

**பொழிப்புரை** : காவிரியாற்றின் தெற்கேயுள்ள சிராமலையானின் சோலையில் பெருமைபொருந்த விளங்கும் இடமே ! அசோகமரத்தைச் சார்ந்துபடர்ந்த மாதவிக்கொடியே ! எனக்குச் சிறந்தகற்பினை அளிக்கவும், அவரின் - தலைவனின் துன்பம்போக்கவும், இங்கு நான் நினைத்தவாறு இடத்தினை உயர்வு பொருந்தத் தந்தருள்வீர்.

( 17 )

### இடையூறு கிளத்தல்

காம்பணி தோளுமை பங்கன் சிராமலைக் காரிகையே
பூம்பொழில் சூழ்நின் பதியார் தனமோ புதைத்(து)அறியார்
தாம்பரிந்(து) ஈவர் என விளக்கத் தனிக்கணைகள்
வீம்(பு)அற மூடினை நின்றனை யானையா வீறியதே.

**குறிப்புரை** : காம்பு= பூந்தாள். பதியார்= ஊரவர். தனம் புதைத்து அறியார்= செல்வத்தை உரியவர்க்குத் தராமல் மண்ணில் புதைத்து / கொங்கைகளை உரியவர்க்குத் தராமல் கைகளால் மூடி. பரிந்து= அன்புடன். விளக்க= சொல்வது இருக்க. தனிக்கணைகள் வீம்புஅற= மன்மதனின் ஒப்பற்ற

மலரம்புகளின் பெருமைஒழிய. மூடினை= கைகளால் புதைத்தாய். யானையா வீறியது= யானை மத்தகமாக விளக்கம்உற்றது.

**பொழிப்புரை** : பூந்தாள் போன்ற மென்மையும் வழுவழுப்பும் கொண்ட தோள்களுடைய உமையம்மையை இடப்பாகம் கொண்ட அருள்தரு தாயுமானவனின் சிராமலைவாழ் பெண்ணே ! அழகிய சோலைசூழ்ந்த உன்ஊரவர் தமது செல்வத்தை / தமது கொங்கைகளை உரியவர்க்குத்தராமல் மூடிமறைக்கமாட்டார். தாமே அன்புடன் வழங்குவர் என்று சொல்வதிருக்க, யானையின் மத்தகம் போன்று விளக்கமுற்ற கொங்கைகளை, நீ மன்மதனின் ஒப்பற்ற மலரம்புகளின் பெருமை ஒழிய உன்கைகளால் புதைத்து நின்றாய்.

**இலக்கணக்குறிப்பு** : தனம் - செம்மொழிச் சிலேடைச் சொல். மூடினை - முற்றெச்சம்.

( 18 ) **நீடு நினைந்திரங்கல்**

இல்லாளைத் தாஎன்(று) இயற்பகை பாலே இரந்தமலை
வில்லான் வதியும் சிராமலைப் பாவாய் விழைகழைவில்
எல்ஆம் களி(று)ஏறும் வேள்வன் சமரில் இளைத்(து)அயர்யான்
செல்ஆர் குழற்கா விருந்(து)ஆறல் என்றோ செழிப்புறவே.

**குறிப்புரை** : மலைவில்லான்= மேருமலையை வில்லாக ஏந்திய சிவபிரான். விழை கழைவில்= விரும்பத்தக்க கரும்பு ஆகிய வில். எல் ஆம் களிறு= இரவு ஆகிய யானை. வேள்= மன்மதன். சமரில் அயர்த்து= போரில் சோர்ந்து. செல்ஆர் குழல் கா விருந்து= மேகம் பொருந்திய யோனி தரும்காத்தல் ஆகிய விருந்து - புணர்ச்சி விருந்து. ( யோனிக்கு மேல் முளைத்த முடியை, மேகம்என்றார் ) ஆறல்= ( சோர்வு ) தணிதல் - தீர்தல்.

**பொழிப்புரை** : உன்மனைவியைத் தா என்று இயற்பகை நாயனாரிடம் யாசித்த மேருமலையை வில்லாக ஏந்திய சிவபிரான் வாழும் சிராமலைப் பாவையே ! விரும்பும் கரும்புவில் ஏந்தியவனும், இரவு ஆகிய யானையில் ஏறிவருகிறவனும் ஆகிய மன்மதனுடன் செய்யும் போரில் இளைத்துச் சோர்ந்த நான் உனது முடியாகிய மேகம்பொருந்திய யோனிதரும் காத்தலாகிய விருந்தால் சோர்வு தணிந்து புத்துணர்ச்சி பெறுவது எந்நாளில்?.

**விளக்கம்** : யோனிமேல் உள்ள முடியை மேகம் என்னும் வழக்கம் - " மேகம்( முடி )பொருந்திய கடலில் ( யோனியில் ) கிடந்து, ஆகாயமாகிய இடுப்பைக்கடந்து ( வெற்றிடம் ஆகிய இடுப்பு ) சொர்க்கத்தைப் ( முலையை ) பெறுவேன் ( புணர்வேன் )" என்பான் ஒருதலைவன்

( 19 ) **மறுத்தெதிர் கோடல்**

வேன்மணி நேர்ராம நாரா யணன்தன் வியன்குடியைத்
தான்மிகக் காக்கும் சிராமலைப் பெம்மான் தனிமலர்த்தாள்
ஊன்மறந் தேநினை யார்சிந்தை வண்ணமென் உள்அணைநாண்
கோன்மலி காமக் கடற்பெருக் கால்உடை கொண்டதுவே.

**குறிப்புரை** : வேன்மணி= சிறந்த மாணிக்கமணி. வியன்குடி= பெருமைபொருந்திய குடி. தனி= ஒப்பற்ற. ஊன் மறந்தே= உணவை மறந்து. வண்ணம்= போல. உள் அணை நாண்= உள்ளத்தைக் காத்த நாணம். கோன்மலி= திரட்சி மிக்க. பெருக்கு= அலை. உடைகொண்டது= உடைபட்டது.

**பொழிப்புரை** : சிறந்த மாணிக்கமணிபோன்ற ராமநாராயணனின் பெருமைபொருந்திய குடியைத் தானே குறைவின்றி மிக்ககாக்கும் சிராமலைப்பெருமானின் ஒப்பற்ற தாமரை மலர்போன்ற திருவடிகளை உணவைமறந்தும் நினையாதவர் மனம்போல், எனது உள்ளத்தை அணையாக விளங்கிக்காத்த நாணம், திரட்சிமிக்க காமக்கடல் அலைப்பெருக்கால் உடைபட்டது. நாணத்தைக் காமம் வென்றதென்றார்.

**விளக்கம்** : காமக்கணிச்சி உடைக்கும் நிறைஎன்னும், நாணுத்தாழ் வீழ்த்த கதவு. ( திருக்குறள் 1251 )

( 20 ) **வறிதுநகை தோற்றல்**

விண்ணோர் பரவும் சிராமலை யான்வரை வீங்குபொழில்
பெண்ணார் குழல்இரு ளான்மயங் கித்துயர் பெற்றஇறை
திண்ணார் முலைவரை மேவிச் சுகிக்கத் திருநில(வு)என்(று)
எண்ணேர் முறுவல் முளைத்த(து) இவரின் மலர்முகத்தே.

**குறிப்புரை** : வீங்கு= செறிந்த. குழல் ஆர் இருள்= கூந்தலின் மிக்க இருள். திண் ஆர்= பருத்த. முலைவரை மேவி= முலையாகிய மலைக்கண் பொருந்தி. சுகிக்க= இன்புற. எண் ஏர்= எண்ணத்தக்க அழகிய, முறுவல் இறை முளைத்தது= புன்முறுவல் நொடிப்பொழுது தோன்றியது. இவரின் மலர்முகத்தே எண் ஏர் முறுவல் இறைமுளைத்தது என்க.

**பொழிப்புரை** : தேவர்கள் வணங்கும் தாயான செல்வரின் மலைக்கண்ணதாகிய செறிந்த சோலைக்கண், பெண்ணினது கூந்தலின் மிக்க இருளால் மனம் மயங்கித்துன்புற்றயான்,பருத்த அழகிய முலையாகிய மலைக்கண் பொருந்தி இன்புற, அழகிய நிலவுஎன்று சொல்லுமாறு இவளின் மலர்போன்ற முகத்தில் விரும்பத்தக்க அழகிய புன்முறுவல் நொடிப்பொழுது தோன்றியது.

( 21 ) **முறுவற் குறிப்புஉணர்தல்**

பரங்குலாம் வேய்முத்(து) இரும்புரம் தீயப் படுத்திய(து)இத்

தரங்குலாம் பூவாய் சிராமலை யான்வரைத் தண்கரும்பின்
வரங்குலாம் செந்துவர் வாய்முத்து அகம்புறம் வாய்எனது
சிரம்குலாம் ஒண்புரத் தைப்புள(கு) ஆக்கித் திருத்தியதே.

**குறிப்புரை** : பரம்குலாம்= சிவனிடம் விளங்கிய. வேய்= ( திருவாயில்) மலர்ந்த. முத்து= புன்முறுவல். இரும்புரம்= வலிமையான முப்புரங்கள். தரம்குலாம்= உயர்வு பொருந்திய. பூவாய்= பூப்போன்ற வாயுடைய. வரம் குலாம்= மேன்மை விளங்கும். வாய்முத்து= வாய் வெளிப்படுத்திய புன்முறுவல். புரம்= உடம்பு. புளகு= மிக்கமகிழ்ச்சி . திருத்தியது = துன்பம் தீர்த்து மகிழ்ச்சியுண்டாக்கியது.

**பொழிப்புரை** : சிவபிரானிடம் விளங்கி அவர் திருவாயில் மலர்ந்த புன்முறுவல், வலிமையான முப்புரங்களை நீறாக்கியது. சிராமலைக்கண்ணதான இந்த உயர்வுபொருந்தியமலர்போன்ற வாயுடைய தண்ணிய கரும்பாகிய இவளது மேன்மை விளங்கும் செந்நிறவாய் வெளிப்படுத்திய புன்முறுவல், எனது உடம்பில் சிறப்புடைய ஒளிபொருந்திய பெருமகிழ்ச்சியை உண்டாக்கி அகத்தில் துன்பம் தீர்த்து மகிழ்ச்சியை உண்டாக்கியது.

**விளக்கம்** : சிவபிரான் முறுவல் அழித்தது, இவள் முறுவல் மகிழ்ச்சிதந்து அளித்தது என்றான்.

( 22 )

**முயங்குதலுறுத்தல்**

பூந்தரு ஓங்கும் சிராமலை யான்அருள் பூண்டதுபோல்
கூந்தல்அம் காஅடைந்(து) உந்திச் சுழிநீர் குடைந்(து)இனும்நான்
ஏந்(து)இள மாமுலை வெற்(பு)இருந்(து) ஓங்கும் இதழ்அமுதம்
மாந்திவெம் காமச் சுரத்தைத் தணித்திட வாய்த்தனளே.

**குறிப்புரை** : பூ= அழகு. தரு= மரம். அம்கா= அழகிய சோலை. கூந்தல்= கூந்தலுடையவளின். உந்திச் சுழி நீர்= ஆற்றின் சுழித்தோடும் நீர். குடைது= நீராடி. முலைவெற்பு= முலையாகிய மலை. மாந்தி= சுவைத்துப் பருகி. வெம்சுரம்= கொடிய நோய்.

**பொழிப்புரை** : மரங்கள் மிக்க சிராமலைநாதனின் அருளைப்பெற்றது போல் செழித்த அழகிய கூந்தலுடையவளின் சோலையை அடைந்து, இவளது தொப்புளகிய சுழித்தோடும் நீரில் நீராடி, மேலும் ஏந்திய இளமையான அழகிய முலையாகிய மலைக்கண் படிந்துஇருந்து, சிறந்த இதழ் அமுதம் சுவைத்துப் பருகி, எனது கொடிய காமமாகிய வெப்பத்தை தணிக்க இவள் வாய்த்தாள்.

**இலக்கணக்குறிப்பு** : கூந்தல் - அன்மொழித்தொகை. முலை வெற்பு, காமச் சுரம் - உருவகங்கள்.

(23 )

**புணர்ச்சியின் மகிழ்தல்**

மான்மழு தாங்கிமன் தங்கும் சிராமலை வண்பொழில்வாய்
கான்கெழு கூந்தல் இவள்இதழ் ஊறல் கனிவின்உண்டேம்
வான்புகழ் ஆழி அமுதும் கலைசேர் மதிஅமுதும்
மேன்சரி என்பேம் கடுபாம்பு இவைஉற(வு) என்(று) அறிந்தே.

**குறிப்புரை** : தாங்கி மன்= தங்கியவனாகிய அரசன் - சிவபிரான். வண் பொழில்வாய்= வளமான சோலைக்கண். கான்= நறுமணம். கனிவு= அன்பு. வான்= தேவர்கள். ஆழி= பாற்கடல். கலைசேர் மதி= கலைகள் நிரம்பிய முழுநிலா. மேன்சரி= மேலான ஒப்புமையுடையன. கடு பாம்பு இவை உறவு= நஞ்சு, பாம்பு இவற்றுடன் தொடர்புடையன.

**பொழிப்புரை** : மான் மழுப்படை இவை தாங்கிய அரசனின் - சிவபிரானின் - மலைக்கண்ணதாகிய வளமான சோலையில், மணக்கும் கூந்தலுடைய இவளது இதழில் ஊறும் நீரினை அன்புடன் பருகினேன். அந்நீருக்கு, தேவர்கள் புகழும் பாற்கடல் அமுதமும், கலைகள் நிரம்பிய முழுநிலா சுரக்கும் அமுதமும் , ஆகியன முறையே நஞ்சுடனும் பாம்புடனும் தொடர்புடையன என்றபோதிலும் இவள் இதழ்நீருக்கு இருஅமுதமும் எனக்கு வாழ்வளித்தமையால் ஒப்புமையுடையன என்பேன்.

**இலக்கணக்குறிப்பு** : உண்டேம் - உயர்வுகருதிய தன்மைப்பன்மை வினைமுற்று. ஆழி அமுது; கடு பாம்பு - எண்ணும்மைத்தொகைகள். இச்செய்யுள் முறைநிரல்நிறை அணி.

( 24 )

**புகழ்தல்**

சூலக் கரத்தர் சிராமலை அண்ணல் தொல்வரைவாழ்
நீலக் குவளை விழியாய் எழில்உறு நின்இடையின்
கோலக்(கு) ஒவ்வாமையின் அன்றோ அரிகள் குகைபுகுந்தே
சாலக் கரிஉண்(டு) ஒளித்துத் திரிகின்ற தாரணிக்கே.

**குறிப்புரை** : கோலக்கு= அழகுக்கு. அரிகள்= ஆண்சிங்கங்கள். கரி சால உண்டு= யானையை மிகவுண்டு. தாரணிக்கு= உலகில்.

**பொழிப்புரை** : கையில் சூலம் ஏந்திய தாயுமானபெருமானின் பழமையான மலைக்கண் வாழும் கருங்குவளை மலர்போன்ற விழிகளுடையவளே ! உனது அழகிய சிற்றிடையின் அழகுக்கு ஒப்புமையாத காரணத்தால்தான் உலகில் ஆண்சிங்கங்கள் யானையை மிகுதியாகத் தின்று குகைகுள் ஒளிந்து திரிகின்றன.

**இலக்கணக்குறிப்பு** : தாரணிக்கு - உருபுமயக்கம். இச்செய்யுள் விலக்குஅணி; தற்குறிப்பேற்ற வணியுமாம்.

( 25 ) காருக்கு எழிலாம் பிறையும் கதிரும் கவின்பெரும்பொன்
தேருக்(கு) இயல்மணி யும்ஒளிர் பட்டும் சிராமலைவாய்
போருக்(கு) அமைகளிற் றிற்(கு)இன் அணியும் புகழ்கடற்குச்
சீருக்(கு) இயைமையும் சேர்க்கத் தெரிந்தஎன் செங்கரமே.

**குறிப்புரை :** கார்= கார்மேகம் ஆகிய கூந்தல். பிறை= நெற்றி. கதிர்= சூரியனாக ஒளிரும் பொட்டும். பொன் தேர்= பெண்குறியாகிய தேர்த்தட்டு. மணி= மணிகள் பதித்தமேகலை. பட்டு= பட்டாடை. களிறு= ஆண்யானையின் மத்தகமாக விளங்கும் முலை. புகழ்கடல்= புகழத்தக்க கடல்போல் விரிந்த அல்குல். தெரிந்த= அறிந்தன.

**பொழிப்புரை :** எனது சிறந்த கைகள்; சிராமலைக்கண் இவளது கார்மேகம்போன்ற கூந்தலுக்கு அழகுசேர்க்கும் நெற்றியும், அதில் சூரியனாக ஒளிரும் பொட்டும், அழகிய சிறந்த பெண்குறியாகிய தேர்த்தட்டுக்கு இசைவான மணிகள்பதித்த மேகலையும், ஒளிரும்பட்டாடையும், கலவிப்போருக்கு அமைந்த யானைமத்தகம் ஒத்தமுலைகளுக்கு இனிய அணிகலன்களும், புகழ்வாய்ந்த கடல்போல் விரிந்த அல்குலுக்குப் பொருத்தமானவைகளாகச் சேர்த்தமைக்க அறிந்தவை.

( இயற்கைப்புணர்ச்சி - முற்றிற்று. )

## வன்புறை

*********************

( 26 ) **அணிந்துழி நாணியதுணர்ந்து தெளிவித்தல்**

மணிவண்ணன் காப்பமை ராமநா ராயணன் வாய்ந்துதொழும்
திணிவண் சிராமலை யான்வரை அன்ன செழுந்திருவே
அணிவண்ணம் கற்றேன் பழமுறை ஓதி அதைமுடித்தேன்
பிணிகொண்ட அச்சமும் நாணமும் நீக்குதி பே(து)அறவே.

**குறிப்புரை :** மணிவண்ணன்= நீலமணி நிறமுடைய திருமால். வாய்ந்து= நல்வாய்ப்பாகப் பெற்று, திணிவண்= திணி= மூன்று தொழில். வண்= மிகுந்து விளங்கும். அணிவண்ணம்= அழகுசெய்யும் முறை. பழமுறை= பழைய முறையில். ஓதி= கூந்தல். பிணிகொண்ட= பிணித்துள்ள. பேது= வருத்தம். பேது அறவே நீக்குதி.

**பொழிப்புரை :** நீலமணிநிறத்துத் திருமாலின் காப்பினைப்பெற்ற ராமநாராயணன் நல்வாய்ப்பாக வணங்கும் படைத்தல் காத்தல் அழித்தல் ஆகியமுத்தொழிலிலும் சிறந்துவிளங்கும் தாயுமானவனின் சிராமலைக்கண் அழகிய திருமகள்போல் விளங்குகிறவளே ! உன்னை அணிசெய்து அழகுசெய்யும் முறை கற்றேன், முன்பிருந்தபடியே உன்கூந்தலை முடித்தேன். எனவே பிறர் ஐயம்கொள்வரோ என்ற உனது வருத்தத்தை அச்சமோ நாணமோ இன்றி நீக்குக.

( 27 ) **பெருநயப்பு உரைத்தல்**

பார்அணி யாய சிராமலை யான்வரைப் பூம்பொழில்வாய்
சீர்அமை பூஇயல் ஆயும் செயலுறு தேன்இனமே
நீர்அறி வீரோ இவர்கனி வாய்போல் நிலையமைய
ஆர்அமு(து) ஊறிஒண் முல்லை அரும்பிடும் ஆம்பலையே.

**குறிப்புரை :** பார்= உலகு. சீர் அமை= சிறப்பாக அமைந்த. பூஇயல்= மலரின் இயல்பை. தேன்= வண்டு. நிலைமைய= தன்மையுடைய. இடும்= வெளிப்படுத்தும்.

**பொழிப்புரை :** உலகிற்கு அணியாக விளங்கும் சிராமலைத் தாயுமானவரின் அழகிய சோலைக்கண், சிறப்பாக அமைந்த மலர்களின் தன்மையை ஆராயும் வண்டுகளே ! தலைவியின் கொவ்வைக்கனி போன்ற தன்மையுடைய வாயின் தன்மையுடையதாய் விளங்கும் செவ்வாம்பல் மலர் தன்னில் வெளிப்படுத்திய முல்லை அரும்புகளை நீவிர் அறிவீரோ ?

**விளக்கம் :** செவ்வாம்பல்மலர் வாய், முல்லைஅரும்பு பற்கள் என்க. இது உலகில் காணப்படாத நிலைமை பற்றிக்கூறித் தலைவியை வியந்ததாகும்.

( 28 ) **தெய்வத்திறம் பேசல்**

மால்அயன் தேடச் சுடருரு ஆய மதிச்சடையான்
ஆலயம் என்னும் சிராமலை யான்அருள் ஆக்கிடநாம்
வேலனும் வள்ளியும் ஒப்(பு)என மேவின மேதினிதன்
பால்அணி அப்பால் எவரேஅப் பாலாக்கும் பண்பினரே .

**குறிப்புரை :** ஆலயம்= இருப்பிடம். ஆக்கிட= செய்ய. மேதினிதன்பால்= உலகில். அணி அப்பால்= அழகிய வானுலகம். அப் பால் ஆக்கும்= அத்தன்மையராகச் செய்யும். அப் பால்ஆக்கும் தன்மையர் எவரே. எவரே= யாருளார்.

**பொழிப்புரை** : திருமாலும் நான்முகனும் தேட, ஒளிவடிவாய் விளங்கியவனும், சிராமலையை இருப்பிடமாக்கிக்கொண்டு, பிறை, சடையுடைவனும் ஆகிய தாயுமானவன் அருள்செய்ய, நாம் முருகனும் வள்ளியும் ஒப்புமையாகக் கூறத்தக்கவகையில், பொருந்திய இவ்வுலகில் அல்லது அழகிய வானுலகில் நம்மைப்போன்றவர் ஆக்குவோர் தெய்வத்தைத் தவிர யாருளார் ? தெய்வமே நம்மைக் கூட்டியது.

( 29 ) **பருவரலுணர்தல்**

வல்லார் ஒருநால்வர் தேற முனநாள் வயங்குபெரும்
கல்ஆல் இருந்து முனம்யோகு செய்த கடவுள்அமர்
நல்ஆ லயமாம் சிராமலை அன்னஎன் நல்உயிரே
சொல்ஆர் அயல்அறி வார்என வோமனம் சோருவதே

**குறிப்புரை** : ஒருநால்வர்= நான்முகனின் மானச புதல்வகளாகிய சனகர், சனாதனர், சனற்குமாரர், சனந்தனர். தேற= தெளிவுபெற. முனநாள்= முன்னை நாளில். முனம்= முன்பு. சொல் ஆர் - ஆர் சொல்= மிக்க பழிதூற்றும்.

**பொழிப்புரை** : முன்னாளில் மெய்ப்பொருளியல் வல்லவர்களாய், நான்முகன் மனத்தால் படைத்த சனகர் முதல் நால்வரும் தெளிவுபெற, மிகச்சிறந்து விளங்கிய கல்லால மரநிழலில் யோகநிலையில் முற்பட்டிருந்த சிவபிரான் எழுந்தருளிய சிறந்த இடமாகிய சிராமலைபோன்ற என்நல்ல உயிராக விளங்குகிறவளே ! மிக்க பழிதூற்றும் அயலார் நம் களவொழுக்கத்தை அறிவார்களோ என்றா கவலைப்படுகிறாய் ?

**விளக்கம்** : உபதேசம் பெற்ற நால்வரும் வல்லார்கள் ஆதலின், அவர்களிடம் வாயைத் திறந்தால் வம்பு என்பதனால் " வாக்கிறந்த பூரணமாய், மறைக்கு அப்பாலாய், எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை இருந்தபடி இருந்துகாட்டிச் சொல்லாமல் சொன்னான் " என்று சுவைபடக் கூறுவார் திருவாவடுதுறை ஆதீன மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர் அவர்கள்.

( 30 ) **பிரிவச்சம்**

சற்றே பிரியினும் நாம்இவ் அணிஇழை தன்னுயிர்ஓ(வு)
அற்றே தரிப்(பு)அரி தாகும் சிராமலை உள்ஒளிரும்
நற்றேன் ஒழு(கு)உயர் கொன்றைச் சடையோன் நயந்(து)உமையை
மற்றே உடலில் கலந்(து)இட(வு) ஆக்கிய மாண்புநன்றே.

**குறிப்புரை** : ஓவுஅற்றே தரிப்பு அரிது ஆகும்= தொடர்ந்து உயிர்வாழ்வது அரிது - இறப்பாள். உமையை நயந்து. இடவு= இடப்பாகம்.

**பொழிப்புரை** : சிராமலைக்கண், ஒளிர்கின்ற கொன்றைச் சடையுடையவன் உமையம்மையைப் பிரியாமல் கலந்து தனது உடம்பின் இடப்பாகம் கொண்ட மாண்பு நன்று. ஆகவே நாம் ஆய்ந்தெடுத்த அணிகலன் அணிந்த இவளை நாம் சற்றுப் பிரியினும் இவள் உயிர்வாழ்வது அரியதாகும் இறப்பாள் என்று அஞ்சினான்.

( 31 ) **இன்றியமையாமை எடுத்துரைத்தல்**

பலகலை ஆய்ந்(து)உணர் ராமநா ராயணன் பாடும்இயல்
நிலவிய மேன்மைச் சிரகிரி நாதன் நிறைஅருளைக்
குலவிடக் கொள்ளினும் நின்பிரிந் தாலோ குவலயத்துத்
தலமிகு நீர்பிரி மீன்என ஆகுவன் தாழ்குழலே.

**குறிப்புரை** : பாடும் இயல்= போற்றும் தன்மை. குலவிட= ஒளிபொருந்த. நின்பிரிந்தால்= உன்னை நான் பிரியின். தலம்= இடம் - குளம். தாழ்குழலே= நீண்ட கூந்தலுடையவளே.

**பொழிப்புரை** : நீண்ட கூந்தலுடையவளே ! பலகலைகளை ஆராய்ந்து உணர்ந்த ராமநாராயணன் போற்றும் தன்மையுடையதும் மேன்மை நிலவுவதும் ஆகிய சிராப்பள்ளிப் பெருமானின் நிறைந்த அருளை ஒளிபொருந்தப் பெற்றாலும் உன்னை நான் பிரிந்தால் உலகத்தில் குளத்தில் நிறைந்த நீரினைப் பிரிந்த மீன்போலாவேன் - இறந்துபடுவேன்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

( 32 ) **பிரியேன் என்றல்**

உமைஒரு கூ(று)உகந்(து) ஆண்டருள் மெய்யன் உயர்நிலைஎன்(று)
அமைநெடு வெற்பாம் சிராமலை அன்னஎன் ஆருயிரே
இமைதரு போழ்தும் பிரியப் பிரியம்யான் எய்துவனோ
சமைபிரி(வு) எய்தில் தரியேன் கவல்ஒழி சான்றும்உண்டே.

**குறிப்புரை** : மெய்யன்= ஞானியாகிய சிவபிரான், பிரியப் பிரியம்= பிரிவதற்கு விருப்பம். சமை= சேர்ந்து இருப்பது. கவல்= கவலை.

**பொழிப்புரை** : உமையம்மையைத் தன் இடப்பாகம் கொண்டு அருள்புரியும் ஞானியாகிய சிவபிரானது உயர்ந்தநிலை போன்றது என்னுமாறு ஓங்கிய மலையாகிய சிராமலைபோன்ற என் ஆருயிர் ஒத்தவளே !

நான் நொடிப்பொழுதும் உன்னைப்பிரியும் விருப்பம் கொள்ளமாட்டேன். உன்னுடன் சேர்ந்து இருப்பதில் பிரிவு நேரின் உயிர்வாழமாட்டேன். கவலை ஒழிப்பாயாக. எனது இச்செயலுக்குச் சான்றும் உண்டு.

**இலக்கணக்குறிப்பு** : எய்துவனோ= ஓகாரம் எதிர்மறை. இச்செய்யுள் உவமையணி.

( 33 ) **பிரிந்து வருகஎன்றல்**

சங்கத் தமிழ்அறி ராமநாராயணன் தன்உயிராம்
புங்கச் சிராமலைத் தாயான பெம்மான் புகழ்வரைவாய்
தங்கத் தனிமயில் உன்முகம் மானும் சலசமலர்
செங்கை மலரால் பறியான் ஒளித்(து)இவண் சேருவனே.

**குறிப்புரை** : புங்கம்= உயர்ந்த. மானும்= ஒக்கும். சலசமலர்= தாமரைமலர். பறி= பறிப்பாயாக. ஒளித்து இவண் சேருவன்= மறைந்திருந்து மீண்டும் இங்கு வருவேன்.

**பொழிப்புரை** : சங்கத்தமிழில் புலமைபெற்ற ராமநாராயண வள்ளலின் உயிராகவிளங்கும் உயர்ந்த சிராமலையாகிய தாயான ஈசனின் புகழ்வாய்ந்த மலைக்கண், பொன்னாலான மயில்போன்றவளே ! உன்முகம் ஒத்த தாமரைமலரை உன் செங்கைத் தாமரைமலர்களால் பறி. நீவரும்வரை நான் மறைந்து இருந்து மீண்டும் இங்கு வருவேன்.

( 34 ) **இடம்அணித்து என்றல்**

பாடும் புலவர் மகிழ்தரப் பொற்காசு பண்(டு)அளித்தோன்
நாடும் சிராமைச் செங்குன்ற வாணர்தம் நற்பிடியே
வாடும் படிஎன் எம(து)ஊர் கருங்குயில் வண்ணம்இசை
நீடும் படிகண்(டு) உம(து)ஊர் மயில்ஆலும் நெஞ்(சு)உகந்தே.

**குறிப்புரை** : பண்டு அளித்தோன்= முன்னாளில் அளித்த ராமநாராயண வள்ளல். வாடும்படி என்= வாடுவதேன். வண்ணம் இசை நீடும்படி கண்டு= அழகிய இசை மிகுவதைக்கேட்டு. ஆலும்= ஆடும்.

**பொழிப்புரை** : தன்னைப்பாடும் அப்பரடிகட்கும் திருஞானசம்பந்தர்க்கும் பொற்காசினை நாடோறும் திருவீழிமிழலையில் அளித்த சிவபிரான் விரும்பும் சிராமலையில் ( / இசைவல்ல புலவர்கள் மகிழ முன்னாளில் பொற்காசு அளித்த ராமநாராயணன் விரும்பித்தொழும் சிராமலையில் ) வாழ்கின்றவர் ஈன்ற, அழகியபெண்யானை போல்அசைந்து நடப்பவளே ! எமது ஊரில் கரியகுயில் அழகுறப்பாட, அது சிறந்துவிளங்குவது கேட்டு, உமது ஊர் மயில் மனம்மகிழ்ந்து ஆடும். அவ்வளவு அண்மையன இரண்டும். எனவே வருந்த வேண்டா.

**விளக்கம்** : அப்பரடிகட்கும் திருஞானசம்பந்தர்க்கும் பொற்காசளித்தது.

" விண்ணின்று இழிந்த விமானத்தின் கிழக்கும் மேற்கும் பீடத்தில்
அண்ணல் புகலி ஆண்டகையார் தமக்கும் ஆண்ட அரசினுக்கும்
நண்ணும் நாள்கள் தொறும்காசு படிவைத்து அருள " ( பெரியபுராணம். பா.1528 )

( வன்புறை - முற்றிற்று. )

( 35 ) **தெளிவு**

******************

வேல்விழிச் சங்கிலிக் காக மகிழிடம் மேவியஅன்
பால்வதி வண்ணச் சிராமலை யான்வரைப் பாங்(கு)இரவி
கால்வழி மாறியே தென்வடக்(கு) ஆயினும் கட்டுரையே
மால்வழி கொண்(டு)இவர் மாறார் மனம்தெளி(வு) ஆயதுவே.

**குறிப்புரை** : மகிழ்= மகிழமரம். மேவிய= தங்கிய. அன்பால் வதி= அன்பினால் தங்கிய. பாங்கு= பக்கம். கால்வழிமாறி= செல்லும் வழிமாறி. கட்டுரை= உறுதி. மால்= மனமயக்கம் . மாறார்= உறுதியில் பிறழார்.

**பொழிப்புரை** : வேல்போன்ற விழிகளுடைய சங்கிலியாரைச் சுந்தரர் மணக்க, மகிழமரத்தில் அன்பால் தங்கிய அழகிய சிராமலைக்கு உரியவனது மலைக்கண், ஞாயிறு கிழக்கு மேற்காக இயங்காமல் தெற்குவடக்காக இயங்கினாலும், இவர் - தலைவர் - மனமயக்கம்கொண்டு தன்உறுதியில் மாறமாட்டார். இது உறுதி என்று தன்மனம் தெளிந்தாள்.

( தெளிவு - முற்றிற்று. ) .

**பிரிவுழி மகிழ்ச்சி**

*********************

( 36 ) **செல்லும் கிழத்தி செலவுகண்டு உளத்தொடு சொல்லல்**

பாட்(டு)அளி பாடும் சிராமலை நாதன் பனிவரைவாய்
காட்(டு)ஒரு கொம்பு மழையும் பிறையும் கயலுடனே
நீட்(டு)இரு வெற்பும் சுமந்(து)என் உயிர்போல் நிறையுளமே
தீட்(டு)ஒரு சித்திரம் என்னச் செலுமால் திருவுடனே.

**குறிப்புரை** : அளி பாட்டுப்பாடும். அளி= வண்டு. பனிவரை= குளிர்ந்தமலை. ஒருகொம்பு= ஒருகொம்பு போன்றவள். மழை= கார்மேகம் போன்ற கூந்தல். பிறை= பிறைபோன்ற நெற்றி. கயல்= கெண்டைமீன் போன்ற கண்கள். இருவெற்பு= இருமலைபோன்ற முலைகள். சித்திரம்= ஓவியம் போன்றவள்.

மால்திருவுடன் என்உயிர்போல் நிறைஉளமே தீட்டுஒரு சித்திரம் என்ன நீட்டுச் செலுமால். மால் திரு= மிக்க அழகு. நிறைஉளம்= நிறைந்த மனத்துடன். நீட்டு= தொலைவில். செலும்= செல்கிறது

**பொழிப்புரை :** வண்டுகள் பாட்டிசைக்கும் சிராமலைத்தலைவனின் சோலைகளுடைய மலையில், கொம்புபோன்ற ஒருத்தி, கார்மேகம் போன்ற கூந்தலுடன், பிறைபோன்ற நெற்றியும், கயல்போன்ற கண்களும், இருமலைபோன்று பருத்தமுலைகளும் கொண்டு, என்உயிர்போல் நிறைந்த மனத்துடன், தீட்டிய ஒரு ஓவியம் என்னுமாறு மிக்க அழகுடன் செல்கிறது.

**இலக்கணக்குறிப்பு :** கொம்பு, மழை, பிறை, கயல், இருவெற்பு - உருவகங்கள். ஓவியம்போல் - உவமை. இச்செய்யுள் கலவைஅணி.

( 37 ) **பாகனொடு சொல்லல்.**

தாள்இணை நாண்தரும் அச்சமோ முன்னுறத் தான்இழுக்க
வாள்இணை அன்போநம் பால்உறப் பின்ஈர்க்க மாண்உயிராம்
நீள்இயல் நல்லுரு ஒன்(று)இச் சிராமலை நீள்பொழில்வாய்
கேள்இயை மின்போல் வலவா செலல்காண் கிளர்ந்திடவே.

**குறிப்புரை :** இணைதாள்=,இருகால்கள். முன்னுற= முன்னே செல்ல. வாளிணை= ஒளிபொருந்திய இருகண்கள். நம்பால்= நம்மிடம். நீள் இயல்= நெடுந்தொலைவில் செல்லுதல். கேள் இயல் மின்போல்= அன்புடன் இயங்கும் மின்னல்போல். கிளர்ந்திட= மனநிறைவுடன்.

**பொழிப்புரை :** தேர்ப்பாகனே ! இருகால்களையும் நாணம்தரும் அச்சம் முன்னே இழுக்க, ஒளிஉடைய இருகண்களின் அன்பு நம்மிடம் பின்னே ஈர்க்க, என் உயிராகிய மாட்சிமைப்பட்ட நல்ல ஒரு உருவம், இந்தச்சிராமலையின் நீண்ட சோலைக்கண் அன்புடன் இயங்கும் மின்னல்போல் நெடுந்தொலைவில் மனநிறைவுடன் செல்வதைக் காண்பாயாக.

**இலக்கணக்குறிப்பு :** இச்செய்யுள் உவமைஅணி.

( பிரிவுழி மகிழ்ச்சி - முற்றிற்று )

## பிரிவுழிக் கலங்கல்

*******************

( 38 ) **ஆயவெள்ளம் வழிபடக்கண்டு இது மாயமோ என்றல்**

பொன்வரை வில்லான் மலையென் சிராமலைப் பூம்பொழில்வாய்
மன்உறை யாய நடுமீன் குழாத்துறு மாமதிபோல்
துன்னிய நல்லார் இவர்முலை தோய்ந்த(து)என் சூழ்நனவோ
முன்னிய தாம்கன வோபிறி தோஎன் மொழிவதுவே.

**குறிப்புரை :** பொன்வரை= மேருமலை. என்= என்றுகூறப்பெறும். மன் உறையாய= பெருமையின் உறைவிடமாகிய. மீன்குழாத்து நடுஉறு= விண்மீன் கூட்டத்தின் நடுவே பொருந்திய. மாமதி= அழகிய நிறைநிலா. துன்னிய= நெருங்கிய. நல்லார் இவள்= நல்லவளாகிய இவள். முலைதோய்ந்தது= புணர்ந்தது. என்மொழிவது= என்னவென்று கூறுவது.

**பொழிப்புரை :** மேருமலையை வில்லாக ஏந்தியவனின் மலைஎன்றுகூறப்பெறும் சிராமலையின் அழகிய சோலைக்கண், பெருமைக்கு உறைவிடமாக விளங்கும் ஆயமாகிய விண்மீன் கூட்டத்தின் நடுவில் நெருங்கிய அழகிய முழுநிலாப் போன்ற இவளைப் புணர்ந்தது என்னச்சூழ்ந்த நனவோ ? நிகழ்ந்தகனவோ ? பிறிதோ ? என்னவென்று கூறுவது !

( 39 ) **வாயில் பெற்றுஉய்தல்**

அருந்ததி தங்கமீன் ராமநா ராயணன் ஆய்ந்துதொழும்
பொருந்(து)அதி பெம்மான் சிராமலைச் சாரல் பொதும்பரிடை
திருந்(து)அணி என்உயிர் ஆம்இவர் வாள்முகச் செம்மலர்த்தேன்
மருந்(து)அறி என்றுபாங் கின்முக மாமலர் வாய்த்ததுவே.

**குறிப்புரை :** தங்கம்= ஒளி அதிபெம்மான்= மிகச்சிறந்த கடவுள். பொதும்பர்= சோலை. திருந்து= அழகிய. வாள்முகம்= ஒளிபொருந்திய முகம். மருந்து= அமுதம். அறி= அறிந்துகொள்ள. பாங்கின்= ஆயத்தவரால்

**பொழிப்புரை :** ராமநாராயணன் ஆராய்ந்து வணங்கும் ஒளிபொருந்திய விண்மீனாகிய அருந்ததி பொருந்திய மிகச்சிறந்த கடவுளாகிய தாயுமானவனின் சிராமலைச்சாரற் சோலையில், அழகிய அணிகலன் அணிந்த என்உயிராகிய இவளது ஒளிபொருந்திய முகமாம் அழகியமலராகிய செந்தாமரையின்தேன், நமக்கு அமுதமாகும் என்று அறிந்துகொள்ள ஆயத்தவரால் வாய்த்தது.

( 40 ) **பண்பு பாராட்டல்**

தருக்கா வலன்தொழும் மேன்மைச் சிராமலைத் தண்வரைப்பால்
திருக்காண் பெருமலர் ஆம்ஒரு தாமரைச் செம்மலரே
உருக்காண் தரநீ மலரின் இவர்முகம் ஒத்தலிலை

செருக்(கு)ஆர் இளமுலை ஒவ்வாய் முகையாய்த் திகழினுமே

**குறிப்புரை** : தரு= கற்பகமரம். காவலன்= காக்கும் இந்திரன். திருக்காண்= திருமகள் தேர்ந்தெடுத்த. பெருமலர்= சிறந்தமலர். உருக்காண்தர= அழகுபொலிய. மலரின்= மலர்ந்தால். செருக்கு ஆர்= செருக்குடைய - நிமிர்ந்த. முகை= மொட்டு.

**பொழிப்புரை** : கற்பகமரத்தினைக் காக்கும் இந்திரன் வணங்கும் மேன்மைபொருந்திய சிராமலையின் தண்ணிய சோலைகளுடைய பக்கம், திருமகள் தேர்ந்தெடுத்தசிறந்த மலராகிய ஒப்பற்ற செந்தாமரை மலரே ! அழகுபொலிய நீ மலர்ந்தாலும் இவள்முகத்தை ஒப்பாயல்லை; இளமொட்டாக விளங்கினாலும் நிமிர்ந்து விளங்கும் இவள் இளமுலைகளுக்கு ஒப்பாகமாட்டாய்.

( 41 ) **இதுவுமது**

உருக்கா வலன்தொழும் ஓங்கல் சிராமலை ஒண்வரைப்பால்
திருக்காண் கமலம்முள் தாளிலே தங்கிடும் செங்குமுதம்
குருக்காண் தருகதிர் முன்முகை ஆகும்என் கூ(று)உவமை
பருக்(கு)ஆர் இவர்முலை மாமுகம் பண்வாயின் தேசினுக்கே.

**குறிப்புரை** : உருக் காவலன்= உயிர்களின் உடம்புகளைஎல்லாம் காக்கும் திருமால். ஓங்கல்= மலை. மாமுகம் உவமைகூறும் திருக்காண் கமலம் முள்தாளிலே தங்கிடும். பண்வாயின் தேசினுக்கே உவமைகூறும் செங்குமுதம் குருக்காண்தரு கதிர்முன் பருக்குஆர் இவர்முலை மாமுகம் முகையாகும் என்று கூட்டுக. மாமுகம்= அழகிய முகம். திருக்காண்= திருமகள் தேர்ந்தெடுத்த. முள்தாளிலே தங்கிடும்= முட்களுடைய காலுடன் - தண்டுடன் - நிற்கும். பண்வாயின் தேசு= இன்னிசைபோல் பேசும் ஒளியுடைய வாய். செங்குமுதம்= செங்குமுதமலர். குருகாண்தரு கதிர் முன்= ஒளியுடன் காணப்பெறும் ஞாயிற்றின் முன். பருக்கு ஆர்= பருமை பொருந்திய.. மாமுகம் ஆகும்= அழகிய நுனியாகும் - கூம்பும்.

**பொழிப்புரை** : உயிர்களின் உடம்புகளைக் காக்கும் திருமால் வணங்கும் மலையாகிய சிராமலையின் அழகிய சோலைப்பக்கம், இவளது முகத்துக்கு உவமை கூறப்பெறுவதும், தான் இருப்பதற்குத் திருமகள் தேர்ந்தெடுத்ததுமாகிய தாமரைமலர் முட்கள்பெற்ற தாளுடன் - தண்டுடன் நிற்பது. இன்னிசைபோல்பேசும் இவளின் ஒளியுடைய வாய்க்கு உவமைகூறப்பெறும் செங்குமுதமலர், ஒளியுடன் காணப்பெறும் ஞாயிற்றின்முன், பருத்த இவளது முலையின் நுனியாய்விடும் - கூம்பிவிடும். எனவே தாமரை மலர் இவள் முகத்துக்கோ, செங்குமுதமலர் இவள் செவ்வாய்க்கோ உவமை கூறத்தக்கனவல்ல என்றான்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுளில் அமைந்துள்ள பொருள்கோள் கொண்டுகூட்டுப் பொருள்கோள். இச்செய்யுளில் உள்ள அணி விலக்கணியாகும்.

( 42 ) **பயந்தோர்ப் பழிச்சல்**

( பெற்றோரைப் போற்றல் )

வேள்நிகர் ராமநா ராயணன் போற்றும் விழுநதிபாய்
வேணியர் வாழும் சிராமலைப் பூம்பொழில் மேவியஎண்
சாணியை ஊன்உயிர் இன்புற ஆக்கிய தாழ்குழலாம்
மாண்நிறை நாண்அமை என்உயிர் தந்தவர் வாழியவே.

**குறிப்புரை** : வேள்= மன்மதன். விழுநதி= சிறந்த கங்கையாறு. வேணி= சடை. எண்சாண் இயை= எட்டுச்சாண் பொருந்திய. ஊன்= உடம்பு. மாண்நிறை= மாட்சிமை மிக்க. நாண் அமை= நாணம் அமைந்த. என்உயிர் தந்தவர்= என் உயிராக விளங்கும் இவளைப் பெற்றவர்.

**பொழிப்புரை** : மன்மதனைஒத்த ராமராராயணன் போற்றும், கங்கையாறு பாயும் சடையுடைய சிவபிரான் வாழும் சிராமலையின் அழகிய சோலைக்கண் என்எட்டுச்சாண்பொருந்திய உடம்பும் உயிரும் இன்புறச்செய்த நீண்ட கூந்தலுடையவளும், மாட்சிமை பொருந்திய நாணம் அமைந்தவளுமாகிய என் உயிராகிய இவளைப் பெற்றவர் வாழ்க.

**இலக்கணக்குறிப்பு** : தாழ்குழல் - வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. என் உயிர் - உருவகம். வாழிய - இய ஈற்று வியங்கோள் வினைமுற்று.

( 43 ) **கண்படைபெறாது கங்குல்நோதல்**

படிஅளந்(து) ஆண்டமால் ராமநா ராயணன் பண்பெனவே
முடிஅளப் பில்லா(து) உயர்ந்த சிராமலை மூர்த்திவரை
நெடியநற் பொங்கர்வாய் இன்பம் அளித்தவர் நித்திரையை
அடியன்என் உள்கவர்ந்(து) ஆங்கே கவர்ந்(து)இர(வு) ஆக்கினரே.

**குறிப்புரை** : கண்படை= உறக்கம். கங்குல்= இரவு. படி= தகுதி / உலகு.. அளந்து= கொடுத்து. மால்= பெருமை. முடி= உச்சி. மூர்த்தி= தாயுமானவன். பொங்கர் வாய்= சோலையில். அளித்தவர்= தந்த இவள். ஆங்கே= அப்போதே. இரவு நித்திரையைக்கவர்ந்து. ஆக்கினர்= உறக்கமில்லாதவர் ஆக்கினாள்

**பொழிப்புரை** : தகுதியை அளந்து கொடுத்துக் காத்த பெருமைபொருந்திய / உலகைக் காலால் அளந்து காத்த திருமால் போன்ற - ராமநாராயணன் பண்பினைப்போல உச்சியை அளவிடவியலாது உயர்ந்த சிராமலைத் தாயுமானவனின் மலைக்கண் உள்ள நீண்ட அழகிய சோலைக்கண் இன்பமளித்த இவள், அப்போதே என்உள்ளத்தைக் கவர்ந்து இரவு உறக்கத்தையும் கவர்ந்து உறக்கமில்லாதாக்கினாள்.

( 44 ) **இதுவுமது**

பல்லைத் திறந்து பரவார் புரம்எரி பற்றிடச்செய்
தில்லை இடத்(து)அமர் பெம்மான் சிராமலைத் தேம்பொழில்வாய்
ஒல்லை மருவிச் சுகம்அளித் தார்பின் உளம்துயில்என்
சொல்லை மறுத்தே தொடர்ந்தன மால்இருள் சூழ்ந்திடவே.

**குறிப்புரை** : பல்லைத்திறந்து= புன்முறுவல் பூத்து. பரவார்= போற்றாதவர். புரம்= முப்புரங்கள். ஒல்லை மருவி= சிறுபொழுது தழுவி. உளம் துயில்= மனமும் உறக்கமும். சுகம் அளித்தார்பின் இருள் சூழ்ந்திட என்உளம் துயில் தொடர்ந்தன.

**பொழிப்புரை** : புன்முறுவல் பூத்து அறம்போற்றாதவர்களின் முப்புரங்களையும் எரியுண்ணச்செய்த தில்லையில் அமர்ந்த பெருமானின் சிராமலைக்கண்ணதான தேன்மணக்கும் சோலையில், என்னைச் சிறுபொழுதுதழுவி இன்பம்தந்தவர் பின்னே, மிக்கஇருள்சூழ்ந்தபின்னும் - நள்ளிரவிலும்கூட எனஉறக்கமும் நான்சொல்லியும் கேளாமல் சென்றுவிட்டன.

( பிரிவுழிக் கலங்கல் - முற்றிற்று. )

## இடந்தலைப்பாடு

******************

( 45 ) **தந்த தெய்வம் தரும்எனச் சேறல்**

வேடன் செருப்படி தாங்கி உலகில் விளங்கமுனம்
நீடு(அ)ன்(பு) எழில்இவை சொற்ற சிராமலை நித்தன்அருள்
தேடக் கிடைக்காத திருஆம் இவரைத் தெரிந்(து)உதவி
வாடப் பினம்விடு மோஇனும் தந்திடும் வண்பொழிற்கே.

**குறிப்புரை** : வேடன்= கண்ணப்பர் ஆகிய திண்ணனார். முனம்= முன்நாளில். எழில்= குறிப்பு. நித்தன்= நிலைத்தவன் - தாயுமானவன். திரு= பெறற்கரிய செல்வம். உதவி= உதவியபின். பினம்= பின்னர். வண்பொழிற்கு இனும் தந்திடும்= வளமான சோலையில் இன்னும் தரும்.

**பொழிப்புரை** : முன்னாளில் வேடுவராகிய திண்ணனார் அடையாளமாகச் செருப்பினை வைத்தபோது அதனை ஏற்றுக்கொண்டு, உலகில் மிக்க அன்பு, உள்ளக்குறிப்பு இவைபற்றி எடுத்துரைத்த நிலைத்தவன் ஆகிய தாயுமானவனின் அருளாகிய பெறற்கரும் செல்வமாகவிளங்கும் இவளை ஆராய்ந்து உதவியபின் நான் வாடுமாறு கைவிடாது. இந்த வளமான சோலையில் அவளை இனியும் தரும்.

**இலக்கணக்குறிப்பு** : அன்பு எழில் - எண்ணும்மைத்தொகைகள். பினம்- இடைக்குறை. பொழிற்கு - உருபுமயக்கம்.

( 46 ) **முந்துறக்காண்டல்**

தேன்நனி பாடும் சிராமலை நாதன் செழும்பொழில்வாய்
மான்நனி ஏய்க்கும் விழியாம் என(து)உயிர் மான்மனைபோல்
கான்நனி பூமகள் தாங்க அளியினம் கார்க்குழலின்
பால்நனி பாடத் தருநிழ லில்உளர் பார்த்திடவே.

**குறிப்புரை** : தேன் நனிபாடும்= வண்டுகள் மிகுதியாகப் பாடும். மான் நனிஏய்க்கும்= மானினை மிகவும் ஒத்துவிளங்கும். மான்= பெண். மனைபோல் நனிகான்= வீடுபோல் மிகச்சிறந்து விளங்கும் சோலை. உயிர் மான் நனிபூமகள் தாங்க. அளியினம்= வண்டின் கூட்டம். பார்த்திட உளர்= காணுமாறு உள்ளார்.

**பொழிப்புரை** : வண்டுகள் மிகுதியாகப் பாடும் சிராமலைத் தாயுமானவனின் வளமான சோலையில், மானினை மிகஒத்த விழிகளுடைய என் உயிராகிய இவளை, வீடுபோல் மிகச் சிறந்து விளங்கும் சோலையாகிய நிலமகள் தாங்க, வண்டினம் அவளது கரிய கூந்தல் மலர்களில் மொய்த்து மிகப்பாட, மரநிழலில் நான் காணுமாறு இவர்உள்ளார்.

( 47 ) **முயங்கல்**

பாரதம் கோட்டால் எழுதிய யானையைப் பண்(டு)அளித்த
பூரதன் வாழும் வரையாம் சிராமலைப் பூம்பொழில்வாய்
நாரத னாலே மருவிய நன்னல நல்இசைகொள்
சீர்அத னால்ஆம் தளையடி நற்றொடைச் செப்பியலே.

**குறிப்புரை** : கோட்டால்= கொம்பினால். யானை= விநாயகர். பூரதன்= (முப்புர எரிக்கு) பூமியைத் தேராகக்கொண்ட சிவபிரான். நார் அதனால்= அன்பினால். மருவிய= தழுவிய. நன்னல இசைகொள் = நன்மைதரும் இசைவுகொண்ட. சீர் அதனால்= சிறப்பினால். நல் தொடைஅடி தளை= நன்கு தொடுக்கப் பெற்ற அடிகளால் - கால்களால் - கட்டப்பெற்ற. இயல் செப்பு= இயல்பைக் கூறுதல்.

**பொழிப்புரை** : முன்னாளில் மாபாரதத்தைத் தன் கொம்பினால் மேருமலையில் எழுதிய விநாயகரை அளித்தவனாகிய, பூமியை முப்புர எரிக்குத் தேராகக் கொண்ட சிவபிரான் வாழும் மலையாகிய சிராமலையின் அழகியசோலைக்கண், அன்பினால் என்னைத் தழுவிய நல்ல நலம்தரும் இசைவுகொண்ட சிறப்புடையதாய் இவள் என்னை நன்கு கால்களால்தொடுத்ததை - முயக்கத்தைக் கூறுதல்இயலாது.

**விளக்கம்** : இச்செய்யுளின் பின்இரண்டடிகள்; நாரதரின் இசைச்சிறப்புடைய பாடலில் அமைந்த சீர், அதனால் அமைந்ததளை, தளையுடன் கூடிய அடி, அடிகளில் காணப்பெறும் தொடையழகு ஆகிய யாப்பு உறுப்புகள் பற்றிய தொனிப்பொருள் நயம்காண்க.

( 48 ) **புகழ்தல்**

மலமாயை நீக்கி அருள்மட்டு வார்குழல் மங்கைபங்கன்
தலமான பொற்(பு)ஆர் சிராமலைப் பைம்பொழில் தண்குழலாள்
நலம்ஆரும் அல்குற்(கு) உவமைஒவ் வாமைக்கு நாணியன்றோ
புலம்ஆரும் சேடன் பிலம்புக்கு நின்று புழுங்குவதே.

**குறிப்புரை** : மலம்= ஆணவமலம். பொற்பு= பொலிவு. தண்குழலாள்= மென்மையான கூந்தலுடைய இவளது. புலம் ஆரும்= அறிவுமிக்க. சேடன்= ஆதிசேடன். பிலம்= பாதாளம்.

**பொழிப்புரை** : உயிர்களின் ஆணவமலத்தையும் மாயையாகிய மலத்தையும் நீக்கி அருள்புரியும் மட்டுவார்குழல் அம்மையை இடப்பாகம்கொண்ட தாயுமானவனின் பசிய சோலைக்கண், மென்மையான கூந்தலுடைய இவளது நன்மைமிக்க அல்குலுக்கு உவமையாகமாட்டாத நிலைமைக்கு வெட்கப்பட்டு அல்லவா அறிவுமிக்க ஆதிசேடன் பாதாளம்புகுந்து மனம்புழுங்குவது.

**விளக்கம்** : உயிர்களின் ஆணவமலமும் மாயையாகிய மலமும் நீங்கின் இருவினைஇல்லை ஆதலின் அவற்றை நீக்கி வீடுபேற்றுக்கு வழிசெய்கிறவள் அம்மையாதலின் " மலம்மாயை நீக்கி அருள் " என்பதை அம்மைக்கு அடையாக்கினார்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் தற்குறிப்பேற்றவணி.

( 49 ) **உடன் புணர்ஆயத்து உய்த்தல்**

நஞ்சுமுன் உண்ட சிராமலை நாதன் நளிர்பொழில்வாய்
விஞ்சும்என் உள்ளக் கமலத்(து) உறையும் மினல்திருவே
மிஞ்சுநற் கார்வர நோக்கும் மயிற்கணம் வெங்கதிர்நோக்
குஞ்சுக தாமரை நேர்உன(து) ஆயம்நீ கூடுகவே.

**குறிப்புரை** : நளிர்= குளிர்ச்சி. விஞ்சும்= மேலான. மினல்= ஒளி. மிஞ்சு= மிக்க. சுகதாமரை= நீர்வாழ் தாமரைமலர். நேர்= ஒப்பான. ஆயம்= தோழியர் குழு.

**பொழிப்புரை** : முற்காலத்தில் உயிர்களின் பொருட்டு நஞ்சுண்ட தாயுமானவனின் குளிர்ந்த சோலையில், மேலான என்உள்ளமாகிய தாமரையில் வாழும் ஒளிபொருந்திய திருமகள் போன்றவளே ! மிக்க கார்மேகம் வரக்கண்ட மயிலின்கூட்டம் போலவும், விரும்பத்தக்க ஞாயிறு வரக்கண்ட நீர்வாழ் தாமரைமலர்கள் போலவும் உன்னை விரும்பும் உனது தோழியர் குழுவை நீசென்றடைக.

**இலக்கணக்குறிப்பு** : என் உள்ளக்கமலத்து உறைமினல் திரு - முற்றுருவகவணி. இறுதி இரண்டடிகள் பல்பொருள் உவமையணி

( இடந்தலைப்பாடு - முற்றிற்று. )

**பாங்கற் கூட்டம்**

**************************

**தலைவன் பாங்கனைச் சார்தல்**

கொண்டல் பணியும் சிராமலை யான்பதம் கூறலர்போல்
மண்டத் துயர்உறு நெஞ்சே மறைநூல் வடித்(து)ணர்வு
கொண்ட வலியும் சமன்அஞ்சும் ஆண்மையும் கூர்த்தஒரு
எண்தரு தோழனும் உண்டுஆர் தடுப்பர் இவர்புணர்ப்பே.

**குறிப்புரை** : கொண்டல் பணியும்= மேகம்வணங்கும் - படியும். மண்ட= மிகுதியாக. மறைநூல் வடித்து உணர்வு= மறைகளின் சாரம்பற்றிய உணர்வு. சமன் அஞ்சும்= எமனே அஞ்சும். இவர் புணர்ப்பு= தலைவியின் உறவு.

**பொழிப்புரை** : மேகம்படியும் சிராமலைத் தாயுமானவரின் திருவடிகளை வணங்காதவர்போல் மிகத் துன்பப்படும் மனமே ! வேதங்களின் சாரம்பற்றிய உணர்வால் அமைந்த வலிமையும், யமனே அஞ்சும் ஆண்மை மிக்கவனும், கூரிய அறிவால் ஒப்பற்றவனாக எண்ணத்தக்கவனுமாகிய தோழன் எனக்கு உள்ளான். எனவே தலைவியுடனான உறவை யாரால் தடுக்கவியலும் ?

( 51 ) **பாங்கன் தலைவனை உற்றது வினாவல்**

என்ஆர் உளத்தும் சிராமலைக் கண்ணும் இனி(து)அமர்ந்தோன்
முன்னாள் உரைத்த அகப்பொருள் ஆய்ந்தோ முனிவினொடு
துன்னாரு டன்மலைந் தோஅவர் வென்னிடத் தும்பையொடு
மன்னாநல் வாகை அணிந்தோநின் தோள்உளம் வாடியவே.

**குறிப்புரை** : ஆர்= அழகு. அகப்பொருள்= இறையனார் அகப்பொருள். துன்னார்= பகைவர். மலைந்தோ= போரிட்டோ. வென்னிட= தோற்றோட. தும்பையொடு நல்வாகை= வெற்றிமாலை சூட, அதிரச்செய்த போர்.

**பொழிப்புரை** : மன்னனே ! எனது அழகிய உள்ளத்திலும், சிராமலையிலும் அமர்ந்த இறைவன் முன்னாளில் அருளிய நூலாகிய இறையனார் அகப்பொருள் நூலினை ஆய்ந்ததாலோ, சினத்துடன் பகைவரோடு போரிட்டதாலோ, அவர்கள் தோற்றோடவும் நீவாகைமாலை சூடவும் அதிரப்போரிட்டதாலோ உன் உள்ளமும் தோள்களும் வாடின ?

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் முறைநிரல்நிறை அணி.

( 52 )

**தலைவன் உற்றதுஉரைத்தல்**

இலக்கு மணமால் இளவல்என் வண்புல இன்தமிழோன்
சலக்குண ராமநா ராயணன் ஏத்திடு நாரிபங்கன்
கலக்குக வாழும் சிராமலைச் சாரலில் காண்ஒருமின்
பலக்குவை நூல்அறி உள்ஒளி உண்டது பண்துணையே.

**குறிப்புரை** : மால் இளவல் இலக்குமணன்= திருமாலாகிய இராமபிரானுக்குத் தம்பியாகிய இலக்குமணன். வண்புல இன்தமிழோன்= வளமான இனிய தமிழ்வல்லவன். சலக்குணம்= சகல இனிய குணங்கள். நாரிபங்கன்= அருள்தருமட்டுவார் குழலம்மையை இடப்பாகம் மொண்ட தாயுமானவன். கலக்குக= கலந்து. காண்= கண்ட. ஒருமின்= ஒப்பற்ற மின்னல் போல்வாள். பண்துணையே= தகுதியைத் துணையாகக் கொண்டு. பலக்குவை நூல் அறிவு உண்டது= பலவகையிலும் குவிந்துகிடக்கும் என்நூலறிவைக் கவர்ந்தது.

**பொழிப்புரை** : திருமாலாம் இராமபிரானின் தம்பியாகிய இலக்குமணனை ஒத்தவனும், வளமான இனிய தமிழ்வல்லவனும் சகலவிதமான நற்குணங்களும் உடையவனுமாகிய ராமநாராயண வள்ளல் வணங்கும் அருள்தரு மட்டுவார் குழலம்மையை இடப்பாகம்கொண்ட தாயுமானவன் கலந்துவாழும் சிராமலைச் சாரலில் கண்ட ஒரு மின்னல்போன்றவள், தனது தகுதியைத் துணையாகக் கொண்டு நான் பலதுறையில் பெற்ற மிகுந்த அறிவைக் கவர்ந்தாள்.

**இலக்கணக்குறிப்பு** : சகல குணம் என்பது செய்யுள் எதுகை நோக்கிச் சலக்குணம் என்றானது செய்யுள் விகாரம்.

( 53 )

**கற்றறி பாங்கன் கழறல்**

கோழிக் கியானைபின் னிட்ட பதிஅரன் குடிஎனும்சீர்
ஊழிக்(கு) இயைநற் சிராமலை யான்எழில் ஓங்கலிடை
யாழிற் சிறந்தசொல் பேதை முலைக்களி யானைகளால்
பாழித் தடந்தோள் இறைநீ மெலிந்த(து)எப் பான்மையதே.

**குறிப்புரை** : பின்னிட்ட= தோற்றோடிய. பதி= உறையூர். குடி= குடிஇருப்பது. ஊழிக்கு இயை= முறைமைக்குப் பொருத்தமான. பேதை= பெண். முலைக்களி யானைகள்= முலைகளாகிய மதயானைகள். பாழி= பெருமை. எப்பான்மையது= எப்படிப்பட்ட தன்மையுடையது.

**பொழிப்புரை** : கோழியொடு போரிட்ட யானை தோற்றோடிய ஊரில் வாழும் ஐவண்ண நாதர் ( பஞ்ச வண்ண ஈசர் ) குடியிருப்பது என்ற சிறப்புடைய முறைமைக்குப் பொருந்த உள்ள சிராமலையானின் அழகிய மலைக்கண், பெருமைபொருந்திய பருத்ததோள்களுடைய தலைவனே ! யாழினும் இனிய சொற்களைப்பேசிய பெண்ணின் முலைகளாகிய மதயானைகளால் நீ மெலிந்தது எத்தன்மையது ! ( மெலிந்திருக்கக் கூடாது என்பது கருத்து. ).

**விளக்கம்** : கோழியொன்று யானைய வென்ற இடமாதலின் உறையூர் கோழியூர் என்று அழைக்கப்பெற்றது. ஒருகோழியே யானையை வென்ற இடத்தில் வாழும் தலைவனாகிய நீ, யானையுடன் போரிட்டதால் மெலிந்தேன் என்றல் அடாது என்றான்.

( 54 )

**கிழவோன் கழற்றுஎதிர் மறுத்தல்**

உமைமுலை தோய்ந்த சுவ(டு)உடை அத்தர் உரகசித்தர்
அமைமுது வெற்பாம் சிராமலைப் பூம்பொழில் ஆரணங்கின்
குமைமுலை வேற்கண் கனிவாய் மதிமுகம் கூந்தல்இவை
தமைமுனம் காண்டியேல் இங்ஙன் கழறலை தாழ்(வு)உறவே.

**குறிப்புரை** : அத்தர்= சிவபிரான். உரக சித்தர்= பாம்பணிந்த சித்தர். அமை= எழுந்தருளியுள்ள. முதுவெற்பு= மிகமிகப்பழமையான மலை. குமை= குவிந்த. முனம்= முன்பு. கழறலை=சொல்லமாட்டாய். தாழ்வு உற= கீழ்ப்படுத்தி.

**பொழிப்புரை** : உமையம்மை தழுவியதால் முலைச்சுவடு அமைந்தவரும், பாம்பணிந்த சித்தரும் ஆகிய சிவபிரானின் மிகமிகப்பழைமையான சிராமலையின் அழகிய சோலைக்கண், ஒரு பெண்ணின் குவிந்த முலை, வேல்போன்ற கண், கொவ்வைக்கனி ஒத்த இதழ், முழுநிலவுஒத்த முகம், கூந்தல் ஆகியவற்றை நீ முன்பு பார்த்திருந்தால் இப்படிக் கீழாகப் பேசியிருக்கமாட்டாய்.

**விளக்கம் : நம்**இந்தியத்திரு நாட்டில் வடபால் உள்ள மலைகளைவிட, காலத்தால் மிகமிக முற்பட்டவை, சிராமலை உள்ளிட்ட இதன் தென்னக மலைகள் என்பர் தொல்பூவியலார். இதனை உட்கொண்டது “ முதுவெற்பு “ என்றசொல்லாட்சி.

( 56 )

**கிழவோற் பழித்தல்**

படியார் அடியார் உளத்(து)அமர் தாயான பண்ணவன்வாழ்
முடிஆர் சிராமலை நல்வரைப் பாங்(கு)என் முனைந்துவரும்
கடிஆர் பகையாம் கரிகட்(கு) அரியாம் கடும்திறல்இப்
படியா ஒருமானுக்(கு) அஞ்சுவ(து) அண்ணால் பரிபவமே.

**குறிப்புரை :** படிஆர்= உலகில்நிறைந்த. பண்ணவன்= கடவுள். கடி= அச்சம். பகையாம் என்= பகைஎன்கிற. கரிகட்கு= யானைகளுக்கு. அரி= சிங்கம். கடும்திறல்= பேராற்றலுடையவனே. பரிபவம்= இழிவு.

**பொழிப்புரை :** உலகில் நிறைந்த அடியவர் உள்ளத்தில் அமர்ந்த தாயான ஈசன்வாழும் உச்சியை யுடைய சிராமலையாகிய நல்லமலையின் பக்கம், முனைந்து வரும் அச்சம்மிக்க யானைகட்குச் சிங்கமாக விளங்கும் பேராற்றல் உடையவனே ! தலைமை சான்றவனே ! ஒருமானுக்கு நீ இப்படியா அஞ்சுவது ? இது இழிவாகும்.

**இலக்கணக்குறிப்பு :** முலைகளை யானைகள் என்றதற்கேற்பத் தலைவனைச் சிங்கம் என்றது இயைபு உருவகம்.

( 57 ) **கிழவோன் வேட்கை தாங்கற்கு அருமைசாற்றல்**

மாவடுக் கண்ணி இடத்தர் சிராமலை வண்பொழில்வாய்
கூஅடுத் தேஉறும் தேஎன நின்றார் குழல்இருளால்
ஆவடுச் செய்கண் கணையால் மயங்கிப்புண் ஆயஎனை
நீவடுக் கூறல் விழும்சேய்க்(கு) அரிவாளை நீட்டியதே.

**குறிப்புரை :** கண்ணி= கண்களுடைய அருள்தரு மட்டுவார் குழல்அம்மை. கூ= என்னை அழைத்து. உறும்தே= என்முன்வந்து சேர்ந்த தெய்வம். வடுச்செய் கண்கணை= வடுப்படுத்திய கண் ஆகிய அம்பு. நீ வடுக்கூறல்= நீ வசைமொழி கூறுதல். விழும் சேய்க்கு= மேலிருந்து கீழேவிழும் குழந்தையைக்காக்க. அரிவாளை நீட்டியது= கூரிய அரிவாளை நீட்டித்தடுத்தது போன்றதாகும்.

**பொழிப்புரை :** பிளந்த மாவடுப்போன்ற கண்களுடைய உமையம்மையை இடப்பாகம் கொண்ட இறைவனது சிராமலையின் வளமான சோலையில் என்னை அழைத்து என்முன்வந்து நின்ற தெய்வம் போன்றவரது கூந்தலின் கருமையாலும், என்னை வடுப்படுத்திய வியக்கத்தக்க கண்களாகிய அம்பினாலும் மயங்கிப்புண்பட்டு விளங்கும் என்னை குற்றம்கூறுதல் மேலிருந்து கீழேவிழும் குழந்தையை அரிவாளை நீட்டித் தடுப்பதுபோன்றதாகும்.

**இலக்கணக்குறிப்பு :** கண்கணை - உருவகம். குழல் இருளால் ....புண் ஆய - உருவகங்கள் ஈற்றடி எடுத்துக்காட்டு உவமையணி.

( 58 ) **பாங்கன் தன்மனத்து அழுங்கல்**

வால்ஓங் கியநற் சிராமலை யான்வரை மாண்பொழில்வாய்
சேலோ விழிக்கிணை பாலோ மொழிக்கிணை சிற்றிடைக்கு
நூலோ இணைவயிற் றிற்(கு)இணை யானோ நுவறல்என
மால்ஓங் கிடச்சொலும் என்சொல் இனிச்செவி வாங்(கு)அரிதே.

**குறிப்புரை :** வால் ஓங்கிய= பெருமை ஓங்கிய. இணை= ஒப்புமை. இணை வயிறு= இடையுடன் இணைந்த வயிறு. நுவறல்= கூறுதல். மால்= மயக்கம். செவிவாங்கு அரிது= கேட்க மாட்டான்.

**பொழிப்புரை :** பெருமை ஓங்கிய தாயுமானவனின் மலைக்கண்ணதாகிய மாண்புடைய சோலையில், அவள் விழிக்கு ஒப்புமை கெண்டைமீனோ, சொல்லுக்கு ஒப்புமை பாலோ, சின்னஞ்சிறிய இடுப்புக்கு நூலும் உவமை கூறி, இடையுடன் இணைந்த வயிற்றுக்கும் ஒப்புமை நான்சொல்லமுடியமா ?என்று கூறுமளவுக்கு மயக்கம் ஓங்கியஇவன், என்சொல்லை ஏற்றல் அரியதாகும் - கேளான்.

**இலக்கணக்குறிப்பு :** சேலோ, பாலோ, நூலோ - ஓகாரங்கள் வியப்பு இடைச்சொற்கள்.

( 59 ) **பாங்கன் தலைவனோடு அழுங்கல்**

பாரில் சிறந்த சிராமலை யான்வரைப் பாவைஉயர்
ஏரில் சிறந்தவேல் கண்ணால் மதிபிண்(டு) இளைத்(து)அயர்ந்தாய்
தேரில் கலைவலவா நீகலங் கின்யார் தெளி(வு)அருள்வார்
வாரி கலங்கிடில் யாரே ஆரே தெளிதர வைப்பவரே.

**குறிப்புரை :** உயர் ஏர்= உயர்ந்த அழகு. சிறந்த வேல்= கூரிய வேல். மதி பிண்டு= அறிவு பிளக்கப்பெற்று. இளைத்து= மனம்நொந்து. தேரில் = ஆராய்ந்தால். வலவா= வல்லவனே. வாரி= கடல்.

**பொழிப்புரை :** கலைகளில் வல்லவனே ! உலகில் சிறந்த தாயுமானவனின் மலைப்பக்கம், உயர்ந்த அழகுடைய கூரிய வேல்போன்ற கண்ணால் உன்அறிவு பிளக்கப்பெற்று மனம் நொந்து சோர்ந்தாய். ஆராய்ந்தால் கடல் கலங்கினால் அதனைத் தெளியவைப்பவர் யார் ? அதுபோல நீயே மனம் கலங்கினால் உனக்குத் தெளிவுதருகிறவர் யார் ? யாருமில்லை.

**இலக்கணக் குறிப்பு :** வலவா - இடைக்குறை. இச்செய்யுள் எடுத்துக்காட்டு உவமையணி.

( 60 ) **இதுவும் அது**

மாலா னவன்கண்(டு) அறியாச் சிராமலை மன்வரைவாய்
வேல்ஆர் விழியார் முலைமலை மேவி மிகஇளைத்தாய்
சீலா கலைவலா நீமருண் டால்ஆர் தெருள்அமைப்பார்
காலால் மலைபறந் தால்ஆர் கனம்வைப்பார் காசினிக்கே.

**குறிப்புரை :** மாலானவன்= திருமால். மன்= அரசன் - அருள்தரு தாயுமானவன். ஆர்விழி=அழகியவிழி. மேவி= பொருந்தி. கலைவலா= கலைகளில் வல்லவனே. ஆர்= யார். தெருள் அமைப்பார்= தெளிவு தருவார். காலால்= காற்றினால். கனம்= பாரம்.

**பொழிப்புரை :** திருமாலும் கண்டறியாத அருள்தரு தாயுமானவனின் மலைக்கண் வேல்போன்ற அழகிய விழியுடையவளின் முலைகளாகிய மலைகளில் பொருந்தி மிகவும் இளைத்தாய். ஒழுக்கமுடையவனே ! கலைகளில் வல்லவனே ! காற்றினால் மலைபறக்குமானால் அதுபறந்துவிடாமல் இருக்க, அதன்மேல் கனமான பொருளை வைப்பவர் யார் ? யாராலும் இயலாது. அதுபோல், இவ்வுலகில் நீயே மயங்கினால் உன்னைத் தெளிவிப்பார் யார் ? யாராலும் இயலாது.

**இலக்கணக்குறிப்பு :** அறியா - ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். வேல் ஆர் விழியார் - உவமைத் தொகை. முலை மலை - உருவகம். இச்செய்யுள் எடுத்துக்காட்டு உவமை அணி.

**( 61 ) எவ்விடத்து எவ்வியற்று என்றல்**

நற்றா மரையோ திரையோ உரைஆர் நளிர்வரையோ
பற்றார் புரம்எரி பற்ற நகைத்(து)அருள் பால்வணன்வாழ்
உற்றார் சிராப்பளி யோஉனை இவ்வணம் உள்கலக்கக்
கற்றார் உறைஇடம் எம்இறை வாநீ கழறுகவே.

**குறிப்புரை :** நளிர்வரை= குளிர்ச்சிபொருந்திய மலை. பால்= குணம் - எண்குணம். வண்ணன்= வடிவானவன் - அருள்தரு தாயுமானவன். உற்றார்= அடியவர். உள்கலக்க= மனம் மயக்க. கழறுக= கூறுக.

**பொழிப்புரை :** எம் தலைவனே ! உன்மனத்தை மயக்கக்கற்றவர் வாழும் இடம், அழகிய தாமரையா ? ( திருமகள்போன்றவளா ) கடலா ? கடற்கன்னிபோன்றவளா ) புகழ்வாய்ந்த மலையா ? ( மலைப்பெண் போன்றவளா ) பகைவரின் முப்புரங்களைப் புன்முறுவலால் எரித்த எண்குணவடிவான அருள்தரு தாயுமானவனின் அடியவர் வாழும் சிராப்பள்ளியா? கூறுக.

**விளக்கம் :** ஈசனின் எண்குணங்கள் : தன்வயத்தனாதல், தூய உடம்பினன் ஆதல், இயற்கை உணர்வினன் ஆதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருள் உடைமை, முடிவு இல் ஆற்றலுடைமை, வரம்பில் இன்பமுடைமை.

**இலக்கணக்குறிப்பு :** சிராப்பளியோ - செய்யுள் விகாரம். கழறுக - வேண்டிக்கோடல் பொருளில் வந்த வியங்கோள் வினைமுற்று.

**( 62 ) அவன் அஃது இவ்விடத்து இவ்வியற்று எனல்**

அரங்கசா மிச்சேயாம் ராமநா ராயணன் ஆர்ந்துதொழும்
தரங்கமா வேலைப் புவிஆர் சிராமலைத் தற்பரன்தன்
வரங்கள்நா(று) அம்பொழி லேஇடம் கண்கள் வடிகணையே
உரங்கள்நா(று) இன்முலை நன்மலை யேஎழில் இன்திருவே.

**குறிப்புரை :** சேய்= மகன். ஆர்ந்து= மனநிறைவுடன். மாதரங்க வேலை= பெரிய அலைகளுடைய கடல். தற்பரன்= தனக்குப் பிறர்யாரும் தலைவனில்லாதவன் - சிவபிரான். வரங்கள் நாறு= மேன்மை மணக்கும். அம்= அழகு. வடி= கூரிய. உரம் நாறு இன்முலைகள்= மார்பில் விளங்கும் இனிய முலைகள், எழில்= அழகு. இன்திரு= இனிய திருமகள்.

**பொழிப்புரை :** பெரிய அலைகளுடைய கடல் சூழ்ந்த இவ்வுலகில் அரங்கசாமியின் மகனாகிய ராமநாராயணன் மனநிறைவுடன் வணங்கும் சிராமலையில் எழுந்தருளியவனாகிய தனக்குப் பிறர்யாரும் தலைவனில்லாத தாயுமானவனின் மேன்மைமணக்கும் அழகிய சோலையே அவள் இருக்கும் இடம், அவள் கண்கள் கூரிய வேல், மார்பில் விளங்கும் இனிய முலைகள் நன்மைதரும் மலைகள், அவள் அழகில் ஒளிபொருந்திய இனிய திருமகளே.

**( 63 ) பாங்கன் இறைவனைத் தேற்றல்**

தார்ஒன்று கொன்றைச் சிராமலை யான்வரைத் தண்பொழிலில்
வார்ஒன்று மென்முலை யாம்உன் உயிர்க்(கு)உயிர் வண்ணம்இயல்
பேர்ஒன்று மாருதி போல்சென்(று) அறிந்(து)இவண் பின்வருவேன்
நேர்ஒன்(று) உன்சோகுக்கும் எற்கும் விடைஅருள் நீஇனியே.

**குறிப்புரை :** கொன்றைத்தார். ஒன்று= அணிந்த. வார் ஒன்று= முலைக்கச்சு அணிந்த. இயல்வண்ணம்= தகுதியின் வகை. பேர்= புகழ். நேர் ஒன்று= நுட்பமாகப் பொருந்திய, சோகு= சோகம். எற்கு= எனக்கு.

**பொழிப்புரை :** கொன்றைமாலை அணிந்த தாயுமானவனின் தண்ணிய சோலையில் கச்சணிந்த முலைகளுடையவளும், உன் உயிர்க்கு உயிரானவளும் ஆகிய தலைவியின் தகுதிவகையை, சீதையைத் தேடச்சென்ற புகழ்வாய்ந்த அனுமனைப்போல் விரைந்து சென்று அறிந்துபின்னர் இங்கு வருவேன். நுட்பமாகப் பொருந்திய உனது சோகத்துக்கும் எனக்கும் இனிநீ விடைகொடுத்தருள்.

**இலக்கணக்குறிப்பு :** இச்செய்யுள் உவமையணி.

( 64 )

### பாங்கன் குறிவழிச் சேறல்

செல்ஆர் சிராமலைத் தாய்அன செல்வன் செழும்பொழில்வாய்
மல்ஆர் தடம்பணைத் தோள்இறை உள்ள மலர்வதியும்
வல்ஆர் துணைமுலை வந்திடு மோஆயம் மன்னிடுமோ
வில்ஆர் மலைஎதிர் கூவிடு மோகுறி மே(வு)இடத்தே.

**குறிப்புரை :** செல்ஆர்= மேகம் தவழும். அன= போன்ற. மல்= வலிமை. தடம் பணை= அகன்ற திரண்ட. உள்ளமலர் வதியும்= மனத்தாமரையில் வாழும். வல்= சூதாடுகருவி. துணை= இரண்டு. வந்திடுமோ= சோலைக்கு வருவாளோ. ஆயம் மன்னிடுமோ= பாங்கியருடனே தங்கிவிடுவாளோ. வில்= ஒளி. எதிர் கூவிடுமோ= எதிரொலிக்கக் கூவுவாளோ. குறி மேவு இடத்தே= குறியாகப்பொருந்திய இடத்தில்.

**பொழிப்புரை :** மேகம் தவழும் சிராமலையில் தாய்போன்றவனது வளமான சோலையில், வலிமைபொருந்திய அகன்ற திரண்ட தோள்களுடைய இவனது மனத்தாமரையில் வாழும், சூதாடுகருவி போன்ற இருமுலைகளுடையவள், குறியாகப்பொருந்திய சோலை இடத்திற்கு வருமோ ? தனது பாங்கியர் கூட்டத்துடன் தங்கிவிடுமோ ? ஒளிபொருந்திய மலையில் எதிரொலிக்கக் கூவுமோ ? என்று எண்ணியவாறே தலைவன் சொன்ன இடத்திற்குப் பாங்கன் சென்றான்.

**விளக்கம் :** மலைஎதிர் கூவுதல் - மலைக்கண் செல்வோர் தாம் இருக்கும் இடத்தைப் பிறர்க்கு அறிவிக்கக் கூவுவர். அக்கூவுதலின் எதிர்ஒலி கேட்டுப் பிறர் அங்குச் செல்வர். எதிரொலி கேட்டுமகிழ இதனை வேடிக்கை விளையாட்டாகவும் செய்வர். மலைப்பகுதிகளில் மட்டுமன்றி, உயரமான கருங்கல் திருச்சுற்றுடைய திருவையாற்று அருள்தரு ஐயாறப்பர் திருக்கோயிலின் திருச்சுற்றிலும் நாம்கூவுவதன் எதிரொலியைக் கேட்டு மகிழலாம்.

( 65 )

### இறைவியைக் காண்டல்

காரே கருங்குழல் மின்னே துவள்இடை கண்கயலே
பாரே புகழ்மயி லேஎழில் எண்நிறை பத்மஉளத்(து)
ஏரே விளங்கும் திருவே சிராமலைச் செம்மல்உறை
சீரே மலிவரைப் பூம்பொழி லேஇது தேரிடினே.

**குறிப்புரை :** எண்நிறை= எண்ணத்தில் நிறைந்திருப்பவர். பத்மஉளத்து= தாமரைமலர் போன்ற மனம். ஏர்= அழகு. திரு= திருமகள் உறை= வாழும். தேரிடின்= ஆராய்ந்தால்.

**பொழிப்புரை :** ஆராய்ந்தால்; சிராமலைச் செம்மல் வாழும் சிறப்புமலிந்த அழகிய சோலை இதுதான். இவள் கரிய கூந்தல் கார்மேகமே, துவளும் இடுப்பு மின்னலே, கண் கெண்டைமீனே , அழகு உலகுபுகழும் மயிலே, தலைவனின் மனத்தில் நிறைந்திருக்கிற இவர் தாமரைமலரில் விளங்கும் திருமகளே என்று முடிவுசெய்தான்.

( 66 )

### இகழ்ந்ததற்கு இரங்கல்

நேரா முனம்ஐங் கரயானைக் கோ(டு)ஒன்றான் நீள்உயிரைப்
பேரா விடுத்தான் கயமுகன் இந்தப் பிறங்(கு)அயிற்கண்
சீரார் இளமுலைக் கோட்டால் தளர்ந்தார்எம் செம்மல்இதே
பாராது சொல்லேல் சிராமலை யாய்நெஞ்சு பாதகமே.

**குறிப்புரை :** நேராமுனம்= போரிடுமுன்னரே, ஐங்கர யானைக் கோடு= விநாயகரின் ஒற்றைக்கொம்பு. நீள் உயிர்= பெரிய உயிர். பேராவிடுத்தான்= மீட்கமுடியாமல் விட்டான். கயமுகன்= கயமுகஅசுரன் ( யானைமுக அசுரன் ).அயில் பிறங்குகண்= வேல்போல் விளங்கும் கண்களுடைய தலைவி. செம்மல்= தலைவன். சிராமலை ஆய்நெஞ்சு இதே பாராது பாதகமே சொல்லேல்= சிராமலையை ஆராயும் மனமே ! இதனை எண்ணிப்பாராமல் பாதகமாக - தடையாகப் பேசேல்.

**பொழிப்புரை :** போரிடுமுன்னரே விநாயகரின் ஒற்றைக்கொம்பினால் தனது பெரிய உயிரை மீட்கமுடியாமல் விட்டான் கயமுகாசுரன். வேல்போல் விளங்கும் கண்களுடைய இவளது சிறப்புவாய்ந்த இளையமுலைகளாகிய கொம்புகளால் எமது தலைவன் சோர்ந்தான். சிராமலையை ஆராயும் மனமே ! இதனை - தலைவியின் சிறப்புகளை - எண்ணிப்பாராமல் தடையாகப் பேசாதே.

( 67 )

### பாங்கன் தலைவனை வியத்தல்

சொல்லொ மறா(து)அருள் ராமநா ராயணன் சொற்(கு)உவக்கும்
நல்லோன் சிராமலை நாதன் தடவரை நற்பொழிலில்
வில்லொ புருவமென் தோகை முலையிணை வெங்களிற்றை
வல்லோன் என(து)இறை வென்று திரும்பிய வன்மைநன்றே

**குறிப்புரை :** மறாது அருள்= சொன்னசொல்லை மறுத்துப்பேசாது வழங்கும். சொல்= புகழ்ச்சி. தட= பெரிய. புருவம் வில்லோ= புருவங்கள் வில்லோ என்னுமாறு அமைந்த. மென்தோகை= மென்மையான இயல்புடைய மயில்போன்ற தலைவி. வெங்களிற்றை= சினம்மிக்க யானையை. எனது இறை வல்லோன்= என்தலைவனாகிய வல்லவன். வல்லமை= ஆண்மை.

**பொழிப்புரை :** சொன்னசொல்லை மறுக்காது உதவும் ராமநாராயணனின் புகழ்ச்சிக்கு மகிழும் நல்லவனாகிய சிராமலை ஈசனது பெரியமலைக்கண் , புருவங்கள் விற்களோ என்னுமாறு அமைந்த மென்மையான இயல்பு அமைந்த மயில்போன்ற தலைவியின் முலைகளாகிய யானைகளை என் தலைவனாகிய வல்லவன் வென்றும் திரும்பிய ஆண்மை மிகநன்று.

( 68 ) **இதுவும் அது**

பண்நாடு பாவலன் ராமநா ராயணன் பாடும்உயர்
விண்நாடு மேன்மைச் சிராமலை யான்வரை மேவிஇறை
எண்நாடு வாழை இடைஅமர் பாம்பின் எதிர்படிந்தே
உள்நாடு நுண்மதி யோடும் திரும்பிய(து) ஓர்திறனே.

**குறிப்புரை :** பண்நாடு= இசையை விரும்பும். விண்நாடு மேன்மை= வான்தொட விரும்பிய சிறப்பு. எண்நாடு= மனத்தால் விரும்பும். வாழையிடை= வாழைபோன்ற தொடைகளுக்கு இடையே அமைந்த. படம்= பாம்பின் படம்போன்ற அல்குல். எதிர் படிந்து= ஒத்தநிலையில் திளைத்து. உள் நாடு= மனம் விரும்பும். ஓர்திறன்= ஒப்பற்ற ஆற்றல்.

**பொழிப்புரை :** இசையினை விரும்பும் பாவலனாகிய ராமநாராயணன் பாடிப்போற்றும் தாயுமானவனது, வான்தொட விரும்பி உயர்ந்த சிறப்புடைய இச்சிராமலையை நம்தலைவன் அடைந்து மனத்தால் விரும்பும் வாழைபோன்ற இரு தொடைகளிடையே அமைந்த பாம்பின் படம்போன்ற அல்குலில் அதனுடன் ஒத்தநிலையில் திளைத்து, மனம் விரும்பும் நுண்மதியுடன் திரும்பிவந்தது அவனுடைய ஒப்பற்ற திறமையாகும்.

**இலக்கணக்குறிப்பு :** வாழையிடை அமர்பாம்பு - உருவகவணி.

( 69 ) **இதுவும் அது**

வஞ்சே இலாமன ராமநா ராயணன் வாய்ந்துதொழும்
மஞ்(சு)ஏறு துய்ய சிராமலை யான்வரை வான்பொழிலில்
அம்சேல் விழியாள் முலையிணை யானையை ஆண்(டு)அடக்கி
நெஞ்சே இறைமீண்டார் யாரே இவரை நிகர்ப்பவரே.

**குறிப்புரை :** வஞ்சு= வஞ்சனை. வாய்ந்து- பெற்று. மஞ்சு ஏறு= மேகம் மேலேறும். ( மஞ்சு- வெண்மேகம் ) அம்சேல்= அழகிய கெண்டைமீன். இணை= இரண்டு. ஆண்டு= கையாண்டு / அங்கேயே.

**பொழிப்புரை :** வஞ்சனை என்பதே இல்லாத ராமநாராயணன் பெற்று வணங்கும் மேகம் மேலேறும் தூய தாயுமானவனின் மலைக்கண்ணதான உயர்ந்த சோலையில், கெண்டைமீன் போன்ற அழகிய கண்களுடையவளின் இரண்டு முலைகளாகிய யானைகளைக் கையாண்டு அடக்கித் தலைவர் மீண்டார். மனமே ! இவரை ஒப்பார்யார் !

**இலக்கணக்குறிப்பு :** சேல்விழி - உவமைத்தொகை. இணைமுலை யானை - உருவகம்.

( 70 ) **தலைவியை வியத்தல்**

சேமக் கடல்உல கம்சொல் சிராமலைத் தேம்பொழிலில்
நாமக் கதிர்அயில் கண்இவள் தந்த நவில் பெரிய
காமக் கடலில் விழுந்(து)அயர் அண்ணல் கரையுறுவான்
ஏமக் குடம்ஆகும் நீந்தஇத் தையல்தம் இணைமுலையே.

**குறிப்புரை :** கடல் சேம உலகம்= கடலுள் அடங்கிய உலகம். சொல்= புகழும். நாமக் கதிர் அயில்= இணக்கமுடன் ஒளிரும் வேல். அயர்= அனுபவித்த. கரையுறுவான்= கரைசேர. ஏமக்குடம்= பாதுகாப்பான குடம்.

**பொழிப்புரை :** கடலுள் அடங்கிய உலகத்தவர் புகழும் சிராமலையின் இனிய சோலையில், இணக்கமுடன் ஒளிரும் வேல்போன்ற கண்களுடைய இவள் தந்த சொல்லுதற்கரிய பெரிய காமக்கடலில் விழுந்து அனுபவித்த தலைவன், அதன் கரையேறும்பொருட்டு நீந்துதற்கு இவளுடைய இருமுலைகளும் பாதுகாப்புத்தரும் இருகுடங்களாகும்.

**இலக்கணக்குறிப்பு :** கரையுறுவான் - வான் - வான் ஈற்று எதிர்கால வினைஎச்சவிகுதி. ஈற்று ஈரடிகள் இயைபு உருவகவணி.

( 71 ) **தலைவன்தனக்குத் தலைவிநிலை கூறல்**

தண்தேன் சொரியும் சிராமலை யான்வரைத் தண்பொழிலில்
கண்டேன் ஒருகொம்(பு) இறைவ நஞ்சமும் கஞ்சமும்கொண்(டு)
ஒண்தேன் பொழில்இருள் காரும் பிறையும் உடன்ஒளிரக்
கண்டேன் நலனால் அறிவின்மை உன்னிடம் கற்றவனே.

**குறிப்புரை :** தண்தேன்= இன்பம்தரும் தேன். தண்பொழில்= குளிர்ந்த சோலை. கொம்பு= கொம்புபோன்றவள். நஞ்சம்= பார்வையில் நஞ்சு. கஞ்சம்= முகத்தில் தாமரை. இருள்காரும்= கூந்தலில் இருண்ட மேகமும். பிறையும்= நெற்றியில் பிறைநிலவும். நலனால்= நன்மை பொருந்த. நலனால் கண்டேன்.

**பொழிப்புரை** : தலைவனே ! சிராமலைஈசனது இன்பம்தரும் தேன்சொரியும் குளிர்ந்த சோலையில்; பார்வையில் நஞ்சும், முகத்தில் தாமரையும் கொண்டு, ஒளிபொருந்திய தேனுடைய சோலையின் இருளும் கார்மேகமும்கூந்தலில் கொண்டு, பிறைநிலா நெற்றியில் உடன் ஒளிர நன்மைபொருந்த ஒப்பற்ற கொம்புபோன்றவளைக் கண்டேன். தவறாகப்பேசிய என் அறிவின்மையை உன்னால்உணர்ந்தேன்.

( 72 ) **இதுவும் அது**

நீளும் இணைத்தோள் மெலியமம் மர்நோய் நினக்(கு)அளித்த
வாளும் கறையும் இணையாம்கண் நின்றாள் வளர்பொழிற்கண்
நாளும் தொழுவார்க்(கு) இதம்செய் சிராமலை நாதன்அருள்
வேளுக்(கு) இயைபிணை போல்உன் வழிதன் விழியமைத்தே.

**குறிப்புரை** : நீளும்= ஒளியுடைய. இணைதோள்= இருதோள்கள். மம்மர்நோய்= மயக்கமாகிய நோய். கறை= நஞ்சு. கண்= கண்களுடைய தலைவி. இதம்= நன்மை. வேளுக்கு இயை= மன்மதனாகிய உனக்குப் பொருத்தமான. பிணை= பெண்மான் உன்வழி= நீவரும் வழியை.

**பொழிப்புரை** : நாடோறும் வணங்குகிறவர்களுக்கு நன்மைசெய்யும் தாயுமானவனின் அருளால், வளரும்சோலைக்கண், மன்மதன்போன்ற உனக்குப்பொருத்தமான பெண்மான்போல், நீவரும் வழிமேல் தன்விழிவைத்து, ஒளியுடைய உன் இருதோள்களும் மெலிய மயக்கமாகிய நோயினை உனக்குஅளித்த வாள், நஞ்சு இரண்டினையும் ஒத்தவிழியுடையவள் நின்றாள்

**இலக்கணக்குறிப்பு** : வாளும் கறையும் இணையாம் கண் - பல்பொருளுவமைஅணி. வேளுக்கு இயை பிணைபோல் - உவமைஅணி.

( 73 ) **தலைவன் சேறல்**

திக்கே றியபுகழ் ராமநா ராயணன் தேர்ந்துதொழும்
மிக்கே றியசீர்ச் சிராமலை யான்வரை மின்பொழிலில்
இக்கே எனநின் றிடுமோமீன் நேரும் இகுளையர்தன்
பக்கே இருமதி போல்உறு மோஎன் பனிஉயிரே.

**குறிப்புரை** : ஏறிய= பரவிய. மிக்கு ஏறிய= மிகஉயரமான. இக்கு= கரும்பு / தேன். மீன்= விண்மீன். இகுளையர்= பாங்கியர். பக்கே= பக்கத்தில். இரு= பெருமை. பனி= இனிமை.

**பொழிப்புரை** : என் இனிய உயிராகிய தலைவி; நாற்றிசைகளிலும் பரவிய புகழுடைய ராமநாராயணன் தெளிவுடன் வணங்கும் மிகஉயரமான சிராமலைத் தாயுமானவனின் ஒளிரும்சோலையில், தேன்போல் தனித்து நிற்பாளோ, அன்றி வானத்து விண்மீன்களொத்த பாங்கியருடன் பெருமைபொருந்திய நிலாப்போல் இருக்கின்றாளோ என்று நினைத்துக் கொண்டே அவளைநோக்கிச்சென்றான்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

( 74 ) **தலைவியைக் காண்டல்**

சீதப் புனல்ஆர் சிராமலை நாதன் செழும்பொழிலில்
போதப் பொலிஅரம் பைமேல் இளநீர் புகழ்அமுதம்
பூதப் பில்அருங் கனிபாக்(கு) இலைஏலம் பூண்(டு)எடுத்தே
போ(து)அப்(பு) எயும்வேட்(கு) அயர்எற்கா நின்றார்ஓர் பூங்கொடியே.

**குறிப்புரை** : போது அ பொலி அரம்பை= பூவுடன் ( அல்குலுடன் )பொலியும் வாழை ( தொடை ) இளநீர் ( கொங்கை ) அமுதம் பூ= அமுதமாக விளங்கும் தாமரைமலர் ( வாய் ). தப்பில்= குற்றமில்லாத. அருங்கனி= அருமையான கொவ்வைக்கனி ( இதழ் ). பாக்கு இலை ஏலம்= பாக்கு வெற்றிலை ஏலவிதை மணம். பூண்டு= கொண்டு. போது அப்பு= மலர் அம்புகள். வேட்கு அயரா= மன்மதனுக்கு மனம்தளரும். எற்கா= என்பொருட்டு.

**பொழிப்புரை** : குளிர்ந்த நீர்பொருந்திய சிராமலைஈசனது வளமான சோலையில், வாழைப்பூவுடன் ( அல்குலுடன் ) பொலியும் வாழைக்குமேல் ( தொடை ), இளநீர்கள் ( முலைகள் ), அமுதமாக விளங்கும் தாமரைமலர் ( வாய் ), குற்றமற்ற அரிய கொவ்வைக்கனிகளில் ( இதழ்களில் ) பாக்கு வெற்றிலை ஏலத்தின்மணம் கொண்டு, எடுப்புடன், மலர் அம்புகளை எய்யும் மன்மதனால் மனம்சோர்ந்த என்பொருட்டு ஒருபூங்கொடி ( தலைவி ) நின்றாள்.

**விளக்கம்** : காமத்துக்குவலுச் சேர்ப்பன வெற்றிலைபாக்கு ஏலமாதலின் குறித்தார்.

**இலக்கணக்குறிப்பு** : போதப்பொலி ...........கனி - இயைபு உருவகம்.

( 75 ) **கலவியின் மகிழ்தல்**

வழிக்குத் துணையாம் சிராமலை நாதன் மலர்ப்பொழிலில்
விழிக்குக் கணைநிகர் என்னும் அணங்(கு)இவள் மென்முலைகள்
செழிக்கும் படிஎன் மருமத்(து) அழுந்தித் திகழும்இன்பம்
கொழிக்கும் சுகக்கடல் ஆழ்த்திய என்உள் குறையறவே.

**குறிப்புரை** : வழி= நல்வழி. கணைநிகர்= அம்பு ஒப்பாகும். செழிக்கும்படி= காமஉணர்வு வளம்பெற. மருமம்= மார்பு. கொழிக்கும்= பொழியும். உள் குறை அற= மனக்குறை தீர.

**பொழிப்புரை** : வீடுபேற்று வழிக்குத்துணையான அருள்தருதாயுமானவனது மலர்ச்சோலையில், அம்பினையே தன் கண்ணுக்கு ஒப்பாகப்பெற்ற இவளின் மென்மையான முலைகள், என்காமவுணர்வு வளம்பெற என்மார்பில் அழுந்தியதால் விளங்கும் இன்பம்பொழியும் சுகக்கடலில், என்மனக்குறை தீர என்னை ஆழ்த்தின.

( 76 ) **புகழ்தல்**

. வெள்ளம் பொதிந்த சடையார் சிராமலை மெல்லியலே
உள்ளம் கவர்ந்(து)என(து) உள்ளக் கமலத்(து) உறைதிருவே
வெள்ளக் கயலின நின்கட்(கு)ஒவ் வாமையான் வெள்கியன்றோ
பள்ளம் புகுநீருட் புக்கே கரந்து படிவதுவே.

**குறிப்புரை** : வெள்ளம்= கங்கைநீர். திரு= திருமகள். வெள்ளக்கயலின= அளவற்ற கெண்டைமீன்கள். கட்கு= கண்ணுக்கு. பள்ளம் புகுநீர்= ஆழமான நீரில். புக்கே கரந்து=புகுந்து ஒளிந்து. படிவது= கிடப்பது.

**பொழிப்புரை** : கங்கைநீர் பொதிந்த சடையுடையவனது சிராமலையில் வாழும் மென்மையான இயல்புடையவளே ! என்மனத்தைக் கவர்ந்து எனது மனமாகிய தாமரையில் இருக்கும் திருமகளே ! அளவற்ற கெண்டைமீன்கள் உனது கண்ணுக்கு ஒப்புமையாக இயலாத காரணத்தால் வெட்கப்பட்டல்லவா ஆழமான நீருள் புகுந்து மறைந்து கிடக்கின்றன !

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் விலக்குத்தற்குறிப்பேற்றவணி

( 77 ) **தலைவியைப் பாங்கியொடு வருகெனப் பகர்தல்**

பாம்பணி மேனிப் பரமர் சிராமலைப் பைந்தொடியே
காம்(பு)அணி தோளி இனிவரும் போழ்து கவினும்உன(து)
ஆம்பணி தோழிநின் இன்விழி அன்னாள் தனித்தொடர
நாம்பணி தே(வு)என வந்(து)அருள் என்முன் நனிநயந்தே.

**குறிப்புரை** : மேனி= உடம்பு. பைந்தொடியே= சிறந்த வளையல்கள் அணிந்தவளே. காம்பு அணி தோளி= மலர்க்காம்பு போன்ற தோள்களுடையவளே. கவினும்= சிறந்து விளங்கும். ஆம்பணி= உரிய பணிவிடை. தனித்தொடர= அவள்மட்டும் உன்னைத் தொடர. தேவு= தெய்வம். நனிநயந்து= மிகவிரும்பி.

**பொழிப்புரை** : உடம்பில் நாகமணிந்த சிவபிரானின் சிராமலைவாழ்கிறவளாய்ச் சிறந்த வளையல்கள் அணிந்தவளே ! மலர்க்காம்பு போன்ற மென்மையான தோள்களுடையவளே ! நீ இங்கு வரும்போது, சிறந்துவிளங்கும் உனக்கான பணிகளைச் செய்கிறவளும், உன் கண்போன்றவளுமாகிய உன்தோழி மட்டும் உன்னைத் தொடர, நாம் வணங்கும் தெய்வம் என்னுமாறு மிகவிரும்பி என்முன் வந்தருள்க.

( 78 ) **தலைவியைப் பாங்கிற் கூட்டல்**

கார்ஆர் சிராமலை யான்வரை யன்ன களிமயிலே
வார்ஆர் முலைஅணங் கேநீ அரம்பையர் மாண்நடுவாம்
சீர்ஆர் எழில்சசி என்ன உடுக்கணம் சேர்நடுவாம்
பேர்ஆர் சசிஎன நின்ஆயம் நாடுக பீடுறவே.

**குறிப்புரை** : களி= பெருமகிழ்ச்சி. நடுவாம்= நடுவேயுள்ள. சசி= இந்திராணி. உடுக்கணம்= விண்மீன் கூட்டம். சசி= முழுநிலா. ஆயம் நாடுக= பாங்கியரை நாடிச் செல்க.

**பொழிப்புரை** : கார்மேகம் தவழும் அருள்தரு தாயுமானவனது மலைபோன்ற முலைகளில் கச்சணிந்தவளே ! களிப்பு மிக்க மயில்போன்றவளே ! நீ மாட்சிமைப்பட்ட தேவருலக அரம்பையர் நடுவில் சிறப்புப்பொருந்திய அழகிய இந்திராணி போலவும், விண்மீன்கூட்டநடுவில் சேர்ந்த புகழ்வாய்ந்த முழுநிலவு போலவும் உனது பாங்கியர் கூட்டநடுவிடத்தை அடைக.

**இலக்கணக் குறிப்பு** : இச்செய்யுள் பல்பொருள் உவமையணி.

( பாங்கற் கூட்டம் - முற்றிற்று. )

**பாங்கி மதியுடம்பாடு**

************************

**முன்னுற உணர்தல்**

*******************

( 79 ) **தோற்றத்தால் ஆராய்தல்**

சொன்னம் சொரிகரன் ராமநா ராயணன் தோய்ந்துதொழும்
வன்னம் சிறந்த சிராமலை யான்வரை வார்ப்பொழிலில்
சின்னஞ் சிறுபந்(து) எறிந்தோ சுனையுள் திளைத்திருந்தோ
அன்னம்சொல் நிற்(கு)உற்ற ஆட்டத்(து)இவ் வேற்றுமை ஆயதுவே.

**குறிப்புரை :** சொன்னம்= பொற்காசு. தோய்ந்து= மனம் கலந்து. வன்னம்= வண்ணம் = அழகு. வார்ப்பொழில்= நீண்ட - பெரிய சோலை. அன்னம்=அன்னப்பறவை போன்றவளே. நிற்கு= நினக்கு. ஆட்டம்= விளையாட்டு.

**பொழிப்புரை :** பிறர்க்குப் பொற்காசுகளை வாரிவழங்கும் கைகளுடைய ராமநாராயண வள்ளல் மனம்கலந்து வணங்கும் தாயுமானவனின் அழகுசிறந்த சிராமலைப் பெரியசோலையில், அன்னப்பறவை போன்றவளே ! நீ சின்னஞ்சிறு பந்தினை எறிந்து விளையாடியதாலா, சுனைநீரில் நெடுநேரம் ஆடித் திளைத்ததாலோ உன்தோற்றத்தில் இவ்வேற்றுமை உண்டானது. விவரம் சொல்.

**இலக்கணக்குறிப்பு :** வண்ணம் , வன்னம் என்றுவந்தது எதுகைநோக்கிய செய்யுள்விகாரம். எறிந்தோ, திளைத்திருந்தோ - ஓகாரங்கள் வினாப்பொருளன.

( 80 ) **ஒழுக்கத்தால் ஐயம்தீர்தல்**

விண்அள(வு) ஆய சிராமலை யானுயர் வேணியினும்
எண்அள வில்லாச் சிராமலைச் சென்னி எழிலிடத்தும்
நண்அள(வு) ஆம்பிறை காணின் குவியும் நலக்கனியர்
கண்அளக் கும்கரப் பூமயி லேகுவி கையிணையே.

**குறிப்புரை :** வேணி= சடை. சென்னி= உச்சி. நண் அளவாம் பிறை=பொருந்திய மூன்றாம் பிறை. பூ= அழகு

**பொழிப்புரை :** வானுற உயர்ந்த சிராமலைக்குரியவனது சடையிலும், எண்ணும் அளவினைக்கடந்த சிறப்புடைய சிராமலையின் அழகிய உச்சியிலும் பொருந்திய மூன்றாம்பிறையினைக் கண்டதும் கைகூப்பிக் கும்பிடும் நலம்சான்ற கன்னியரை அளக்கும் அழகிய மயிலே ! பிறையைக் கைகூப்பி வணங்கு.

**விளக்கம் :** நல்லகணவனைத் தருமாறு வேண்டி, கன்னியர் பிறைதொழல் மரபு. தலைவி, பிறைதொழாவிடின் களவொழுக்கம் அறிலாம் என்பதால் பிறை தொழக்கூறினாள்.

( 81 ) **சுனை நயப்புஉரைத்தல்**

மஞ்சே தவழும் சிராமலை யான்வரை மாண்மயிலே
அம்சேல் விழிசிவக் கத்துவர் வாயின் அணிவெளுக்க
மஞ்சே நிகர்குழல் மின்பிறை மேவ வளர்தளவக்
கொஞ்(சு)ஏர் தொடைசூட் டுசுனைஎங்(கு) ஆடினையே.

**குறிப்புரை :** மஞ்சு= மேகம். அம்சேல்விழி= அழகிய கெண்டைமீன் போன்ற கண். துவர்= பவளம். மின்பிறை= ஒளிரும் தலையணி. வளர்தளவக் கொஞ்சு ஏர் தொடை சூட்டு = நீண்ட முல்லைமலரின் அழகிய சரம் தலைக்கண் சூட்டும்

**பொழிப்புரை :** மேகம் தவழும் அருள்தரு தாயுமானவனின் மலைக்கண் உள்ள மயில்போன்றவளே ! உனது அழகிய கெண்டைமீன்போன்ற விழிகள் சிவக்கவும், பவளம்போன்ற அழகிய உதடுகள் வெளுக்கவும், மேகமொத்த கூந்தலில் ஒளிரும் தலையணி விளங்கவும், முல்லைமலரின் நீண்ட அழகியசரம் தலையில் முத்தமிடச்சூட்டவும் செய்த எச்சுனையில் திளைத்தாய் ?

**விளக்கம் :** புணர்ச்சியால் அமையும் மெய்ப்பாடுகள், நீரில் திளைத்தலாலும் அமையுமாதலின், புணர்ச்சியில் அமைந்த மெய்ப்பாடுகளை நீரில் திளைத்தாயா என்றுகேட்டு ஆய்வதுபோல் நகையாடினாள்.

( 82 ) **சுனைவியந்து உரைத்தல்**

பிறையில் தரளமும் காரில் பிறையும் பெருந்தனத்தில்
கறையில் திகழ்மான் மதமும் அரவில் கலைமணியும்
நிறையில் கவினும் உனைப்போல் சிராமலை நீள்சுனையில்
பொறையில் பெறுவ(து)உண் டேல்நானும் ஆடுவன் பூங்கொடியே.

**குறிப்புரை :** பிறை= பிறையாக விளங்கும் நெற்றி. தரளம்= முத்துகளாக விளங்கும் வியர்வைத் துளிகள். கறை= குற்றம். மான்மதம்= கத்தூரி. அரவு= பாம்பின் படமாக விளங்கும் அல்குல். கலைமணி= வேலைப்பாடுடைய மேகலை. பொறையில் நீள்சுனையில்= சிறியமலைப்பக்கத்துப் பெரிய சுனையில். ஆடுவன்= நீராடுவேன்.

**பொழிப்புரை :** மென்மையான கொடிஒத்தவளே ! பிறையாக விளங்கும் நெற்றியில் முத்துகளாக விளங்கும் வியர்வைத்துளிகளும், பருத்த முலைகளில் குற்றமில்லாத கத்தூரியும், பாம்பின் படமாக விளங்கும் அல்குலில் வேலைப்பாடுடைய மேகலையும், கற்புநெறியில் அழகும் உன்னைப்போல் சிராமலைக்கண் உள்ள சிறிய மலைப்பக்கத்துக் குன்றத்துப் பெருஞ்சுனையில் பெறலாம் என்றால் அச்சுனையில் நானும் திளைத்து நீராடுவேன்.

**விளக்கம் :** புணர்ச்சியாகிய அகன்ஐந்திணையின் முதலாவது மெய்ப்பாட்டில் “ பொறிநுதல் வியர்ப்பு “ என்பதைக் கூறுவார் தொல்காப்பியர். தனத்தில் கத்தூரிமணம், இறுகத் தழுவியபோது தலைவன் மார்பில் பூசி இருந்த கத்தூரியால் வந்தது. பிற தலைவியிடம் முன்னரே அமைந்திருந்தன.

( 83 ) **தகையணங்குறுத்தல்**

நீலம் சிவப்பும்செவ் ஆம்பல் வெளுப்பும் நிறைந்த(து)இன்று
கோலத் திருஅணங் கேஉன் உருநிகர் கோமளம்இத்

தாலத்(து) உயர்ந்த சிராமலை நாதன் தமிழ்ப்பொழிலில்
காலப் புதுப்போ(து) எடுத்(து)இங்(கு) உறும்இரும் காண்குவையே.

**குறிப்புரை :** தகையணங்குறுத்தல்= களவுப்புணர்ச்சி செய்த தலைவியைக் குறிப்பினால் அச்சுறுத்தல் நீலம்= குவளைக்கண்கள். செவ்வாம்பல்= அரக்காம்பல் உதடுகள். கோமளம்= அழகு. தாலம்= உலகு. காலப் புதுப்போது எடுத்து= காலத்துக்கேற்பப் புதுமலரின் வடிவம் கொண்டு. இரும்= பெரிய.

**பொழிப்புரை :** உலகில் உயர்ந்த சிராமலையானது இனியசோலையில், அழகிய திருஅணங்கே ! உனது அழகு, காலத்திற்கேற்பப் புதுப்பொலிவுடன் குவளைக்கண்கள் செம்மைநிறம் பெற்றும், செவ்வாம்பல் இதழ்கள் வெண்ணிறம் பெற்றும் நிறைவுற்றன. இதனைக்காண்பாயாக.

**விளக்கம் :** புணர்ச்சியால் கண் இதழ் நிறம் மாறுதல் - " வாயின் சிவப்பை விழிவாங்க மலர்க்கண் வெளுப்பை வாய்வாங்க, தோயக் கலவி அமுதளிப்பீர் " கலிங்கத்துப்பரணி. 61.

( 85 ) **நடுங்க நாட்டம்**

ஆயும் தமிழ்வலன் ராமநா ராயணன் அன்புசெயும்
பாயும் விடைஅரன் வாழும் சிராமலைப் பாங்(கு)இரத்தம்
தோயும் கொடுங்கோட்(டு) ஒருத்தல் நடுங்கிடத் தோன்(று)உடலம்
வீயும் படிக்கிழித் தாரைநான் கண்டேன் விளங்(கு)இழையே.

**குறிப்புரை :** நடுங்கநாட்டம்= அஞ்சி நடுங்குமாறு பேசுதல். தமிழ் ஆயும் வலன். கொடுங்கோட்டு= வளைந்த தந்தம் / கொடிய தந்தம். ஒருத்தல்= களிறு. உடலம் வீயும்படி= உடல் சாகுமாறு.

**பொழிப்புரை :** ஒளிவிளங்கும் அணிகலன் அணிந்தவளே ! தமிழ் ஆயும் வல்லவனாகிய ராமநாராயணன் வணங்கும் பாய்ந்து செல்லும் எருதினை ஊர்தியாகக் கொண்ட அருள்தரு தாயுமானவன் வாழும் சிராமலையின் பக்கம், இரத்தம் தோய்ந்த கொடிய கொம்புகளுடன் கூடிய ஆண்யானையையும், உயிர்நீங்க உடல் கிழிபட்டவரையும் கண்டேன்.

**விளக்கம் :** யானையால் உடல்கிழிபட்டவர் தன்தலைவனோ என்று எண்ணி அஞ்சுவது கண்டு களவுப் புணர்ச்சி உண்டென்று அறிதல்.

( முன்னுற உணர்தல் முற்றிற்று )

## குறையுற உணர்தல்

***************************

**பெட்ட வாயில்பெற்று இரவு வலியுறுத்தல்**

மலமாயை ஓட்டும் சிராமலை யான்வரை மாண்பொழிலில்
வலமா மதகளிற் றைப்பிடிக் கப்பிடி வைத்திடல்போல்
நலம்ஆர் பிடிஇடைப் பாங்கின் நடைப்பிடி நாம்பிடித்தே
தலமா என(து)உளத் தார்முலை வேழம் தழுவுவமே.

**குறிப்புரை :** பெட்டவாயில் பெற்று இரவு வலியுறுத்தல்= விரும்பும் தூதுஒருவரைப் பெற்று யாசிக்க முடிவெடுத்தல். மலம் மாயை= ஆணவமலத்தையும் மாயாமலத்தையும். வல மாமத களிறு= வலிமைவாய்ந்த மிக்க மதமுடைய ஆண்யானை. பிடிவைத்தல்= பெண்யானையை நிறுத்துதல். பிடி இடை= கைப்பிடி அளவே இடுப்புடைய. பாங்கின்= பாங்கியின். நடைப்பிடி= நடக்கும் பெண்யானை. பிடித்து= நட்புக்கொண்டு. எனது உளத்தார் தலமா முலை வேழம்= என் உள்ளத்தில் இடம்பெற்றவளின் முலைகளாகிய யானை.

**பொழிப்புரை :** ஆணவமலத்தையும் மாயையாகிய மலத்தையும் உயிரிடமிருந்து ஓட்டுகிற அருள்தரு தாயுமானவனின் மலைச்சோலைக்கண், உலகில் வலிமை வாய்ந்த மதம்மிக்க யானையைப் பிடிக்கப் பெண்யானையை நிறுத்துதல் போல், கைப்பிடி அளவே நன்மையமைந்த இடையுடைய பாங்கியாகிய ஒழுக்கமுடையவளை நாம் நட்புக்கொண்டு, என் உள்ளத்தில் இடம்பெற்றவளின் முலைகளாகிய யானைகளைத் தழுவுவோம் என்று தலைவன் முடிவெடுத்தான்.

**விளக்கம் :** பெண்யானையைக்காட்டி ஆண்யானையை - பிடியைக்காட்டிக் களிற்றைப் பிடிக்கும் உலகியல் கூறினார்.

**இலக்கணக்குறிப்பு :** இச்செய்யுள் உவமையணி.

( 86 ) **ஊர்வினாதல்**

காருக்(கு) இடம்ஆகும் சிராமலை நாதன் கணிவரைநேர்
வாருக்(கு) அணிதேருக்(கு) ஏற்றபொன் ஊருக்கு மன்விரும்பி
நேருக்(கு) அலைந்(து)இடை காணேன் மயிலீர் நிலைசெயும்நும்
ஊருக்(கு) இயைவழி காட்டுவீர் என்அயர்(வு) ஓடிடவே.

**குறிப்புரை :** கார்= மேகம். கணிவரை= மருதநிலம் சூழ்மலை. வாருக்கு அணி= கச்சணிந்த முலைக்குப் பெருமைதரும். தேருக்குஏற்ற பொன்= தேரராகிய அல்குல் பெற்ற பொன்போன்றவள் /திருமகள்போன்றவள். மன்விரும்பி= மிகவிரும்பி. நேருக்கு= மிகுதியும். இடை= வழி. மயிலீர்= மயில் போன்றவரே நும்நிலைசெயும்= நீர் நிலையாகவாழும். இயைவழி= பொருத்தமானபாதை - வழி.

**பொழிப்புரை :** மேகம் சூழ்வதற்கு இடமாக உள்ள சிராமலைத் தாயுமானவனின் நன்செய்நிலத்தின் இடையே அமைந்த மலைபோன்று முலையில் கச்சுஅணிந்தவளுக்குப் பெருமைசேர்க்கும் தேர்போன்ற அல்குல்கொண்ட திருமகள் போன்றவளின் ஊர்செல்ல, நான் மிகவிரும்பி மிகுதியும் அலைந்தும்கூட வழிகாணாதவனானேன். மயில்போன்றவரே ! நீர் நிலையாக வாழும் நுமது ஊருக்குப் பொருத்தமான பாதையை என்சோர்வு ஓடுமாறு காட்டுங்கள்.

( 87 ) **பெயர் வினாதல்**

நேயம் படைத்தார்க்(கு) அருளும் சிராமலை நிமலனின்
தோய்அம்(பு) ஒழுகு சிராமலைத் தோகையீர் தோன்றிடஉம்
தேயம் புகல விரும்பா(து) இருப்பினும் தேரநாம
தேயம் புகலுக செங்கனி வாயைத் திறந்(து)எனக்கே.

**குறிப்புரை :** நேயம்= அன்பு. தோய் அம்பு ஒழுகு= மிக்க நீர்சொரியும் அருவி. தேர= தெளிவுற நாமதேயம்= பெயர்.

**பொழிப்புரை :** தன்மேல் பத்திமை கொண்டவர்க்கு அருள்புரியும் சிராமலைவாழ் இயல்பாகவே மலமில்லாத அருள்தரு தாயுமானவனின் மிக்கஅருவிநீர் சொரியும் சிராமலையில் மயில்போன்றவரே ! நீர் உமது ஊர்எது என்று சொல்ல விரும்பாவிட்டாலும், உமது கொவ்வைக்கனி போன்ற வாய்திறந்து தெளிவாக உமது பெயரையாவது கூறுக.

**விளக்கம் :** முன்னாளில் சிராமலையில் அருவிகள் நீர் சொரிந்தன என்பதை, அம்மலையின் மேலிருந்து கீழ்வரையிலான பாறையில் இறுதிவரை உள்ள கருமையான சுவடு நமக்கு உணர்த்துகிறது.

( 85 ) **வேழம் வினாதல்**

தண்ணிலா வேணியர் வாழ்வாம் சிராமலைத் தண்பொழில்வாய்
மண்நிலா மின்என நின்றீர் மிகுநும் வனமுலைநேர்
எண்ணிலாம் கோட்(டு)அடு வேழம்நும் கண்நிகர் என்வடிவேல்
உண்ணிலா வும்உட லோ(டு)இவண் உற்றதோ ஓதுமினே.

**குறிப்புரை :** மண்நிலா மின்= மண்ணுலகில் நிலவும் மின்னல். வனமுலை= அழகிய முலை. நேர்எண்ணில் ஆம்= ஒப்பாக நினைக்கப்பெறும். கோட்டு= தந்தமுடைய. அடு= கொலை. வடிவேல் உள்நிலாவும் உடலோடு= கூர்மையான வேல் தங்கிய உடம்புடன்.

**பொழிப்புரை :** குளிர்ந்த நிலாவைச்சூடிய சடையுடையவர் வாழ்கிற சிராமலையின் குளிர்ந்த சோலையில், மண்ணுலகில் நிலவும் மின்னல்போல் நிற்கின்றவரே ! உமது பருத்த அழகிய முலைக்கு ஒப்பாகநினைக்கப்பெறும் கோடுகளால் கொலைபுரியும் யானை, உமது கண்களுக்கு ஒப்பான என்கூரிய வேல் தைக்கப்பெற்ற உடம்புடன் இங்குவந்ததா ? எனக்குக் கூறுங்கள்.

**இலக்கணக்குறிப்பு :** இச்செய்யுளில் மண்நிலா மின், முலைநேர் கோடு, நும்கண்நிகர் வடிவேல் என்று மூன்று உவமைகள் உள.

( 86 ) **ஒழிந்தது வினாதல்**

அடியேனை வெய்யோன் எனஎண்ணி யோநும் மருள்குமுதக்
கடியேறு பூகுவிந்(து) உற்ற பலவாம் கவினும்முத்தம்
படியேறு வாய்முத்(து) ஒளிக்(கு)இடைந்(து) இன்னல் படரும்என்றோ
முடியேயும் செய்ய சிராமலை அன்னீர்வாய் மூடியதே.

**குறிப்புரை :** வெய்யோன்= சூரியன். மருள்நும் = மருண்ட உமது. கடிஏறு குமுதப் பூ= மணம்மிக்க செங்குமுதமலர் - வாய். கவினும் பலவாம் முத்தம்= அழகு விளங்கும் பலவாகிய பற்கள். படிஏறு வாய்= நீர்நிலையிலிருந்து வெளிவரும். இடைந்து= தோற்று. இன்னல் படரும்= துன்பம் உண்டாகும். முடி ஏயும்= தலைமை பொருந்திய. செய்ய= சிறந்த. அன்னீர்= போல் சிறந்தவரே.

**பொழிப்புரை :** தலைமை பொருந்திய சிராமலைபோல் சிறந்தவரே ! அடியேனைச் சூரியன் என்று எண்ணியோ மருண்ட உமது மணம்மிக்க செங்குமுதவாய் குவிந்தது ? - விடை கூறாதிருக்கிறது. நீர்நிலையிடமிருந்து வெளிவரும் முத்தின் ஒளிக்கு, பலவாக அழகுடன் விளங்கும் உன்வாய் முத்துகள் - பற்கள் - தோற்று, வெளிப்பட்டால் பலதுன்பங்கள்வரும் என்றோ உமது வாய்மூடியே உள்ளது ? ( நீர் பேசவில்லை என்றான் )

**இலக்கணக்குறிப்பு :** இச்செய்யுளில் இரு தற்குறிப்பேற்றவணிகள் உள.

( 90 ) **யாரே இவர்மனத்துஎண்ணம் யாதுஎனப் பாங்கிதேர்தல்..**

குழையோடு பூண்ட சிராமலை நாதர் குளிர்பொழில்வாய்
தழையோடு கண்ணி கரம்கொ(டு)ஊர் பேரும் தனிக்களிறும்
உழையோடும் இன்னம் வினவினர் பொய்யே உரைத்தனரால்
விழையோடு வந்த இவர்ஆர் கருத்(து)என்னோ மேவுதற்கே.

**குறிப்புரை :** குழை= காதணி. ஓடு= மண்டைஓடு. தழையோடு கண்ணி= பசுந்தழையுடனான மாலை. உழைஓடும்= பக்கமாக ஓடிவந்த. தனிக்களிறு= மதயானை. விழை= விருப்பம். மேவுதற்கு= வருவதற்கு.

**பொழிப்புரை :** பாம்புக்காதணியும், மண்டைஓடும் கொண்டவரது குளிர்ந்த சோலையில், விருப்புடன் தனது கையில் பசுந்தழையும் மாலையும் கொண்டுவந்து; ஊர், பேர், அந்தப்பக்கமாகவந்த மதயானை இவற்றை கேட்டவர் பொய்தான் கூறினார். இவர்யார் ? வருவதற்கு என்ன காரணம் ? என்று பாங்கி ஆய்ந்தாள்.

( குறையுற உணர்தல் - முற்றிற்று )

## இருவரும் உளவழி அவன்வர உணர்தல்

***************************************************************

### எண்ணம் தெளிதல்

சங்கத்(து) இருந்து தமிழ்விரித்(து) ஆய்ந்தருள் சங்கரன்வாழ்
துங்கச் சிராமலைப் பைம்பொழில் வந்(து)இவர் தோன்றுபதி
எங்கள் பெயர் இவை கேட்டுக் களிறுமான் என்றிடல்மா
தங்க முலைஎம் குலமான் விழைவாம் சரிஇவர்க்கே.

**குறிப்புரை :** விரித்து= விளக்கிக்கூறி. துங்கம்= பெருமை. தோன்றுபதி= தோன்றிய / வாழும். களிறுமான்= ஆண்யானையாகிய விலங்கு. மாதங்க முலை= யானை மத்தகம் போன்றமுலை. என்குலமான்= எம்குலத்து மான் - தலைவி. இவர்க்கே சரி= இவர்க்குப்பொருந்தும்.

**பொழிப்புரை :** தமிழ்ச்சங்கப் புலவராக வீற்றிருந்து தமிழை விளக்கிக்கூறியும் ஆய்ந்தும் அருள்புரிந்த சிவபிரான் எழுந்தருளியுள்ள பெருமைபொருந்திய சிராமலையின் பசிய சோலைக்கண் இவர் வந்து, என்னிடம் வாழும் ஊர், பெயர், இவைகேட்டதுடன் ஆண்யானை பற்றியும் கூறியது யானைமத்தகம் போன்ற முலைகளுடைய எம்குலமான் ஆகிய தலைவியை விரும்பியே என்பது இவருக்குப் பொருந்தும்

**விளக்கம் :** இறைவன்; தருமிக்குக் " கொங்குதேர் வாழ்க்கை " பாடல்தந்தது, களவியல் இலக்கணநூல் தந்தது, உருத்திரசன்மனாய் களவியலுரைகளை ஆய்ந்தது ஆகிய அருட்செயல்களை இச்செய்யுளின் முதலடி நினைவூட்டுகிறது.

( 92 ) **தலைவன் கையுறை ஏந்தி வருதல்**

பாரச் சிகரச் சிராமலை யான்பொழில் பைந்தருப்பால்
சேரத் தருவும் நிழலும் எனமான் தெளிஇகுளை
நேரக் கவின்ஒரு தே(வு)என நின்றார் நிறைகுறும்பாம்
மாரப் பயல்செயும் வெங்கோன்மை கூறி வழுத்துவமே.

**குறிப்புரை :** பாரம்= பெருமை. சிகரம்= உச்சி. தருப்பால்= மரத்தின் பக்கம். சேர= கூட. சிராமலையான் மான் பொழில் என்றுகூட்டுக. மான்= மான் போன்ற தலைவி. கவின் ஒரு தேவு எனநின்றார் இகுளை.. தேவு= தெய்வம். நின்றார்= நின்ற. இகுளை நேர= பாங்கி அறிந்து உடன்பட. நிறை குறும்பாம் மாரப்பயல்= மிக்க குறும்புத்தனம்.செய்யும் மன்மதன். வெங்கோன்மை= பெருங்கொடுமை - காமவுணர்வு. வழுத்துவம்= வேண்டுவோம்.

**பொழிப்புரை :** பெருமைபொருந்திய உச்சியுடைய சிராமலையானது மலைச்சோலைக்கண், பசிய மரத்தின்பக்கம் கூட, ஒரு தெய்வம்போல நிற்கின்ற தலைவியுடன் மரமும் நிழலுமாக உடன் விளங்கும் பாங்கிஅறிந்து உடன்பட, மிக்க குறும்புகள் - காமவுணர்வு - தரும்மன்மதன் எனக்குச் செய்யும் பெருங்கொடுமையைக்கூறி வேண்டுவோம்.

**இலக்கணக்குறிப்பு :** இச்செய்யுள் உவமையணி.

( 93 ) **தலைவன் அவ்வகை வினாதல்**

வந்தார் பிரியா மணஞ்செய் சிராமலை வண்பொழிலில்
பந்(து)ஆர் முலையீர் உமதிடை நேர்சீயம் பாணம்அதால்
முந்(து)ஆர் உடல்துளை செய்ய அயர்ந்து முடுகியதோ
வந்தாம் எனவந்த தாம்எனில் கூறுவிர் வாய்திறந்தே.

**குறிப்புரை :** பிரியாமணம் செய்= இருவரும் பிரியாதபடி திருமணம் செய்துகொள்ளும். உமதிடை நேர்= உங்களை நோக்கிவந்த. சீயம்= சிங்கம். முந்து= முன்பு. அயர்ந்து முடுகியதோ= துன்புற்று ஓடியதா. வந்தாம்= நாம் வந்தோம். வந்ததாம் எனில்= வந்ததென்றால். ( அவ்வகை = முன்புபோல் )

**பொழிப்புரை :** இருபந்துபோன்ற முலைகளுடன் உள்ளவர்களே ! வந்த இருவருள் யாரும் பிரியாதவாறு திருமணம் செய்துகொள்ளும் சிராமலையின் வளமான சோலையில் உங்களைநோக்கி வந்த சிங்கம் ஒன்று முன்பு அம்பினால் துளைக்கப்பெற்ற உடம்புடன் துன்புற்று ஓடியதா ! அதனைத் தொடர்ந்தே நாம் இங்கு வந்தோம் . அது வந்ததுஎன்றால் உமது வாய்திறந்து கூறுங்கள்.

**இலக்கணக்குறிப்பு :** வந்தாம் - உயர்வுகருதிய தன்மைப்பன்மை வினைமுற்று.

( 94 ) **எதிர்மொழி கொடுத்தல்**

சால்அமை அத்தி உரியான் சிராமலை சார்இறைவ
வேல்அமை அத்தி பெருவேங்கை கண்டேம் விளங்குநகை
வேல்அமை அத்திக் கணையாரும் வேங்கை வியன்அரிமான்

கோல்அமை அத்திரக் கண்ணாற்கா ணேம்இக் குளிர்புனத்தே.

**குறிப்புரை :** சால் அமை= பெருமைபொருந்திய. அத்தி உரியான்= யானைத்தோல் உரித்துப் போர்த்தவன்.. இறைவ= தலைவனே. வேல் அமை அத்தி= குத்திய வேலுடன்யானை. பெருவேங்கை= பெரியபுலி. கணையாரும் அத்தி= அம்பு தாங்கிய அத்தன்மையன். வியன் அரிமான்= பெருமைபொருந்திய சிங்கம். கோல் அமை அத்திரம்= திரட்சிபொருந்திய ஆயுதம்.

**பொழிப்புரை :** யானைத்தோல் உரித்துப் போர்த்த பெருமை பொருந்திய அருள்தரு தாயுமானவனின் சிராமலையைச் சார்ந்த தலைவனே ! வேல் தைத்த யானை , பெரிய புலி ஆகியவற்றைக் கண்டோம். பெருமைபொருந்திய வேங்கப்புலி, சிங்கம் விளங்கும் குளிர்ந்த இக்காட்டில் விளங்கும் ஒளிபொருந்திய வேல் ஏந்திய தன்மையுடைய வீரனையும், திரண்ட ஆயுதம் எதனையும் பார்க்கவில்லை .

( 95 ) **இறைவனை நகுதல்**

சிம்மத்தின் மோதும் சிகரச் சிராமலைச் செல்வர்எதிர்
செம்மத்த வார்கட வேழமும் தூண்தரு சிங்கமும்என்
அம்அத்த ளிர்க்கரர் வேல்தொடை பட்டே அடவிபுக்க
வெம்மத்த யானையைச் சீயத்தை மானுமோ வேல்விழியே.

**குறிப்புரை** : சிம்மம்= நரசிம்மம். மோதும்= சரபராகிப் போரிட்ட. எதிர்= எதிர்த்து. அம் அத் தளிர்க்கரர்= அழகிய அந்த மாந்தளிர் ஒத்த கைகளையுடையவர். தொடை பாய்ந்து= வீசப்பட்டுப் பாய்ந்து. செம்மத்த வார்கடம்= சிறந்த மத்தகத்தில் இருந்துபெருகும் மிக்கமதநீர். தூண்தரு சிங்கம்= நரசிங்கம். அடவி புக்க= காட்டில் புகுந்தன. வேல்விழி= தலைவியின் வேல்போன்ற விழி. வெம்மத்த = கொடிய மத்தகமுடைய . சீயம்= சிங்கம். மானுமோ= ஒக்குமோ - ஒத்தநிலையினவோ ? - ஒவ்வா.

**பொழிப்புரை :** நரசிங்கத்துடன் போரிட்டவராகிய சிராமலைஉச்சியில் உள்ள, அழகிய அந்த மாந்தளிர் ஒத்த கைகளுடையவரை எதிர்த்து, சிறந்த மத்தகத்தில் இருந்து பெருகும் மதநீர் ஒழுகும் யானையும், பிரகலாதனுக்காகத் தூணிலிருந்து வெளிப்பட்ட சிங்கமும் காட்டிற்கு ஓடிவிட்டன. தலைவியின் வேல்போன்ற விழிகளை ஒவ்வா - எதிர்க்கவியலா.

**விலக்கம் :** சிவபிரான், தன்னை எதிர்த்த யானையின் தோலை உரித்துப்போர்த்தது, சரபராக வந்து நரசிங்கத்தை அடக்கியது ஆகிய செய்திகளைக் குறித்தார்.

( 96 ) **பாங்கிமதியின் அவரவர் மனக்கருத்து உணர்தல்**

விண்உரைக் கும்சீர் சிராமலை யான்வரை மேல்நகையால்
கண்உரைக் கும்அவர் நற்புனக் காவலைக் கைத்தளிரார்
பண்உரைக் கும்வேழச் சீயமான் வேட்டை பகர்உரையுள்
எண்உரைக் கும்இரு நெஞ்(சு)உரைக் கும்ஓர் இரும்சுகமே

**குறிப்புரை :** விண்உரைக்கும்= தேவர்கள் புகழும். மேல் நகை=மேலான புன்னகை. தளிர்ஆர்கை நற்புனக் காவலை மேல்நகையால் அவர் கண்உரைக்கும்= தளிர்போன்ற உள்ளங்கைகளுடைய தலைவி செய்யும் தினைபுனக் காவலை, அவளது மேலான புன்னகையால் அவளது கண்கள்( களவுப்புணர்ச்சியை ) கூறும். வேழம் சீயம்மான் வேட்டை= யானை சிங்கமாகிய விலங்குகளின் வேட்டையை. பகர் உரையுள் பண் உரைக்கும்= சொல்லின் உட்கருத்துக் கூறும். இரு நெஞ்சு= இருவர் மனம். இரும் சுகம் உரைக்கும்= பெரிய சுகத்தை - புணர்ச்சி இன்பத்தை.

**பொழிப்புரை :** சிறப்புடைய சிராமலைச் சிவத்தின் சிறப்பைத் தேவர்கள் சொல்வர். தளிர்போன்ற கையால் தலைவி காக்கும் தினப்புனக்காவலை அவளதுமேலான புன்னகையுடனான கண் உரைக்கும். யானை சிங்கம் ஆகிய விலங்குகள் வேட்டைபற்றித் தலைவன் சொன்ன சொல், உட்கருத்தையும், இருவரின் நெஞ்சு அவர்களின் எண்ணத்தையும் அவர்கள் பெற்றசுகத்தையும் உரைக்கும்.

**இலக்கணக்குறிப்பு :** இச்செய்யுள் சொற்பொருள் பின்வருநிலை அணி.

( பாங்கிமதி உடன்பாடு - முற்றிற்று )

## பாங்கியிற் கூட்டம்

***************************

### தலைவன் உட்கோள் சாற்றல்

( 97 ) விண்ணுக்(கு) ஒருதூண் நிகராம் சிராமலை வித்தகர்தீக்
கண்ணுக்(கு) அழிந்த மதற்(கு)உயிர் தந்தீர் கவின்அமரர்
பெண்ணுக்(கு) அரசையும் ஏவல்செய் யச்செய்வன் பேணிஎனை
எண்ணுக்(கு) இயைநும் பணிஎனக் கொண்டிலீர் என்உயிரே

**குறிப்புரை :** உட்கோள் சாற்றல்= மனத்தில் கொண்டு கூறல். விண்ணுக்கு= தேவருலகுக்கு. ஒரு தூண்= தாங்கும் ஒப்பற்ற தூண். வித்தகர்= ஞானி. தீக்கண்= நெற்றிக்கண். மதன்= மன்மதன். அமரர் பெண்ணுக்கு அரசு= தேவருலக மகளிர்க்கு அரசியாகிய இந்திராணி. எனைப்பேணி= என்கருத்தை விரும்பி. எண்ணுக்கு இயை= என் எண்ணத்துக்குப் பொருந்த. என் உயிரே பேணி.

**பொழிப்புரை** : தேவருலகத்தைத் தாங்கும் ஒப்பற்ற தூணாக விளங்கும் சிராமலை ஞானிஆகிய சிவபிரானின் நெற்றிக்கண் தீயினால் இறந்த மன்மதனுக்கு, என்மூலம் உயிர்தந்தவரே ! தேவர்களின்

அழகிய பெண்களுக்கெல்லாம் அரசியாகிய இந்திராணியையும் ஏவல்கொள்ளுவேன். என்கருத்தை விரும்பி என் உயிர்போன்ற எண்ணத்துக்குப் பொருந்த உமது செயலைக் கொள்ளுங்கள்.

**இலக்கணக்குறிப்பு :** விண்ணுக்கு .......... சிராமலை - உயர்வு நவிற்சி அணி.

( 98 ) **பாங்கி குலமுறை கிளத்தல்**

ஊரேசூ றும்புகழ் ராமநா ராயணன் ஓர்ந்துதொழும்
பாரேமா தேராக்கொள் வோன்வாழ் சிராமலைப் பாங்குணர்ந்தோர்
ஆரேகா வேரிப் பொனில்குன்றி வித்திட்(டு) அணிஅமைப்பார்
தேரேம்யாம் குன்றவர் ஊரவ நன்(கு)அறி சேர்இழிபே.

**குறிப்புரை :** ஓர்ந்து= நன்று ஆராய்ந்து. பாரே மாதேராக் கொள்வோன்= பூமியைப் பெரிய தேராகக் கொண்ட சிவபிரான். பாங்கு= தகுதி. ஆர்= யார். காவேரிப் பொனில்= மிக உயர்ந்த பொன்னில். குன்றி வித்து இட்டு= குன்றிமணி விதையைப் பதித்து. அணி அமைப்பார்= நகைசெய்கிறவர். தேரேம் யாம்= ஒப்புகொள்ள மாட்டோம். குன்றவர் ஊரவ= குன்றில் உள்ள ஊரைச் சேர்ந்தவனே. சேர் இழிபு நன்கு அறி= அதனால் சேரும் இழிவை நன்குஅறிந்துகொள். காவேரிப்பொனில் ...... அமைப்பார் ஆர் என்று கூட்டுக.

**பொழிப்புரை :** ஊரவர் அனைவரும் புகழும் ராமநாராயணன் ஆராய்ந்து வணங்கும் பூமியை முப்புர எரியில் தேராகக் கொண்ட சிவபிரான் வாழும் சிராமலைமக்களின் தகுதியை உணர்ந்தவர், மிக உயர்ந்த பொன்னில் குன்றிமணிவிதையைப் பதித்து நகைசெய்பவர் யார் ? ஒப்புக்கொள்ளமாட்டோம். குன்றில் உள்ள ஊரைச் சேர்ந்தவனே ! அதனால் சேரும் இழிவை அறிந்துகொள்.

**விளக்கம் :** தலைவனை உயர்குலத்தவன் - பொன் என்றும்; தலைவியைக் குன்றிமணி விதை என்றும் கூறியதன் மூலம் தலைவனை உயர்த்தியும், தலைவியைத் தாழ்த்தியும் கூறினாள்.

**இலக்கணக்குறிப்பு :** பொனில் - இடைக்குறை. இச்செய்யுள் பிறிதுமொழிதல் அணி.

( 99 ) **தலைவன் தலைவிதன்னைஉயர்த்தல்**

சேயேறும் பெம்மான் சிராமலை நாதன் தெரிந்துமுனம்
வேயேறும் அம்மலைப் பெண்புணர்ந் தார்வேலன் மிகுகுறத்தி
மீயேறு தோள்புணர் தான்இஃதே எற்கும் மிகும்இயைபு
வீயேறு பத்மம் கொளும்உல கம்சேற்றின் மேவினுமே.

**குறிப்புரை :** சே= விடை - எருது. தெரிந்து= ஆராய்ந்து. வேய் ஏறும்= மூங்கில் போல் அமைந்த பெண்= பார்வதிதேவி. வேலன்= முருகன். மீயேறு= மிகச்சிறந்த. எற்கும்= எனக்கும். இயைபு= பொருத்தம். வீயேறு= விருப்பம் மிக்க. பத்மம்= தாமரை மலர். சேற்றின் மேவினும்= சேற்றில் தோன்றினாலும்.

**பொழிப்புரை :** விடை ஏறிவரும் பெருமானாகிய தாயுமானவன் முன்னரே ஆராய்ந்துபார்த்து மூங்கில்போல் அமைந்த தோள்களுடைய அழகிய மலைப்பெண் ஆகிய பார்வதிதேவியை மணந்தார். வேலேந்திய முருகன் மிச்சிறந்த பொருத்தமாக வள்ளிநாச்சியாரை மணந்தான். மிகச்சிறந்த இப்பொருத்தம் எனக்கும் பொருந்தும். தாமரைமலர் சேற்றில் தோன்றினாலும் அதன்மேல் உலகின் விருப்பம் மிகுந்தே இருக்கும்.

**விளக்கம் :** சேற்றில் பிறந்ததாயினும் தாமரையை உலகம் விரும்பும். அதுபோல் தலைவி மலைக்கண் தாழ்ந்த குலத்தில் பிறந்தவளாயினும் நான் விரும்புகிறேன் என்றான்.

**இலக்கணக்குறிப்பு :** இச்செய்யுள் எடுத்துக்காட்டு உவமைஅணி.

( 100 ) **பாங்கி அறியாள்போன்று வினாதல்**

அந்தார் இதழி அரன்வாழ் சிராமலை அன்புடையீர்
பந்(து)ஆர் அணிஊசல் அம்மனை வண்டல் பரிந்(து)அயர
வந்(து)ஆ டிடும்தோகை யர்பல கோடி மகிழ்உன(து)உள்
சிந்தாகு லம்தந்த வர்ஆர் வரைப்புய செப்புகவே.

**குறிப்புரை : அம்**இதழி தார்= அழகிய கொன்றைமாலை. ஆர் அணி ஊசல்= மிக்க அழகிய ஊஞ்சல். வண்டல்= மகளிரின் ஒருவகை விளையாட்டு. பரிந்து அயர= பரிவுடன் விரும்ப. தோகையர்=மயில்களாகிய மகளிர். உள்சிந்தாகுலம்= மனவருத்தம். வரைப்புய= மலைஒத்த திண்ணிய தோள்களுடையவனே..

**பொழிப்புரை :** அழகிய கொன்றைமாலை அணிந்த அருள்தரு தாயுமானபெருமான் எழுந்தருளியுள்ள சிராமலையில் வாழும் அன்பரே ! மலைபோன்ற தோள்களுடையவரே ! பந்து, மிக்க அழகிய ஊஞ்சல், அம்மானை, வண்டல் முதலிய விளையாட்டுகளைப் பரிவுடன் இங்கு விரும்பி வந்து ஆடும் மயில்களாகிய பலகோடிப்பேர்களுள் உனக்கு மனவருத்தம் தந்தவர் யார் ? கூறுக.

( 101 ) **இறையோன் இறைவிதன்மை** இயம்பல்

நாலாம் மறைசொல் சிராமலை நாதன் நடுச்சடையின்
பாலாம் பிறைநுதல் மஞ்ஞையாம் சாயல் பகர்குமரன்
வேலாம் விழிதிரு மால்கரக் கோள்தாம் வியன்களம்நன்
நூலாம் இடைநீ ரவர்கண் ணவரேஎன் நுண்ணுயிரே.

**குறிப்புரை** : நாலாம் மறை= மறைகள் நான்கும். சடையின் நடு= சடையிடையே. பால் ஆம்= பால்போல் வளங்கும். திருமால் கரக்கோள்= திருமால் தன்கையில் ஏந்திய சங்கு. வியன் களம்= பெருமை பொருந்திய கழுத்து. நீர்= இரத்தினமணியின் ஒளி.

**பொழிப்புரை** : நான்மறைகளும் புகழும் சிராமலை இறைவனது சடையிடையே விளங்கும் பால்போன்ற பிறையே நெற்றி, மயிலே சாயல், புகழ்வாய்ந்த முருகனது வேலே விழி, திருமால் தன் கையில் ஏந்திய சங்கே கழுத்து, மென்மையான நூலே இடுப்பு, இரத்தினமணியின் ஒளியே கண்கள். இத்தகையவரே என்உயிராகியவள் என்று தலைவியின் தன்மை கூறினான்.

**இலக்கணக்குறிப்பு** : ஆம் என்றுவருவன அசைச்சொற்கள். கரக்கோள் - கோள் - முதனிலை திரிந்த தொழிற்பெயர் - சங்கினைக் குறித்தது.

( 102 ) **தலைவி அருமை சாற்றல்**

அடியார்க்(கு) எளியன் சிராமலை நாதன் அணிவரைமின்
முடியார் மணிஅர சன்குல மாமகள் மொய்குழலாள்
படியார் மகள்போல் நினையலை பூமகள் பார்இவளே
தடிஆர் வயல்ஊ ரவளம் இறைக்(கு)ஓர் தனிமுதலே.

**குறிப்புரை** : மணிமின்முடிஆர்= நவமணிகள் ஒளிரும் முடிசூடிய. மொய்குழலாள்= அடர்ந்த கூந்தலுடையவள். படிஆர் மகள்= உலகமகள். பார் பூமகள் இவளே= உலகத்திருமகள் இவளே. தடிஆர்= மிகுதியாகப் பொருந்திய. ஊரவ= ஊருக்கு உரியவனே. தனி முதல்= ஒப்பற்ற முதற்பொருள்.

**பொழிப்புரை** : அடர்ந்த கூந்தலுடைய தலைவி, அடியவர்க்கு எளியவன் ஆகிய சிராமலை இறைவனின் அழகிய மலைக்கண், நவமணிகள் ஒளிரும் முடிசூடிய அரசகுலத்துத் தலைமகள். இவளை உலகத்துப் பிறமகள் போல் நினையாதே. உலகத்திருமகள் இவளாவாள். மிகுதியாகப் பொருந்திய வயல்களுடைய ஊரனே ! எமது அரசனுக்கு இவள் ஒப்பற்ற முதற்பொருள் ஆவாள்.

**விளக்கம்** : அடியார்க்கு எளியன் என்றதொடர், கொற்றவன்குடி உமாபதிசிவாசாரியார்க்குத் தில்லை அம்பலவாணப் பெருமான் எழுதிய கைச்சீட்டின் தொடக்கத் தொடரை நினைவூட்டும்.

( 103 ) **தலைவன் இன்றியமையாமை இயம்பல்**

இரப்பார்க்(கு) அருள்செய ராமநா ராயணன் என்றும்உளன்
புரப்பார் தமையும் புரக்கச் சிராமலைப் புங்கவன்உண்(டு)
உரப்(பு)ஆர் விரகஎன் வெம்பசிக்(கு) இன்அமு(து) ஓர்ந்(து)அருளால்
தரப்பார் குளிர்நீர் இலையேல் உயிர்என்னுள் தங்(கு)அரிதே.

**குறிப்புரை** : புரப்பார்= காக்கிறவர். புங்கவன்= இறைவன். உரப்பு ஆர்= வலிமைமிக்க. விரக வெம்பசி= காமநோயாகிய கொடிய பசிநோய். ஓர்ந்து= ஆராய்ந்து. நீர்= குணம். தங்கு அரிது= தங்காது.

**பொழிப்புரை** : யாசிப்பவர்க்கு இல்லைஎன்னாது வழங்க ராம நாராயணன் எந்நாளும் உள்ளான். வழங்கிக் காப்பவரைக் காப்பதற்குச் சிராமலை அருள்தரு தாயுமானவன் உண்டு. வலிமைமிக்க காமமாகிய கொடிய பசிதீர்தற்குரிய இனிய அமுதத்தை அருளுடன் ஆராய்ந்து எனக்குத் தரும் வழிபார். இவ்வகையில் உனக்குக் குளிர்ந்த குணமின்றேல் என்உயிர் என்னுடலில் தங்காது.

( 104 ) **பாங்கி நின்குறை நீயேசென்று உரைஎன்றல்**

சீதப் புனல்பாய் சிராமலை நாதன் செழும்பொழில்வாய்
போ(து)அப்(பு) அமுதுகார் நேர்முகம் கண்சொல் புரிகுழல்பால்
மா(து)அப்(பு) எமனோர் மொழிதல் அடுக்கல்என் மாண்புயனே
போதப் புகல்உன் குறையை இறைவிமுன் போய்இனிதே.

**குறிப்புரை** : சீதம்= குளிர்ச்சி. போது= மலர். அப்பு= அம்பு. அமுது= தேவாமுதம். கார்= கார்மேகம்.நேர்= ஒத்த. புரிகுழல்= சுருண்ட கூந்தல். மாது= காதல். அப்பு எமனோர்= வேலையாள் ஆகிய எம்போன்றவர். என் அடுக்கல்= எவ்வாறு பொருந்தும். போதப்புகல்= செம்மையாகச் சொல்

**பொழிப்புரை** : குளிர்ந்த அருவிநீர் பாயும் சிராமலைப் பெருமானது.வளமான சோலையில் ; மலர், அம்பு, அமுதம், கார்மேகம் ஆகியவற்றை ஒத்த முகம், கண், சொல், சுருண்ட கூந்தல் ஆகியன உடையவளிடம், உன்காதலை வேலையாள் ஆகிய எம்போன்றோர் கூறுவது எவ்வாறு பொருந்தும் ? மாட்சிமைப்பட்ட தோள்களுடையவனே ! தலைவிமுன் போய் உன்குறையை நீயே இனிதே செம்மையாகச் சொல்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் நேர்நிரல் நிறைஅணி.

( 105 ) **பாங்கியைத் தலைவன் பழித்தல்**

சொற்றுணை ஆய சிராமலை யான்வரைச் சூழ்பொழில்வாய்
நற்றுணை மாமுலை தந்த விரகால் நலிவடைந்து
நிற்றுணை யாத்துயர் ஆழி கடக்க நினைத்தஉவன்
கற்றுணை யாக்கடல் நீந்த நினைத்ததாம் கார்க்குழலே.

**குறிப்புரை** : சொல்துணை= சொல்லுக்கு / புகழுக்கு. நல் துணை மா முலை= நல்ல இரு அழகியமுலைகளுடைய தலைவி. விரகு= காமநோய். நின் துணையா. வன்கல்= கனத்தபெரும்பாறை. ஆம்= போன்றதாகும்.

**பொழிப்புரை** : கரிய கூந்தலுடையவளே ! நம்புகழுக்குத் துணையாக விளங்கும் அருள்தரு தாயுமானவனது மலையைச் சூழ்ந்த சோலைக்கண், நல்ல இருஅழகிய முலைகளுடைய தலைவி எனக்குத்தந்த காமநோயால் துன்புற்று, உன்னைத் துணயாகக் கொண்டு அத்துன்பக்கடலைக் கடக்க நான் நினைத்தது, கனமானபெரிய பாறையைத்துணையாகக் கொண்டு கடலினை நீந்திக்கடக்க நினைத்தது போன்றதாகும்.

**விளக்கம்** : " சொற்றுணை வேதியன் " என்று தொடங்கும் அப்பரடிகளின் நமச்சிவாயப் பதிகப்பாடலின் மூன்று அடிகளின் முதற் சீர்கள் இதில் தக்கவாறு இடம்பெற்று மணக்கின்றன.

**இலக்கணக்குறிப்பு** : நினைத்தது ஆம்-ஆம்- உவமவுருபு. இச்செய்யுளின் ஈற்றடியில் இல்பொருள் உவமைஅணி உள்ளது.

( 106 ) **பாங்கி பேதைமையூட்டல்**

செப்பான் கொடியர் சிராமலை நாதர் செழும்சிலம்பில்
துப்பான் விளங்(கு) ஓவியப் பூசைகண்டு சுகம்ஒளிப்பாள்
அப்பான் முயல்மான் அடும்கடும் குன்றவர் ஆரணங்கு
வெப்பான் மெலியுன் துயர்அறி யாள்பேதை மேதகையே

**குறிப்புரை** : பேதைமை ஊட்டல்= தலைவியின் அறியாப்பருவத்தை வலியுறுத்திக்கூறுதல். செப்பு ஆன்கொடியர்= புகழப்பெறும் விடைக்கொடி உடையவர். துப்பு ஆன் = செந்நிறத்தால். சுகம் ஒளிப்பாள்= பிற இன்பங்களை மறக்கின்றவள். அப்பான்= அம்பினால். வெப்பு= காமச்சுரம். பேதை= அறியாப்பருவத்தினள். மேதகை= மேலானவன்.

**பொழிப்புரை** : மேலானவனே ! புகழப்பெறும் அறத்தின் குறியீடான விடைக்கொடிஏந்திய அருள்தரு தாயுமானவரின் வளமான மலையில், அம்பினால் முயல் மான் முதலியவற்றை எய்துவாழும் மலைவாழ்நரின் பெண்ணாகிய இவள், செந்நிறமுடன் விளங்கும் ஓவியத்திற்குப் பூசனை செய்து தனது பிற இன்பங்களை மறக்கின்றவள் ஆவாள். காமச்சுரத்தால் மெலியும் உன்துயரத்தை அறியாதவளாகிய பேதைப்பருவத்தினள்.

**விளக்கம்** : சிவபிரானின் ஊர்தியும் கொடியுமாகிய விடை அறத்தின் குறியீடு ஆகும் - "அறன் உருவாகிய ஆனேறு ஏறுதல், இறைவன் யானென இயற்றுமாறே "( திருஒற்றியூர் ஒருபா ஒருப்ஃது 6: 3 )

( 107 ) **காதலன், தலைவி மூதறிவு உடைமை மொழிதல்**

உருவால் ஒளிரும் சிராமலை நாதன் உயர்வரைசார்
தருஆர் பொழில்வாய்த் தளர்என் சுரத்தைத் தணித்திடவே
பெருவார் ஒளிர்இள நீர்அளித்(து) உள்ளுறை பெற்றியரை
ஒருவா(து) உரைபேதை என்றாய் பொருந்தாது உரைஉனக்கே.

**குறிப்புரை** : மூதறிவு= பேரறிவு. உரு= தோற்றம். தளர்= மனம் சோர்ந்த. பெருவார்= பெரிய முலைக்கச்சு. இளநீர்= இளநீர் ஆகிய முலை. உள்ளுறை பெற்றியர்= என்மனத்தில் வாழும். ஒருவாது= என்னை நீங்காமல். தணித்திடவே ஒருவாது பெருவார் ஒளிர் இளநீர் அளித்து என்று கூட்டுக.

**பொழிப்புரை** : தோற்றத்தால் சிறந்து விளங்கும் சிராமலை அருள்தரு தாயுமானவனின் உயரமான மலைப்பக்கத்து மரங்கள் அடர்ந்த சோலையில், மனம்சோர்ந்த என் காமச்சுரத்தைத் தணிப்பதற்காக என்னை நீங்காமல் இருந்து, பெரிய முலைக் கச்சுள்ஒளிர்ந்த இளநீர் - முலை - அளித்து என்மனத்தில் வாழும் தன்மையுடையவரைப் பேதை என்றாய் அச்சொல் பேரறிவு உடைய அவளுக்கும் உன் கருத்துக்கும் பொருந்தாது.

( 108 ) **பாங்கி முன்னுறுபுணர்ச்சிமுறை உறக் கூறல்**

சூதக் கனிதந்து காரையூர் மாதின் துயர் ஒழித்த
வேதப் பொருளாம் சிராமலைப் பெம்மான் வியன்பொழில்வாய்
சீதப் பிறைநுதல் தன்னைக் கருதிமுன் சேர்ந்துளையேல்
போதப் பிறரைநீ வேண்டுவ(து) என்போய்ப் புகலுகவே.

**குறிப்புரை** : சூதக்கனி= மாங்கனி. காரையூர் மாது= காரைக்கால் அம்மையார். சீதப் பிறைநுதல்= குளிர்ந்த பிறைபோன்ற நெற்றியுடைய தலைவி. போத= போவதற்கு. போய்ப்புகலுக= நீயே போய்க்கூறுக.

**பொழிப்புரை** : மாங்கனி தந்து புனிதவதியாகிய காரைக்கால் அம்மையின் துயரத்தை - கணவன் பரமதத்தன் மேலுமொரு மாங்கனி கேட்டதால் ஆன துயரத்தை மாங்கனிதந்து - ஒழித்தவனாய் , வேதபொருளாய் விளங்கும் சிராமலைப்பெருமானின் அகன்ற சோலையில், குளிர்ந்த பிறைபோன்ற நெற்றியுடைய தலைவியை எண்ணிச்சென்று கூடியுள்ளாய் என்றால், அவளைக் காணச்செல்லுமாறு நீ பிறரை - என்னை - வேண்டுவது ஏன் ? நீயேபோய் உன்குறையைச் சொல்லு.

( 109 ) **தலைவன் தன்னிலை சாற்றல்**

விண்ணுக்(கு) ஒருபடி ஆய சிராமலை மென்பொழில்வாய்

எண்ணுக்(கு) இயைவேள் சரத்தால் துளையுற்ற(து) என்னுடலம்
பண்ணுக்(கு) இயைஉயிர் போய்விடும் தையலைப் பார்த்(து)அமைப்பாய்
கண்ணுக்(கு) அணிகலம் கண்ணோட்டம் காத்(து)அருள் காரிகையே.

**குறிப்புரை :** படி= படிக்கட்டு. எண்ணுக்கு இயை வேள்= மனத்தில் பொருந்திய மன்மதன். சரம்= காமமூட்டும் மலரம்பு. பண்ணுக்கு இயை= அமையுமாறு பொருந்திய. அமைப்பாய்= காண ஏற்பாடு செய்.

**பொழிப்புரை :** வானுலகம் செல்வதற்கு ஏறுபடியாக விளங்கும் சிராமலையின் அழகிய சோலையில், எனது மனத்தில் பொருந்திய மன்மதன் எய்த காமமூட்டும் மலரம்புகளால் என்உடம்பு துளைக்கப் பெற்றுள்ளது. அதில் அமையுமாறு பொருந்திய என்உயிர் போய்விடும். என்னைக்காக்க நீ தலைவியை நான்பார்க்க ஏற்பாடுசெய். பெண்ணே ! உன் கண்ணுக்கு அழகு என்மேல் கருணைகாட்டல் ஆகும். உதவு.

**விளக்கம் :** " கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம் அஃதின்றேல், புண் என்றுஉணரப் படும் " ( திருக்குறள் எண் 575 ) என்பது ஈற்றடியில் மணக்கிறது

( 110 ) **பாங்கி உலகியல்உரைத்தல்**

மன்னிக் கொடிபுணர் வாமன் சிராமலை வண்பொழில்வாய்
வன்னிக் கொடிஒளிர் வேள்வி முனம்அல்லி வாய்திகழும்
கன்னிக் கொடிக்காந்தள் பற்றிக் கரு(து)எமர் கண்களிக்கத்
துன்னிக் கொடிபுணர் மாஅர சேநிலத் தூநெறியே.

**குறிப்புரை :** மன் இகொடி புணர்= பெருமைபொருந்திய அன்புக்கொடியாகிய மலைமகளை மணந்த ( இ= அன்பு. ) வாமன்= இடதுபாகம்பெற்ற சிவன். வன்னிக்கொடி= தீக்கொழுந்து. அல்லிவாய்= செவ்வல்லி போன்ற இதழ். காந்தள்= காந்தள்மலர்போன்ற கை. கருதும்= விரும்பும். எமர்= எம்மவர். கொடி துன்னிப் புணர்= கொடிபோன்ற தலைவியை அடைந்து கூடுக. நிலத்தூநெறி= உலகத்துத் தூயமுறைமை.

**பொழிப்புரை :** பெருமைபொருந்திய அன்புக்கொடியாகிய பார்வதிதேவியை மணந்த சிவபிரானது வளமான சோலைக்கண், தீக்கொழுந்து ஒளிரும் வேள்வியின்முன்னே, விரும்பும் எம்மவர் கண்டு களிக்க நீவிரும்பும் செவ்வல்லிமலர் போன்ற இதழ்களுடைய கொடிஒத்தவளும், காந்தள்மலர் போன்ற கையுடையவளும் ஆகிய தலைவியைக் கைபிடித்து நெருங்கிக் கூடுக. பெருந்தலைவனே ! இதுவே உலகவர் வகுத்த தூய நெறிமுறையாகும்.

( 111 ) **தலைலைமகன் மறுத்தல்**

பங்கம்பெண் கொண்ட சிராமலை யான்வரைப் பைந்தொடியே
இங்(கு)அம்(பு )என் கண்ணி விரகால் இறந்தபின் என்உருவை
அங்கம்பெண் செய்புல வோரெனச் செய்வார் அடுத்துளரேல்
துங்கம்பெற்(று) ஓங்கும்உன் சொற்படி மன்றல் துணிகுவனே.

**குறிப்புரை :** பங்கம்= பின்னம் பெற்ற. பகுதி - பாதி. அம்பு என்கண்ணி= அம்பு ஒத்த கண்களுடைய தலைவி. விரகு= காமநோய். அங்கம் பெண் செய்= எலும்பைப் பெண்ணாக்கும். அடுத்து உளரேல்= அருகிருந்தால். துங்கம்= தூய்மை. மன்றல்= திருமணம்.

**பொழிப்புரை :** உடம்பின் பாதியில் உமையவளைக் கொண்ட அருள்தரு தாயுமானவன் மலைவாழ் பைந்தொடியே ! இப்போது அம்புஒத்த கண்களுடைய தலைவி தந்த காமநோயால் நான் இறந்தபின், மீண்டும் என் உருவத்தை என்எலும்புகள்கொண்டு ஆக்கும் வல்லமை பெற்றவர் அருகிருந்தால், நான்தூய்மையுடன் சிறந்து விளங்கும் உனதுசொற்படி மணம் செய்துகொள்ள முடிவெடுப்பேன்.

**விளக்கம் :** மயிலைப் பூம்பாவையின் எலும்பைப் பெண்ணாக்கியவர் திருஞானசம்பந்தர். அவர் போன்றவர் இல்லையாதலின் " உளரேல் " என்றான் தலைவன்.

( 112 ) **பாங்கிஅஞ்சி அச்சுறுத்தல்**

பொல்லார் எமர்கடும் சொல்லார் அருளே பொருந்துமனத்(து)
இல்லார் கொடும்பெரு வில்லார் வடிவேல் எழிற்கரனே
நில்லார் உனைஅவர் காணிற் பொறாது நெடி(து)இனிநீ
செல்லா(து) இருத்தல் சிராமலைப் பாங்(கு)இனிச் சீர்இதன்றே.

**குறிப்புரை :** எமர்= எம்மவர். பொருந்து மனத்து அருளே இல்லார். கொடும் = கொடிய / வளைத்த. வடிவேல் எழில் கரனே நில்லார்= அழகிய கையில் கூரிய அம்பொடு இரார் - உன்னை எய்வர். அவர் காணில் பொறாது வடிவேல் எழில் கரனே நெடிதுநில்லார் என்க. இனி நீ சிராமலைப்பாங்கு செல்லாதிருத்தல் இதன்றேசீர் என்க .

**பொழிப்புரை :** எம்மவர் பொல்லாதவர்; கடுஞ்சோல் கூறுவர்; மனத்தில் அருள்இல்லாதவர்;வளைத்த பெரிய வில்லுடையவர்; உன்னை அவர் கண்டால் நெடுநேரம் பொறுக்காது அழகிய கையில் கூரிய வேலுடன் காத்திரார்; வேலினை உன்மேல் வீசுவர், எனவே நீ இனிமேல் சிராமலைப்பக்கம் செல்லாது இருப்பதே சிறப்பானதாகும்.

( 113 ) **தலைவன் கையுறை புகழ்தல்**

மேகம் படியும் சிராமலை நாதன் விளங்(கு)இடத்தில்
ஏகம் பயிலும் பெணைத்தரு மாமலை ஈன்றதளிர்

வே(கு)அம்(பு) அனைய கணீரும் முலைமேவ மேவுதவ
யோகம் புரிந்(து)என் கரம்உற்ற(து) ஓரீர்இவ் ஒண்தளிரே.

**குறிப்புரை :** ஏகம்= ஒப்பற்று. பெணை= பெண்ணை. வேகு அம்பு அனைய கணீர்= விரைந்து ஒழுகும் மேகம் - மழை போன்ற கண்ணீர். மேவுதவ யோகம்= பொருந்திய தவத்தாலான அதிட்டம். ஓரீர்= எண்ணிப்பாருங்கள்.

**பொழிப்புரை :** சிராமலை இறைவன் அருளால் மேகக்கூட்டம் படிகிற இம்மலைக்கண் ஒப்பற்று விளங்கும் தலைவியைத்தரும் இம்மலையில் தோன்றிய தளிரானது, விரைந்து மழைபோல் ஒழுகும்கண்ணீருடன் கூட, தலைவியின் முலைகளில் பொருந்தப் பொருத்தமான தவத்தாலான அதிட்டத்தை இவ்வொளிபொருந்திய தளிர்செய்து என்கைகளில் சேர்ந்ததை எண்ணிப்பாருங்கள்.

**விளக்கம் :** என்னைக்காணாமையால் தலைவியின் வருத்தம் கண்ணீராகப் பெருகும் என்பதை, " வேகு அம்பு அணைய கணீரும் முலைமேவ " என்றான்.

**இலக்கணக்குறிப்பு :** பெணை, கணீர் - இடைக்குறைகள் - செய்யுள் விகாரங்கள்.

( 114 ) **பாங்கி கையுறை மறுத்தல்**

நற்றவர் சாரும் சிராமலை அன்ன நலத்தவரே
பொன்தட அல்குற்(கு) உமது பொலந்தளிர் பூண்(டு)அணியில்
மல்தடம் தோள்எமர் கண்(டு)உது உற்ற வகைவினவி
உற்றவெம் சீற்றத்(து) அடர்வர்பின் காணீர் உணர்எமையே.

**குறிப்புரை :** நலம்= அன்பு. பொன் தட= அழகிய பெருமைபொருந்திய. பொலம்= பொலிவு. மல்தடம் தோள்= போர்வல்ல பெருமைபொருந்திய தோள். உது= தளிர். உற்றவகை= வந்தவிதம். பின் அடர்வர்= பிறகு போருக்கு வருவர். நீர் காண்= இதை உணருங்கள்.

**பொழிப்புரை :** சிறந்த தவத்தோர் அடையும் சிராமலை ஒத்த அன்புடையவரே ! தலைவி தனது அழகிய பெருமைபொருந்திய அல்குலுக்கு நீர் தந்த பொலிவுடைய தளிரை அணிந்துகொண்டால், போர்வல்ல தோள்களுடைய எம்மவர் கண்டு அந்தத் தளிர் வந்த வகையைக்கேட்டு, பெற்ற கொடிய சினத்துடன் உம்முடன் போரிட வருவர். இதை உணருங்கள்.

(115 ) **ஆற்றா நெஞ்சினோடு அவன்புலத்தல்**

மழைஒன்று கையான்எம் ராமநா ராயணன் மாமனத்தார்
குழைஒன்று காதர் சிராமலை நாதர் குளிர்பொழில்வாய்
விழைஒன்றும் என்உளம் வாடிக் குழையும் விதம்எனக்கைத்
தழைஒன்றும் இன்முலை சாராது வாடலும் சார்பவமே.

**குறிப்புரை :** மழைஒன்று[= கொடையில் கார்மேகம் ஒத்த. மனத்தார்= மனத்தவராகிய. விழை ஒன்று= விருப்புடன் கலந்த. குழையும் விதம்= வாடுவதுபோல். தழை ஒன்றும்= தளிர் பொருந்துதற்குரிய. வாடலும்= வாடுவதும். சார்பவம்= சார்ந்த பாவத்தாலேயே ஆகும்.

பொழிப்புரை : கொடைவழங்குவதில் கார்மேகம் ஒத்த கைகளுடைய ராமநாராயணனது பெரிய மனத்தில் உள்ளவரும், குழையணிந்த காதினரும்ஆகிய சிராமலைநாதரின் குளிர்ந்தசோலையில், விருப்புடன் கலந்த என்மனம் வாடி வருந்துவதுபோல், என்கையில் கொண்டுவந்த தளிர், தான் பொருந்துவதற்குரிய தலைவியின் இனியமுலைகளைச் சென்றடையாது வாடுவதும் என்னைச் சார்ந்த பாவத்தாலேயே ஆகும்.

( 116 ) **பாங்கி ஆற்றுவித்து அகற்றல்**

வேல்அயி லேஎனும் கண்ணி சிராமலை மெல்லியல்பால்
மாலையி லேஉன்றன் மாலை உரைத்து மகிழ்ந்துதளிர்
காலையி லேஎன் கரம்பெறு வன்சென்று காய்கிரணம்
வேல்அயி லேஒளிர் காலையி லேவா மிளிர்குணனே.

**குறிப்புரை :** வேல் அயிலே= வேலின் கூர்மையேயாகும். மெல்லியல்பால்= தலைவியிடம். மாலை= மனமயக்கம். காய்கிரணம்= காயும் சூரியஒளி. மிளிர் குணனே= சிறந்து விளங்கும் நற்குணமுள்ளவனே.

**பொழிப்புரை :** சிறந்து விளங்கும் நற்குணத்தனே ! வேலின் கூர்மையே ஆகும் என்றுவிளங்கும் கண்களுடைய தலைவியிடம், இன்று மாலையில் அவள்பால் உனது மனமயக்கம் கூறிமகிழ்ந்து அவளிடம் தர, காலையில் உனதுதளிரினை நான் வாங்கிக்கொள்வேன். எனவே காயும் சூரிய ஒளி வேலின் கூர்மைபோல் ஒளிரும் காலையில் வா.

( 117 ) **இரந்து குறைபெறாது வருந்திய கிழவோன் மடலே பொருள் எனமதித்தல்**

தலைஓங்கு மேன்மைச் சிராமலை நாதன் தனிமலர்த்தாள்
நிலைஓங்கு நெஞ்சே நிணவேல் விழியாள் நெடிதுதரும்
கொலைஓங்கு காமப் பெருங்கடல் நீந்தக் கொழும்புணயாம்
கலைஓங்கு நல்இதழ் பெண்ணைப் பெருமடல் காண்குவையே.

**குறிப்புரை** : தலை ஓங்கு= ஆகாயத்தினளவு உயரமான. நிலை ஓங்கு= நிற்றலில் சிறந்த. நிண வேல் விழியாள்= புண்படுத்தும் வேல்போன்ற விழிகளுடைய தலைவி. நெடிது தரும்= மிகுதியாகத் தரும். கொலை= பெருந்துன்பம். கொழும் புணை= சிறந்த தெப்பம். இதழ்= மடல் - ஓலை. கலை ஓங்கு=ஒளிமிக்க பெண்ணைப் பெருமடல்= பனைமரத்தின் மடலினாலான குதிரை ஏறிவருதல். காண்குவை= எண்ணிப்பார்ப்பாயாக.

**பொழிப்புரை** : ஆகாயத்தினளவு உயரமான மேன்மைபொருந்திய சிராமலைவாழ் இறைவனது ஒப்பற்ற தாமரைமலர் போன்ற திருவடிகளில் நிற்றலில் சிறந்துவிளங்கும் நெஞ்சமே ! என்னைப் புண்படுத்தும் வேல்போன்ற விழிகளுடைய தலைவி மிகுதியாகத்தரும் கொல்வது ஒத்த பெருந்துன்பம்தரும் காமப்பெருங்கடலினை நீந்திக்கடக்க உரிய சிறந்ததெப்பம், ஒளிபொருந்திய நல்ல ஓலைகளுடைய பனைமரத்தின் மடல்களால்ஆன குதிரையில் ஏறிவருதலை எண்ணிப்பார்ப்பாயாக.

**விளக்கம்** : மடலேறுதல் : தலைவியின் பெற்றோர், தலைவியைத் தனக்கு மணம்செய்து செய்துதரவேண்டும் என்பதை வலியுறுத்தத் தலைவன் தன்மேலெல்லாம் சாம்பல்பூசி, எருக்கம்பூவும் பூளைப்பூவும் சூடி, தலைவியின் உருவம்எழுதிய கொடியைக் கையில் ஏந்தி, பனங்கருக்காலான குதிரைமேல் ஏறி ஊரைவலம் வருவதன்மூலம் தலைவியுடனான் தனது நெருக்கமான உறவை ஊருக்கு வெளிப்படுத்துவான். களவுஒழுக்கம் அறிந்த ஊரவர்பழிக்கு நாணி, தலைவியின் பெற்றோர் தலைவியைத் தலைவனுக்கு மணம்செய்துதருவர்.

( 118 ) **பாங்கிக்கு உலகின்மேல் வைத்துஉரைத்தல்**

கோவிந்த ராஜன் தொழும்சீர்ச் சிராமலைக் கோன்வரைவாழ்
மாவிந்தம் அன்ன முலையீர் பிறைநுதல் வாள்விழியால்
பூஇந்(து) அழல்போல் சுடின்அவர் கேண்மையைப் பூண்பர்இன்(று)ஏன்
மாஇந்த நன்மடல் ஏறுவர் நானில மாண்பினரே.

**குறிப்புரை** : கோன்= தலைவன் -இறைவன். மாவிந்தம்= பெரிய விந்தியமலை. வாள்= ஒளி. இந்து பூ அழல்= நிலவின் மென்மையான வெப்பம். கேண்மை= நட்பு. இன்று நானில நன்மாண்பினர் இந்த மடல்மா ஏன்ஏறுவர். மாண்பினர்= நற்பண்புடையோர். மடல்மா= பனைமடல்களால் ஆன குதிரை. ஏன் ஏறுவர்= ஏறமாட்டார்கள்.

**பொழிப்புரை** : கோவிந்தராசன் வணங்கும் சிறப்புவாய்ந்த சிராமலை இறைவனின் மலைக்கண் வாழும் பெரிய விந்திய மலை ஒத்த முலைகளும், பிறைபோன்ற நெற்றியும் உடையவரே ! உமது ஒளிபொருந்திய கண்களால் மென்மையான ஒளியுடையநிலவின் வெப்பம்போல் சுட்டாலும், தலைவியுடனான என் நட்பை நால்வகைப்பட்ட உலகவரும் ஏற்பர். அதனால்தான் தலைவியை எனக்கு மணமுடிப்பர் என்பதால் பனைமடல்களால் ஆன குதிரையில் - மடல்மாவில் என்போன்றவர் ஏன் ஏறுவர் - ஏறும் ஏறமாட்டர்கள். ( நான் மடல் ஏறிவருவேன். அதனால் வரும்பழிச்சொல்லுக்கு அஞ்சி மணம்முடிப்பர் என்றான் )

( 119 ) **இதுவும் அது**

பிடல்ஆர் மதிநுதல் வேல்விழி மம்மர் பெருகிடில்இக்
கடல்ஆர் புவிக்(கு)ஓர் சிரம்ஆம் சிராமலைக் கண்ணுதல்போல்
மடல்ஆர் எருக்குமென் பூளையும் நீறும் மகிழ்ந்(து)அணிந்தே
அடல்ஆர் பனையின் மடலும்ஊ ரும்உல(கு) ஆயிழையே.

**குறிப்புரை** : பிடல் ஆர் மதி நுதல்= பிட்டுப்பொருத்திய நிலாப்போன்ற நெற்றி - பிறைநுதல். மம்மர்= துன்பம். சிரம்= தலைமை. மடல்ஆர்= இதழ்செறிந்த. மென்= அற்பம். அடல் ஆர் மடல்= ஆற்றல்வாய்ந்த மடல்குதிரை - பனங்கருக்கினாலான குதிரை . ஊரும்= ஏறிவரும்.

**பொழிப்புரை** : ஆய்ந்தெடுத்த அணிகலன் அணிந்தவளே ! பிட்டுவைத்த நிலாப்போன்ற நெற்றியுடையவளே ! வேல்போன்ற விழியுடையவளே ! உலகில் காமவிரகத்துன்பம் பெருகினால், கடல்சூழ்ந்த புவிக்குத் தலைமையனான சிராமலைச் சிவபிரான்போல் இதழ்செறிந்த எருக்கம்பூ, அற்பமான பூளைப்பூ, வெண்ணீறு ஆகியவற்றை மகிழ்வுடன் அணிந்து, பனைமடலாலான குதிரையும் ஏறிவருவர்.

**விளக்கம்** : எருக்கு: நல்லவும் தீயவும் அல்ல குவிஇணர்ப் , புல்லிலை எருக்கம் ஆயினும் உடையவை, கடவுள் பேணேம் என்னா " ( புறம் 106; 1- 3 ) பூளைப்பூ அற்பமானது : " பூளைப்பூவாம் பிறவி மயக்கம் கொள்ளேல் ", " ஒழிமடல்விறகு " :( புறம்29 : 14. உரை : " வீழ்ந்த பனங்கருக்காகின்ற விறகு " )

( 120 ) **அம்மடலேற்றினைத் தலைவன் தன்மேல்வைத்துச் சாற்றல்**

பிட்(டு)ஆசை கொண்டு பெருநீர் அடைத்த பிறைச்சடிலர்
நெட்டாசை கொண்டார் சிராமலை அன்ன நிறைஇழையீர்
பெட்டாசை யால்நான் சிவன்எனப் பூண்டு பெருமடலில்
மட்டாசை மிக்க நும(து)ஊர் வருவன்நும் மாண்விழிக்கே.

**குறிப்புரை** : பிட்டு ஆசை= வந்திசமைத்த பிட்டுஉண்ணும் ஆசை. பெருநீர்= வைகை வெள்ளம். சடிலம்= சடை. நெட்டாசை= மிக்க ஆசை. நிறை இழை= மிக்க அணிகலன். பெட்டு ஆசை= மிக்கவிருப்பமுடைய ஆசை. பூண்டு= வேடம் கொண்டு. பெருமடல்= பெரிய மடல்மாவில். மட்டு ஆசை= அளவான ஆசை. நும்மாண்விழிக்கே= மாட்சிமைப்பட்ட உமது தலையின்பொருட்டு.

**பொழிப்புரை** : வந்தியின் பிட்டினை உண்ண ஆசைப்பட்டு வைகை வெள்ளப்பெருக்கை அடைத்த

பிறைசூடிய சடையுடையவர், சிராமலை மேல் கொண்ட மிக்க ஆசையைப்போல் மிக்க அணிகலன் அணிந்தவரே ! உமது மாட்சிமைப்பட்ட விழிகள்காண, தலைவிமேல் மிக்கவிருப்பமுடைய ஆசையால் அளவான ஆசைமிக்க உமது ஊருக்குப் பெரிய மடல்மாஏறி வருவேன்.

( 121 ) **இதுவும் அது**

அரிக்(கு)அரி யார்எம் சிராமலை அண்ணல் அணிவரையீர்
பரிக்(கு)அரி தாய விர(கு)எற்(கு) அளித்தாரைப் பார்த்திடநான்
பரிக்கரி விட்டு மடல்பரி ஊர்ந்து பரிந்துகிழி
கரிக்(கு)அரி யாக்கொண்(டு)உம் ஊர்நாளை வந்திடக் காண்குவிரே.

**குறிப்புரை** : அரிக்கு அரியார்= திருமாலால் காணற்கு அரியவர். பரிக்கு அரிதாய= பாதுகாத்துக் கொள்வதற்கரிய. விரகு= விரகநோய் - காமநோய். பரிகரி விட்டு= குதிரை யானை ஆகியவைகளைக் கைவிட்டு. மடல் பரி= பனங்கருக்கினாலான குதிரை. பரிந்து= மிக்க ஆசையுடன். கிழி= தலைவியின் உருவம் தீட்டப்பெற்ற கொடி. கரிக்கு அரியாக் கொண்டு= சாட்சிக்கு வலிமைதருவதாகக் கொண்டு..

**பொழிப்புரை** : திருமாலினால் காண்பதற்கு அரியவராகிய எமது சிராமலை இறைவனின் அழகிய மலைக்கண் வாழ்பவரே ! பாதுகாத்துக்கொள்வதற்கு அரிய காமநோய் தந்த தலைவியைப் பார்க்க, நான் நாளை குதிரை யானையில் ஏறாமல் மிக்க ஆசையுடன் பனங்கருக்கினாலான குதிரைமேல் ஏறி, தலைவியின் உருவம் தீட்டப்பெற்ற கொடியினை எமது உறவின் சாட்சிக்கு வலிமை தருவதாக்க ஏந்தி, உமது ஊரில் வருவதைப் பார்ப்பீர்கள்.

( 122 ) **பாங்கி தலைமகள் அவயவத்து அருமை சாற்றல்**

நல்லார் இணக்(கு)இயை ராமநா ராயணன் நாடும்உயர்
வில்ஆர் சிராமலை நாதன் வரைநிகர் வீறுபுய
கல்லார் குழைவு நடுத்தோற்று மேய கனிஅமுதும்
எல்லாம் எழுதல்எங் ஙன்மடல் ஏறுதற்(கு) இங்(கு)உனக்கே.

**குறிப்புரை** : இணக்கு இயை= நட்பில் பொருந்திய. வில்= ஒளி. வரைநிகர் கல்ஆர் வீறுபுய= மலைபோன்ற வலிமையான பெருமைபொருந்திய தோள்களுடையவரே. நடுத் தோற்று குழவு= இடுப்பில் அமைந்த மென்மை. கனிமேய அமுது= கொவ்வைக்கனி இதழ்களில் பொருந்திய அமுதம். எழுதல் எங்ஙன்= கொடியில் எழுதுவது எப்படி - எழுத இயலாது.

**பொழிப்புரை** : நல்லவர் நட்பில் பொருந்திய ராமநாராயணன் விரும்பும் சிறந்த ஒளிபொருந்திய சிராமலை இறைவனது மலைஒத்த வலிமையுடன் பெருமையும் பொருந்திய தோள்களுடையவரே ! தலைவியின் இடுப்பில் அமைந்த மென்மை, கொவ்வைக்கனி இதழ்களில் பொருந்திய அமுதம் பிறவும் எல்லாம் நீ மடல்ஏறிப் பிடிக்கும் கொடியில் எங்ஙனம் எழுதுவாய் ? எழுத இயலாது.

( 123 ) **தலைவன் தன்னைத்தானே புகழ்தல்**

கூர்வேலர் நோக்கிட மாலாய எற்குக் குறைவருமோ .
நேர்வேன் இணைமலை யின்குழை வும்கனி நீளமுதும்
பார்வே தனைஅறத் தீட்டிச் சிராமலைப் பாவைமுலை
சேர்வேன் அவாந்தரம் இன்மந் திரமும்நான் சேர்குவனே.

**குறிப்புரை** : கூர்வேலர் நோக்கிட= கூர்மையான வேல்ஏந்திய முருகன் அருள. மால் ஆய எற்கு= தலைவியிடம் மயங்கிய எனக்கு. நேர்வேன்= அறிவேன். இணைமலை= இருமலைஒத்த முலைகள். கனி= கொவ்வைக்கனியாகிய இதழ்கள். அவாந்தரம்= வெறுவெளியாகிய இடுப்பு. இன் மந்தரம் அவாந்தரமும் சேர்வேன் என்க. மந்தரம்= மலையாகிய முலை. சேர்வேன்= பொருந்துவேன் - புணர்வேன்.

**பொழிப்புரை** : கூரிய வேலேந்திய முருகன் அருள, தலைவியிடம்மயங்கிய எனக்கு எக்குறையும் வராது. இரண்டு மலை ஒத்த முலைகளின் குழைவும், கொவ்வைக்கனி ஒத்த இதழின் மிக்க அமுதமும் என்மனவேதனை தீரத்தீட்டிச் சிராமலைத்தலைவியின் மலைகளாகிய முலைகளையும் வெறுவெளியாகிய இடுப்பினையும் அடைவேன்.

**இலக்கணக்குறிப்பு** : அவாந்தரம், மந்தரம் - உருவகங்கள்.

( 124 ) **பாங்கி அருளியல் கிளத்தல்.**

விண்ணைக் கடந்த சிராமலை அன்ன மிகுதகையே
எண்ணைக் கடந்த குடம்பையும் பார்ப்பும் எழில்குருகும்
பண்ணைக் குறிக்கும் தொனிஅன்றி லும்கெட பண்குறிஞ்சிப்
பெண்ணைக் குறித்துநெய் தற்பெண்ணை வெட்டீர் பெரும்பிழையே.

**குறிப்புரை** : எண்ணைக் கடந்த= அளவற்ற. குடம்பை= முட்டை. பார்ப்பு= குஞ்சு. எழில் குருகு= அழகிய பறவை. பண்ணைக்குறிக்கும் தொனி= இசையுடன் ஒலிக்கும் குரல். பண்குறிஞ்சிப் பெண்= மலைப்பகுதியில் தகுதிவாய்ந்தவள். நெய்தல்பெண்= நெய்தல் நிலத்துப் பனைமரம். வெட்டீர்= வெட்டாதீர்.

**பொழிப்புரை** : வானத்தையும் கடந்து உயர்ந்த சிராமலை ஒத்த மிக்க தகுதியுடையவரே ! பனைமரத்தை வெட்டினால் அதில்உள்ள அளவற்ற முட்டை, குஞ்சு, அழகிய பறவை, இசையுடன்

ஒலிக்கும் குரலுடைய அன்றில் பறவை முதலியன அழியுமாறு, தகுதிவாய்ந்த குறிஞ்சிப்பெண்ணின் பொருட்டு நெய்தல் நிலத்துப் பனைமரத்தை வெட்டாதீர். வெட்டுவது பெரும்பிழையாகும்.

**விளக்கம்** : ஒருத்திக்காக மிகப்பல உயிகளுக்குக் கேடு விளைவதால் வெட்டாதீர் என்றாள்.

( 125 ) **கொண்டுநிலை கூறல்**

கரும்பனைக் கைக்கிரி பின்வரு வேள்நிகர் காவலனே
கரும்பனைக் காய்ந்தருள் செய்தோன் சிராமலைக் கண்வளர்இன்
கரும்(பு)அன யார்நின் உளக்குறை தீராரேல் கண்டுபினம்
கரும்பனை மாமட லால் குறை தீர்ப்பீர் கருத்(து)உறவே.

**குறிப்புரை** : கொண்டுநிலை கூறல் = தலைவன் இறந்துபடாமல் தலைவியைத் தாங்கிக் கூறுதல். கரும் பனைக்கை= கரிய பனமரமொத்தகை - துதிக்கை. கிரி= மலையாகிய விநாயகர். கரும்பனை= கரும்பினை வில்லாக ஏந்திய மன்மதன். இன்கரும்பு அனையார்= இனிய கரும்பு ஒத்த சிவபிரான். பினம்= பிறகு. கரும்பனை மாமடல்= கரிய பனைமரத்தின் பெரிய கருக்குகள். குறை தீர்ப்பீர்= மடலேறித் தலைவியைக் கூடுங்கள். கருத்து உறவே= கருத்து நிறைவேற.

**பொழிப்புரை** : கரிய பனைமரம் ஒத்த கையினையுடைய மலைபோன்ற விநாயகரின் தம்பியாகிய முருகனை ஒத்த தலைவனே ! கரும்பினை வில்லாக ஏந்திய மன்மதனைச் சினந்தருளிய இறைவன் வாழும் சிராமலையில், இனிய கரும்புஒத்த பெருமான் உனது குறையினைத் தீர்க்காவிட்டால் அதனைப் பார்த்தபின் கரிய பனங்கருக்கால் ஆனபெரிய மடல்குதிரையால் உமது கருத்தை நிறைவேற்றிக் கொள்ளுங்கள்.

( 126 ) **தலைவி இளமைத்தன்மை பாங்கிதலைவற்கு உணர்த்தல்**

காரோகட்(டு) உற்றில மீனோ கள(வு)இனும் கற்றிலநல்
வாரோகட் டும்முலை தோன்றில பேதையும் மங்கையும்தன்
நேரோகட் டாத இவர்பொருட்(டு) என்னே நினைந்(து)உருகல்
சீரோகட் டாயம் சிராமலை அன்னவ செய்வதுவே.

**குறிப்புரை** : காரோ கட்டுஉற்றில= கரிய கூந்தல் கட்டவியலா நிலையின. மீனோ களவு இனும் கற்றில= கெண்டைமீன்களாகிய கண்கள் களவினைக் கற்கவில்லை. மங்கையும் தன்நேரோ= தலவி மங்கைப்பருவம் இல்லாதவள். கட்டாத= ஒவ்வாத. உருகல்= மனத்தில் நினைத்து உருகாதே. அன்னவ= ஒத்தவனே. கட்டாயம் செய்வது சீரோ = கட்டாயப்படுத்துவது சிறப்பன்று.

**பொழிப்புரை** : கரிய கூந்தல் கட்டிமுடிக்கவியலா நிலையின; கெண்டைமீன் ஒத்த கண்கள் களவினை இன்னும் கற்கவில்லை; வாரினால் கட்டுமளவு நன்முலைகள் இன்னும் தோன்றவில்லை; பேதைப்பருவமோ மங்கைப்பருவமோ இவளுக்கு ஒப்பாகமாட்டா. ஒப்பாகாத இவளுக்காக நினைந்து மனம் உருகுவது ஏன் ? சிராமலை போன்ற சிறப்புடையவனே ! கட்டாயப்படுத்துவது சிறப்பன்று.

**விளக்கம்** : காமம் அறியாப் பேதைப் பருவத்தினளோ, காமம் அறிந்த மங்கைப்பருவத்தினளோ அல்லள். காமம்பற்றி அறிந்தும் அறியாத பெதும்பைப் பருவத்தினள் என்றாள். காமம்பற்றி அறிந்தும் அறியாப் பெதும்பைப்பருவத்தாளை, " ஆடாத தோகை அலராத புண்டரிகம், பாடாத கோகிலம் பிள்ளைப் பசுங்கிள்ளை - சூடத் - தளிராத சோகம் சுடராத திங்கள்குழவி " என்று மூவருலா வருணிக்கும்.

( 127 ) **தலைவி வருத்திய வண்ணம் தலைவன் உரைத்தல்**

குளிர்நிலா வெங்கதி ராக் குறைசந்தனம் கூர்நெருப்பா
ஒளிர்நிலா வேல்கண் கொடுசெய் அணங்கோ உடன்உறின்நல்
தளிர்நிலாம் தன்மையும் எட்டில் சிராமலைத் தற்பரன்கைத்
துளிர்நிலாம் தீயும்ஆம் தையலோ பேதைஎன் சொல்லுவதே.

**குறிப்புரை** : வெங்கதிர்= வெப்பம்மிக்க ஞாயிறு. குறை= தேய்க்கப்பெறும். ஒளிர் நிலா= ஒளி நிலவும். கொடு= கொடுமை. அணங்கு= வருத்தம். உடன் உறில்= ஒன்றுசேர்ந்தால். நல்தளிர் நிலாம் தன்மை= நன்முறையில் பெருகிவளரும் தன்மை. எட்டில்= பலப்படுமானால். கைத் துளிர்நிலாம் தீயும் ஆம் தையல்= கையில் கொழுந்துவிடும் தீஆவது போன்றதாகும் பெண்

**பொழிப்புரை** : குளிர்ச்சிபொருந்திய நிலா வெப்பம்மிக்க ஞாயிறாக, தேய்க்கப்பெறும் சந்தனம் மிக்க நெருப்பாக, ஒளிநிலவும்வேல்போன்ற கண்களால் கொடுமையும் வருத்தமும் ஒன்றுசேர்ந்து நன்முறையில் பெருகிவளர்ந்து பலப்படுமானால், சிராமலையில் பிறர்ஒருவர் தலைவனின்றித் தானே தலைவனாகிய சிவபிரானின் கையில்கொழுந்துவிடும் தீஆவதுபோன்ற தலைவியா பேதைப்பருவத்தினள் ? தலைவியைப் பற்றி என்னவென்று கூறுவது ! ( இதன்மூலம் காமமறிந்த மங்கைப்பருவத்தினளே தலைவி என்றான் )

( 128 ) **பாங்கி தலைமகள் செவ்வி அருமை செப்பல்**

முல்லையும் நீலமும் கொய்யாள் சுனையிடை மூழ்கிஎழாள்
அல்லையும் வென்ற குழலாள் மலர்த்தார் அணிந்துகொளாள்
செல்லையும் கீண்(டு)எழு துய்ய சிராமலைத் தேமொழிக்(கு)எங்(கு)
ஒல்லையும் எல்லையில் மையல் உரைப்பது கொற்றவரே.

**குறிப்புரை** : அல்= இருள். மலர்த்தார்= மலர்மாலை. செல்லையும்கீண்டு எழு= மேகத்தையும் பிளந்து மேல் உயர்ந்த. ஒல்லை= விரைந்து. எல்லையில்= அளவில்லாத.

**பொழிப்புரை** : மேகத்தையும் பிளந்துகொண்டு மேலே உயர்ந்த சிராமலைத் தேன்மொழியாகிய தலைவி; முல்லைமலர், நீலமலர் ஆகியன கொய்வதில்லை, சுனையில் நீராடுவதும் இல்லை; இருளயும் வென்றகரிய கூந்தலுடைய அவள் மலர்மாலை சூடிக்கொல்வதுமில்லை. இந்நிலையில் கொற்றவரே ! உமது அளவில்லாத மையலை எப்படி விரைந்து கூறுவது ? இயலாது.

**விளக்கம்** : மலர்கொய்தல் முதலியவற்றை விரைந்துமுடித்துச் சென்றுவிடுவதால் உமது அளவற்ற மையலை விரைந்து கூறவும் நேரமில்லை என்றாள்.

( 129 ) **இதுவும் அது**

ஆடார் கழங்(கு)ஊசல் ஆடார் சுனையில் அணிபதங்கள்
பாடார் சிராமலை அண்ணல் கழலினை பண்முனிபோல்
கூடார் குழுவிய ஆயத்தைச் சூடார் குணமலர்த்தாள்
நாடாள் அரசநான் எங்ஙன் மயிலிற்கு நவில்வதுவே.

**குறிப்புரை** : அணிபதங்கள்= பாடலின் உறுப்புகளாகிய அழகியபதங்கள். பண்முனி போல்= பண்ணினை வெறுத்தவள் போல். குழுவிய= கூடிய. ஆயம்= தோழியர். குண மலர்த்தாள்= நல்ல மலர்களைக்காம்புடன். மயில்= மயில்போன்ற தலைவி.

**பொழிப்புரை** : கழங்கு ஊஞ்சல் ஆடார்; சினையில் நீராடும்போது சிராமலை இறைவனின் திருவடிகள்பற்றிய பாடலின் அழகிய பதங்கள் பாடார்; வந்துகூடிய தோழியர் பாடலை வெறுத்தவள் போல் வந்துசேரார்; நல்ல மலர்களைக் காம்புடன் சூடமாட்டார். நாடாளும் அரசரே ! இந்நிலையில் மயில்போன்ற தலைவிக்கு உன் மையலை எப்படிக் கூறுவது ?

( 130 ) **தலைவன் செவ்விஎளிமை செப்பல்**

இக்குக்கு மிக்க மொழிக்(கு)என் வரவை இயம்புவையேல்
மிக்குக்கொண்(டு) ஆக்கிய பா(கு)எனத் தன்செவி மேவமடுத்(து)
அக்குக்கொள் மாலைச் சிராமலை யான்வரை ஆயிழையே
புக்குக்கொண்(டு) ஆர்கலி யோடும் உவந்து பொருந்துவரே.

**குறிப்புரை** : இக்கு= கரும்பு. மடுத்து= கேட்டு. அக்குக்கொள் மாலை= எலும்புமாலை / உருத்திராக்க மாலை. புக்குக் கொண்டு= ஈடுபாடு கொண்டு. ஆர்கலி= மிக்க மகிழ்ச்சி. பொருந்துவர்= வருவார்.

**பொழிப்புரை** : உருத்திராக்கமாலை அணிந்த தாயுமானவனது மலைக்கண் வாழ்கிறவளே ! கரும்பினும் இனிக்கும் சொற்கள் பேசும் தலைவியிடம் நான் வந்துள்ளதைக் கூறினால், மிக்க சுவையுடன் காய்ச்சிய வெல்லப்பாகாகக் கேட்டு, ஈடுபாடு கொண்டு, மிக்க மகிழ்ச்சியுடன் இங்கு வந்துசேர்வாள்.

( 131 ) **பாங்கி என்னை மறைத்தபின் எளிதுஎன நகுதல்**

சேல்இருக்(கு) ஒண்ணீர்ச் சிராமலை அன்ன செறிமுலையாள்
பால்இருக் கும்எனை யன்றிநீர் கூடிய பான்மையிது
மேல் இருக் கும்தாய்க்குச் சூல்ஒளித் திட்டதும் மேவியதாம்
தோல்இருக் கச்சுளை உண்டதும் போலாம் தொழில்இதுவே.

**குறிப்புரை** : சேல்= கெண்டைமீன். செறி= பருத்த. பால் இருக்கும்= கூடவே இருக்கும். தாய்மேல் இருக்கும்= தாயிடம் இருக்கும். மேவியதாம்= உடன்பொருந்திய. தொழில்= செயல்.

**பொழிப்புரை** : கெண்டைமீன்கள் வாழும் நன்னீருடைய சிராமலை போன்று பருத்த முலைகளுடைய தலைவியின் கூடவே இருக்கும் நான்அறியாமல் அவளை நீர் கூடிய இத்தன்மை, தாய் தன்னிடம் உள்ள சூலினைத் தனக்குத்தெரியாமல் மறைத்ததும், உடன்பொருந்திய தோல் அறியாதிருக்கச் உள்ளேஉள்ள சுளையை உண்டதும் ஒத்தது போன்றசெயலாகும்.

**விளக்கம்** : தாய் அறியாச் சூல், தோலிருக்கச் சுளையுண்டல் என்ற சொலவடைகள் காண்க.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் பல்பொருள் உவமையணியாகும்.

( 132 ) **அந்நகை பொறாஅது அவன்புலம்பல்**

சிரல்சுத்தி மீனுக்கு நீர்ச்சுனை வீழும் சிரகிரிவாய்
அரல்சுத்தி ஆழி புகஎழில் கொள்குழல் ஆய்விழியே
விரல்சுத்திட்(டு) ஓங்குமம் மர்க்கு நலிவுஎற்கு மெல்லியலே
விரல்சுத்தி லேஉரல் வீழ்ந்ததா நின்னகை மேவியதே.

**குறிப்புரை** : சிரல்= சிச்சிலிப்பறவை - மீன்கொத்திப் பறவை. இரல் மீனுக்குச் சுத்தி நீர்ச்சுனை வீழும். அரல்= அரல்மணல். ஆழி= கரை. விழி= ஞானம். விரல் - விறல்= பெருமை. மம்மர்= அறியாமை. எற்கு= ஏன். விரல் சுத்திலே= நகச்சுத்தி. உரல் வீழ்ந்ததா=உரல் விழுந்தது போல். நின்நகை மேவியது= உனது கேலிப்பேச்சு என்னைப் பொருந்தியது.

**பொழிப்புரை** : மீன்கொத்திப் பறவை மீனுக்காகச் சுனையைச் சுற்றிவந்து மீனினைப்பிடிக்கச் சுனையில் பாயும் சிராமலைக்கண்ணே, கரைசேரச் சுற்றும் அரல்மணல் போன்ற அழகிய கூந்தலும். ஆராயும் ஞானமும் கொண்டவளே ! உனக்குநீயே பெருமைப்பட்டுக்கொண்டு மிகும் அறியாமையால்

வருந்துவது ஏன் ? மெல்லியலே ! உனது கேலிப்பேச்சு நகச்சுத்தியுடைய விரலில் உரல்விழுந்தது போல் என்னைப் பொருந்தியது - மிகவருத்துகிறது.

**விளக்கம்** : யாரும் அறியாமல் அல்லவா இயற்கைப் புணர்ச்சி அமையும். இது உனக்குத் தெரியவில்லையே என்பதால் அவளின் மம்மரையும், ஆயும் ஞானமின்மையையும் குறிக்க, " ஓங்கும் மம்மர்க்கு நலிவு எற்கு ? என்றதுடன், கேலியாக " ஆய் விழியே " என்றும் குறித்தான்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

( 133 ) **பாங்கி தலைவனைத் தேற்றல்**

கவிக்கொடி நாட்டிய ராமநா ராயணன் காதல்உறும்
புவிக்(கு)ஒரு ரத்ன முடியாம் சிராமலைப் பொன்அனையாள்
நவிக்(கு)ஒரு தீங்(கு)இழை கண்ணியர் கண்போல் நலம்செயும்நீ
தவிக்கொளல் நான்அவர் நல்லுயிர் நின்னுடன் சார்த்துவனே.

**குறிப்புரை** : கவிக்கொடி= அனுமக்கொடி / கவிதையில்கொடி. நவிக்கு= மான்கன்று. ஒரு தீங்கு= குற்றம் - தோல்வி. கண்ணியர் கண்போல்= கண்களுடைய தலைவியின் கண்போல். தவிக்கொளல்= மனம் தளராதே. சேர்த்துவன்= சேர்த்துவைப்பேன்.

**பொழிப்புரை** : கவிதையில் கொடிநாட்டிய ராமநாராயணன் பத்திமைமிக்க உலகிற்கு, ஒப்பற்ற இரத்தினத் திருமுடிபோன்ற சிராமலையில், மான்கன்றின் கண்களைத் தோல்வியுறச்செய்த தலைவிக்கு, கண்போல் நன்மைசெய்யும் நீ மனம் தளராதே. நான் அவளது நல்லுயிரை உன்னை சேர்த்க்துவைப்பேன்.

( 134 ) **பாங்கி கையுறைஏற்றல்**

இராமநா ராயணன் போற்றும் சிராமலை ஈச்சுரனின்
இராமவா மத்தொளிர் பாவையை ஈன்மலை ஈன்தழையால்
அராமரா வேல்விழி அல்குல்(கு)அணியாய் அடைஅடைய
பிராமம்மூட் டித்தோகை தோளில் உமையான் பிணிக்குவனே.

**குறிப்புரை** : இராமவாமம்= அழகிய இடப்பாகம். பாவை= உமையம்மை. ஈன்மலை= ஈன்றமலை. ஈன்தழை= ஈன்ற தழை அரா மரா அல்குல்= பாம்புகட்கு அரசனை ஒத்த அல்குல். அணியாய் அடை அடைய= அணிகலனாக ஆதரவு பெற. பிராமம் மூட்டி= மகிழ்ச்சியுண்டாக்கி. பிணிக்குவன்= சேர்ப்பேன்.

**பொழிப்புரை** : தலைவனே ! ராமநாராயணன் போற்றுகிற சிராமலை இறைவனின் அழகிய இடதுபாகத்தில் ஒளிரும் பார்வதி தேவியை ஈன்றமலை தந்த இத்தழையை, தலைவியின் பாம்புகட்கு அரசனாகிய ஆதிசேடனின் படம்போன்ற அல்குலுக்கு அணிகலனாக்கி, இக்கையுறையினை அவள் ஆதரவுபெறச்செய்து, மகிழ்ச்சியுண்டாக்கி அவள் தோளில் உன்னைச் சேர்ப்பேன்.

**இலக்கணக்குறிப்பு** : தழையால்- உருபுமயக்கம்.

( 135 ) **கிழவோன் ஆற்றல்**

கற்றிடும் கால்துன்பாய் இன்பம் பினம்தரும் கல்விஎனச்
சொற்றிடும் கால்எற்(கு) அருள்இலார் என்(று)உரை சொற்(று)அருள்பின்
மற்(று)இடும் காரிகை சஞ்சீவி என்ன மரு(வு)உயிரைக்
கொற்றிடும் மம்மர்க்கு வாய்த்தார் சிராமலைக் கூர்ங்கொடியே.

**குறிப்புரை** : கற்றிடும்கால்= கற்கும்போது. பினம்= பிறகு. எற்கு= எனக்கு. என்று உரைசொற்று= என்னுமாறு சொற்களைக் கூறி. பின் அருள் இடும்= பிறகு அருளுடன் கூறும். மருவு உயிரை= பொருந்திய உயிரை. சஞ்சீவி என்ன= உயிர்காக்கும் சஞ்சீவி என்னுமாறு. கொற்றிடும்= கொல்லும். மம்மர்க்கு= துன்பத்திற்கு. சிராமலைக் கொடி காரிகை, மருவு உயிரைக் கொற்றிடும் மம்மர்க்குக் கூர்சஞ்சீவி என்ன வாய்த்தார் என்று கூட்டுக.

**பொழிப்புரை** : கல்வி, கற்கும்போது துன்பமாயும், பின்னர் இன்பம்தரும் என்பதுபோல், இவள் என்னிடம் சொல்லும்போது என்மேல் அருள் இல்லாதவர்போல் சொல்லி, பின்னர் அருளுடன்கூறும் சிராமலை வாழ்மிக்க கொடிபோன்ற இவள், என்னுடலில் பொருந்திய உயிரைக்கொல்லும் துன்பத்துக்கு, அதனைப் போக்கும் மிக்க சஞ்சீவிபோல் வாய்த்தார்.

**இலக்கணக்குறிப்பு** : பினம் - பின்னம் என்றதன் இடைக்குறை. கொன்றிம் என்பது,கொற்றிடும் என்று வந்தது - எதுகை நோக்கிய செய்யுள் விகாரம். இச்செய்யுள் உவமையணி.

( 136 ) **இறைவன் தனக்குக் குறைநேர் பாங்கி, இறைவிக்கு அவன்குறை உணர்த்தல்**

வேளாளர் தம்குல ராமநா ராயணன் மிக்(கு)உரைக்கும்
வேளாள ரைத்தரும் செய்ய சிராமலை வித்தகர்தாள்
கோளாளர் நல்லர் தழைகொண்டு மான்கரி கூர்அரியைத்
தாளாளர் நின்றுரைத் தார்அவர் எண்ணம்என் தாழ்குழலே.

**குறிப்புரை** : வேளாளரைத்தரும்= உதவுகின்றவரைத் தரும். செய்ய= சிறந்த. வித்தகர்= ஞானி. கோளாளர்= மனத்தில் கொண்டவர். மான் கூர்கரி= மகத்துவம் வாய்ந்த மிக்கசாட்சியாக. அரி= சூரியன். தாளாளர்= முயற்சியுடைய தலைவர். என்= என்ன.

**பொழிப்புரை** : வேளாளர் குலத்தவராகிய ராநாராயணன் மிகுதியாகப் புகழும் உதவிசெய்வோரைத் தரும் சிறந்த சிராமலை ஞானியின் திருவடிகளை மனத்தில் கொண்டவரும், நல்லவரும் ஆகியவர் தழையினைக் கையுறையாக ஏந்தி, மகத்துவம் வாய்ந்த மிக்க சாட்சியாகச் சூரியனை வைத்து, முயற்சியுடையவராய் வந்து கூறினார். தாழ்குழலே ! அவரது எண்ணம் என்ன ?

(137 ) **இறைவி அறியாள் போன்று குறியாள் கூறல்**

தண்ஓங்கு நற்சுனை மேவும் சிரகிரித் தற்பரனின்
எண்ஓங்கு ராமநா ராயணக் கொண்டல் இனிதுபொழி
பண்ஓங்கு பொன்பெறு பாவலர் போலப் பயில்களிப்பில்
கண்ஓங்கு மான்கணம் மேவிடல் பார்நீ கனங்குழையே.

**குறிப்புரை** : தண்= குளிர்ச்சி. ராம நாராயணக் கொண்டல்= ராம நாராயணன் ஆகிய மழைமேகம், பண் ஓங்கு= தகுதி மிக்க. கண் ஓங்கு= இடமெலாம் மிகப்பரவிய.

**பொழிப்புரை** : குளிர்ச்சி மிக்க நல்ல சுனைகள் பொருந்திய சிராமலை இறைவனின் எண்ணம்சிறந்த ராமநாராயணன் ஆகிய மழைமேகம், தகுதிமிக்க பாவலர்களுக்குப் பொன்னை இனிதுபொழிய, அதனைப்பெறும் மகிழ்ச்சிமிக்க பாவலர் போல இடமெலாம் பரவிய மான் கூட்டத்தைக் கனமானகாதணி அணிந்தவளே ! நீ பார்.

**இலக்கணக்குறிப்பு** : ராமநாராயணக் கொண்டல் - உருவகவணி. இனிதுபொழி ............ பார் நீ வந்த உவமையணி.

( 138 ) **பாங்கி இறையோற் கண்டமை பகர்தல்.**

மன்றுள் நடிக்கும் சிராமலை நாதன் வரைமயிலே
அன்றும் குறுகினர் இன்றும் குழையோ(டு) அரிகரிமான்
துன்றும் புனம்வந்த தோஎன்பர் பொய்யுரை சொல்வர்அல்லர்
நன்றுன் முலைகண் கரிமான் இவைதேடு நன்மையரே.

**குறிப்புரை** : குறுகினர்= வந்தார். அரி கரி மான்= சிங்கம் யானை மான். துன்றும்= செறிந்த,

**பொழிப்புரை** : அம்பலத்தில் திருக்கூத்தியற்றும் சிறாமலை இறைவனது மலைக்கண் வாழும் மயில்போன்றவளே ! முன்பும் வந்த ஒருவர், இன்றும் தழையுடன் வந்து செறிந்த இத்தினைப்புனத்துக்குச் சிங்கம் யானை மான் வந்ததோ என்று கேட்கும்அவர் பொய்கூறார். சிறந்த உனது சிங்கத்தின் இடைபோல் இடுப்பு, முலையாகிய யானை,கண் ஆகிய மான் ஆகியவற்றைத் தேடிவந்து நன்மைசெய்கிறவராவார்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் முறைநிரல் நிறைஅணி.

(139 ) **பாங்கியைத் தலைவி மறைத்தல்**

நலப்படு மா(று)எண் சிராமலை நாதர் நளிர்பொழில்வாய்
பலப்படு மாஇனம் நாடிக் குழைக்கண்ணி பற்றிஉனைத்
தலைப்படு மான்கரி கேட்டார் ஒருவர் தனைஎனைநீ
சொலப்படு மோநம் குலக்(கு)ஒவா இச்சொல் சுரிகுழலே.

**குறிப்புரை** : பாங்கியை= பாங்கிக்கு. நலப்படுமாறு= நன்மைஉண்டாகுமாறு. எண்= நினைக்கும். பலப்படு= பலவகையில் வந்த. மா இனம்= விலங்கினம். நாடி= தேடி. குழைக்கண்ணி= தழைமாலை. தலைப்படு= வந்த. ஒருவர் தனை= ஒருவரைப்பற்றி. ஒவ்வா= பொருந்தாது.

**பொழிப்புரை** : நன்மை உண்டாகுமாறு நினைக்கும் சிராமலை இறைவனது குளிர்ந்த சோலையில், பலவகையில் வந்த விலங்குகளைத் தேடி, தழைமாலை ஏந்தி, உன்னிடம் அங்குவந்த மான் யானைபற்றி ஒருவர் கேட்டதுடன் தொடர்புபடுத்தி என்னைச் சொல்லலாமா ? சுருண்ட கூந்தலுடையவளே! உன்சொல் நம்குலத்துக்குப் பொருந்தாது.

( 140 ) **பாங்கி என்னை மறைப்பது என் எனத்தழால்**

கத்(து)ஆ எனமறை கத்தும் பெருமான் கனிவினினே
சித்(து)ஆர் எழில்சீர் சிராமலை அன்ன திருமுலையாய்
எத்தால் உனதாள் பணிஎற்(கு) இதனை இதுவரைம
றைத்தாய் உயிர்என மே(வு)என் இறைவிந றைக்குழலே.

**குறிப்புரை** : தழால்= தழுவிக்கொள்ளுதல். கத்து ஆ= கதறும் பசு. மறைகத்து= வேதங்கள் ஓலமிட்டு அலறும். இன்னே= இப்பொழுது. சித்து ஆர்= வேள்விகள் மிக்க. திரு= பொலிவு. எத்தால்= எதனால். தாள் பணி= உனக்குப் பணிவிடை செய்யும். எற்கு= எனக்கு. எத்தால் இதனை இதுவரை மறைத்தாய். நறைக்குழல்= தேன்பொருந்திய மலர்கள் சூடிய கூந்தல்.

**பொழிப்புரை** : கதறும் பசுவென மறைகள் ஓலமிட்டு அலறும் தாயுமானவனின் கனிவினால் வேள்விகள் மிகநடக்கும் அழகிய சிறப்புடைய சிராமலை ஒத்த பொலிவுசான்ற முலைகளுடையவளே ! என்னுயிராகப் பொருந்திய தலைவியே ! தேன்பொருந்திய மலர்கள் சூடிய கூந்தலுடையவளே ! உனக்குப் பணிவிடை செய்யும் எனக்குக் கூறாமல் இப்பொழுது இதனை ஏன் மறைத்தாய் ?

**விளக்கம்** : வேதங்கள் ஓலமிட்டு அழைத்தும் இறைவனை மறைகள் காணவியலாமையால் " மறை கத்தும் " என்றார். " கணம் சடைஎன்று உருவேற்றிக் கண்மூடிக் கதறுவரே " என்பார் மனோன்மணீயம் சுந்தரனார். " வேதங்கள், ஐயா என ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியன் " - சிவபுராணம்.

( 141 ) **பாங்கி கையுறை புகழ்தல்**

வடவால் இலைத்துயில் மால்அணி வண்துள வத்தழையும்
தடவான் சிராமலை யார்அணி கூவிளத் தண்தளிரும்
கடவான் களிறுஅரி சொல்இவர் கைத்தளிர் காண்கவின்பெற
றிடவார் அணிஉன் முலைக்(கு)அர சின்நிலைக்(கு) ஏற்றதுவே.

**குறிப்புரை** : வட வால் இலை= ஆலமரத்தின் தூய இலை. துளவம்= துளசி. தடவான்= பெரிய வான் அளவு உயரமான. கூவிளம்= வில்வம். வான் கட களிறு= வானுலகிலுள்ள மதயானை- ஐராவதம். அரி= இந்திரன். சொல் இவர்= புகழும். கைத்தளிர்= ஆற்றல் வாய்ந்த கற்பகத்தளிர். கவின்பெற்றிட= அழகுபெற. அரசின்= தலைமையுடைய.

**பொழிப்புரை** : ஆலமரத்தின் தூய இலையில் துயிலும் திருமால் அணியும் வளமான துளசித் தழையும், பெரிய வானளவு உயரமான சிராமலை இறைவன் அணியும் வில்வத் தளிரும், வானுலக மதயானை - ஐராவதம் - ஏறும் இந்திரன் புகழும் ஆற்றல்வாய்ந்த கற்பகத்தளிரும் அழகுபெற, வாரணிந்த உன் முலையின் தலைமைக்கு ஏற்றது இத்தழை.

( 142 ) **தோழி கிழவோன் துயர்நிலை கிளத்தல்**

பொற்(பு)ஆரும் தாயுமா னப்பெரு மான்பொழில் புக்கஅவர்
அற்(பு)ஆரும் மந்தி களிக்கக் கடுவன் அணிநறவைக்
கல்பாரி னின்(று)எடுத்(து) ஊட்டிக் களிக்கும் கலவிகண்டு
வெற்(பு)ஆர் இளமுலை யாய்எனைப் பார்த்(து)உள் மெலிந்தனரே.

**குறிப்புரை** : பொற்பு= பொலிவு. புக்க= வந்து புகுந்த. அற்பு= அன்பு. மந்தி= பெண்குரங்கு. கடுவன்= ஆண்குரங்கு. அணிநறவு= சிறந்த தேன். கல்பார்= மலைப்பாறை. கலவி களிக்கும்= புணர்ச்சியில் மகிழும். உள் மெலிந்தனர்= மனம் வருந்தினார்.

**பொழிப்புரை** : மலைபோன்ற இளமுலையுடையவளே ! அருள்தரு தாயுமான பெருமானின் பொலிவு பொருந்திய சோலைக்கு வந்து புகுந்த தலைவர், சிறந்த தேனை மலைப்பாறையில் இருந்து எடுத்துக் கடுவன் தனதுஅன்புமிக்க தன்மந்திக்கு ஊட்டிப்புணர்ச்சியில் மகிழ்வதைக் கண்டு, என்னையும் பார்த்து மனம் வருந்தினார்.

**விளக்கம்** : கடுவன் மந்தி செயலயும் பாங்கியையும் பார்த்ததன் குறிப்பு, இவ்வன்பு எனக்கு வாய்க்கவில்லையே, வாய்க்குமறு செய் என்பதாகும்.

( 143 ) **மறுத்தற்கு அருமைமாட்டல்**

அடுத்(து)அ டுத்(து) இன்தழை யோடும் சிராமலை ஆர்ந்(து)அலுத்தார்.
எடுத்(து)அடுத்து அம்மா மரம்இலை ஆயின வெற்(பு)உறவா
விடுத்(து)அடுத்(து) ஏகவுரைத்(து) என்னுள் பொய்யும் மிகஒழிந்த
தொடுத்(து)அடுத் தேஅவர் வந்தால் மறைவன்நான் தோகையரே.

**குறிப்புரை** : அடுத்து அடுத்து= தொடர்ந்து. ஆர்ந்து= பொருந்தி - வந்து. அடுத்து எடுத்து= தொடர்ந்து பறித்ததால். அம் மா மரம்= அந்தப் பெரிய மரம். இலை ஆயின= தழைகள் தீர்ந்தன. வெற்பு உறவா விடுத்து= மலைக்குவரும் பாதையை விட்டு. ஏக உரைத்து= வேறிடம் செல்லச் சொல்லி. மிகப்பொய்யும் ஒழிந்த= மிக்க பொய்சொல்லியும் தீர்ந்தன. அடுத்துத் தொடுத்து= மேலும் தொடர்ந்து. நான் மறைவன்= அவர் காணமுடியாதவாறு நான் ஒளிந்துகொள்வேன்.

**பொழிப்புரை** : தலைவர், தொடர்ந்து இனிய தழையுடன் சிராமலைக்கு வந்து அலுத்தார். தொடர்ந்து பறித்ததால் அந்த அழகிய மரத்தின் இலைகளும்தீர்ந்தன. மலைக்குவரும் பாதையை விட்டுத் தழைக்கு வேறிடம் செல்லுமாறு என்மனதாரச் சொன்ன பொய்களும் தீர்ந்துவிட்டன. ( மேலும்பொய்சொல்ல வாய்ப்பில்லை. ) மேலும் தொடர்ந்து அவர் வந்தால் மயில்போன்றவளே ! அவர் காணமுடியாதவாறு ஒளிந்துகொள்வேன்.

( 144 ) **தலைவன் குறிப்பு வேறாக நெறிப்படக் கூறல்**

பாலத்தி லேவிழி வைத்த சிராமலைப் பண்ணவன்இஞ்
ஞாலத்தி லேவந்த(து) என்ன நம(து)ஊர் நயந்துவஞ்சித்
தாலத்தி லேவரு வாரோ பிறிதோ தளருமம்மர்
ஆலத்தி கைப்பிலே வெதுப்பிலே சென்றார் அறி(வு)அரிதே.

**குறிப்புரை** : பாலம்= நெற்றி. பண்ணவன்= இறைவன். இஞ்ஞாலம்= இவ்வுலகம். வஞ்சி= பெண். தாலம்= பனங்கருகில் - பனங்கருக்காலான குதிரை - மடல். மம்மர் தளரும்= துன்பத்தால் மனம் சோர்வார். ஆலம் திகைப்பு= நஞ்சுண்டதுபோன்ற மயக்கம். வெதுப்பு= வாட்டம். அறிவு அரிது= அறிந்துகொள்ளல் இயலாது.

**பொழிப்புரை** : நெற்றியில் கண்ணுடைய சிராமலை இறைவன் இவ்வுலகிற்கு வந்ததுபோல் நமது ஊரை விரும்பித் தலைவர்பெண்ணுக்காகப் பனங்கருக்கினாலான குதிரைமேல் வருவாரோ என்னவோ. துன்பத்தால் மனம் சோர்வார். நஞ்சுண்டது போன்ற மயக்கமுடன் வாட்டத்துடன் சென்றார். அவர்நினைவை என்னால் அறிந்துகொள்ளல் இயலாது.

**இலக்கணக்குறிப்பு** : தாலம் - கருவிஆகுபெயர்.

( 145 ) **தோழி தலைவியை முனிதல்**

தீதைத் தவிர்க்கும் சிராமலை யான்வரைத் தீங்குயிலே
ஈதைச் செலுமுன் உயிரனை யார்பால் இனிஉரைப்பாய்
வாதைக்(கு) ஒருசொல்லாம் என்சொல் பொறுத்தருள் மாநிலத்தில்
பேதைக்(கு) எளியார்க்(கு) இரங்கல் பெருமை பெரியவர்க்கே.

**குறிப்புரை** : ஈதைச் செலுமுன்= இவ்வாறு செல்லுமுன் - நடக்குமுன். வாதை = அளவற்ற வருத்தம். பேதை= அறிவில்லாதவர். எளியார்= அற்பர். பெரியவர்க்குப் பெருமை.

**பொழிப்புரை** : வரவிருக்கும் தீங்கினை விலக்கும் இறைவனது சிராமலை வாழ் இனிய குயில் ஒத்தவளே ! இவ்வாறு தலைவன் செல்லுமுன் - மடலேறுமுன் - உனது உயிரொத்தவனிடம் உன்மனத்தை இனிதே கூறிவிடு. அளவற்ற துன்பம்தரும் ஒருசொல்லாகிய என்சொல்லைப் பொறுத்துக்கொள். அறிவில்லாதவர்க்கும், அற்பர்க்கும் மனம் இரங்கிக் கூறுதல் உலகில் பெரியவர்களுக்குப் பெருமைதருவதாகும். ( எனவே உனக்கு விவரம் கூறினேன் என்பது குறிப்பு. )

( 146 ) **தலைவி பாங்கியை முனிதல்**

ஆண்மைக்(கு) ஒருவர் புனத்திடை வந்தால் அதிலிருந்(து)உன்
கேண்மைக்(கு) இடையூ(று)உண் டாமோ பழமை கிழமையன்றோ
சேண்மைப் படியும் சிராமலை நாதன் செழும்சிலம்பில்
நீண்மைப் படிகண்ணி நீஎன் நினைந்தோ நிகழ்த்துவதே.

**குறிப்புரை** : ஒருவர்= சிறந்தவர். அதிலிருந்து= அதனால். கேண்மை= நட்புரிமை. பழமை கிழமையன்றோ= பண்டுமுதலான நட்புரிமையல்லவா. சேண் மைப்படியும்= ஆகாயத்தளவு மேகம் படியும். மைப்படி நீள் கண்ணி= மைதீட்டிய நீண்ட கண்ணுடையவளே. என்நினைந்தோ நீ நிகழ்த்துவது= என்ன நினைத்து நீ கூறுகிறாய்

**பொழிப்புரை** : வானளவு மேகம் படியும் சிராமலையில், ஆண்மையில் சிறந்த ஒருவர் தினைக்கொல்லைக்கு வந்தால், அதனால் உன்னுடனான நட்புக்கு இடையூறு வருமா ? நம்மிடையுள்ளது பண்டுமுதலான நட்புரிமையல்லவா ? மைதீட்டப்பெற்ற நீண்ட கண்களுடையவளே ! என்ன நினைத்து நீ கூறுகிறாய் ?

( 147 ) **தலைவி கையுறை ஏற்றல்**

தழைஎடுப் பின்ஊர் அலர்எடுக் கும்கூர் தழைவிடுப்பின்
விழையெடுத் தார்அங்காய் புல்எடுக் கும்காண் வியன்செவியில்
குழைஎடுத்(து) ஆடும்சிராமலை நாதர் குளிர்வரையுன்
கழைஎடுத் தாலென் கரக்குழைக்(கு) என்கை கடுகியதே.

**குறிப்புரை** : அலர் எடுக்கும்= பழிதூற்றும். கூர்தழை= மிகச்சிறந்த தழை. விழை எடுத்தார்= விரும்பி ஏற்றவர். அங்காய்= வாய்திறந்து. புல் எடுக்கும்= அற்பமாகப் பேசும். வியன்= பெருமை. குழை= குண்டலம். கழைஎடுத்தால்= கரும்புபோன்ற சொல்லை ஏற்றால். என்= என்னதவறு. கரக்குழைக்கு= உன்கையிலுள்ள தழைக்கு. கடுகியது=பெற விரைந்தது.

**பொழிப்புரை** : தலைவன் தந்த தழையை உன்னிடம் பெற்றால் ஊரவர் பழிதூற்றுவர். இத்தழையை வாங்காவிடில் என்னை விரும்பி ஏற்றவர்வாய், திறந்து அற்பமாகப் பேசும்.பெருமைபொருந்திய செவியில் குண்டலம் ஆடும் சிராமலை இறைவனது குளிர்ந்த மலைக்கண் உன்கரும்புச் சொல்லை ஏற்றால் என்ன தவறு ? எனவே உன்கையிலுள்ள தழையைப் பெற என்கை விரைந்தது.

( 147 ) **இறைவி கையுறை ஏற்றமை பாங்கி தலைவற்கு உணர்த்தல்**

போந்(து)அளி பாடும் சிராமலை யன்ன புயத்தவநின்
மாந்தளி ரைமா வடுவில் அமுதம் வளர்குடத்தில்
காந்(து)அளி சார்கம லத்தில் பொலந்தேரில் காண்தளிரில்
காந்(து)அளி யுற்(று)அமைத் தாள்நின் தழூஉம்அந்தத் தன்மையினே.

**குறிப்புரை** : அளி போந்து= வண்டுகள் வந்து. புயத்தவ= தோள்களுடையவனே. மாவடுவில்= மாவடுப்போன்ற கண்களில். அமுதம்வளர் குடத்தில்= இனிமையூறும் முலைகளில். காந்து அளிசார்= ஒளிரும் குளிர்ச்சிபொருந்திய. கமலத்தில்= தாமரையாகிய முகத்தில். பொலந்தேரில்= பொலிவு உடைய அல்குலில். தளிரில் காந்து அளியுற்று= தளிரில் ஒளிரும் அன்புகொண்டு. அமைத்தாள்= தழுவிக்கொண்டாள். நின்தழூஉம் அத்தன்மையின்= உன்னைத்தழுவிக்கொள்ளும் அத்தன்மைபோல்.

**பொழிப்புரை** : வண்டுகள் வந்து முரலும் சிராமலை ஒத்த தோள்களுடையவனே ! உன்மாந்தளிரைக் கண்டதும் அத்தளிரில் ஒளிரும் அன்புகொண்டு, அதைத்தன் மாவடுப்போன்ற கண்களில், இனிமையூறும் முலைகளில், ஒளிரும்குளிர்ச்சிபொருந்திய தாமரையாகிய முகத்தில் பொலிவுகொண்ட தேரொத்த அல்குலில், உன்னை தழுவிக்கொள்ளும் தன்மையில் தழுவிக்கொண்டாள்.

**இலக்கணக்குறிப்பு** : மாவடு, குடம், கமலம், தேர் - உவமையாகுபெயர்கள்.

(148 ) **பாங்கி தலைமகற்குக் குறியிடம் கூறல்**

திருவைப் புயத்(து)இட்ட ராமநா ராயணன் தேர்ந்துதொழும்
பெருவைப்(பு) எனும்சீர்ச் சிராமலை யான்வரைப் பொற்புயனே
குருவைப் புணர்நன் மரகதக் குன்றும் குளிர்சுனையும்
உருவைப் பெனும்காவு மேபகல் யாங்கள் உலா(வு)இடமே.

**குறிப்புரை** : புயத்து இட்ட= தாங்கும். பெருவைப்பு= பெருஞ்சிறப்பு. பொற்புயனே = அழகிய தோள்களுடையவனே. குரு= ஒளி. மரகதக் குன்று= சோலைகளால் பசுமையாக விளங்கும் குன்று. உரு= அழகு. கா= சோலை.

**பொழிப்புரை** : திருமகளைத் தன் தோளில் தாங்கும் ராமநாராயணன் ஆராய்ந்து வணங்கும் பெருஞ்செல்வமாக விளங்கும் சிறப்புடைய இறைவனது சிராமலை ஒத்த அழகிய தோள்களுடயவனே ! சோலைகளால் ஒளிபொருந்திய மரகதமலையாக விளங்கும் குன்றும், குளிர்ந்த சுனைகளுடைய இடமும், அழகின் இருப்பிடமாக விளங்கும் சோலையுமே நாங்கள் உலாவும் இடமாகும்.

( 150 ) **பாங்கி குறியிடத்து இறைவியைக் கொண்டுசேறல்**

உருவ மதன்எனும் ராமநா ராயணன் நேர்ந்துதொழும்
பருவ முகில்குழல் பங்கன் சிராமலைப் பாங்(கு)ஒளிரும்
அருவ மதன்தூணி யாம்பொழில் பூக்கொய்(து) அலர்சுனையில்
பொருவ முழுகி வருவம் தலைவிநீ போதுகவே.

**குறிப்புரை** : உருவமதன்= அழகிய மன்மதன். பருவமுகில்= கார்காலக் கார்மேகம். அருவமதன்= உருவமற்ற மன்மதன். தூணி= அம்பறாத்தூணி - அம்புக்கூடு. அலர்பொருவ சுனை= மலர்போன்ற சுனை.

**பொழிப்புரை** : அழகிய மன்மதனாக விளங்கும் ராமநாராயணன் விருப்புடன் வணங்கும், கார்காலக் கார்மேகம் ஒத்த கூந்தலுடைய உமையவளை இடப்பாகம் கொண்ட இறைவனது மலைப்பக்கம், உருவமற்ற மன்மதனின் அம்புக்கூடாக விளங்கும் மலர்கள் நிறைந்த சோலையில் பூக்கள் கொய்தும், மலர்போன்ற பொலிவும் தண்மையும் பொருந்திய சுனையில் நீராடியும் வருவோம். தலைவியே ! நீ என் கூடவருக.

( 151 ) **பாங்கி தலைமகளைக் குறியிடத்து உய்த்து நீங்கல்**

நாடும் சிராமலைப் பூம்பொழில் மாதவி நல்தருப்பால்
வாடும் படிஇன்றி மாமயில் ஆடும் வளமும்அளி
பாடும் பரிசும் அணங்கேநீ பார்த்திரு பாரமதன்
தேடும் கணையெலாம் கொண்(டு)இங்(கு) உனையான் தெரிசிப்பனே.

**குறிப்புரை** : நாடும்= விரும்பத்தக்க. மாதவி நல்தருப்பால்= மாதவிகொடியும் நல்ல மரமும் உள்ள இடத்தில். அளி= வண்டுகள். கணை= மலர் அம்புகள். கணைஎலாம் பாரம்கொண்டு இங்கு உனையான் தரிசிப்பன் என்க.

**பொழிப்புரை** : சிராமலையில் உள்ள விரும்பத்தக்க பூஞ்சோலையில் மாதவிக்கொடியும் நல்ல மரமும் உள்ள இடத்தில் வாட்டமின்றி மயில் ஆடும், வண்டுகள் பாடும் வளமுடைய தன்மையுமுள்ளதால் நீ அங்கு அதனைப் பார்த்துக்கொண்டிரு. மன்மதன் தேடும் மலர்களாகிய அம்புகளைப் பாரமாகக் கொய்துகொண்டு வந்து உன்னைப்பார்க்கிறேன் என்று நீங்கினாள்.

( 152 ) **நீங்கும் தோழி தலைவற்கு உணர்த்தல்**

வற்றத நல்வளன் ராமநா ராயணன் வள்ளல்துதி
நற்றாயு மானவன் துய்ய சிராமலை நற்பொழில்வாய்
பெற்றாளும் நற்றாயும் என்னையும் இன்றிப் பிறரும்இன்றி
உற்றார்எம் செந்திரு மன்ன அடைக்கலம் உன்றனுக்கே.

**குறிப்புரை** : பெற்று ஆளும் நற்றாய்= ஈன்று புரந்தரும் தாய். என்னை= தந்தை. உற்றார்= இங்குவந்துள்ளார். செந்திரு= திருமகள் - தலைவி. மன்ன= மன்னனே - தலைவனே.

**பொழிப்புரை** : பதினாறு பேறுகளும் சிறிதும் குன்றாத ராமநாராயண வள்ளல் வணங்கும் உயர்வற உயர்ந்த அருள்தரு தாயுமானவனின் தூய நல்ல சோலைக்கண், தன்னை ஈன்று புரந்தந்த தந்த தாய் தந்தை பிறர் யாருடைய துணையுமின்றி எமது திருமகள்போன்ற தலைவி வந்துள்ளாள். அவள் உனக்கு அடைக்கலம் ஆவாள்.

( 153 ) **இறைவி இறையோனிடத்து எதிர்ப்படல்**

கடல்பேரி ஆர்க்கச் சிராமலை யான்நுதல்கண்(கு) எரிந்தோன்
உடல்பேரி லப்பிட்(டு) உளைத்(து)என் உயிர் ஒட்(டு) உறமறிந்(துஎற்(கு)
அடல்பேரம் பாம்கண்ணி தெங்கிள நீரும் அணிகுமுத
மடல்பேர்அவ் ஆரமு தும்தேரும் கொண்(டு)உற்றார் மாண்பொழிற்க.

**குறிப்புரை** : பேரி= பேரிகை. எரிந்தோன்= சாம்பலான மன்மதன். பேர் இலப்பிட்டு= புகழ்பெறக் கிடைக்கப்பெற்று. உளைத்து= நினைந்து. ஒட்டுஉற= தலைவியொடு கூட. மறிந்து= மீண்டுவந்து. அடல்= ஆற்றல். கண்ணி= கண்களுடைய தலைவியிடம். தெங்கு இளநீர்= தென்னையின் இளநீர் - முலை. குமுதமடல்= செங்குவளை இதழ் - உதடுகள். தேர்= தேர்வடிவுடைய அல்குல்.

**பொழிப்புரை** : சிராமலை இறைவனது நுதற்கண்ணால் சாம்பலான மன்மதன், மீண்டும் உடல் கிடைக்கப்பெற்று, கடலாகிய தனது பேரிகை முழங்க, என்னுயிராகிய தலைவியுடன் நான்கூட, ஆற்றல் மிக்க அம்புஒத்த கண்களுடைய தலைவியிடம், தென்னையின் இளநீரொத்த முலைகள், அழகிய செங்குவளை மலரின் இதழொத்த இதழ்களில் பொருந்திய அருமையான அமுதம், தேர்வடிவுடைய அல்குல் ஆகியன கொண்டு மாட்சிமைப்பட்ட இச்சோலைக்கு வந்தார்.

**விளக்கம்** : மன்மதன், தலைவி உருவுடன் வந்ததாகக் கூறினான் தலைவன்

( 154 ) **புணர்ச்சியின் மகிழ்தல்**

மட்(டு)ஆரும் சோலைச் சிராமலை மின்னார் மகிழ்ந்துதரும்
பட்(டு)ஆரும் தேர்உற்(று) இணைக்களிற் றைக்கைப் படுத்திமதன்
தொட்(டு)ஆரும் போரைத் தொலைத்தே கனிதரு தூஅமுதம்
கட்டார்உற் றார்கா நிழலில்உண் டேகளி கண்டனமே.

**குறிப்புரை** : மட்டு= தேன். ஆரும்= நிறைந்த. மின்னார்= மின்னல் ஒத்த தலைவி. பட்டுஆரும்= பட்டுச்சேலை உடுத்த. தேர் உற்று= அல்குலில் பொருந்தி. களிறு இணை= யானைகளின் இரண்டு கோடுகளை. கைப்படுத்தி= கைகளால் பற்றி. தொட்டு= தொடங்கி. தொலைத்து= வெற்றிகண்டு. கனி= கொவ்வைக்கனி ஒத்த இதழ். உற்று= அடைந்து - சுவைத்து. கட்டுஆர்= மிகத்தழுவி. காஆர்நிழலில்= சோலையின் மிக்க நிழலில். உண்டே களிகண்டனம்= அனுபவித்துக் இன்புற்றோம்

**பொழிப்புரை** : தேன்நிறைந்த சிராமலைச் சோலையில், மின்னலைஒத்தவள் - தலைவி - மகிழ்ந்து தந்த பட்டுசேலை உடுத்த தேர்போன்ற அல்குலில் பொருந்தி, அவளது இருகளிறுகளாகிய முலைகளைக் கைப்பற்றி, கொவ்வைக்கனி ஒத்த இதழ்தந்த தூய அமுத சுவைத்து, ஆர்வமுடன் மிகத்தழுவி,சோலையின் மிக்க நிழலில் அனுபவித்து இன்புற்றோம்.

**இலக்கணக்குறிப்பு** : கண்டனம் - தலைவியை உளப்படுத்திய தன்மைப்பன்மை.

( 155 ) **புகழ்தல்**

அஞ்(சு)அக் கரத்தன் சிராமலை யான்தாள் அமைத்(து)இறைஞ்சார்
நெஞ்சம் கரத்தல் எனும்இருள் கூந்தால் நினதுமுலைக்
கஞ்சக்(கு) அர(வு)ஆகம் தோற்றுப் பறந்தன வாய்வரையும்
அஞ்சக் கரவால் மலைப்பாய்க்கண் ணீர்விட்ட மாணிலத்தே.

**குறிப்புரை** : அஞ்சு அக்கரத்தான்= திருவைந்தெழுத்துக்குரிய சிவபிரான். அமைத்து= மனத்தில் நிறுத்தி. கரத்தல் எனும் இருள்= அறியாமையாகிய இருள். கஞ்சம்= தாமரை. கு= குற்றம்பட்டு. அரவு= வருந்தி. பறந்தன= விரைந்து ஓடின. வரைவாய்= அளவில்லாத இடங்கள். அஞ்ச= பிறர்அஞ்சுமாறு. கரவால் = வஞ்சனையால். மலைப்பாய்= மலைத்து. கண்ணீர்= கண்ணீர்த்துளிகள் / கள் நீர்= தேன்துளிகள். மாண் + நிலத்து=மாட்சிமைப்பட்ட உலகில்

**பொழிப்புரை** : திருவைந்தெழுத்துக்குரிய சிவபிரானாகிய அருள்தருதாயுமானவனின் திருவடிகளை மனத்தில் அமைத்து வணங்காதவர் நெஞ்சத்து அறியாமைஎன்னும் இருள்போல் கரிய கூந்தலுடையவளே ! மாட்சிமைப்பட்ட இவ்வுலகில் உனது முலைக்குத் தாமரை மலைத்துக்குற்றப்பட்டு, தோற்று, வருந்தி, மலையிடத்தில், விரைந்து ஓடி, பிறர் அஞ்சுமாறு கண்ணீர் / தேன் சிந்தின.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் தற்குறிப்பேற்றவணி.

( 156 ) **தலைமகளைத் தலைமகன் விடுத்தல்**

இழைவரு பாகம் இடையாய் சிராமலை யின்பொழில்வாய்
மழைவர நோக்கும் பயிர்போல் மதிவர மாணிலத்து
விழைவர நோக்கும் குமுதம் என்ன விளங்(கு)அயலார்
தழைவரும் அன்பால் இருப்பர் அவரைநீ சாருகவே.

**குறிப்புரை** : இழைவரு= நூல்போன்று அமைந்த. பாக இடையாய்= பக்குவமான இடுப்பினை உடையவளே. விழைவர= விருப்பம் உண்டாக. அயலார்= பிறர், தழைவரும்= தழைத்த. சாருக=அடைக.

**பொழிப்புரை** : நூல்போன்று அமைந்த பக்குவமான இடுப்பினையுடையவளே ! மாட்சிமைப்பட்ட இவ்வுலகில் மழையின் வரவை எதிர்பார்த்திருக்கும் பயிர் போலவும், நிலவின் வரவை விருப்பமுடன் நோக்கிஇருக்கும் குவளைமலர்போலவும் மிக்க அன்பால் உன்னை எதிர்நோக்கி இருக்கும் பிறரை நீ சென்றடைக.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுளில் பல்பொருள் உவமையணி உள்ளது.

( 157 ) **பாங்கி தலைவியைச் சார்ந்து கையுறை காட்டல்**

கண்டார் கருவினை ஓட்டும் சிராமலைக் கண்ணுதலார்
விண்டார் பிரமர் பிழைக்கநஞ்(சு) உண்டு மிகுகளம்கொள்
பண்(டு)ஆர் கருப்(பு)ஒப் பினும்உன்கண்(கு) ஒவ்வாப் பயத்தில்அலைப்(பு)
உண்டார் தனிநீல் இதுகாண் புயல்குழல் ஒண்மயிலே.

**குறிப்புரை** : கண்டார்= கண்டு வணங்கியவர். கருவினை= பிறப்பு - கொடிய இருவினைகள் விண்டார்= தன்னப்பொருந்தாதவர். களம்= கழுத்து. கருப்பு= கருமைநிறம். ஒவ்வாப்பயம்= ஒப்பாகமாட்டோம் என்ற அச்சம். அலைப்புண்டார்= துன்பப்பட்டவர். தனி நீல்= ஒப்பற்ற நீலமலர் - கருங்குவளை மலர். புயல்குழல்= கார்மேகம் ஒத்த கருமையான கூந்தலுடைய.

**பொழிப்புரை** : கண்டு வணங்கியவரின் பிறப்பினை ஓட்டுகிற சிராமலைச் சிவபிரான், தன்னைப்பொருந்தாத பிரமர் முதலியோர் வாழும்பொருட்டு முன்னாளில் நஞ்சினை உண்டதால்கழுத்துப் பெற்ற மிக்க கருமைநிறம் உனது விழிக்கு ஒப்பானது என்றாலும், கார்மேகம் ஒத்த கூந்தலுடைய அழகிய மயில்போன்றவளே ! உன்கருவிழிக்குத் தான்ஒப்பாகமாட்டோம் என்ற அச்சத்தால் நீரில் துன்புற்ற கருங்குவளை மலர் இதுவாகும்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுளில் முறையே உவமையணியும், உவமை விலக்கணியும் உள.

( 158 ) **தலைவியைப் பாங்கிற் கூட்டல்**

காரும்நீள் உற்றது காலும்ஓய் வுற்றது காவினிடைச்
சாரும்நீள் போதுஎலாம் மாலையா வேயில் தனிக்கமுகின்
தேரும்நீள் வெற்பினில் உற்றநம் ஆயமும் தேடிடுமால்
வாரும்நீ ரும்சீர்ச் சிராமலை அன்ன வனமுலையே.

**குறிப்புரை** : காரும் நீளுற்றது= இருளும் மிகத்தொடங்கியது. நீள் போது= மிக்க மலர்கள். வேயில்= கட்டினால். தனிக் கமுகின் நீள் தேரும். தேறும்= கிடைக்கும். நீரும் வாரும்= நீங்களும் வாருங்கள். வனம்= அழகு.

**பொழிப்புரை** : சிறந்த சிராமலை ஒத்த அழகிய கொங்கையளே ! இருள்மிகத் தொடங்கிவிட்டது, கால்களும் நடந்து நொந்தன. மலைசார்ந்த சோலையில் உள்ள மலர்களைப் பறித்து மாலையாகக் கட்டினால் மிகஉரமான பாக்குமரத்து உயரத்துஅளவு கிடைக்கும். மலைக்கு வந்த நம் ஆயத்தவரும் நம்மைத்தேடத் தொடங்கிவிடுவர்.. எனவே நீங்களும் வாருங்கள். செல்வோம்.

**இலக்கணக்குறிப்பு** : தேறும் என்பது தேரும் என்றுவந்தது எதுகை நோக்கிய செய்யுள்விகாரம்.

( 159 ) **நீங்கித் தலைவற்கு ஓம்படை சாற்றல்**

இறைவா இறைவிக்(கு) உயிராய் நீயும் எழில்அமைஉள்
நிறை(வு)ஆ ருயிராம் இறைவியும் கூடி நிலைஇயைய
உறை(வு)ஆ குஉடம்படு மெய்யாய என்னையும் உள்மறவேல்
அறைவான் நதிஆர் சிராமலை யார்ச்சேர் அருளுளத்தே.

**குறிப்புரை** : எழில்= உயர்வு. உள்= உள்ளம். நிலை இயைய உறைவு= நிலையாக ஒத்து வாழ. உடம்படுமெய்= இரு உயிர்எழுத்துகளைச் சேர்க்கவரும் யகர வகரங்கள். உள்= நினைவு.

**பொழிப்புரை** : தலைவனே ! தலைவிக்கு உயிராகிய நீயும், உயர்ந்த உன்னுள்ளத்தில் நிறைந்த சிறந்த உயிராகிய தலைவியும் கூடி, நிலையாக ஒத்துவாழவாழ உதவிய உடம்படு மெய்யாக விளங்கிய என்னையும், ஒலிக்கும் கங்கை சூடிய சிராமலையான் வாழும் உனது அருள்உள்ள நினைவில் மறந்துவிடாதே.

**விளக்கம்** : தலைவனையும் தலைவியையும் உயிர்களாகக் கூறியதற்கேற்ப, அவர்களை இணைத்து வாழவைக்கும் பாங்கியை, தமிழில் அமையும் இருஉயிரெழுத்துகளை ஒன்றுசேர்த்து வைக்கும் உடம்படு மெய் எழுத்தாகக் கூறினார்.

**இலக்கணக்குறிப்பு** : என்னையும் - இறந்தது தழுவிய எச்சவும்மை. இச்செய்யுள் உவமையணி.

( 160 ) **உலகியல் மேம்பட விருந்து விளக்கல்**

நாட்டளி கூர்உளன் ராமநா ராயணன் நன்குதொழும்
பாட்டுஅளி பாடும்சிராமலை யான்வரைப் பாங்(கு)இரவு
கூட்(டு)அளி வார்தேன் தினைமா கலைத்தசை கூட்டிஉண்டு
காட்(டு)அளி யோ(டு)இனிக் காலைசென் றால்என்ன காவலர்க்கே.

**குறிப்புரை** : நாட்டு அளி= நிலைத்தகருணை, அளி பாட்டுப் பாடும்= வண்டுகள் இசைபாடும். வரைப்பாங்கு= மலைப்பக்கம். கூட்டு அளி வார் தேன்= தேன்கூட்டில் உள்ள தேனீக்களின் உயர்ந்த தேன். கலை= மான். காட்டு அளி= செய்யும் கருணை.

**பொழிப்புரை** : நிலைத்த கருணைமிக்க உளத்தன் ஆகிய ராமநாரயணன் நன்கு வணங்கும் வண்டுகள் இசைபாடும் சிராமலை இறைவனது மலைப்பக்கம், இன்று இரவுதங்கி தேன்கூட்டில் உள்ள தேனீக்களின்

உயர்ந்த தேனுடன் தினைமாவு, மான்கறி சேர்த்துஉண்டு காட்டும் கருணையுடன் தங்கி, பின்னர் காவலனாகிய நீ காலையில் செல்லலாமே.

( 161 ) **விருந்து இறைவிரும்பல்**

வேம்பா யினும்உங்கள் கைப்படின் வேம்பாகாம் வேல்விழியீர்
கூம்பாய் இயைநும் குடில்மா ளிகையே குழைந்துதிண்ணர்
பாம்(பு)ஆர் அணிபூண் சிராமலை யார்க்குப் பரிந்துதரு
தேம்பா வியவாய்ச் சுவைஎச்சில் ஊன்போலும் சேடம்எற்கே.

**குறிப்புரை** : வேம்பு ஆயினும்= கசக்கும் பொருளாயினும். வேம் பாகாம்= காய்ச்சப்பெற்ற வெல்லப் பாகு ஆகும். திண்ணர்= திண்ணனார் - கண்ணப்பர். பரிந்து குழைந்து தரும் . தேம்பாவிய= இனிமை பொருந்திய. வாய்ச் சுவை எச்சில் ஊன்= வாயிலிட்டுச் சுவைத்த எச்சிற்பட்ட தசை. சேடம்= எஞ்சியபொருள்.

**பொழிப்புரை** : வேல்போன்ற விழியுடையவரே ! உச்சி கூம்பாகஅமைந்த உமது குடிசை எனக்கு மாளிகையாகும். கசக்கும் பொருளாயினும் உமது கைப்பட்டால் காய்ச்சப்பெற்ற வெல்லப்பாகுபோல் இனிக்கும். பாம்பணி அணிந்த சிராமலைச் சிவனுக்கு பரிவும் குழைவும் கொண்டு திண்ணனார் தன் வாயில் அதுக்கிச் சுவைபார்த்துத் தந்த எச்சிற்பட்ட ஊன்போன்ற சிறப்புடையது நீவிர் தரும் உணவு.

( பாங்கியிற் கூட்டம்- முற்றும் )

## ஒருசார் பகற்குறி

**************************

**கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலையம்பொழுது கண்டு இரங்கல்**

தலம்காட்டு மேன்மைச் சிராமலை யான்கழல் சாற்றலார்தாம்
நலம்காட்டும் இன்குடி யோ(டு)அழி தல்போல் நடுக்கடலில்
புலம்காட்டும் செங்கதிர் வீழ அவர்பழி போல்இருள்தன்
வலம் காட்டு மாறு பரந்த(து)என் மம்மர் வளர்தரவே.

**குறிப்புரை** : சாறலார்= போற்றிக்கூறாதவர். புலம்= பார்வை. அவர் பழி= போற்றிக்கூறாதவர் குற்றம். வலம்= வலிமை. மம்மர்= விரகத்துன்பம்.

**பொழிப்புரை** : இடத்தின் சிறப்பைக் காட்டும் மேன்மைபொருந்திய அருள்தரு தாயுமான பெருமானின் திருவடிகளைப் போற்றிக்கூறாதவர் , உயர்வைக்காட்டும் இனியகுடியுடன் அழிவதுபோல் மேலைக்கடல் நடுவே உலகிற்குப் பார்வைதரும் செஞ்ஞாயிறு மூழ்க, போற்றிக்கூறாதவர் குற்றம்போல் இருள் தனது வலிமையைக் காட்டும் வகையில் என்விரகத்துன்பம் பெருகுமாறு வளர்ந்தது. .

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுளில் இருஉவமையணிகள் உள.

( 163 ) **பாங்கி புலம்பல்**

தலைமாலை கொண்ட சிராமலை அண்ணல் தனிவரைநேர்
முலைமாலை கொண்டு வருந்தஇம் மாலை முனம்அளித்து
நிலைமாலை ஆக்கிப் பிரிந்தார்புன் மாலை நிறைஇருட்கு
கலைமாலை அம்பிறை அம்(பு)இறைக் கக்கண் கலங்கிடுமே .

**குறிப்புரை** : தலைமாலை= தலைசிறந்த கொன்றைமாலை. தனி= ஒப்பற்ற. நேர்= ஒத்த. மாலைகொண்டு= புணர்ச்சி மயக்கம். இம்மாலை= இந்த மாலைப்பொழுதை. நிலைமாலை= பெருமயக்கம். புன்மாலை நிறை இருட்கு= மிக்க இருளுக்கு முன்னதாகிய அற்பமான மலைப்பொழுதில். மாலை கலை அம்பிறை= மாலைநேரத்து ஒளிபொருந்திய பிறைநிலா. கண் அம்பு இறைக்க= கண்கள் கண்ணீரைச் சொரியச் செய்வதால். கலங்கிடும்= வருந்துவாள்.

**பொழிப்புரை** : தலைசிறந்த கொன்றைமாலை அணிந்த அருள்தரு தாயுமானவனின் ஒப்பற்ற மலைஒத்த முலையின் புணர்ச்சி மயக்கம் கொண்டு வருந்துமாறு, மாலை நேரத்துப்புணர்ச்சி அளித்து, அதனைப் பெருமயக்கம் ஆக்கிப் பிரிந்தவரால், மிக்க இருட்கு முன்னதான அற்பமான மாலை நேரத்து ஒளிபொருந்திய அழகிய பிறை, இவளது கண்கள் கண்ணீரைச் சொரியவைத்தலால் இவள் மனம் வருந்துவாள்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் சொல்பின்வருநிலையணி.

( 164 ) **தலைவன் நீடத் தலைவி வருந்தல்**

பேராத அச்சகி மாரும் பிரிந்தார் பெரி(து)அடுத்துச்
சோராத என்நலம் கொண்டு மருவிச் சுகம்அளித்தே
தேராத அன்பின் தொடர்தரச் சென்றார் சிராமலைப்பால்
வாராத(து) என்னோ பிரியா வரம்தந்த மன்னவரே.

**குறிப்புரை** : பேராத= பிரியாத. சோராத சுகம் என்க. மருவி= தழுவி. தேராத அன்பு= அளவிடற்கரிய அன்பு. தொடர்தர= என்னைத்தொடர.

**பொழிப்புரை** : என்னைப்பிரியாத என் தோழியர் என்னைப்பிரிந்தனர். என்னைமிகச்சார்ந்து அளவிடற்கரிய அன்புடன் என்னைத் தழுவி இன்புறுத்தி, அவ்வன்பு என்னைத்தொடரப் பிரிந்தவர் ஆகிய பிரியாவரம் தந்த தலைவர் மீண்டும் சிராமலைப்பக்கம் வராத காரணம் என்ன ?

( 165 ) **தலைவியைப் பாங்கி கழறல்**

தமையந்தி முன்னம் நளனைப் பிரிந்த தகைமையதோ
இமைஅந்த நேரத்(து) அவர்வந்(து) அடைவர் இதுநெடிதோ
அமைஅந்தம் ஓங்கும் சிராமலை யன்ன அணிபுயற்கா
அமைஅந்தம் மாறினால் பின்ஊர் அலராம் அறிஉனக்கே.

**குறிப்புரை** : தகைமையதோ= தன்மையுடையாதா. இது நெடிதோ= இதனை நெடுங்காலம் எனலாமோ. அமை= மூங்கில். அந்தம்= வானம். அமை அந்தம்= உனக்குஅமைந்த அழகு. அலர்= பழி.

**பொழிப்புரை** : தமையந்தி தன்கணவன் நளனைப் பிரிந்ததுபோன்ற நெடும்பிரிவா உன்பிரிவு. இமைக்கும் அந்த நேரத்தில் தலைவர் வந்து உன்னை அடைவார். இதனை நெடுங்காலம் எனலாமா ! வான் அளாவும் மூங்கில்களுடைய சிராமலைபோன்ற வலிய அழகிய தோள்களுடைய தலைவனுக்காக வருந்துவதன்மூலம் உனக்குஅழகு மாறுமானால் பிறகு ஊரவர் பழிதூற்றுவர். எனவே வருந்தாதே. விரைவில் அவர் வருவார்.

( 166 ) **தலைவி முன்னிலைப் புறமொழி மொழிதல்**

காராளர் தம்குலன் ராமநா ராயணன் கற்றிடும்பூத்
தேராளர் வாழும் சிராமலைப் பாங்கில் தெரிந்துமுனம்
நேராள ராவந்து கூடிப் பிரிந்து நிறைதுயர்செய்
கூராள ரில்கொடி யார்இது கூறிடும் கோதையுமே.

**குறிப்புரை** : காராளர்= வேளாளர். பூத்தேராளர்= பூமியைத் தேராகக் கொண்ட சிவபிரான். கற்றிடும்=பழகும். நேராளர்= நேர்மையுடையவர். கூராளர்= அறிவுக்கூர்மையர். இல்=போன்ற. கொடியாரில் கோதையும் இதுகூறிடும்.

**பொழிப்புரை** : வேளாளர் குலத்து ராமநாராயணன் பழகும் பூமியைமுப்புர எரியில் தேராகக் கொண்ட சிவபிரான் வாழும் சிராமலைப்பக்கம் முன்பு நன்குஆராய்ந்து வந்து கூடிப்பிரிந்த அறிவுக் கூர்மையுடைய நேர்மையாளர் மிக்க துயரம் செய்வதுபோல், பேசும்கொடியவருடன் சேர்ந்து இவளும் - இவ்வாறு கூறுகிறாள்.

( 167 ) **தலைவி பாங்கியொடு பகர்தல்**

உண்ணக் கசப்பைச் சருக்கரை யால்மூடி ஊட்டிடல்போல்
வண்ணச் சிராமலை நாதன் வரைவாய் மருவினன(து)
எண்ணத்(து) இருந்தும் அகலா ஒருவர் இயைந்துசுகம்
நண்ணக் கொடுத்(து)அல் குழலி துயரும்உள் நாட்டினரே.

**குறிப்புரை** : மருவி= தழுவி. சுகம் நண்ண= இன்புற. அல்குழலி= இருள் ஒத்த கூந்தலுடையவளே.

**பொழிப்புரை** : இருள் ஒத்த கூந்தலுடையவளே ! கசப்பான பொருளைச் சர்க்கரையால் மூடி உண்ணச்செய்ததுபோல், அழகிய சிராமலை இறைவனது மலையில் என்னை தழுவி, என்நினைவில் சற்றும் அகலாத ஒப்பற்றவர், என்னைக்கூடி இன்பம் தந்ததுடன் பிரிந்துமனத்தில் துன்பத்தையும் நாட்டிவிட்டார்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

( 168 ) **தலைவியைப் பாங்கி அச்சுறுத்தல்**

அலந்தர்க்(கு) அருளும் சிராமலை அண்ணல் அணிவரைவாய்
கலந்தார் பொருட்(டு)உன் முகமலர் வாடில் கண்டுநுமர்
பலந்தாங் கியபுனம் காக்கப் பிறரைப் பணித்துநினை
இலம்தான் செறிக்கின் பிற(கு)என்னோ செய்வாய் இலங்கிழையே.

**குறிப்புரை** : அலந்தார்= துன்புற்றார். கலந்தார்= கூடியவர். பலம்= கதிர்முற்றிய. இலம்= இல்லம். செறிக்கின்= அடைத்து வைத்தால்.

**பொழிப்புரை** : விளங்கும் அணிகலன் அணிந்தவளே ! துன்புற்றார்க்கு அருளும் சிராமலை இறைவனது அழகிய மலைக்கண் உன்னைக் கூடியவர்க்காக உன்முகத்தாமரை வாடினால் அதுகண்டு உன்னவர், தினைக்கதிர் முற்றிய கொல்லையைக் காக்க வேறுஒருவரை நியமித்து, உன்னை வீட்டில் அடைத்துவைத்தால் பிறகு என்னசெய்வாய். எனவே அவர்பொருட்டு மிகவருந்தாதே.

( 169 ) **நீங்கற்கு அருமை தலைவி நினைந்து இரங்கல்**

உயங்கிய நுண்இடை யாளே சிராமலை ஒண்பொழில்வாய்
முயங்கிய பின்னர்ப் பிரிந்தார் பிரிவால் முழு(து)அயர்ந்தேன்
வயங்கிய எம்உடல் தன்னைப் பிரமன் வளர்உயிர்போல்
நயங்கிளர் ஒன்றாய்ச் சமைத்திலன் என்நான் நவில்வதுவே.

**குறிப்புரை** : உயங்கிய- மெலிந்த. அயர்ந்தேன்= சோர்ந்தேன். வயங்கிய= விளங்குகிற. வளர் உயிர்போல்= வாழும் உயிரைப்போல. ஒன்றாய்= தலைவனது உடம்புடன் ஒன்றுபட.

**பொழிப்புரை** : மெலிந்த நுண்ணிய இடையுடையவளே ! சிராமலையில் ஒளிரும் சோலையில் என்னைத் தழுவியபின் பிரிந்த தலைவனது பிரிவால் முழுதும் சோர்ந்தேன். விளங்கும் எனது உடலில் வளரும் உயிர்போல், நன்மைபொருந்தத் தலைவனது உடம்புடன் ஒன்றுபடப் பிரமன் படைக்கவில்லையே. இதுபற்றி என்னவென்று சொல்வது !

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

( 170 ) **தலைவிக்கு அவன்வரல் சாற்றல்**

பாரின் கலிஓட்டும் ராமநா ராயணன் பற்(று)இயைந்த

வாரின் முலைபங்கன் மேவும் சிராமலை வண்பொழில்வாய்
தேரின் இறைஊரும் தேரின் ஒலிஇது சேர்கயல்கள்
மோர்இன் இணைமிசை ஈன்முத்(து) அடக்(கு)உள் மெலி(வு)ஒழிந்தே.

**குறிப்புரை** : கலி= வறுமை. வார்= முலைக்கச்சு. இறை தேரின் ஊரும்= தலைவன் தேரில்ஏறிவரும். இன்சேர் இணை கயல்கள் மிசை= இனிமையாகச் சேர்ந்த இருகெண்டைமீன்களிடை - இருகண்களில். ஈன்முத்து= அரும்பிய கண்ணீர் முத்துகள். உள் மெலிவு= மனத்துயரம்.

**பொல்ழிப்புரை** : உலக வறுமையை ஓட்டும் ராமநாராயணன் பற்றுடன் பொருந்தியவனும், முலைக்கச்சு அணிந்த உமையவளை இடப்பாகம் கொண்டவனும் ஆகிய இறைவன் எழுந்தருளியுள்ள சிராமலையின் வளமான சோலையில், தனது தேரில் ஏறிவரும் தலைவனது தேர்மணி இதோ கேட்கிறது. இனிமையாகச் சேர்ந்த இருகெண்டை மீன்களாகிய உன்கண்கள் அரும்பும் கண்ணீரை, மனத்துயர் ஒழிந்து அடக்கு.

**இலக்கணக்குறிப்பு** : சேர்கயல்கள் - உருவகம்.

( 171 ) **தோழி சிறைப்புறமாகச் செறிப்பு அறிவுறுத்தல்**

கழல்கொளும் காலர் சிராமலை நாதன் கவின்வரைப்பில்
எழில்கொளும் குன்றர் கதிர்கொய யாங்கள் இலம்புகவே
தழல்கொளும் கையா விரியும் சுகமே தனிமரமாத்
தழல்கொளும் கைபூத்த நங்கை வராஇனித் தண்புனக்கே.

**குறிப்புரை** : சிறைப்புறமாகச் செறிப்பு= தனியிடத்தில் சேர்த்தல். காலர்= திருவடியினர். குன்றர்= குன்றில் வாழ்வோர். கதிர்கொய= தினைகதிர்களைக் கொய்ய. இலம்= இல்லம். தழல்கொளும்= செந்நிறம் வாய்ந்த. கை= காந்தள்மலர். சுகமே= விரைவில். தழல்கொளும் கை பூத்த நங்கை. தனிமரமா இனித் தண்புனக்கே வரா. தனிமரமா= தனியே. தண்புனக்கே இனி வாரா= குளிர்ந்ததினைக் கொல்லைக்கு இனிமேல் வரமாட்டாள்.

**பொழிப்புரை** : வீரக்கழல் அணிந்த திருவடியினர் ஆகிய சிராமலை இறைவனது அழகிய மலைக்கண் அழகுற முற்றிய தினைக்கதிரைக் குன்றவர் கொய்ய, அதனால் கொல்லையின் காவலைக் கைவிட்டு நாங்கள் வீட்டிற்குச் சென்றுவிடுவோம். தழல்போல் செந்நிறம் வாய்ந்த காந்தள்மலர் மலரும். தழலாகச் சிவந்த கையினையுடைய தலைவி தனியே இனிமேல் தினைக்கொல்லைக்கு வரமாட்டாள்..

**விளக்கம்** : செங்காந்தள் மலரும் காலம், தினை முற்றியதைகாட்டுவது என்பர்.

( 172 ) **தோழி தலைமகற்கு முன்னிலைப் புறமொழி மொழிந்து அறிவுறுத்தல்**

வறப்பினும் நீர்தரும் துய்ய சிராமலை மாண்பொழிலில்
பறப்பினும் பாடினும் கட்குடி ஓங்கினும் பண்அளிகாள்
சிறப்பினுள் தங்கிக் கலந்த உறவோர் திருநுதலை
மறப்பினும் நீவிர் மறவீர் கருத்துள் வலிவுகொண்டே.

**குறிப்புரை** : முன்னிலைப் புறமொழி= உரியவர் தன்முன் இருந்தபோதிலும், யாரோ பிறர்க்குக் கூறுவதுபோல் கூறுதல். கட்குடி= தேன்பருகுவது. சிறப்பினுள் தங்கி= மேன்மையுறப் பொருந்தி. உறவோர்= உறவினர் - தலைவன். திருநுதலை= அழகிய நெற்றியுடைய தலைவியை. கருத்துள் வலிவு= மனவலிமை.

**பொழிப்புரை** : வானம் பொய்த்தாலும் நன்னீர் வழங்கும் தூயசிராமலையின் மாட்சிமைப்பட்ட சோலையில் உள்ள இசைபாடும் வண்டுகளே ! நீங்கள் பறந்தாலும், பாடினாலும், மிகுதியாகத் தேன் - கள் குடித்தாலும் ; மேன்மையுறப் பொருந்திக் கூடிய தலைவன் அழகிய நெற்றியுடைய தலைவியை மறந்தாலும்; மனவலிமையுடன் நீவிர் மறவாதிருங்கள்.

( 173 ) **பாங்கி தலைமகன் முன்நின்று இல்செறிப்பு உணர்த்தல்**

மின்காட்டும் பாகர் சிராமலை ஏகர் மிளிர்வரைப்பால்
பொன்காட்டும் தாருபூம் பொன்காட்டும் போதால் புயத்(து)அமைந்த
வன்காட்டும் வில்லர் தினைகொய்தார் நாளை வரஎமையும்
மன்காட்டும் வண்ணம் இலைபின் செறிப்பர் மனையகத்தே.

**குறிப்புரை :** மின்காட்டும்= மின்னலாக ஒளிரும் அம்மை. ஏகர்= ஒப்பற்றவர் - சிவபிரான். வரைப்பால்= மலைக்கண். பொன்காட்டும் தாரு= அழகுடன் விளங்கும் கொன்றைமரம். பொன்காட்டும் போது= பொன்போல் ஒளிரும் கொன்றைமலர். புயத்து அமைந்த= தோளில் தாங்கிய. வன்காட்டும்= வல்லமையை வெளிப்படுத்தும். மன்காட்டும் வண்ணம்= பெருமையை உணர்த்தும் வகையில். இலை பின் மனை= இலை வேய்ந்த வீடு. செறிப்பர்= இருத்துவர்.

**பொழிப்புரை :** மின்னலாக ஒளிரும் அம்மையை இடப்பாகம்கொண்ட ஒப்பற்ற சிவபிரான் ஒளிரும் மலைக்கண், அழகுடன் விளங்கும் கொன்றைமரங்கள் பொன்போல் ஒளிரும் கொன்றைமலர் பூத்தன, தமது வல்லமையைக்காட்டும் வில் தாங்கியவர்கள் நாளை தினைகொய்தனர், எம்மவர் தமது பெருமையை உணர்த்தும் வண்ணம் இலைகளால் வேயப்பெற்ற இல்லத்தில் எங்களை இருத்துவர்.

**இலக்கணக்குறிப்பு :** கொய்தார் - தெளிவுபற்றிய காலவழுவமைதி.

( 174 ) **பாங்கி முன்னின்று உணர்த்தி ஓம்படை சாற்றல்**

கான்இட்ட கூந்தல் இடத்தர் சிராமலைக் காண்பொழிலில்
மான்இட்டம் என்று கலந்தீர் அவரும் மறப்பர்அலர்
வான்இட்ட கற்பர் நரைத்துத் திரைத்து வளர்உடலம்
கூன்இட்ட(து) ஆயினும் காப்பீர் எமைநீர் குவலயத்தே.

**குறிப்புரை :** ஓம்படை= அடைக்கலம். கான்= நறுமணம். கூந்தல்= கூந்தலுடைய உமையவள். காண் = அழகு.. மான் இட்டம்= மான்போன்ற தலைவியை விரும்பி. வானிட்ட= மேலான.

**பொழிப்புரை :** நறுமணம் பொருந்திய மயிர்ச்சாந்து பூசிய கூந்தலுடைய உமையவளை இடப்பாகம் கொண்ட அருள்தரு தாயுமானவனின் அழகிய சோலையில், மான்போன்ற தலைவியை விரும்பிக் கூடினீர். அவர் உம்மை மறவார். மேலான கற்புடைய அவர் நரைத்தும் தோல்கள் சுருங்கியும் மேல்நோக்கி வளரும் உடம்பு கூன்பட்டதாயினும் - வயது மிக முதிர்ந்தாலும் இவ்வுலகில் அவரைக்காப்பீராக.

**இலக்கணக்குறிப்பு :** கூந்தல் - அன்மொழித்தொகை. மான்= உவமை ஆகுபெயர்.

( 175 ) **கிழவோன் தஞ்சம் பெறாது நெஞ்சொடு கிளத்தல்**

கனம்காவல் கொண்ட சிராமலை அண்ணல் கடிவரைப்பால்
புனம்காவல் கொண்ட கொடியாரை யானும் பொருந்(து)எனது
மனம்காவல் கொண்டேன் தினைக்கதிர் சாய்த்த மறமுடையார்
தினம்காவல் கொண்டுதம் மந்திரத்(து) இட்டால்என் செய்குவனே.

**குறிப்புரை :** தஞ்சம் பெறாது= அடைக்கலத்தை ஏற்கவியலாது. கனம்= மேகக்கூட்டம். காவல் 00கொண்ட= சூழ்ந்த. கடி= அழகு. கொடியார்= கொடிபோன்ற தலைவி. பொருந்து= தக்க. காவல் கொண்டேன்= காக்கவேண்டிய பொருளாகக் கொண்டேன். சாய்த்த= கொய்த. மந்திரத்து இட்டால்= வீட்டில் அடைத்தால்.

**பொழிப்புரை :** மேகக்கூட்டம் சூழ்ந்த சிராமலைக்கு இறைவனின் அழகிய மலைக்கண், தினப்புனம் காத்த கொடிபோன்றவளை நான் தக்கஎன்மனத்தில் காக்கவேண்டிய பொருளாகக் கொண்டேன்.தினைக்கதிர் கொய்த மறவர்கள் நாடோறும் அவளைக்காத்து, தமது வீட்டில் அடைத்தால் நான்என்ன செய்வேன்.

( ஒருசார் பகற்குறி - முற்றிற்று )

## பகற்குறி இடையீடு

****************************

( 176 ) **இறைவனைப் பாங்கி குறிவரல் விலக்கல்**

முற்றா முலைஉமை பங்கன் சிராமலை முன்வரைவாய்
நற்றாள் படியக் குரலை அறுப்பர். நயந்(து)எமரும்
கற்றா எனவாய் இறைவி யிடத்துக் கனிவினொரு
சுற்றா வருவர் இவண்வாரல் நீயும் தொழுதகையே.

**குறிப்புரை :** முற்றாமுலை உமை= என்றும் கன்னியாகிய உமையம்மை. முன்வரைவாய்= மலையின்முன்னிடத்தில். படிய= அமைய. குரல்= தினை. எமர்= எம்மவர். கற்றா எனவாய்= கன்று ஈன்ற பசு என்னுமாறு. ஒரு சுற்றா வருவர்= ஒருசேர நெருங்கிவருவர். வாரல்= வராதே. தொழுதகை= தொழத்தக்கவன்.

**பொழிப்புரை :** என்றும் கன்னியாகிய உமையம்மையை இடப்பாகம் கொண்டவனது சிராமலையின் முன்னிடத்தில் வளமான தாளுடன் அமைந்த தினைக்கதிரை எம்மவர் விருப்புடன் அறுப்பர். அவர்கள் அண்மையில் கன்று ஈன்ற பசுப்போல் தலைவியிடம் கொண்ட கனிவினால் ஒருசேர நெருங்கி இருப்பர். எனவே தொழத்தக்கவனே நீயும் இங்கு வராதே.

**இலக்கணக்குறிப்பு :** நீயும்- இறந்தது தழுவிய எச்சவும்மை.

( 177 ) **இறைவியைப் பாங்கி குறிவரல் விலக்கல்**

திசைமுகன் பொய்மாசு தீர்த்த சிராமலைச் செல்வர்உயர்

---

இசைமுக மாய பொழிலில் நம(து)அனை யின்மயில்உன்

நசைமுகம் மற்றும் பசப்பும் அறிந்து நடந்தனள்என்
வசைமுகம் ஆமோ இனிப்பொழில் செல்லல் மதிப்(பு)அலவே.

**குறிப்புரை :** திசைமுகன்= நான்முகன் - பிரமன். பொய்= நான் இறைவனின் முடியினைக்கண்டேன் என்ற பொய். இசைமுகம்= புகழ்வாய்ந்த. அனை= தாய். இன்மயில்= இனியமயில் போன்றவளே. நசைமுகம்= பொழிலுக்கு வரும் விருப்பமுடைய முகம். பசப்பு= பசலை. நடந்தனள்= செயற்பட்டாள். என் வசைமுகம்= என்ன பழி. ஆமோ= வருமோ. செல்லல்= செல்லுதல். மதிப்பு அல= மரியாதை இல்லை.

**பொழிப்புரை :** நெருப்புமலையாக நின்ற இறைவனின் திருமுடி கண்டேன் என்று அன்னப்பறவயாய் முயன்ற பிரமன் சொன்ன பொய்யாகிய குற்றம் தீர்த்த அருள்தரு தாயுமானவரின் சிறந்த புகழ்வாய்ந்த சோலையில், இனிய மயில் போன்றவளே ! நமது அன்னை சோலைக்குவருவதில் விருப்பம்மிக்க உன்முகத்தையும், உடலில் புதிதாக ஏற்பட்ட பசலையையும் அறிந்து செயற்பட்டாள். இனி என்ன பழிவருமோ ! எனவே இனிமேல் சோலைக்குச் செல்லுதல் மரியாதை இல்லை.

( 178 ) **இறைமகள் ஆடிடம் நோக்கி அழுங்கல்**

முத்தலை யோன்பணி கொண்ட சிராமலை மொய்பொழிலும்
இத்தலை மேய சுனையும் மணிக்குன்றும் இன்தளவக்
கொத்(து)அலை மாதவிப் பந்தரும் என்சொலும் கூடிஇருந்(து)
ஒத்தலை நீங்கிப் பிரிதலில் உண்டோ துயரதுவே.

**குறிப்புரை :** முத்தலையோன்= சூலம் ஏந்திய சிவபிரான். பணி= சொல் - புகழ். மொய்= அடர்ந்த. இத்தலை= இவ்விடம். தளவக்கொத்து=முல்லைமலர்க்கொத்து. மாதவி= குருக்கத்தி. என்சொலும்= என்னசொல்லும். ஒத்தல்= ஒத்து விளங்குதல்.

**பொழிப்புரை :** சூலம் ஏந்திய சிவபிரானால் புகழ்பெற்ற சிராமலையில் உள்ள அடர்ந்த சோலை, இவ்விடத்தில் உள்ள சுனை, அழகியகுன்று, இனிய மணமுள்ள முல்லைமலர்க் கொத்துகள் அசையும் குருக்கத்திப் பந்தல் ஆகியன, கூடிஇருந்து பிரியும் என்னைப்பற்றி என்ன சொல்லும் ! ஒத்துச் சேர்ந்திருந்து பிரிதலைக்காட்டிலும் கொடிய துயரம் வேறில்லை.

**இலக்கணக்குறிப்பு :** மொய்பொழில், அலை மாதவி - வினைத்தொகைகள். சொலும் - இடைக்குறை. உண்டோ - எதிர்மறை ஓகாரம்.

( 179 ) **பாங்கி ஆடிடம்விடுத்துக் கொண்டு அகறல்**

தேனார் மலரளி யேகிளி யேதழல் செங்கரத்தே
மானார் கொடுமுன் ஓச்சினர் என்று மனத்துவையேல்
வானார் நதிபாய் சிராமலை அண்ணல் மலர்ப்பொழிற்குப்
போனார் வரின்மின் ஊர்போனார் என்று புகலுமினே.

**குறிப்புரை :** மலர்த்தேன் ஆர்அளி= மலர்களில் உள்ள தேனினைப் பருகும் வண்டு. தழல்= கவண். மானார்= மான்போன்ற மகளிர். ஓச்சினர்= வீசிவிரட்டினர். புகலுமின்= சொல்லுங்கள்.

**பொழிப்புரை :** மலர்களில் உள்ள தேனைப்பருகும் வண்டுகளே ! கிளிகளே ! நாங்கள் எமது செங்கரத்தில் கவணினை ஏந்திக் கல்லெறிந்து விரட்டியதைப் பொருட்படுத்தாதீர். சிறந்த காவிரி ஆறுபாயும் சிராமலை இறைவனது அழகிய சோலையிலிருந்து, முன்பு திரும்பிச்சென்றவர் வந்தால் மின்னல்ஒத்த தலைவி தமது ஊருக்குச் சென்றுவிட்டார் என்று சொல்லுங்கள்.

**இலக்கணக்குறிப்பு :** “ கேட்குந போலவும் கிளக்குந போலவும், இயங்குந போலவும் இயற்றுந போலவும், அஃறிணை மருங்கினும் அறையப் படுமே “ ( நன்னூல். 409 ) என்றபடி அமைந்தது இச்செய்யுள். புகலுமின் - முன்னிலைப் பன்மை ஏவல் வினைமுற்று.

( 180 ) **பின்நாள் நெடுந்தகை குறிவயின்சென்று நீடுஇரங்கல்**

கலையே பிணையே மயிலே கிளியே கவின்அளியே
வலையே படுமான் விழியார் சிராமலை வண்பொழிலில்
இலையே இருப்பின் வருமே அல(து)இங்(கு) இருந்(து)எனது
நிலையே அறிய விரும்பிய தோமெய் நிகழ்த்துமினே.

**குறிப்புரை :** கலை= ஆண்மான். பிணை= பெண்மான். இலையே= காணவில்லையே. அலது= அல்லது. மெய்நிகழ்த்துமின்= உண்மையைக்கூறுங்கள்.

**பொழிப்புரை :** ஆண்மானே ! பெண்மானே ! மயிலே ! கிளியே ! அழகிய வண்டுகளே ! வலையில் அகப்பட்ட மான்போன்று மருண்ட விழியுடைய தலைவியை , சிராமலையின் வளமான சோலையில் காணவில்லையே ! இருந்தால் வருவாளே ! அல்லது இங்கு மறைந்திருந்து என்மனநிலை அறிய விரும்பினாளோ ! உண்மையைக் கூறுங்கள்.

**இலக்கணக்குறிப்பு :** இச்செய்யுளும் நன்னூல் 409 இன்படி அமைந்தது. இலையே, அலது - இடைக்குறைகள்

( 181 ) **தலைவன் வறுங்களம் நாடி மறுகல்**

கோதண்ட ராமன் பணியக் கொலைப்பவக் கூர்ஒழித்த
மூதண்டம் ஓங்கு சிராமலை யான்பொழில் மோட்(டு)அதனில்

வேதண்டம் ஆகும் முலையார் இலையால் விளங்(கு)அவர்ஊர்
மாதண்டச் சென்றார் கிளிகாள் மொழிந்த(து)என் மற்(று)அவரே.

**குறிப்புரை** : கோதண்டம்= வில். பவம்= பாவம். கூர்= மிகுதி. மூதண்டம்= பேரண்டம். மோட்டு அதண்= உயரமான பரண். வேது அண்டம் ஆகும்= ஒற்றடம்தரும் திரட்சியாக உள்ள. மாதுஅவர் ஊர் அண்ட= பெண்ணாகிய அவர் தமது ஊரடைய. மொழிந்தது என்= என்ன கூறினார்.

பொழிப்புரை : வில்லேந்திய இராமனின் மிக்க கொலைப்பாவம் ஒழித்ததும், பேரண்டம் அளவு உயர்ந்ததும் ஆகிய சிராமலை இறைவனது சோலையை ஒட்டிய தினைகொல்லையில் உள்ளஉயரமான பரணில் வேதுகொடுக்கும் திரட்சியாக உள்ள முலைகளைப்பெற்றவர் இல்லை. தமது ஊர்அடையச் சென்ற பெண்ணாகிய அவர் என்ன கூறினார். கிளிகளே ! கூறுங்கள்.

**விளக்கம்** : இராவணன், பிரமனது குலத்தவன் ( “ நீ அயன் முதற்குலம் _ கம்பரா ). எனவே பிராமணன். அவனைக்கொன்றதலான “ பிரமகத்தி “ பாவத்தைச் சிராமலை இறைவன் தீர்த்தார் என்பது புராணச்செய்தி.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுளும் நன்னூல் 409 இன்படியதே. சென்றார் - வினையாலணையும் பெயர்.

( 182 ) **குறுந்தொடி வாழும்ஊர் நோக்கி மதிமயங்கல்**

கன்னாவ தாரன்எம் ராமநா ராயணன் கற்(று)அறியும்
நன்நாவ லர்சொல் சிராமலை நாதன் நயவரைப்பால்
பொன்ஆவர் உற்ற பதிஏது அறியேன் புரிந்துசெல
மன்னாவ ரும்மனம் நன்னெறி தேடி மயங்கியதே.

**குறிப்புரை** : கன்னாவதாரன்= கவசகுண்டலம் தந்த கர்ணன். சொல்= புகழும். நயவரைப்பால்= விரும்பத்தக்க மலையில். பொன் ஆவர்= பொன்போற தலைவி. உற்ற= சென்ற. புரிந்து செல= விவரம் அறிந்துசெல்ல. மன்னாவரும்= ஒருநிலைப்படாத.

**பொழிப்புரை** : கன்னனாகப் பிறந்த வள்ளல் ராமநாராயணனின் கற்றறிந்த நல்ல புலவர்கள் புகழும் சிராமலையானது விரும்பத்தக்க மலைக்கண், பொன்னாக விளங்கும் தலைவி சென்ற ஊர்பற்றி விவரம் அறிந்துசெல்ல ஏதும் அறியேன். ஒருநிலைப்படாத என் உள்ளம் சரியான வழிதேடி மயங்குகிறது.

( பகற்குறி இடையீடு - முற்றிற்று )

## இரவுக்குறி

********************

**இறையோன் இருட்குறி வேண்டல்**

இருளே பெருகி மழையும் கருத்(து)இங்(கு) இடித்துமினும்
அருளே சிறந்த சிராமலை நாதன் அணிவரைவாய்
மருளே தரக்கண் மயங்கி நும(து)ஊர் வருவிருந்தாம்
பொருளே குறித்தேன் வரைத்தனத் தீர்போற்றும் பூண்(டு)இனியே.

**குறிப்புரை** : மழை= மேகம். மருள்= மயக்கம். மயங்கி= விரக நோயுற்று. பொருள்= உறுதி. வரைத்தனத்தீர்= மலைஒத்த கொங்கையரே. இனி பூண்டு போற்றும்= இனிஎன்னை ஏற்று உபசரியுங்கள்.

**பொழிப்புரை** : இங்குஇருள்மூண்டு மேகம்கறுத்து இடித்து மின்னும். அருள்சிறந்த சிராமலை இறைவனது அழகிய மலைப்பக்கம், தலைவி கண்மயக்கம் தர, விரகநோயுற்று உமது ஊருக்கு விருந்தினனாக வர உறுதி பூண்டேன். இனி என்னை ஏற்று உபசரியுங்கள்.

**இலக்கணக்குறிப்பு** : மழை - காரியவாகுபெயர்.

( 184 ) **பாங்கி நெறியினது அருமைகூறல்**

நடம்திகழ் தாளர் சிராமலை நாதர் நடுக்களம்போல்
இடம்திகழ் அல்லில் அரவும் புலியும் எழும்அரியும்
கடம்திகழ் வெற்பும் திரிதரும் வாரலை காவலனே
தடம்திகழ் அப்பால் எமரும் வெருளும் தனிவரற்கே.

**குறிப்புரை** : **நடுக்**களம்= கழுத்தின் நடுப்பகுதி. அல்= இரவு. அரி= சிங்கம். கடம் திகழ்வெற்பு= மதநீர் விளங்கும் மலை - மதயானை. வாரலை= வராதே. தடம் திகழ் அப்பால்= வழியுடைய அவ்விடத்தில். தனிவரற்கு எமரும் வெருளும்.

**பொழிப்புரை** : திருக்கூத்தியற்றும் திருவடிகளுடய சிராமலை இறைவனது நடுக்கழுத்துப் போல் இருண்ட இரவுநேரத்தில், பாம்பு, புலி, இரைக்கு எழும் சிங்கம், மதயானை முதலியன அவ்விடத்தில் திரியும். எம்ஊருக்கு வழியுள்ள அவ்விடத்தில் தனியே வருவதற்கு எம்மவரும் அஞ்சுவர். எனவே தலைவனே நீ வராதே.

**இலக்கணக்குறிப்பு** : வாரலை - முன்னிலைஒருமை எதிர்மறை வினைமுற்று.

( 185 ) **இறையோன் நெறியினது எளிமை கூறல்**

மான்ஓங்கு கையர் சிராமலை நாதர் வரையனையீர்
கான்ஓங்கு கூந்தலும் பாவை முலையாம் களிறும்அரை

நான்ஓங்கு பாம்பும் இடையாம் அரியும்என் நல்லுளத்தில்
தான்ஓங்கும் அஞ்சேன் புலிபாம்(பு) அரிவேழம் தாம்இவைகே.

**குறிப்புரை :** வரை அனையீர்= மலைக்கண் தாய்போன்றவரே. கான்= நறுமணம். களிறு= ஆண்யானை. ஓங்குஅரை பாம்பு= மேல்தொடையில் சிறந்து விளங்கும் நாகம் - அல்குல். நான் அஞ்சேன்.

**பொழிப்புரை :** மானினைக் கையில் ஏந்திய சிராமலை இறைவனது மலைக்கண் தாய்போன்றவரே ! பதுமைபோன்ற அழகிய தலைவியின் நறுமணம் சிறந்த கூந்தல், முலைகள் ஆகிய களிறுகள், மேல்தொடையில் சிறந்து விளங்கும் நாகம் ஆகிய அல்குல், இடுப்பாகிய சிங்கம் ஆகியன என்நன்மைபொருந்திய மனத்தில் சிறந்துவிளங்குகின்றன. எனவே நீகூறிய புலி, பாம்பு, சிங்கம், யானை இவற்றுக்கு நான் அஞ்சமாட்டேன்.

**இலக்கணக்குறிப்பு :** முலையம் களிறு அரைஓங்கு பாம்பு இடையாம் அரி - உருவகங்கள்

( 186 ) **பாங்கி அவன்நாட்டு அணியியல் வினாதல்**

விடையார் சிராமலை நாதர் வரைநிகர் வீறுபுய
நடைஆர் அனநேர் உம(து)ஊர் மடவார் நயந்துகொளும்
இடைஆர் மணிக்கலை யாது பணியா(து) எழில்கொளுநற்
தொடைஆர் மலர்யாது ஆடும் பொழில்யாது சொல்லுகவே.

**குறிப்புரை :** வரை= மலை. அனம்நேர் நடைஆர் உமது ஊர் மடவார்= அன்னம்போல் நடக்கும் உமது ஊரில் வாழும் மகளிர். மணிக்கலை= அழகிய மேகலை. பணி= அணிகலன். தொடை ஆர்மலர்= மாலையாகத் தொடுக்கும் மலர்.

**பொழிப்புரை :** ஏறு ஏறும் சிராமலை இறைவனின் மலைஒத்த பெருமைபொருந்திய தோள்களுடையவரே ! அன்னம்போல் நடக்கும் உமது ஊர்வாழும் மகளிர், தம்இடுப்பில் அணியும் அழகிய மேகலையாது ? அணியும் அணிகலன் யாது? அழகுபொருந்த மாலையாகக் கட்ட உதவும் மலர்யாது? விளையாடும் சோலையாது இவற்றைச் சொல்லுக.

( 187 ) **தலைவன் அவள்நாட்டு அணியியல் வினாதல்**

சொன்ம துரைநா யகன்சொல் சிராமலைச் சுத்தர்எழில்
தன்ம துரைமா வரையிலுன் சொற்குறி தான்உணர்ந்தேன்
நன்ம துரையாய் உம(து)ஊர் அவர்கலை நல்லணிகள்
தென்ம துரையார் தமிழில்சொல் ஆ(டு)இடம் தேர்தரவே.

**குறிப்புரை :** சொல்= புகழ். சிராமலைச் சுத்தர்= சிராமலையில் எழுந்தருளியுள்ள தூயவர் - அருள்தரு தாயுமானவர். எழில் தன்ம துரை= அழகிய அறத்தில் சிறந்தவன் - ராமநாராயணன். சொல்குறி= சொல்லின் குறிப்பு - உட்பொருள். நன் மது உரையாய்= நல்ல மதுரமொழி பேசுகிறவளே ! அவர் கலை= அவர்கள் வல்ல நூல். தென்மதுரையார் தமிழில்= இனிய மதுரைமக்களின் தமிழில். ஆடுஇடம் தேர்தரச் சொல் = நீங்கள் விளையாடும் இடம் அறிவதற்குச் சொல் .

**பொழிப்புரை :** புகழ்வாய்ந்த மதுரைத் தலைவன் புகழ்ந்து கூறும் சிராமலைவாழ் தாயுமானவர் வழியில், அழகிய அறத்தில் சிறந்தவனாகிய ராமநாராயணனின் பெரிய மலைப்பகுதியில் நீ சொன்னதன் குறிப்பினை உணர்ந்தேன். நல்ல மதுரமொழி பேசுகிறவளே ! உமது ஊர், ஊரவர் வல்லகலை, அவர்களின் அழகிய அணிகலன்கள், விளையாடும் இடம் ஆகியவற்றை, இனிய மதுரைத்தமிழில் சொல்.

**இலக்கணக்குறிப்பு :** மதுரை - சொல்பின்வருநிலையணி.

( 188 ) **தலமகற்குப் பாங்கி தன்னாட்டு அணியியல் சாற்றல்**

பாந்தளின் பூண்ஆர் சிராமலை யன்னநற் பண்பினரே
மாந்தளிர் சந்தனம் கோட்(டு)அணி முத்து மருவியநல்
காந்தளின் போதும் கணிபூவும் பூண்பர் கவினும்எம்ஊர்
பூந்தளிர் மேனியர் ஆடிடம் புன்னைப் புதுநிழலே.

**குறிப்புரை :** பாந்தள்= நாகம். கோட்டு அணிமுத்து= யானைக்கோட்டில் விளைந்த சிறந்தமுத்து. மருவிய= வழக்கமாக அணியும். போது= மலர். கணிபூ= வேங்கை மரத்தின்மலர். பூந்தளிர்= மென்மையான தளிர். புது நிழல்= அழகிய நிழல்.

**பொழிப்புரை :** நாகத்தை அணிகலனாக அணிந்தவரின் சிராமலைபோன்ற உறுதியான நல்லபண்பரே ! அழகிய எமது ஊரில்வாழும் மென்மையான தளிர்போன்ற மேனியுடைய மகளிர்; மாந்தளிர், சந்தனம், யானைக்கோட்டில் விளைந்த அழகியமுத்து இவற்றுடன் வழக்கமாகக் காந்தள்மலர், வேங்கைமரத்தின் மலர் ஆகியன அணிந்து, புன்னைமரத்தின் அழகியநிழலில் விளையாடுவர்.

( 189 ) **பாங்கி இறைவிக்கு இறைவன் குறைஅறிவுறுத்தல்**

கூட்டம் செறிஅல் குழலாய் சிராமலைக் கூத்தன்உயர்
நாட்டம் முனம்உமை பொத்த எழுந்த நடுங்(கு)இருள்நேர்
நீட்டம் உறும்இருள் வாய்நினை நாடி நினந்தகரி
வேட்டம் அரிசெய் வரைஇறை சார விரும்பினரே.

**குறிப்புரை** : கூட்டம் செறி அல் குழல்= இருள் கூட்டமாய்ச் செறிந்தது போன்ற கருமையான கூந்தல் நாட்டம்= கண்கள். எழுந்த= தோன்றிய. இருள்வாய்= இருளில். அரி கரி வேட்டம்செய் = சிங்கம் யானையை வேட்டையாடும். சார= அடைய

**பொழிப்புரை** : இருள் கூட்டமாய்ச் செறிந்தது போன்ற கருமையான கூந்தலுடையவளே ! முன்னாளில் சிராமலைப் பெருமானின் ஞாயிறு திங்கள் ஆகிய இருகண்களயும் உமையம்மை பொத்தத் தோன்றிய அஞ்சத்தக்க நீண்டஇருளில், சிங்கம் யானையை வேட்டையாடும் மலைகண் உன்னை அடைய விரும்பினார்.

**விளக்கம்** : உமையவள் சிவபிரான் கண்களைப்பொத்தியது - " பெருமாட்டி வெரின்புறத்து எய்தி வல்லே, செம்மற்பிறை வேணிய னார்திருக் கண்புடைத்தாள் " ; " இருசுடர் மறைந்த " ; " படர்ந்தது திமிர வீக்கம் " ( காஞ்சிப்புராணம். தழுவக் குழைந்த ..... 26; 27; 28 )

( 190 ) **நேராது இறைவி நெஞ்சொடுகிளத்தல்**

கொடியார் மடவர்நற் பேதையர் பெண்டிர்என் கூ(று)உரைகள்
படியார் மொழியே படித்தார் மொழியே பகருபிறை
முடியார் சிராமலை யான்வரைப் பால்என் முழுஇருளில்
செடிஆர் புதர்வழி வாஎன்(று) இறையினைச் செப்பினளே.

**குறிப்புரை** : நேராது= பாங்கியின் சொல்லை ஏற்காமல். கொடியார்= கொடியவர். மடவர்= அறிவில்லாதவர். பேதையர்= தரித்திரர். படியார்= உலகவர். படித்தார்= அறிவுடையவர். செடி= துன்பம். என் இறையினை என்று கூட்டுக.

**பொழிப்புரை** : புகழும் பிறை சூடியவர் வாழும் மலைக்கண், நள்ளிருளில் துன்பம் மிக்க புதர்வழியே வாஎன்று என் தலைவனைக் கூறினாள். எனவே பெண்டிர்; கொடுங்குணத்தர், அறிவில்லாதவர், தரித்திரர் என்ற உலகவர் சொற்கள் அறிவு உடையவர் சொற்களேயாகும்.

( 191 ) **நேரிழை பாங்கியொடு நேர்ந்து உரைத்தல்**

எந்தை அமுதத் திடைப்படிந்(து) ஓங்கிய இன்மறையோன்
நிந்தைஇ லாவாசு தேவன் வழுத்தும் நிறைபரமன்
சிந்தை மகிழ்ந்தார் சிராமலைச் சாரலில் தோளியர்
விந்தை இரவே வரஇசை தால்என்ஆம் விள்ளுவதே.

**குறிப்புரை** : அமுதம் = அருள். மறையோன்= நான்முகன். வாசுதேவன்= திருமால். சிந்தைமகிழ்ந்தார் தோளியர்= மனம் மகிழ்ந்த மார்பர். விந்தை= வியப்புக்குரியது. விள்ளுவது என்னாம்= மறுத்துச்சொல்ல என்ன உள்ளது.

**பொழிப்புரை** : சிவபிரானின் அருள்அமுதத்தில் படிந்து சிறந்த இனிய மறைவல்ல நான்முகன், பழிப்பேதுமில்லாத் திருமால் முதலியோர் மனத்தில் நிறைத்துப் போற்றும் சிவபிரானை மனத்தில் கொண்டு சிராமலைச்சாரலில் மகிழ்ந்த மார்பர், இரவில் வர இசைந்தால் வியப்புகுரியது. அதுபற்றி மறுத்துச் சொல்ல என்னவுள்ளது.

( 192 ) **நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக்கு உரைத்தல்** .

பல்லைத் திறந்து புரம்எரி செய்த பரம்பரன் வாழ்
செல்லைத் திறந்(து)ஓங் கியநற் சிராமலைச் செல்விதனை
கல்லைத் திறந்தான் அறிந்(து)உருக் கும்திறம் காய்அயிலோய்
சொல்லைத் திறந்தே அனம்உள் கனியநான் சொற்றனனே.

**குறிப்புரை** : பல்லைத்திறந்து= புன்முறுவல் பூத்து. செல்லை திறந்து= மேகத்தை கிழித்துக்கொண்டு. கல்லைத் திறந்து= கல்போன்ற மனத்தில் வழிகண்டு. உருக்கும்திறம் சொல்= கனியச்செய்யும் தன்மையுடைய சொல்லால். திறந்தே= பேசி. அனம் உள்கனிய= அன்னம்போன்ற தலைவியின் மனம் இளகுமாறு.

**பொழிப்புரை** : புன்முறுவல்செய்து முப்புரங்களை எரித்த சிவபிரான் வாழும் மேகத்தைக்கிழித்துக் கொண்டு உயர்ந்த சிறந்த சிராமலைத் தலைவியின் கல்போன்ற மனத்தில் வழிகண்டு கனியச்செய்யும் தன்மையுடைய சொல்லால் மனம் இளகுமாறு நான் கூறினேன். ( அவள் இசைந்தாள். என்பது குறிப்பு )

( 193 ) **பாங்கி தலைமகனைக் குறியிடை நிறீஇத் தாய்துயில் அறிதல்**

வடமலை யாம்கைலை யேயாம் சிராமலை வான்பொழிலில்
தடமலை அன்ன முலையாய் அசோகில் தனிமயில்கள்
நடம்அலை(வு) இன்றி உறங்கலை விட்டு நடுங்கிடஎன்
கடமலை வந்துநல் வேங்கைக் கிளையைக் களைவதுவே.

**குறிப்புரை** : வடமலை= மேருமலை. தடமலை= பெரியமலை. நடம் அலைவு= நடனமோஅலைதலோ. கடமலை= மதயானை. வேங்கை= வேங்கை மரம். களைவது= ஒடிக்கிறது.

**பொழிப்புரை** : பெரிய மலைபோன்ற முலைகளுடையவளே ! மேருமலையாகவும் கைலைமலையாகவும் விளங்கும் சிராமலையின் அழகிய சோலையில் ஒப்பற்ற மயில்கள் நடனமாடவோ, அங்குமிங்கும் அலையாமலோ உறங்காமலோ அஞ்சுமாறு மதயானை அங்குவந்து மயில் அமர்ந்திருக்கும் வேங்கை மரக்கிளையை ஒடிக்கிறது.

( 194 ) **இறைவிக்கு இறைவன் வரவுஅறிவுறுத்தல்**

கடியொன்று சோலைச் சிராமலை யான்வரைக் காவினிடை
வடிஒன்று வேல்விழி அன்னமே முன்னமே வந்தணைந்து
படிஒன்று மாஇரு வேழத்தை ஆண்ட பருங்களிறு
பிடிஒன்று தேடி நம(து)இல் புறம்வந்த பெற்றிநன்றே.

**குறிப்புரை** : கடி= நறுமணம். வடிஒன்று= கூர்மைபொருந்திய. படிஒன்று= உலகில் வாழும். மா இரு= மிகப்பெரிய. பருங்களிறு= மிகப்பெரிய ஆண்யானை. பிடி= பெண்யானை. நன்றே வந்தது.

**பொழிப்புரை** : சிராமலையானின் நறுமணம் மிக்க மலைச்சோலையிடை, கூர்மைபொருந்திய வேல்போன்ற கண்களுடைய அன்னம் ஒத்தவளே ! உலகில் வாழும் மிகப்பெரிய யானையை அடக்கிய மிகப்பெரிய ஆண்யானை ஒன்று - தலைவன் - பெண்யானையை - தலைவியை - தேடி நமது வீட்டின்வெளிப்புறம் முன்னரே வந்த தன்மை நன்று.

**இலக்கணக்குறிப்பு** : பருங்களிறு, பிடி - உருவகங்கள்.

( 195 ) **பாங்கி தலைவியைக் குறியிடத்துக் கொண்டுசேறல்**

பொற்பே உருக்கொளும் ராமநா ராயணன் போற்றிசெயும்
சொற்பேர் உருக்கொள் சிராமலைச் சார்வரைச் சூழ்பொழில்வாய்
அற்பே உருவா அணைந்தவர் வேல்ஒளி ஆய்விளக்காக்
கல்பே ரருவி கடந்துவந் தார்போய்நாம் காண்குவமே.

**குறிப்புரை** : பொற்பு= அழகு. சொல்பேர் உரு= புகழாகிய பெருவடிவம். அற்பு= அன்பு. அணைந்தவர்= வந்தவர். வேல் ஒளி ஆய் விளக்கா= வேலின் ஒளியே சிறந்த விளக்காக. கல்= மலை.

**பொழிப்புரை** : அழகே உருக்கொண்ட ராமநாராயணன் போற்றும் புகழாகிய பெருவடிவம் கொண்ட சிராமலைப்பக்கம், மலையைச் சூழ்ந்தசோலைக்கு அன்பேஉருவாய் வந்தவர், தனது வேலின் ஒளியையே சிறந்த விளக்காகக்கொண்டு, மலைக்கண்ணதான பெரியஅருவியைக் கடந்து வந்தார். நாம்போய்க் காண்போம்.

( 196 ) **பாங்கி தலைவியைக் குறியிடத்து உய்த்து நீங்கல்**

கருஅலர் நீக்கும் சிராமலை யென்னக் கவின்முலையாய்
தருஅலர்ச் சேக்கைப் புரவலர் காணத் தனிஇருப்பாய்
பொருவலர் கண்வாய்க்(கு) உடைநீல் குமுதமும் பூணுபல
மருஅலர் தம்மையும் நின்அடிக்(கு) ஆக்குவன் மற்(று)இனியே.

**குறிப்புரை** : கரு அலர்= கருமலர்தல் - பிறத்தல். அலர் தரு சேக்கை= மலர்களாலான படுக்கை. அலர் பொரு= மலர் ஒத்த. உடை= தோற்ற. நீல் குமுதம்= கருங்குவளைமலர் செங்குமுதமலர். மரு அலர்= மணமலர்.

**பொழிப்புரை** : பிறப்பை நீக்கும் சிராமலை ஒத்த அழகிய முலையுடையவளே ! மலர்களால் ஆன படுக்கையுடைய தலைவன் காணும்பொருட்டுத் தனியே இரு. மலர் ஒத்த உனதுகண் வாய் இவற்றுக்குத் தோற்ற கருங்குவளைமலர், செங்குமுதமலர் மற்றும் சூடத்தக்க மணமலர்களை இனிமேல் பறித்துவந்து உன்னிடம் சேர்ப்பேன்

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் நிரல்நிறையணி.

( 197 ) **தலைவன் தலைவியைக் குறிஇடத்து எதிர்ப்படுதல்**

இரவில் குவியாது கொல்லோநும் தாமரை இன்தவிசு
கரவில் பிரிந்ததோ எற்(கு)அருள் செய்யக் கவின்பகலே
உரவில் திகழ்பாப் பணியான் சிராமலை ஒத்தமுலை
அரவில் திகழ் அல்குல் பாவாய் புகலும் அருள்சிறந்தே.

**குறிப்புரை** : நும்தாமரை= உமது முகத்தாமரை. தவிசு= இருக்கை யாகிய தாமரை. கரவு= பொய். உரவில் பகலே திகழ்= அறிவு ஒளியேவிளங்கும் - ஞானம் விளங்கும். பாப் பணி= பாம்பு அணிகலன். அருள்சிறந்து புகலும்.

**பொழிப்புரை** : அழகிய ஞானமே வடிவாகக் கொண்டவனும் பாம்பினை அணிகலனாகக் கொண்டவனுமாகிய தாயுமானவனது சிராமலை ஒத்த முலைகளுடையவளே ! நாகப்படம் ஒத்த அல்குலுடைய பாவையே ! உமது முகமாகிய தாமரை இரவிலும் மலர்ந்தே உள்ளதே ! இரவில் குவியாதோ ! ( உறங்கவில்லையா ) உனது இனிய இருக்கையாகிய தாமரை பொய்யாக உன்னைப் பிரிந்ததோ ! அருள்கூர்ந்து சொல்லுக.

**விளக்கம்** : “ நும்தாமரை இன்தவிசு “ என்றதன்மூலம் தலைவியைத் திருமகள் என்றான்.

( 198 ) **பெருமகள் ஆற்றினது அருமைநினைந்து இரங்கல்**

அளிஆர் குழலி இடத்தர் சிராமலை யாய்வரைப்பால்
துளிஆர் மழைபொழி கங்குலில் வேழம் தொடர்புலிமன்
தெளிஆ(று) இவைகால் விழியா வழிசொலத் தேர்ந்துகடந்(து)
எளியாள் பொருட்(டு)எங்ஙன் வந்தீர் கருணை இறையவனே.

**குறிப்புரை** : அளி ஆர்= வண்டுகள் மொய்க்கும் கூந்தலுடைய உமையவள். வேழம் தொடர்= யானையை வேட்டையாடத் தொடரும். மன் தெளி= பெருமைபொருந்தத் தெளிந்த

**பொழிப்புரை** : வண்டுகள் மொய்க்கும் கூந்தலுடைய உமையவளை இடப்பாகம் கொண்டவனது சிராமலைக்குரியவனே ! கருணை வடிவான தலைவனே ! மலைப்பகுதியில் மழைத்துளி பொழியும் இரவில், யானையைப் புலி வேட்டைக்குத்தொடரும் நேரத்தில், பெருமைபொருந்தத் தெளிந்த ஆறுடைய இடத்தில் இவைகளைக் கால்களே விழியாக வழிசொல்ல ஆராய்ந்துபார்த்துக் கடந்து எளியவளாகிய என்பொருட்டுஎப்படி வந்தீர் ?

(199 ) **புரவலன் தேற்றல்**

புவிக்(கு)அணி யாம்திரு ராமநா ராயணன் போற்றுகுழை
செவிக்(கு)அணி ஆக்கு பரன்வாழ் சிராமலைச் சீர்பொழில்வாய்
நவிக்(கு)அணி யாய்கிளி ஓட்ட எறிகவண் நன்மணிகைச்
சவிக்(கு)அணி யாம்வடி வேல்ஒளி கொண்(டு)இவண் சார்ந்தனனே.

**குறிப்புரை** : நவி= மான்கன்று. கவண்எறி நன்மணி= கவணினால் எறிந்த ஒளிரும்மணி. சவி= அழகு.

**பொழிப்புரை** : உலகிற்கு அணியாக விளங்கும் ராமநாராயணன் போற்றுதலை, காதணிஅணிந்த செவிக்கு அணியாக அணிந்த அருள்தரு தாயுமானவன் வாழும் சிராமலையின் அழகிய சோலையில், மான்கன்றுக்கு அழகு சேர்ப்பவளாக விளங்கி கிளிஓட்டக் கவணால் நீ எறிந்த ஒளிரும்மணிகளின் ஒளி, என்கைக்கு அழகுதரும் கூரிய வேலின்ஒளிஆகிய இவற்றால் இங்குவந்து சேர்ந்தேன்.

( 200 ) **புணர்தல்**

கண்மதி பாயும் சிராமலைக்கு அத்தர் கடிவரைவாய்
ஒண்மதி நெற்றி இவர்கடல் என்தனு ஓர்மலையா
உண்மதி விண்டியான் ஆகிக் கடைந்(து)என் உயிர்புலன்கள்
உண்மதி என்ன அளித்தேன் பெரும்சுக ஒண்ணமுதே.

**குறிப்புரை** : மதிக்கண் பாயும்= நிலவு பிளக்குமாறு ஓங்கும். அத்தன்= தலைவன் - சிவபிரான். கடி= அழகு. மதி நெற்றி= பிறைபோன்ற நெற்றி. கடல்= பாற்கடல். தனு= உடம்பு.. ஓர்மலையா= ஒப்பற்ற சோர்வில்லாத. உண்மதி= நினைக்கத்தக்க அறிவு. விண்டு + யான்= விண்டியான்= மந்தர்மலை நான். உயிர்புலன்கள்= உயிரும் புலன்களும். உண்மதி= அனுபவியுங்கள். பெரும்சுக ஒண் அமுதேஅளித்தேன்.

**பொழிப்புரை** : நிலவு பிளக்குமாறு ஓங்கும் சிராமலைக்குத் தலைவனாகிய சிவபிரானின் அழகிய மலைக்கண், ஒளிபொருந்திய பிறைபோன்ற நெற்றியுடைய இவரது உடல் பாற்கடலாக, எனது உடம்பில் சிறு சோர்வும் இல்லாதுஉள்ள அறிவுஆகியமலை நான்ஆகிக்கடைந்து என்னுயிரும் ஐம்புலன்களும் அனுபவியுங்கள் என்று பெரிய இன்பமாகிய சிறந்த அமுதத்தை அளித்தேன்.

**விளக்கம்** : உயிரின் அனுபவம் ஐம்புலன் வழிப்பட்டதாதலின் உயிருடன் புலன்களையும் கூறினார். இப்பகுதி “ கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புலனும் ஒண்தொடி கண்ணே உள. “ என்ற திருக்குறளை நினவூட்டும்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் முற்றுருவகவணி.

.

( 201 ) பூவாளி யோஎனும் ராமநா ராயணன் போற்றும்இயல்
பாவாளி அத்தன் சிராமலை யன்ன பருமுலையாய்
நாவாளி கள்துதி நின்கட்(கு) ஒவ்வாக் கணைநாரிஅடைந்
தேவாளி ஆகிச் சிலீமுக மாய்ப்புண்ணுள் ஏறுவதே.

**குறிப்புரை** : பூஆளி= மலரினை ஆளும் மன்மதன். இயல் பா ஆளி= இயற்கையின் அழகை ஆளும். அத்தன்= சிவபிரான். நாஆளிகள்= புலவர்கள். துதி கணை நின்கட்கு ஒவ்வா= போற்றும் அம்பு உனது கண்ணுக்கு ஒப்பாகாது. நாரி= வெட்கம். வாளி= ஒருவகைக் காதணி. சிலீமுக வாளி ஆகி= அம்புபோன்ற - கூர்மையுடைய காதணிஆகி. ஏறுவதே= புகுந்தது.

**பொழிப்புரை** : மன்மதனோ என்னுமாறு அழகுடைய ராமநாரயணன் போற்றும் இயற்கையின் அழகை ஆளும் சிவபிரானது சிராமலை ஒத்துப்பருத்த முலையுடையவளே ! புலவர்கள் போற்றும் அம்பு, உன்கண்ணுக்கு ஒப்பாகாமையால் வெட்கப்பட்டு, வாளிஎன்ற கூரிய காதணியாகி காதில் முன் புண்பட்ட இடத்தில்புகுந்தது.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் தற்குறிப்பேற்றவணி.

( 202 ) **தலைமகனைத் தலைமகள் குறிவரல் விலக்கல்**

மணம்தரு கூந்தல் இடத்தர் சிராமலை மாண்வரைப்பால்

கணம்தரு வேழம் புலிஅரி மேவும் கவர்வழிவாய்
குணம்தரு காதல் மிகஇர வில்வாரல் கொற்றவவேல்
தணந்தருள் நீட்டலில் ஏதம் பெரிதாம் தனிவழிக்கே,

**குறிப்புரை** : கவர்வழி= இரண்டுமூன்றாகப் பிரியும் வழி. வாரல்= வராதே. வேல் கொற்றவ அருள்நீட்டலில் தணந்து அருள். அருள் நீட்டல்= அருள் வழங்குவதில் - காணவருவதில். தணந்து அருள்= பிரிந்து இரு. தனிவழிக்கு= தனியே வருவதற்கு.

**பொழிப்புரை** : மணக்கும் கூந்தலுடைய அம்மையை இடப்பாகமுடையவரின் மாட்சிமைப்பட்ட மலைப்பக்கம், கூட்டமாக யானை, புலி, சிங்கம் ஆகியன திரியும் கவர்த்த வழிகளில் நற்குணம்பொருந்திய காதலை வழங்க மிக்க இரவில் வராதே ! வேல் ஏந்திய வெற்றிக்குரியவனே ! எனக்கு உன்காதலை வழங்க வருவதில் பிரிந்து இரு. தனியே வருவதில் துன்பங்கள் மிகப்பல.

**இலக்கணக்குறிப்பு** : வாரல் - எதிர்மறை முன்னிலை வியங்கோள்வினைமுற்று.

( 203 ) **தலைமகன் தலைமகளை இல்வயின் விடுத்தல்**

பீ(டு)ஆர் இதழியான் வாழ்சி ராமலைப் பேர்வரைப்பால்
கோ(டு)ஆர் எழில்முலைக் கோதாய் உன(து)அனை கூர்விழிப்பில்
தேடா(து) இரார்உனைப் போதுகைப் போது தெரிந்(து)எடுத்தே
நீடாது நின்மலர் மாளிகை சாருக நீஇனியே.

**குறிப்புரை** : பேர்= புகழ். கோடு= யானைக்கோடு. அனை= அன்னை. கூர்= மிக்க. கைப்போது போதுதெரிந்து =கைமலரால் மலர்களை ஆய்ந்து எடுத்து. நீடாது= காலம் தாழ்த்தாது. சாருக= அடைக.

**பொழிப்புரை** : யானைக்கோடு போன்ற அழகிய முலைகளுடையவளே ! பெருமைபொருந்திய கொன்றைமாலை அணிந்த சிவபிரான் வாழும் சிராமலையாகிய புகழ்வாய்ந்த மலைக்கண் வாழும் உன் தாய் மிக்க விழிப்புடன் உன்னைத் தேடுவார். எனவே உனது கைமலர்களால் மலர்களை ஆராய்ந்து எடுத்துக்கொண்டு காலம் தாழ்த்தாமல் உனது மலர்மாளிகையை இனிஅடைக.

( 204 ) **பாங்கி தலைமகளை எய்திக் கையுறைகாட்டல்.**

கோவைக்(கு) இசைந்திட்ட ராமநா ராயணன் கும்பிடுநல்
பூவைக்(கு) இடம்தந்த பெம்மான் சிராமலைப் பொற்கிளியே
நாவைக் கடத்தா நகைக்(கு)இங்(கு)அலர் நாடுமுலைப்
பூவைக் கொடுவந் தனன்உன் குழல்சிறைப் பூட்டுகவே.

**குறிப்புரை** : கோவை= ஒழுங்கு. பூவை= உமையவள். நாவைகடத்தா நகை= புன்முறுவல். உடைந்து= தோற்று. அலர் நாடு= மலர விரும்பும். முலை= முல்லை. சிறைப்பூட்டுக=செருகி அணிக.

**பொழிப்புரை** : ஒழுங்கான வாழ்க்கையில் பொருந்திய ராமநாராயணன் வணங்கும் உமையவளுக்கு இடப்பாகம் தந்த அருள்தரு தாயுமானவனின் சிராமலையில் வாழும் அழகிய கிளிபோன்றவளே ! நாவைக்கடந்து வெளிப்படாத உன் புன்னகைக்குத் தோற்று இங்கு மலரும் முல்லைபூ கொண்டுவந்தேன். உன் கூந்தலாகிய சிறையில் செருகிக்கொள்க.

**இலக்கணக்குறிப்பு** : முலை - இடைக்குறை. நாவைக்கடத்தா ...............முலைப்பூ - தற்குறிப்பேற்றவணி.

( 205 ) **பாங்கி தலைமகளை இல்கொண்டுஅகறல்**

சூலி குடியாம் சிராமலை நல்வரைச் சூழ்அகத்தே
பாலின் நயச்சொலி யாய்விழித் தால்உனைப் பார்த்(து)எனைநல்
வேலி பயிரைத் தினின்விளை(வு) எவ்வாறு மேவிடும்என்(று)
ஓலிடும் இங்(கு)இருக் கத்தகா வாநட ஒண்மனைக்கே.

**குறிப்புரை** : சூலி= சூலம்ஏந்தியவன்.அகத்தே= வீட்டில். யாய்= தாய். மேவிடும்= கிடைக்கும். ஓலிடும்= வைவாள். தகா= தக்கதல்ல. ஒண்மன= ஒளிபொருந்திய வீடு.

**பொழிப்புரை** : பால்போன்ற இன்சொல் பேசுகிறவளே! சூலம் ஏந்திய சிவபிரான் வாழும் நல்லசிராமலையைச் சூழ்ந்த வீட்டில் தாய்கண்விழித்தால் உன்னைத் தேடிபார்த்து என்னிடம் “ வேலியே பயிரை மேய்ந்தால் எப்படி விளையும் “ என்று வைவாள். எனவே இங்கு இருத்தல் தக்கதல்ல. ஒளிபொருந்திய வீட்டுக்கு வா . விரைந்து நட.

( 206 ) **பின்சென்று பாங்கி தலைமகனை வரவு விலக்கல்**

பாப்பயில் தாலத்தன் ராமநா ராயணன் பற்றுசெயும்
காப்பயில் சாரல் சிராமலை சூழ்அகம் காதலொடு
மீப்பயில் கங்குலில் வேல்வல வாரல் விளங்கிழையாள்
மாப்பயில் ஆழி தரும்திரு சாரிடம் மாமலரே.

**குறிப்புரை** : பா= பாடல் - இசை. தாலம்= நாக்கு. அகம்= உள்ளம். மீப்பயில் கங்குல்= காரிருள். வல= வல்லவனே. மாப்பயில்= பெருமை மிக்க. ஆழிதரும்திரு= திருப்பாற்கடல் தந்த திருமகள் - தலைவி. சார் இடம் மாமலர்= சேர்ந்த இடம் தாமரையாகும்.

**பொழிப்புரை** : வேல் எறிவதில் வல்லவனே ! மிக்க இசைபாடும் நாவினையுடைய ராமநாராயணனின் பற்றுமிக்க சோலைகள் செறிந்த சிராமலைச் சாரலுக்கு, உள்ளம்நிறைந்த காதலுடன்

மிகச்செறிந்த இருளில் வராதே. ஏனெனில் பெருமைமிக்க திருப்பாற்கடல் தரும் திருமகளாகிய தலைவி சென்றுசேர்ந்த இடம் தாமரை மலராகும் - வீடுஆகும்.

( 207 ) **தலைமகன் மயங்கல்**

விட்டிலை யோகுமுன் செய்தோன் சிராமலை விண்வரைவாய்
நெட்டிலை வேலன்ன கண்ணி கருணை நினைந்(து)எமைஇம்
மட்(டு)இலை என்னாது கூட்டி இனிஇங்கு வாரல்எனல்
தொட்டிலை ஆட்டிபின் பிள்ளையைக் கிள்ளும் தொழில்இதுவே.

**குறிப்புரை :** இலை விட்டு= மனைவியைப் பிரிந்து. விண்வரைவாய்= வானளாவிய மலைக்கண். நெட்டு இலை வேல்= இலைவடிவான நீண்ட வேல். இம்மட்டுஇலை= இவ்வளவிற்று என்ற அளவின்றி. கூட்டி= தலைவியிடம் சேர்த்து. வாரல்= வராதே. எனல் இது தொட்டிலை ..........தொழில்.

**பொழிப்புரை :** மனைவியைப் பிரிந்து யோகநிலையில் இருந்த தாயுமானவனது வானளாவிய மலைக்கண் இலைவடிவான நீண்ட வேல்போன்ற கண்களையுடைய தலைவியின் கருணையைப் பெற்றுத்தர, அளவின்றி என்னை அவளுடன் சேர்த்துவைத்துப், பின்னர் இனிமேல் இங்கு வராதே என்று கூறும் இச்செயல், தொட்டிலை ஆட்டி, பிறகு தொட்டிலிற்கிடக்கும் பிள்ளையைக் கிள்ளிவிடும் செயல் ஒக்கும்.

**விளக்கம் :** இறைவனின் யோகவடிவம் - " யோகியாய் யோக முத்தி உதவுதல் அதுவும் ஓரார் " ( சித்தி. சூ. செ. 50 )

( 208 ) **தோழி தலைமகள் துயர்கிளந்து விடுதல்**

தங்கமலை வில்லான் வாழும் சிராமலைத் தண்வரைப்பால்
செங்க மலைஅன்னாள் வெல்வேல் வலத்தாயுன் சென்நெறியின்
பொங்(கு)அமலை வேழம் சிங்கம் இவைக்காய்ப் புழுங்கிஅஞ்சும்.
அங்கம் மலையா வகைஊது சங்(கு)ஊர் அடைந்ததுவே.

**குறிப்புரை :** தங்கமலை= மேருமலை. செங்கமலை= திருமகள். வேல்வலத்தாய்= வேல்வெற்றி யுடையவனே. செல்நெறி= பிரிந்துசெல்லும்வழியில். அமலைபொங்கு= ஆரவாரம் மிக்க. அங்கம்= மனம். ஊர் அடைந்தது சங்கு ஊது= ஊர் அடைந்ததுபற்றிச் சங்குஊது.

**பொழிப்புரை :** வேல்வெற்றியுடையவனே ! மேருமலையை வில்லாக ஏந்தியவன் வாழும் தண்ணியசிராமலையின் பக்கமுள்ள திருமகளை ஒத்த தலைவி, நீ பிரிந்து செல்லும் வழியில் ஆரவாரம் செய்யும் யானை சிங்கம் இவற்றின்பொருட்டு மனம் புழுங்கி அஞ்சுகிறாள். எனவே நீமனம் மலைக்காமல் ஊர் சென்றதும் ஊரடைந்தது பற்றிச் சங்கு ஊதித்தெரிவி.

( 209 ) **திருமகட் புணர்ந்தவன் சேரல்**

பண்ணும் இசையும் பெருகும் சிராமலைப் பால்வரைவாய்
விண்ணுள் ஒளிர்பிறை மானும் நுதலாள் விளங்(கு)எனது
கண்ணும் மனமும் ஒளிசெய மேவலால் கான்கடந்து
எண்ணும் இமைப்பில் அடைவேன் என(து)ஊர் எழில்மயிலே.

**குறிப்புரை :** மானும்= ஒத்த. மேவலால்= பொருந்தி இருப்பதால்.

**பொழிப்புரை :** பண்ணும் இசையும் சிறந்து விளங்கும் சிராமலைப்பக்கத்தவளான வானில் ஒளிரும் பிறைஒத்த நெற்றிவிளங்கும் தலைவி, என்கண்ணும் மனமும் பொருந்திஇருந்து இருள்வழியில் ஒளிகாட்டக் காட்டினை நொடியில் கடந்து, அழகிய மயில்போன்றவளே ! எனதுஊர் அடைவேன்.

( இரவுக்குறி - முற்றிற்று )

## இரவுக்குறி இடையீடு

**********************************

### இறைவிக்கு இகுளை இறைவரவு உணர்த்தல்

வேதியன் கோவிந்த ராசன் துதிசெய் விமலையைஓர்
பாதியன் வாழும் சிராமலை மால்வரைப் பாங்(கு)இரவில்
தா(து)இயல் போ(து)இயை வேங்கையில் புள்ளினம் தான்அலறும்
கா(து)இயல் வேழம்வந்(து) உற்றவோ காண்குவை கத்(து)ஒலியே.

**குறிப்புரை :** வேதியன்= நான்முகன். கோவிந்தராசன்= திருமால். விமலை= இயல்பாகவே மலமில்லாத உமையவள். தாது இயல் போதுஇயை= பூந்தாதுடன் கூடிய மலர்கள் உள்ள. வேங்கை= வேங்கைமரத்தில். காது இயல்= காதுகளை அசைக்கும். கத்துஒலி காண்குவை.

**பொழிப்புரை :** நான்முகனும் திருமாலும் வணங்கும் உமையம்மையை ஒருபாதியில் கொண்ட சிவபிரான் வாழும் சிராமலையின் பெரிய மலைப்பகுதியில், இந்த இரவில் பூந்தாதுடன்கூடிய மலர்களுள்ள வேங்கை மரத்தில் வாழும் பறவை இனங்கள் கத்தும்ஒலி கேட்கிறது. ஒருவேளை தன்னுடைய காதுகளை அசைக்கும் யானை அங்கு வந்துசேர்ந்ததோ.

( 211 ) **தான் குறிமருண்டமை தலைவி பாங்கிக்கு உணர்த்தல்**

என்சொல்லு வேன்வெளி யேசொலில் வெட்கம் எடுத்(து)எடுத்து
மன்சொல்லு வோம்அழு வோமெனில் ஊக்கம் மகிழ்ந்தமன்னர்
முன்சொல்லும் ஓர்குறி என்றே குறியல்ல முன்நடந்தேன்
மன்சொல்லும் நீடும் சிராமலைத் தோகாய் மயங்கினனே.

**குறிப்புரை** : எடுத்து எடுத்து= மீண்டும் மீண்டும். மன்= பெருமை. ஊக்கம் மகிழ்ந்த= மிகவும் மகிழ்ந்த. மன்சொல்லும்= மிகுதியும் புகழப்பெறும். நீடும்= பெருமைபொருந்திய. மயங்கினன்= பிழைபட உணர்ந்தேன்.

**பொழிப்புரை** : மிகுதியும் புகழப்பெறும் பெருமைபொருந்திய சிராமலைவாழ் மயில்போன்றவளே ! மிகவும் மகிழ்ந்த தலைவன் முன்னதாகச்சொல்லும் குறி என்று நினைத்துக் குறியல்லா இடம்நோக்கி முன்னேநடந்தேன். பிழைபட உணர்ந்தேன். என்நிலையை மீண்டும் மீண்டும் சொல்லி அழுவோம் என்றால் வெளியே சொல்லுவோம் என்றால் வெட்கம்.

( 212 ) **பாங்கி தலைமகன் தீங்குஎடுத்துஇயம்பல்**

வாட்டம் தவிர்க்கும் சிராமலை யன்ன வளர்முலையாய்
தேட்டம் தருகுறி சொல்பொருள் தேர்வர் தெரித்திலர்நின்
நாட்டம் துளிதரத் தோளிணை வாட நனிகொள்இராக்
கூட்டம் தவறக் குறிபிழை செய்த கொடியவரே.

**குறிப்புரை** : வளர்= சிறந்த. தேட்டம்= மிக்கஆசை. தெரித்திலர்= வெளிப்படுத்தவில்லை. துளி= கண்ணீர். தோளிணை நனி வாட. இராக்கொள் கூட்டம்= இரவில்கூடுதல்.

**பொழிப்புரை** : மனவருத்தம் தடுக்கும் சிராமலைபோல் சிறந்த முலையுடையவளே ! மிக்க ஆசைதரும் குறிப்பொருளைத் தேர்கிறவர், உனது கண்களில்கண்ணீர் வெளிப்பட, உனது தோள்கள் மிகவருந்த, இரவுக்கூட்டம் பற்றிய குறிஇடம் தவறுமாறு குறியைத் தவறாகக் கூறிய கொடியவர், அதனைச் சரிவர வெளிப்படுத்தவில்லை.

( 213 ) **தலைவன் புலந்துபோதல்**

சாதாரி பாடி மதுரையில் வந்தருள் சங்கரன்வாழ்
ஓதாரி ஆய சிராமலைச் சார்இடத்(து) ஓங்(கு)இருளில்
போதார்இன் கண்ணி பொருட்டா வரையில் புகுந்துவருந்(து)
ஈதார்இன் னல்தரு நெஞ்சே கெடுவாய்நீ செய்பழிக்கே.

**குறிப்புரை** : சாதாரி= முல்லை நிலத்துக்குரிய சாதாரிப்பண். அருள்= ஏமநாதனை வென்றருளிய. ஓதாரி ஆய - ஓத அரிதாய= அளவிட்டுக் கூறுதற்கரிய. போது ஆர்= மலர்போல் அழகிய. ஈது ஆர் இன்னல்= இத்தகு மிக்க துன்பம். நீசெய் பழிக்குக் கெடுவாய். பழி= குற்றம்.

**பொழிப்புரை** : மதுரையில் பாணபத்திரர் பொருட்டு வந்து முல்லை நிலத்துக்குரிய சாதாரிப்பண் பாடி, இசைவல்ல ஏமநாதனை வென்றருளிய சிவபிரான் வாழும் ஓதுதற்கு அரியதாகிய புகழ்வாய்ந்த சிராமலையின் ஒருபக்கத்தில் மிக்க இருளில், மலர்போல் அழகிய கண்களுடையவள் பொருட்டு மலைப் பகுதிக்கு வரச்செய்து, இத்தகு மிக்க துன்பம் தந்தமனமே ! நீசெய்த குற்றத்துக்கு நீ கெடுவாயாக..

( 214 ) **புலர்ந்தபின் வறுங்களம் தலைவிகண்டு இரங்கல்**

என்னையோ யான்செய் பவம்தான் சிராமலை எம்பெருமான்
தன்னைஓர் நாளும் பணியல ரில்துயர் சார்ந்தனன்யான்
மின்னிஓட் டும்எழில் வேல்வலர் தோள்தொடை மேவுசுர
புன்னையோ பூணத் தவம்செய்தது இந்தப் பொருப்பகத்தே.

**குறிப்புரை** : பவம்= பாவம். பணியலரின்= வணங்காதவர்போல். ஓட்டும்= செலுத்தும். தொடைமேவு= மாலையாகப் பொருந்திய. பூண= அணிய.

**பொழிப்புரை** : சிராமலைப் பெருமானே ! நான் என்ன பாவம் செய்தேன் ! உன்னை ஒருநாளும் வணங்காதவர் போல் துன்புற்றேன். ஒளிரச் செலுத்தும் வேல் வல்லதலைவன் தோள்களில் அணிவதற்கு, இம்மலைப்பக்கத்துச் சுரபுன்னைமலர் தவம்செய்தது.

**இலக்கணக்குறிப்பு** : பவம் - குறுக்கல் விகாரம்.

( 215 ) **இதுவும் அது**

மணிதிகழ் பாப்(பு)அணி வார்வாழ் சிராமலை மாண்வரைப்பால்
பணிதிகழ் பாரில் அடியவள் செய்த பவப்பெருக்கால்
அணிதிகழ் வேலர் புயத்தொடை பூணா(து) அயர்(வு)உறுவன்
கணிதிகழ் காந்தள் பெறத்தவம் செய்தது கற்பின்நன்றே.

**குறிப்புரை** : மணி= நாகமணி. பாப்பு= பாம்பு. பணி= விதி. பூணாது= நான் அணியாமல். கணி= மருதநிலம். கற்பின் நன்றே= அதன் கற்புசிறந்தது.

**பொழிப்புரை :** நாகரத்தினம் கொண்ட பாம்பினை அணிகிற சிவபிரான் வாழும் சிராமலையின் மாட்சிமைப்பட்ட மலைப்பகுதியில், தலைவிதி விளங்கும் நான் செய்த மிக்கபாவத்தால், வேல்ஏந்திய தலைவனின் தோள்மாலை அணியாமல் வருந்துவேன். ஆனால் மருதநிலத்துக் காந்தள்மலர் அவரது தோள்மாலையாகச்செய்த தவம் நன்று. அதன் கற்புச்சிறந்தது.

( 216 ) **தலைவி பாங்கியோடு உரைத்தல்**

பணிப்பணி யார்வாழ் சிராமலைச் சாரல் பனிமொழியாய்
எணிப்பணி இன்சொல் புகன்று கலந்தார் எனைப்பிரிந்தார்
குணிப்பணி அன்பு பிறைபோல் வளரல் குறித்த(து)என்னோ
அணிப்பணி உன்இடை போலச் சுருங்கல் அதிசயமே.

குறிப்புரை : பணிப் பணியார்= பாம்பினை அணிகலனாக அணிந்தவர் - அருள்தரு தாயுமானார்.. பனி= குளிர்ச்சி. என்= ஏன். பணி இன்சொல்= பணிவான இனிய சொல். குணி= நற்குணமுடையவர். அன்பு பணி= அன்பான சொல். வளரல்= வளராதது. என்னோ= ஏன். பணிஅணி= அண்கலன் அணிந்த.

**பொழிப்புரை :** குளிர்ச்சிதரும் சொற்களைப் பேசுகிறவளே ! நாகத்தை அணிகலனாக அணிந்த சிவபிரான் எழுந்தருளியுள்ள சிராமலைச் சாரலில் பணிவான இன்சொல் கூறிஎன்னை புணர்ந்தவர் என்னைப் பிரிந்தது ஏன் ? நற்குணமுடைய அவர் அன்பான சொல் பிறைபோல் வளராத காரணம் என்ன ? அவர் சொற்கள், அணிகலன் அணிந்த உன்இடைபோல் சுருங்குவது அதிசயமாகும்.

**இலக்கணக்குறிப்பு :** என் என்பதன் றன்னகரம் எதுகை நோக்கி, டண்ணகரமாகத் திரிந்தது. வளரல்= வளர் + அ +அல் - எதிர்மறை அகரம் புணர்ந்து கெட்டது. இச்செய்யுளில் இரு உவமையணிகள் உள.

( 217 ) **இதுவும் அது**

பாந்தள்நற் பூணர் சிராமலை யான்வரைப் பைந்தொடியே
தீந்தணல் மம்மரால் பாவியேன் வாடத் திகழுமலர்க்
காந்தள்நற் கொம்பைக் கரம்எனக் கொண்டே களித்(து)அளித்துத்
தாம்தணந் தார்என் சகியே துயரோ சகிப்பரிதே.

**குறிப்புரை :** பாந்தள்= பாம்பு. பூணர்= அணிந்தவர். தீ தணல் மம்மர்= கொடிய நெருப்புப் போன்ற அறியாமை. கரம் எனக்கொண்டு= கையாகக் கருதி. தணந்தார்= பிரிந்தார். சகி= தோழி.

**பொழிப்புரை :** பாம்புகளைச் சிறந்த அணிகலனாகப் பூண்ட சிவபிரானின் மலைவாழ் அழகிய வளையல் அணிந்தவளே ! தோழியே ! கொடிய நெருப்புப்போன்ற அறியாமையால் நான் வாடுமாறு, விளங்கும் காந்தள் மலர்க்கொம்பினை என்கையாகக் கருதிக் கொடுத்துப் பிறகு பிரிந்தார். அதனால் நான் படும்துயரம் பொறுத்துக் கொள்ளஇயலாதது ஆகும்.

( 218 ) **தலைமகள் அவலம் பாங்கி தணித்தல்**

நெறிபிறழ்ந் தேஅரிச் சந்திரன் கூறினும் நேர்ந்துபொய்யைக்
குறிபிறழ்ந்(து) ஏகார் தலைவர் சிராமலைக் கூத்தரின்கை
மறிபிறழ்ந் தால்எனும் கண்ணிகா வா(து)ஐஇவ் வாதைசெய்த(து)
அறிபிறழ்ந் தார்குறி என்னல்காண் தார்கண்இக்(கு) ஆக்கியதே.

**குறிப்புரை :** நேர்ந்து= உடன்பட்டு. தலைவர் குறிபிறழ்ந்து ஏகார். மறி= மான்கன்று. காவாது= எதிர்பாராமல். வாதி= துன்பம். என்னல் காண்= என்று எண்ணாதே. தார்க்கண்= ஒழுங்கில். இக்கு= தடை.

**பொழிப்புரை :** சிராமலைச் சிவபிரான் கையில் ஏந்திய மான்கன்று துள்ளிப்பிறழ்ந்தாற் போன்ற கண்களுடையவளே ! அறநெறிக்கு மாறுபட்டு அரிச்சந்திரன் உடன்பட்டுப் பொய்கூறினும் தலைவர் குறிதவறிச் செல்லார். எதிர்பாராது இத்துன்பம் நேர்ந்தது என்பதை அறிந்துகொள். தலைவர் குறிபிறழ்ந்தார் என்று எண்ணாதே. தலைவரது ஒழுங்கில் ஏதோ தடையாகியுள்ளது.

( 219 ) **இறைவன்மேல் பாங்கி குறிபிழைப்பேற்றல்**

இன்னலில் நாங்கள் விழநீ குறிபிழை எய்துவித்தாய்
நென்னல்இந் நாள்இரா நும்ஊர் வரவு நினைத்தனமால்
கன்னலின் செய்சூழ் சிராமலை ஊரவ காவல்நும்ஊர்
மன்னலின் காவிரி தாண்டிடல் அஞ்சி மயங்கினமே.

**குறிப்புரை :** எய்துவித்தாய்= உண்டாக்கினாய். நென்னல்= நேற்று. நும் ஊர் காவல் மன்னலின். மன்னலின்= வலிமையால்.

**பொழிப்புரை :** கரும்பு வயல் சூழ்ந்த சிராமலை ஊர்க்குரியவனே ! நாங்கள் துன்பப்படுமாறு நீ பிழை உண்டாக்கினாய். இன்று இரவு உனது ஊருக்கு வர, நேற்றே நினைத்தோம். உமது ஊரில் உள்ள காவல் வலிமை காரணமாகவும், காவிரியைத் தாண்டிவர அஞ்சியும் மனம்மயங்கினோம்.

( 220 ) **இறைவிமேல் இறைவன் குறிபிழைப்பேற்றல்**

அக்((கு)ஆர் அராஅணி பெம்மான் சிராமலை அண்ணல்அருள்
தொக்கார் அருவரைப் பாவாய் அணிமலர்த் தொன்மனைவிட்(டு)
இக்(கு)ஆர் அடைமொழிப் பேதையர் நாயகம் என்னவரும்

அக்கார் அளகி மறப்பினும்நான்மறந்(து) ஆற்றரிதே.

**குறிப்புரை :** அக்கு= உருத்திராக்கம் / எலும்பு. ஆர்= கொன்றை. அரா= நாகம். தொக்கார்= கலந்தவர். அணிமலர்த் தொன்மனை= அழகிய தொன்மையான தாமரை வீடு இக்கு ஆர் மொழியடை= கரும்புபோன்ற சொற்கள் பேசும்.. பேதையர் நாயகம்= மகளிர் தலைவி. அ கார் அளகி= அந்தக் கார்மேகம் போன்ற கூந்தலுடையவள். ஆற்று அரிது= செயற்படுவதில்லை. மறந்துவிட்டு ஆற்றரிதே..

**பொழிப்புரை :** உருத்திராக்கம்,கொன்றை, நாகம் ஆகியன அணிந்த சிராமலைத்தலைவனாகிய பெருமான் அருளை கலந்தவர் - பெற்றவர் வாழும் சிறந்தமலை வாழ்பாவையே ! அழகிய தொன்மையான தாமரை மலரில்வாழும் இலக்குமி ஒத்த கரும்புபோன்ற சொற்கள் பேசும் மகளிர்க்கெல்லாம் தலைவியாக உள்ளவளும், அந்தக் கார்மேகமொத்த கூந்தலுடையவளும் ஆகிய தலைவி மறந்தாலும், நான் மறந்துவிட்டுச் செயற்படுவதில்லை.

( 221 ) **தலைவி குறிமருண்டமை தோழி தலைவற்கு உணர்த்தல்**

காலா டிக்கிளை ஆடினும் புட்கள் கஞலினும்நீள்
சேலா டிடநீர் தளும்பினும் நின்குறிச் செய்கைஎன்றே
மால்ஆ டிடவந்(து) அலுத்தாள் சிராமலை மாமயில்நின்
பால்ஆ டிடக்குறி அல்லகொண் டாள்என் பகருவதே.

**குறிப்புரை :** கால் ஆடிட= காற்று வீச. புட்கள்= பறவைகள். கஞலினும்= சினந்து குரல் எழுப்பினும். சேல் ஆடிய=கெண்டைமீன் தாவிக்குதிக்க. குறிச்செயல்= நீகுறியிடம் வந்ததன் அறிகுறி. மல் ஆடிட= காமமயக்கம் மேலோங்க. நின்பால் ஆடிட= உன்னைக் கூடும்பொருட்டு.

**பொழிப்புரை :** காற்றுவீச அதனால் மரக்கிளை அசைந்து ஓசை எழுப்பினும், பறவைகள் சினந்து குரலெழுப்பினாலும், பருத்தகெண்டைமீன் துள்ளித்தாவ நீர் தளும்பி ஒலித்தாலும் நீகுறியிடம் வந்ததன் அறிகுறி என்றுநினைத்து, காமமயக்கம் மேலிடச் சிராமலை அழகிய மயில் போல்வாள் உன்னுடன் கூடும்பொருட்டுக் குறியல்லதைக் குறியாகக்கொண்டு வந்து சோர்ந்தாள். நிகழ்வை என்னவென்று உரைப்பேன் !

( 222 ) **தலைமகன் சொல்லிய கொடுமை தோழி தலைமகட்குச் சொல்லல்**

தேவும் விரும்பும் மொழியாய் சிராமலைச் சீர்வரைப்பால்
மேவும் பெருநதி தாண்டிமான் காணும் விருப்பதனால்
வாவும் பரிஏழ் உடையான் வரும்வரை மாபறவை
கூவும் படிஇருந் தேன்எனக் கூறினர் கொற்றவரே.

**குறிப்புரை :** தேவு= தேன். பெருநதி= காவிரியாறு. மான்= மான்போன்றவள். வாவும் பரிஏழ்= தாவிச்செல்லும் ஏழுகுதிரைகள். உடையான்= உடைய சூரியன். மாபறவை= அழகிய சேவல்.

**பொழிப்புரை :** தேனும் விரும்பப் பேசுகிறவளே ! தலைவன், சிராமலையாகிய சிறந்த மலைப்பக்கம் பாயும் பெரிய காவிரியாறு தாண்டி, மான்போன்ற உன்னைக்காணும் விருப்பினால், அழகிய சேவல் கூவ, ஏழ்குதிரைகள் பூட்டிய தேருடைய சூரியன் வரும்வரை காத்திருந்தேன் என்று கூறினார்.

**விளக்கம் :** ஒளி, காற்றினும் ஒலியினும் விரைந்து பாய்வது. ஞாயிற்றின் ஒளி ஏழ்வண்ணங்களைத் தன்னகத்தே அடக்கியதாதலின் அதனைப்பரியாகவும், அதுசெல்லும் விரைவை வாவும் என்றும் குறித்தார்.

( 223 ) **என்பிழையன்று என்று இறைவி நேர்தல்**

நேயம் பழுத்தவன் ராமநா ராயணன் நித்தம்உரை
தோயம் பதித்த முடியார் சிராமலைத் தூவரைப்பால்
ஞாயம் பதிய உரைகண் துயிலாது நள்ளிரவு
பாயம் படிய இறைக்கா நடந்த பயன்இதுவே.

**குறிப்புரை :** தோயம்= நீர். ஞாயம்= நேர்மை. உரை= ஒலி. பாயம்படிய= புணர்ச்சி விருப்பால்.

**பொழிப்புரை :** அன்பு கனிந்த ராமநாராயணன் நாடோறும் போற்றும் கங்கைநீர் தாங்கிய சடையுடையவரது சிராமலையின் தூய எல்லைக்கண் நேர்மை பதிந்த ஒலியால் உறங்காமல் நள்ளிரவில் தலைவனுடனான புணர்ச்சி விருப்பால் நடந்ததன் பயன் இதுவாகும் - தலைவன் நம்மை ஏமாற்றவில்லை என்பதாகும்.

( அல்லகுறி - முற்றிற்று )

## வரும்தொழிற்கு அருமை

************************************

### தாய் துஞ்சாமை

( 224 ) நிறைமதி போல்முகன் ராமநா ராயணன் நெஞ்சுள்ஒளிர்
பிறைமதி சேர்சடை யார்வாழ் சிராமலைப் பேர்வரைஊர்
உறைமதி போல்முக அன்னை குவளை உறங்கிலையால்
குறைமதி போல்நுதால் எங்ஙன் இறைபால் குறுகுவதே.

**குறிப்புரை :** பேர்வரை= புகழ்வாய்ந்த மலை. உறைமதி= முழுநிலவு. நுதால்= நெற்றியுடையவளே. குவளை= கருங்குவளை மலர்போன்ற கண்கள். குறைமதி= பிறைநிலா.

**பொழிப்புரை :** முழுநிலவுபோன்ற ஒளியுடைய ராமநாராயணன் மனத்தில் ஒளிரும் பிறை சூடிய அருள்தரு தாயுமானவன் எழுந்தருளியுள்ள புகழ்வாய்ந்த சிராமலை எல்லைப்பட்ட ஊரில் வாழும் பிறைநிலாப் போன்ற நெற்றியுடையவளே ! முழுநிலாப்போன்ற முகமுடைய தாய், தனது கருங்குவளை மலர்போன்ற கண்கள் மூடி உறங்கவில்லை. தலைவனை நெருங்குவது இயலாது.
**இலக்கணக்குறிப்பு :** குவளை - உவமைஆகுபெயர்.

( 225 ) **நாய் துஞ்சாமை**

உரைக்கும் பரி(சு)ஆர் சிராமலை யான்வரை ஊரகத்தே
வரைக்கும் பெரிய முலையாய் பொறாமை வளர்மடையர்
இரைக்கும் ஒலிபோல் தலைவர் எதிர்உற்று அழிஞமலி
குரைக்கும் இதற்(கு)என் செயலாம் எவண்தலைக் கூடுவதே.

**குறிப்புரை :**உரைக்கும்பரிசு- புகழும் தன்மை. இரைக்கும்= முழங்கும். அழிஞமலி= மிகுந்தநாய்கள். தலைக்கூடுவது எவண்= சேர்வது எப்படி.
**பொழிப்புரை :** அனைவரும் புகழும் தன்மைவாய்ந்த அருள்தரு தாயுமானனின் மலைப்பகுதி ஊர்வாழ் மலையைவிடப் பருத்த முலைகளுடையவளே ! வளரும்பொறாமையுடையவர் முழங்கும் ஒலிபோல் தலைவரின் எதிரேவந்து, மிக்க நாய்கள் குரைக்கின்றன. இதற்கு என்ன செய்வது? தலைவரைக் கூடுவது எப்படி !
**இலக்கணக்குறிப்பு :** இச்செய்யுள் உவமையணி.

( 226 ) **ஊர் துஞ்சாமை**

தூங்காத தாய்தூங் கினாலும் ஞமலி தொடரு குரைப்(பு)
ஓங்காத தாய்அடங்(கு) உற்றாலும் அன்பர் உறாவகைரா
நீங்காத கூத்தும் விழாவும் சிராமலை நேர்பதியார்
தாம்காத லாற்கொடு தூங்கார் மயில்இ(து)என் தாழ்வினையே.

**குறிப்புரை :** ஓங்காது= மேலும்மிகாது. உறாவகை= வரும்வகை. ரா= இரவு. காதலாற் கொடு-= விருப்பம்கொண்டு. என் தாழ்வினை= என்னிடம் தங்கிய தீவினை.
**பொழிப்புரை :** தூங்காத தாய் தூங்கினாலும், நாய்களின் தொடர்ந்த குரைத்தல் மிகாமல் அடங்கினாலும், அன்பர்கள் வரும்வகையில் இரவுமுழுதும் கூத்தும் விழாவும் நிறைவு உறாமையால் சிராமலையில் வாழ்கிறவர் அவற்றில் விருப்பம்கொண்டு தூங்கமாட்டார்கள். மயில்போன்றவளே ! இது என்பால் தங்கிய தீவினைப்பயனாகும்.

( 227 ) **காவலர் கடுகல்**

நடிக்கும் பதத்தர் சிராமலை அத்தர் நளிர்வரைப்பால்
கடிக்கும் குரைமுகன் தூங்கினும் ஊர்துயில் கண்கொளினும்
வடிக்கும் படைப்புயன் சாரா வணம்கா வலர்பறைகொண்(டு)
அடிக்கும் ஒலிமயில் கேட்கின் துயரில் அழுந்திடுமே.

**குறிப்புரை :** நடிக்கும் பதத்தர்= திருக்கூத்தியற்றும் திருவடியினராகிய. அத்தர்= சிவபிரான். நளிர் வரைப்பால்= குளிர்ச்சிபொருந்திய மலைக்கண். கடிக்கும் குரைமுகன்= கடிக்கவும் குரைக்கவும்கூடிய முகமுடைய நாய். வடிக்கும் படைப்புயன்= கூரிய படைதாங்கிய திருடர்.
**பொழிப்புரை :** திருக்கூத்தியற்றும் திருவடியினராகிய சிவபிரானின் குளிர்ச்சிபொருந்திய மலைக்கண், கடிக்கவும் குரைக்கவும் கூடிய முகமுடைய நாய் தூங்கினாலும், ஊரவர் உறங்கினாலும், கூரிய படையினைத்தாங்கிய திருடர் வராதவாறு இரவுக்காவலர் பறையடிக்கும் ஒலியை மயில்போன்றவள் கேட்டுத் துயரில் மூழ்குவாள்.

( 228 ) **நிலவு வெளிப்படுதல்**

பற்றைக் களைந்(து)அடி போற்றும் அவர்க்(கு)அருள் பண்ணவன்வாழ்
எற்றைக் கும்அழியாத் தூய சிராமலை யின்வரைப்பால்
பற்றைக் கடுக்கும் கரத்தாய் இறைவரப் பார்க்குமென்முன்
கற்றைக் கிரண நிலாவந்(து) உளத்தைக் கலக்கியதே.

**குறிப்புரை :** பற்று= யான் எனது என்ற அகப்பற்று புறப்பற்று. பண்ணவன்= சிவபிரான். பற்றை= செங்காந்தள் மலரினை. கடுக்கும்= ஒத்த. இறை= தலைவன். கிரணக் கற்றை= ஒளிக்கற்றை.
**பொழிப்புரை :** செங்காந்தள் மலர் ஒத்த கையினையுடையவளே ! யான் எனது என்ற இருவகைப் பற்றினையும் முற்றக்களைந்து தனது திருவடிகளைப் போற்றுகிறவர்களுக்கு அருளும்சிவபிரான் எழுந்தருளியுள்ள நிலையான தூய சிராமலை எல்லைக்கண், தலைவனின் வருகையை நோக்கியிருக்கும் என்முன்னனே ஒளிக்கற்றையுடன்கூடிய நிலாவந்து எனது உள்ளத்தை வருத்தியது.

229 ) **கூகை குழறல்**

கண்ஒளி காட்டும் கதிர்முன் குருடாய்க் கறைஇருட்டில்
நண்ஒளி ஊட்டுகண் கூகை குழறலால் நம்மிறைவர்

பண்ஒளி நாட்டும் சொலாய்இச் சிராமலைப் பார்வரைப்பால்
எண்ஒளி வாட்டிடு தீச்சகு னம்என எண்ணுவரே.

**குறிப்புரை** : கறை இருட்டு= காரிருள். நண் ஒளி= பொருந்திய ஒளி. கண் ஊட்டு கூகை. குழறல்= அலறுதல். பார்வரைப்பால்= பாறையின் பக்கம். பண்ணொளி நாட்டும்= பண்ணுக்குச் சிறப்பினை நிலைநிறுத்தும். எண் ஒளி= என் அழகு.

**பொழிப்புரை** : பண்ணுக்குச் சிறப்பினை நிலைநிறுத்தும் இன்சொல்லினளே ! இந்தச் சிராமலைப் பாறையின்பக்கம் இருந்து, பார்ப்பதற்கு ஒளிதரும் ஞாயிற்றின்முன் குருடாகவும், காரிருளில் பொருந்திய ஒளியால் கண்ணுக்குப் பார்வை தந்து காணும் கூகை அலறுதலால், அதுஎன்னுடைய அழகினை வருத்தும் தீயசகுனமாகும் என்று தலைவர் நினைப்பார்.

**விளக்கம்** : கூகை கண்அமைவு - " பகல் வெல்லும் கூகையைக் காக்கை " ( திருக்குறள். 481. )

( 230 )

### கோழி குரல்காட்டுதல்

ஆழிசூழ் பாரில் சிறந்த சிராமலை யாய்வரைப்பால்
கோழியூர் ஆளும் இறைஎன எண்ணியோ கொற்றவயின்
பாழிமா தோட்குகன் என்ன எணியோ படர்உறயான்
கோழிகூ விற்(று)இறை வேல்ஒளி கண்டதும் கோல்விழியே.

**குறிப்புரை** : கோழியூர்= உறையூர். இறை= அரசன். கொற்றவயின்= வெற்றியில். பாழி= பெருமை. மா= அழகு. எணி= எண்ணி. படர் உற= துன்புற. இறை= தலைவன். கோல்= அம்பு.

**பொழிப்புரை** : அம்பு போன்ற கண்களுடையவளே ! கடல் சூழ்ந்த உலகில் சிறந்த சிராமலையினளே ! மலைபக்கத்துக் கோழி, தலைவன் பிடித்துள்ள வேலின் ஒளியைக் கண்டதும், அவனைத் தன்பெயர் கொண்ட கோழியூரை - உறையூரை ஆளும் அரசன் என்றுஎண்ணியோ, வெற்றியில் பெருமை பொருந்திய அழகிய தோள்களுடைய முருகன் என்று எண்ணியோ நான்வருந்தக் கூவியது.

**இலக்கணக்குறிப்பு** : எணி - இடைக்குறை - செய்யுள் விகாரம்.

( இரவுக்குறி இடையீடு - முற்றிற்று )

## வரைதல் வேட்கை

********************************

( 231 )

### தலைமகளைப் பாங்கி பருவரல் வினவல்

அன்னை அயிர்த்(து)உரை செய்தன ளோஅல(து) ஆயம்உனைப்
பின்னை அறியா(து) உரைத்தன ரோயான் பிழைத்த(து)உண்டோ
தன்னை அனையார் இலாதான் சிராமலைத் தண்வரைப்பில்
என்னை அயில்விழி யாய்முகம் வாடிய(து) இன்(று)உனக்கே.

**குறிப்புரை** : அயிர்த்து= சந்தேகப்பட்டு. பின்னை அறியாது= பின்விளைவு அறியாமல். பிழைத்தது= தவறு செய்தது. என்னை= என்னகாரணம். அயில் = அழகு.

**பொழிப்புரை** : தன்னொப்பில்லாச் சிவனது தண்ணிய சிராமலையில் அழகிய கண்களுடையவளே ! தாய் உன்நடத்தையில் சந்தேகப்பட்டு ஏதும் சொன்னாளா ? அல்லது தோழியர் பின்விளைவு அறியாமல் ஏதும் கூறினரா ? நான் ஏதும் தவறு செய்துவிட்டேனா? இன்று உன்முகம் வாடியுள்ள காரணம் என்ன ?

( 232 )

### அருமறை செவிலி அறிந்தமை கூறல்

கலைக்கு நிகரிலான் ராமநா ராயணன் கருதுசிரா
மலைக்குள் ஒளிர்இறை வேணிப் பிறைநிகர் மாநுதலாய்
நிலைக்கு மதன்நிகர் வள்ளல் வராமைஎன் நெஞ்சி(ல்)நினைத்(து)
அலைக்கும் விழித்துளி கண்டுவெ குண்(டு)ஆய் அகன்றனளே.

**குறிப்புரை** : வேணிப்பிறை= சடையில் தரித்த பிறை. மா= அழகு. நிலை= குறியிடம். மதன் நிகர் வள்ளல்= மன்மதன் ஒத்த தலைவன். அலைக்கும்= வருந்தும். ஆய்= செவிலி.

**பொழிப்புரை** : கலைகளில் ஒப்பற்றவனான ராமநாராயணன் எண்ணிவழிபடும் சிராமலையில் ஒளிரும் சிவனது சடையில் தரித்த பிறைபோல் வளைந்த அழகிய நெற்றியுடையவளே ! குறியிடத்துக்கு மன்மதனை ஒத்த தலைவன் வராததை மனத்தில் நினைத்து வருந்திய கண்ணீர்கண்டு செவிலித்தாய் சினந்து கூறிப்போனாள்.

( 233 )

### தலைமகன் வரும்தொழிற்கு அருமை சாற்றல்

அன்னையும் அப்பனும் ஆன சிராமலை யான்வரைவாய்
அன்னையும் சூரனும் ஊரும்ஊர் காவலும் ஆண்(டு)அலையும்
பின்னையும் கூகையும் திங்களும் ஊறாப் பெரி(து)அடுத்து
முன்னைஉங் கேவரின் நம்இறை என்செயும் முற்றிழையே.

**குறிப்புரை** : சூரன்= வனதெய்வம். ஆண்டு அலையும்= அங்குச்சுற்றிவரும். ஊறா= இடையூறாக. உங்கே= வருமிடத்தில்.

**பொழிப்புரை** : முற்றிழையே ! தாயும் தந்தையுமான சிராமலையானது மலையில், தாய் வனதெய்வம், ஊரவர், ஊரெங்கும் சுற்றிவரும் ஊர்காவலர், மேலும் கூகை, திங்கள் முதலியன தலைவன் வர இடையூறாக வருமிடத்தில் முன்வந்தால் - குறுக்கிட்டால், தலைவன் என்ன செய்யமுடியும் ?

( 234 ) **தலைமகனது ஊர்க்குச் செல்ல ஒருப்படுதல்**

கூடிப் பிரியேல் எனும்ஔவை நன்மொழி கொண்டறிந்தும்
வாடிப் படர எனைப்பிரிந் தார்தமை வாய்ந்(து)அடைய
நாடிப் பிறைமௌலி வாழும் சிராமலை நற்பிடியே
தேடிப் பதியை அவரூரில் நாம்இனிச் செல்லுவமே.

**குறிப்புரை** : கொண்டு= மனத்தில் கொண்டு. வாய்ந்து= பெற்று. அவரூரில் பதியைத்தேடி. பதி= வீடு.

**பொழிப்புரை** : சடையில் பிறைசூடிய சிவபிரான் வாழும் சிராமலையில் உள்ள நல்ல பெண்யானைஒத்தவளே ! ஒருவருடன் கூடிஇருந்தபின் அவரைபிரியாதே என்ற ஔவையின் நல்ல சொல்லை மனத்தில் கொண்டு நன்கு அறிந்தபோதிலும், என்னைக்கூடியபின் நான்வருந்தித் துன்புற என்னைப்பிரிந்த தலைவரைப் பெற்றுவாழ, இனிஅவரது வீட்டினை அவரூரில் தேடி அடைவதற்கு நாம் செல்வோம்.

(235 ) **பாங்கி இறைவனைப் பழித்துஉரைத்தல்**

மதியார் மனைத்தலை வாயில் மிதித்திடல் மாண்(பு)அலவால்
முதியார் மொழிஇது கூடிப் பிரிந்தார் முறைமறந்தால்
விதியார் தலைக்கரர் வாழும் சிராமலை மென்பிடியே
இதியார் குறிப்பர் இனியார் அருளுவர் ஏ(கு)இடத்தே.

**குறிப்புரை** : தலைவாயில்= முன்வாயிபடி. முதியார்= ஔவையார். முறை= உறவுமுறை. தலை விதி ஆர் கரர்= பிறர் தலையில் அவர் விதியை எழுதும் கையினையுடைய சிவபிரான். இது + யார்= இதியார். குறிப்பர்= மதிப்பர். அருளுவர்= உதவுவர். ஏகு இடத்தே= செல்லுமிடத்தில்.

**பொழிப்புரை** : " உன்னைமதிக்காதவர் வீட்டின் முன்வாயிற்படியைக் கடந்து, அவரை மதித்துக்காண அவர் வீட்டுக்குச் செல்லுதல் நற்பண்பு அல்ல " என்ற ஔவைப்பாட்டியின் சொல்லை நினையாமல், உன்னைக்கூடிப் பிரிந்தவர் உன்னுடன் தனக்குரிய உறவுமுறையை மறந்தால், நீசெல்லும் அவ்விடத்தில் உன்னை யார் மதிப்பர் ? இனி உனக்கு யார் உதவுவர் ? அவரதுஊர்க்குச் செல்வதால் பயனில்லை.

**விளக்கம்** : " மதியாதார் வாசல் மதித்துஒருகால் சென்று, மிதியாமை கோடியுறும் " - ஔவையின் நான்குகோடிப் பாடல் நான்கில் ஒன்று.

( 236 ) **இறைவி இறையோன்தன்னை இயற்படமொழிதல்.**

காட்டு கதிர்ஒளி முன்தெரி யாமைநம் கண்குறையே
நீட்டு சுவைக்கரும் புக்கசத் தல்வாய் நிறைகுறையே
தோட்டு மலர்அணி பெம்மான் சிராமலைத் தொல்அணங்கே
நாட்டு வினைப்பய னேமறந் தார்நமை நல்லவரே.

**குறிப்புரை** : இயற்பட மொழிதல்= நல்லியல்புகளைக்கூறுதல். முன்காட்டு= பொருள்களை முதலில்காட்டும். தெரியாமை= நமக்குப்பொருள் புலப்படாமை. நீட்டுசுவை= மிக்கசுவை. தோட்டு= இதழ்களுடைய. தொல்= தொன்மைச்சிறப்பு. நாட்டுவினை= நடப்பு வினை. நமை மறந்தார் நல்லவர்.

**பொழிப்புரை** : இதழ்களுடைய கொன்றைமலர் சூடிய சிவபிரானது சிராமலைவாழ் தொன்மைச் சிறப்புடைய குடிப்பிறந்தவளே ! பொருள்களை முதலில் நமக்குக் காட்டும் சூரிய ஒளியில், பொருள்நமக்குப் புலப்படாமைக்குக் காரணம் சூரியனன்று; நம்கண்ணின் குறையே. மிக்க சுவையுடைய கரும்பு வாய்க்கு மிகவும் கசக்கும் காரணம் கரும்பன்று ; நம் நாவின் குறையே. அதுபோல நம்மை மறந்த தலைவர் நல்லவரே ஆவார். அவர் நம்மை மறந்தகாரணம் நம் நடப்புவினைப்பயனே.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் எடுத்துக்காட்டுவமையணி.

( 237 ) **இதுவும் அது**

என்கண் பனிப்பும் முலைப்பசப் பும்எணா(து) இன்புயத்தார்
புன்கண் தரவே பிரிந்தார் அவர்மேல் புரைஇலவே
வன்கண் மையிலாச் சிராமலை யான்வரை மாமயிலே
முன்கண் டஎன்புன் வினைஅலால் வேறு மொழிஇலவே.

**குறிப்புரை** : கண்பனிப்பு= கண்கலங்குதல். பசப்பு= பசலையுறல். எணாது= எண்ணாது. புன்கண்= துன்பம். புரை= குற்றம். வன்கண்மை=கொடுமை. முன்கண்ட= முன்பு கூறிய. வேறு மொழி இல= வேறு சொல்லவியலாது.

**பொழிப்புரை** : கொடுமைஇல்லாத சிராமலையானது மலையில் வாழும் அழகிய மயில்ஒத்தவளே ! எனது கண்கலக்கம், முலைப்பசப்பு ஆகியன எனக்குத் துன்பம் என்பதை எண்ணாமல் இனிமைதரும் தோள்களுடைய தலைவர் பிரிந்தார். அவர்மேல் குற்றம்இல்லை. முன்பு நான் குறிப்பிட்ட என் தீவினையே காரணம் என்பதைத் தவிர வேறொன்றைச் சொல்லவியலாது.

( 238 ) **கனவு நலிபுஉரைத்தல்**

வாராத் துயில்எனை மேவிட அன்பர் மருவுசுகம்
நேராத் தருநிலை அந்தோ சிராமலை நீள்வரைப்பால்
போராச் சிறைஅடித் தேகுரு(கு) அண்ணல் புறம்ஒழியச்
சோராத் தனிமூலை கூவிஎன் னுள்துயர் சூட்டியதே.

**குறிப்புரை :** நலிபு= துன்பம். மேவிட= வர. நேராத்தருநிலை= நெருங்கித் தரும்போது. போரா= எதிராக. சிறை= சிறகு. குருகு= பறவை - சேவல். அண்ணல் புறம் ஒழிய= தலைவன் நீங்க. சோரா= சோர்வின்றி. மூலை= மூலையில். சூட்டியது= தந்தது.

**பொழிப்புரை :** இரவில் அதுவரைவராத உறக்கம் எனக்குவர, கனவில் தலைவன் என்னை நெருங்கித் தழுவுவதாலான சுகம்தரும் நிலையில், கனவுக்கு எதிராகச் சிராமலையின் நீண்டபகுதியின் ஒருமூலையில் இருந்துசோர்வின்றி - தொடர்ந்து சேவல்தனது சிறகடித்துக் கனவில்வந்த தலைவன் நீங்குமாறு கூவி, என்மனத்தில் துயரத்தைத் தந்தது.

( 239 ) **கவின் அழிபுஉரைத்தல்**

ஊட்டும் மழைக்கரன் ராமநா ராயணன் உள்நயக்கும்
நீட்டும் மழைசார் சிராமலை யன்ன நிறைநிலையர்
காட்டும் மழைக்கணி ஏழை நலனைக் களவில்எடுத்(து)
ஆட்டும் மழைப்பச லைக்(கு)இட மென்முலை ஆக்கினரே.

**குறிப்புரை :** கவின் அழிபு= அழகு அழிந்தமை. மழை ஊட்டும் கரன்= மழைபோல் வழங்கும் கைகளுடையவன், மழை நீட்டும் சார்= மழை மிகச் சார்ந்த. நிறைநிலையர்= மாட்சிமையுடையவர். மழை காட்டும் கணி ஏழை= குளிர்ச்சிதரும் கண்களுடைய பெண். களவில் எடுத்து= பிறர் அறியாதவாறு துய்த்து. ஆட்டும்= துன்பம்தரும். மழைப்பசலைக்கு இட= மிக்க பசலைக்குத்தந்து.

**பொழிப்புரை :** மழைபோல்வழங்கும் கைகளுடையவனாகிய ராமநாராயணன் நினைத்து மனம் மகிழும் மழைமிகச் சார்ந்த சிராமலை போன்ற மாட்சிமையுடையவர் - தலைவர் - , குளிர்ச்சிதரும் கண்களுடைய பெண்ணாகிய என்நலனைப் பிறர் அறியாதவாறு துய்த்து, இப்போது என்முலையைத் துன்பம்தரும்மிக்க பசலையுடைய மென்முலையாக ஆக்கினார்.

**விளக்கம் :** புணர்ச்சிக்காலத்தில் சற்றே வன்மைபெற்று அழகுடன்விளங்கும் முலை, அஃது இல்லாதபோது மென்மையுடன் அமையும். மென்முலை ஆக்கினார் என்றதன்மூலம் புணர்ச்சிஇன்மை குறித்தாள்.

( 240 ) **தன்துயர் தலைவர்க்கு உணர்த்தல்வேண்டல்**

வாசம் படிந்த சிராமலை ஈசர் வரைஇடத்தே
நேசம் படிந்(து)எவர் அன்ப ரிடம்போய் நிறைஎனது
பாசம் புகன்(று)என் மெலி(வு)உரைப் பார்இப் பரி(வு)டையார்
தேசம் புகழஎன் ஆவிதந் தாராம் திருநுதலே.

**குறிப்புரை :** வாசம்= நீர் - மேகம். எனது நிறை பாசம்.

**பொழிப்புரை :** மேகம் படிந்த சிராமலையின் இறைவனது எல்லைக்கண் சென்று, நாடு புகழ மிக்க அன்புடன் எனக்கு உயிர்கொடுத்தவராகிய அன்பரிடம் போய் எனது நிறைந்த அன்பினைச் சொல்லி இந்த என்வருத்தத்தைக் கூறும் அன்புடையவர் எவர் ? ( நீசொல் என்பது குறிப்பு. ).

**இலக்கணக்குறிப்பு :** வாசம் - காரிய ஆகுபெயர்.

( 241 ) **துன்புறு பாங்கி சொல்எனச் சொல்லல்**

என்னே பிறர்போய் உரைப்ப(து)உன் உள்ளத்(து) இருந்துகொண்டே
உன்நே யமும்மெலி வும்தெரி அன்பருக்(கு) ஓங்கு உளத்தால்
அன்னே எனில்அருள் செய்யும் சிராமலை அண்ணல்உயர்
தன்நேய மாம்மலை ஒக்கும் முலையாய்நீ சாற்றுகவே.

**குறிப்புரை :** என்னே= ஏன். அன்பருக்குத்தெரி. அன்னே= தாயே. சாற்றுக= கூறுக.

**பொழிப்புரை :** உயர்ந்த மனத்துடன் தாயே ! என்று அழைத்தால் அருள்புரியும் இறைவனது அன்பரிடம் - உன்காதலரிடம் உனது உள்ளத்தில் உள்ள அன்பையும், வருத்தத்தையும் பிறர்போய்க் கூறுவது ஏன் ? சொல். மலைஒத்த முலையுடையவளே ! உன்அன்பை நீகூறுக.

(424 ) **அலர்பார்த்து உற்ற அச்சக்கிளவி**

பொன்அலர் வேணி அணியும் சிராமலைப் புண்ணியர்வேள்
முன்அலர் தூற்றச் சகியா(து) உறல்விழி முன்திறந்தார்
மன்அலர் வாளி உருவிலி தூற்ற மருவியஊர்
துன்னலர் தூற்றில் சகிப்பனோ சொல்லுக தூமொழியே.

**குறிப்புரை** : பொன் அலர்= சரக்கொன்றைமலர். புண்ணியர் முன். வேள் அலர் தூற்ற= மன்மதன் மலரம்புகளைச் சொரிய, உறல் சகியாது= விழுந்த அதனைப்பொறுக்காது. நுதல்கண் திறந்தார் ஊர்= நெற்றிக்கண் திறந்தவர் ஊரில். மன் அலர் வாளி= பெருமைபொருந்திய மலரம்புகளை. உருவிலி= மன்மதன். மருவிய துன்னலர்= உடன்பழகும் மாற்றார்.

**பொழிப்புரை** : சரக்கொன்றை மலர்மாலை அணியும் சிராமலைப் புண்ணியனான இறைவன்முன், மன்மதன் மலரம்புகளைச் சொரிய, விழுந்த அதனைப் பொறுக்காது நெற்றிக்கண் திறந்து நோக்கிய அருள்தரு தாயமானவனின் ஊரில், தூமொழியாளே ! பெருமைபொருந்திய மலரம்புகளை மன்மதன் என்மேல் சொரிய, அதனால் உடன்பழகும் மாற்றார் பழிச்சொற்களை என்மேல் சொரிந்தால் பொறுத்துக்கொள்வேனா.

**விளக்கம்** : மலரம்புகளைப் பொறுக்காதவன் ஊரில்வாழும் நான், மலரம்புகளை எவ்வாறு பொறுப்பேன் என்றாள்.

( 243 ) **ஆறுபார்த்து உற்ற அச்சக்கிளவி**

சூரும் புலியும் திரிதடம் தாண்டிச் சுடர்வடிவேல்
நேரும் விழிஅணங் கேஇறை மேவல் நினந்(து)உருகி
நீரும் மதியும் முடிக்கொள் சிராமலை நித்தர்உறை
சாரும் மலைவாய் அவர்பின் தொடர்ந்த(து)என் தண்உளனே.

**குறிப்புரை** : சூர்= வனதேவதை. தடன்= வழி. நேரும்= ஒக்கும். மேவல்= இங்கு வருதல். நித்தர்= சிவபிரான். சாரும்= பொருந்திய. தண் உளன்= மென்மையான மனம்.

**பொழிப்புரை** : ஒளிபொருந்திய கூரிய வேல்போன்ற கண்களுடையவளே ! கங்கையும் பிறையும் சூடிய சிராமலைச் சிவபிரான் எழுந்தருளியுள்ள மலைக்கண் பொருந்திய வனதேவதைகளும், புலிகளும் திரியும் வழியினைத்தாண்டித் தலைவர் இங்கு வருவதை எண்ணி என்மென்மையானமனம் உருகி அவரைத்தொடர்கிறது.

( 244 ) **காமம்மிக்க கழிபடர் கிளவி**

வண்(டு)அலை தண்டலை யேகாண் உளம்துயர் மண்(டு)அலையே
கண்(டு)அலைமேவு மனமே அவர்மனம் கல்மனமே
விண்தலை மேவும் சிராமலை வாய்அனம் வேண்டலையே
கொண்(டு)அலை சாரும் கரையேயான் காணலை கொண்கரையே.

**குறிப்புரை** : தண்டலை= சோலை. துயர்மண்டு அலையே கண்டு= துயரம் மண்டிய அலைகளால். அலைமேவு மனமே= அலைபாயும் மனம். விண்தலை மேவும்= வானத்து உச்சியைத்தொடும். சிராமலை வாய்= சிராமலைக்கண். அனம் வேண்டலை= அன்னப்பறவை விரும்பும் அலையுடன். அலைகொண்டு சாரும்கரையே= அலைசென்று அடையும் கரையே. யான் கொண்கரைக் காணலையே= நான் இதுவரை தலைவரைப் பார்க்கவில்லை.

**பொழிப்புரை** : வானத்து உச்சியைத் தொடும் சிராமலைக்கண் வண்டுகள் அலையும் சோலையே ! உள்ளத்தில் துயரம் மண்டிய அலைகளால் அலைபாயும் மனமே ! தலைவர்மனம் கல்மனமாகும் ! அன்னப்பறவை விரும்பும் அலையுடன் அலைசென்றடையும் கரையே ! நான் என்கணவரை இதுவரை காணவில்லை.

**இலக்கணக்குறிப்பு** : தண்டலையே காண் - காண் - அசைநிலையாய்வந்த இடைச்சொல். இச்செய்யுள் சொல்பின்வருநிலையணி.

( 245 ) **தன்னுள் கையாறுஎய்திடு கிளவி**

ஏத்தா இறைஞ்ச அருளும் சிராமலை என்பெருமான்
காத்தார் அருளின் உறையும் தளிசார் கருங்கடலே
மீத்தாம் இரங்கினை வால்வளை சிந்தினை மேவுமனை
நீத்தாய் உனையும் பிரிந்தார் உளரோ நிகழ்த்துகவே.

**குறிப்புரை** : ஏத்தா= போற்றி. இறைஞ்ச= வேண்ட. காத்தார்= காத்து தளி= குளிர்ச்சி. மீ= மிகவும் வால்வளை= வெண்சங்கு. மனை நீத்தாய்= இடம் விட்டாய். நிகழ்த்துக= கூறு.

**பொழிப்புரை** : போற்றி வேண்ட அருள்புரியும் சிராமலைவாழ் எமதுபெருமான் காக்க, அவர்அருளால் வாழும் குளிர்ச்சிபொருந்திய கடலே ! மிகவும் வருந்தினாய், வெண்மையான சங்குகளை வாரிஇறைத்தாய், பொருந்திய இடம்விட்டு அலைகிறாய், உன்னை பிரிந்தவர் உண்டோ ! கூறுக.

**இலக்க்ணக்குறிப்பு** : ஏத்தா - செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். காத்தார் - முற்றெச்சம்.

( 246 ) **நெறி விலக்குவித்தல்**

செங்காவித் தார்புனை ராமநா ராயணன் சிந்தைசெயும்
மங்கா இருள்களன் வாழும் சிராமலை மால்வரைப்பால்
பொங்கா இருட்டில் புலிசூர் கரிஅரி பூண்டுதிரி
எம்கா விடைவாரல் என்னுதி அன்பரை வேல்விழியே.

**குறிப்புரை :** செங்காவித்தார்= செங்கழுநீர் மாலை. களன் மங்கா இருள்= கழுத்தில் ஒளிரும் நஞ்சுக்கறை. பொங்கா=பொங்கும் - மேன்மேல்மிகும். பூண்டு= சூழ்ந்து. எம்கா= அமது சோலை. வாரல்= வராதே.

**பொழிப்புரை :** செங்கழுநீர் மாலையணிந்த ராமநாராயணன் நினைந்து வழிபடும், கழுத்தில் ஒளிரும் நஞ்சுக்கறையுடைய சிவபிரானின் சிராமலையில், மேன்மேலும் மிகும்இருளில் புலி, சூர், யானை, சிங்கம் சூழ்ந்து திரியும் மலைப்பக்கமுள்ள எமது சோலைக்குத் தலைவரை வரராதே என்று வேல்போன்ற விழியுடையவளே கூறுக.

**( 247 )** **குறி விலக்குவித்தல்**

மல்வில் எனும்போர் இரண்டும்முன் பாண்டவ மன்னொடுசெய்
சொல்லில் விளங்(கு)இறை வாழும்சிராமலை சூழ்வரைவாய்
நல்இல் விடுத்தே தினைப்புனம் காஎன நாட்டினளால்
அல்லில் வரல்ஒழி என்(று)உரை ஆய்இழை அன்பரையே.

**குறிப்புரை :** மல்= மற்போர். போர் இரண்டு= மற்போர் விற்போர். பாண்டவமன்= அருச்சுனன். இல்= வீடு. கா= காக்கச்செல். நாட்டினள்= பணித்தாள். அல்= இரவு.

**பொழிப்புரை :** பாண்டவருள் ஒருவனாகிய அருச்சுனனுடன் மற்போர், விற்போர் இரண்டும் செய்தவனும், புகழில் சிறந்துவிளங்குகிறவனும் ஆகிய சிவபிரான் எழுந்தருளியுள்ள சிராமலையைச் சுற்றியுள்ள இடத்ததாகிய வளமான வீட்டினைவிட்டு, நீ தினைக்கொல்லையைக் காக்கச்செல் என்று தாய், தலைவியைப் பணித்தாள். எனவே இரவில் குறிஇடத்துக்கு வராதே என்று பாங்கியே தலைவரிடம் கூறு.

**விளக்கம்:** அருச்சுனனுடன் சிவபிரான் மற்போர் விற்போர் செய்ததை வில்லிபாரதம் " அருச்சுனன் தவநிலைச் சருக்கம் " விரித்துரைக்கும்.

**( 248 )** **வெறி விலக்குவித்தல்**

மாயப் பிறப்(பு)அறுக் கும்சீர்ச் சிராமலை மாண்வரைப்பால்
ஏயப் புணர்ந்தே பிரிந்தார் தருநோய் இதுஅறியாள்
நேயப் படிஅனை வேலனை வேண்டினள் நீள்வெறியும்
தோய்அப்(பு )அனையகண் ணாய்இதை மாற்றுக சூழ்ந்(து)உரைத்தே.

**குறிப்புரை :** பிறப்பு மாய அறுக்கும்= உயிரின்பிறப்புக் கெட உயிரிலிருந்து அதனைப்பிரிக்கும். ஏய= பொருந்த. அறியாள்= தாய் அறியவில்லை. நேயப்படி= அன்பின் காரணமாக. நீள் வெறியும் தோய்= சிறந்த வேலனாடலில் பழுத்த. நீள்வெறியும் தோய் வேலனை வேண்டினள். அப்பு= அம்பு. சூழ்ந்து= ஆராய்ந்து..

**பொழிப்புரை :** உயிரின் பிறப்புக் கெட உயிரிலிருந்து அதனைப் பிரிக்கும் சிறந்த சிராமலையின் மாட்சிமைப்பட்ட மலைப்பகுதியில், என்னைப் பொருத்தமுறப் புணர்ந்ததலைவர் தந்தநோய் இதுஎன்பதை அன்னை அறியாதவளாய், அன்பின் காரணமாகச் சிறந்த வெறியாடலில் - வேலனாடலில் பழுத்த வேலனை வேண்டிக்கொண்டாள். அம்புஒத்த கண்களுடையவளே ! நன்கு ஆராய்ந்துபார்த்துக் கூறி வெறியாட்டை மாற்று.

**( 249 )** **பிறர் விலக்குவித்தல்**

சேலில் திகழ்விழி பங்கன் சிராமலைச் சீர்வரைப்பால்
மாலில் பெருமணம் கொள்ளக் குவைநன் மணிஎடுத்(து)இப்
பாலில் பலர்அயல் வந்தார் எனும்மொழி பற்றும்எரி
வேலில் துளைத்(து)இரு செஞ்செவி புக்க விளங்கிழையே

**குறிப்புரை :** மால்= ஆசை. நன்மணிக்குவை. குவை= குவியல். இப்பாலில்= இங்கு. அயல்= அயலார். எரிபற்றும்வேல்= பழுக்கக் காய்ந்த வேல். இருசெஞ்செவி துளைத்துப் புக்க. புக்க= புகுந்தன.

**பொழிப்புரை :** விளங்கிழையே ! கெண்டைமீன்போல விளங்கும் கண்களுடைய உமையவளை இடப்பாகம் கொண்ட சிவனது சிராமலையின் சிறப்புவாய்ந்த இப்பகுதிக்கு, ஆசைகாரணமாக நல்ல நவமணிகளை எடுத்துக் கொண்டு என்னைச் சிறந்தமுறையில் மணக்க அயலார்பலர் வந்தனர் என்றசொற்கள், பழுக்கக்காய்ந்த வேலினால் என்னிருகாதுகளையும் துளைத்துப் புகுந்தன.

**இலக்கணக்குறிப்பு :** விழி பங்கன் - வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

**( 250 )** **குரவரை வரைவு எதிர் கொள்ளுவித்தல்**

மான்கொண்ட கையர் வதியும் சிராமலை மாணிழையே
நான்கொண்ட காதலும் அன்பும் அனைக்கு நயந்(து)ரைத்தே
வான்கொண்ட யாழோர் மணம்கொண்ட அன்பர் வதுவைகொளத்
தான்கொண்ட தூது விடுப்பின் எதிர்கொளச் சாற்றுவையே.

**குறிப்புரை :** வதியும்= வாழும். அனை= அன்னை. வான்கொண்ட யாழோர் மணம்= வானுலககக் கந்தர்வர் மணம். வதுவை= திருமணம். எதிர்கொள= வரவேற்று ஏற்க.

**பொழிப்புரை :** கையில் மான்ஏந்திய சிவபிரான் எழுந்தருளியுள்ள சிராமலையில் வாழும் மாட்சிமையுடைய அணிகலன் அணிந்தவளே ! நான் தலைவன்மேல்கொண்ட காதல் அன்பு ஆகியவற்றைத்

தாயாருக்கு நயமாகக் கூறி என்னை வானுலக யாழோர் மணம்கொண்ட அன்பர், மணந்துகொள்ளத் தூது அனுப்பினால் அதனை வரவேற்று ஏற்றுக்கொள்ளக் கூறுக.

( வரைதல் வேட்கை - முற்றும் )

## வரைவு கடாதல்

************************

### வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பல்

( 251 ) பணம்திகழ் பார்க்(கு)ஓர் விளக்காம் சிராமலைப் பண்வரைப்பால்
மணம்திகழ் தாரவ அன்னைதான் என்னை மயிலுறக்கம்
தணந்(து)இகழ் வான்ஏன் எனவினா வியற்றியான் தக்கபடி
கணம்திகழ்(வு) ஆய கன(வு)எனக் கூறிக் கரந்தனனே.

**குறிப்புரை :** வரைவு கடாதல்]= மணந்துகொள்ளத் தூண்டுதால். பணம்= ஆதிசேடனின் படம். பார்= உலகு. வரைப்பண் பால்= எல்லையில்அமைந்த இடம், தாரவ= மாலை சூடியவளே. என்னை= என்னிடம். தணந்து= வெறுத்து. இகழ்வான் ஏன்= இகழ்தல் ஏன். கணம் திகழ்வு ஆய கனவு= பேய் தோன்றிய கனவு. கரந்தனன்= மறைத்தேன். வரைப்பண்பால் மயில் என்று கூட்டுக.

**பொழிப்புரை :** ஆதிசேடனின் படத்தின்மேல் விளங்கும் உலகிற்கு ஒப்பற்ற விளக்காக விளங்கும் சிராமலையில், மணக்கும் மாலை சூடியவளே ! தாய் என்னிடம், எல்லையில் அமைந்த இடத்துமயிலின் உறக்கத்தை வெறுத்து அதனை நீ இகழ்தல் ஏன் ? என்று கேள்விகேட்க, நான் பேய்தோன்றியகனவு ( அதனால் இகழ்ந்தேன் ) என்று தக்கபடி சொல்லி மறைத்தேன்.

**விளக்கம் :** தலைவன் வந்தால் மயில் உறக்கம் நீங்கி அஞ்சி அகவும். மயில் உறங்கக் காரணம் தலைவன் வராமையே. தலைவன் வராமையை மயில்மேலேற்றி அதன் உறக்கத்தை இகழ்ந்தாள்

**இலக்கணக்குறிப்பு :** தணந்து இகழ்வான் - இகழ்வான் - வான் ஈற்றுத்தொழிற்பெயர். ( நன்னூல் சூ. 343. உரையில் கோடல் உத்தி. )

( 252 ) **அலர் அறிவுறுத்தல்**

நலரே பணியும் சிராமலை நாதன் நளிர்வரைப்பால்
வலரே புணர்ந்து கருணை புரிந்தவும் வண்மையினால்
பலரே இயம்ப அரும்பிஊர் முற்றப் பரவியதாம்
அலரே எடுத்து வடுவா விளைந்த(து)எம் ஆயிழைக்கே.

**குறிப்புரை :** நலர்= நல்லவர். நளிர் வரைப் பால்= பெருமை பொருந்திய மலைப்பக்கம். வலர்= வெற்றிக்குரியவர் / வல்லவர். வண்மையினால்= வலிமையாக - உறுதிப்பட. அரும்பி= தோன்றி. அலர் எடுத்து= பழி தூற்றி. வடு= குற்றம் / கேடு.

**பொழிப்புரை :** நல்லவர்கள் வணங்கும் சிராமலை இறைவனது பெருமைபொருந்திய மலைப்பக்கம், வெற்றிக்குரியவராகிய தலைவர் என்னைக்கூடிக் கருணை காட்டியதை, வலிமையாகப் பலர்கூற அதுமுதலில் தோன்றி, பிறகு ஊர்முழுதும் பரவி, பழிதூற்றவளர்ந்து என்குற்றமாக விளைந்தது.

( 253 ) **தாய் அறிவுறுத்தல்**

மாகம் இயையும் சிராமலை நாதர் வரைஅனையாள்
சோகம் இயைமுகச் சோர்வும் பசப்பும் சுடர்ஏரிக்கண்
பாகம் இயைய அனைகண்(டு) இறையவ பாவைகொண்ட
மோகம் இயைகள(வு) எல்லாம் உணர்ந்தாள் முனி(வு)அமைந்தே.

**குறிப்புரை :** மாகம் இயையும்= வானளாவும். வரைஅனையாள்= மலைபோன்ற தலைவி - நிலைகுலையாத தலைவி. இயை= பொருந்திய. பாகம்= அச்சம். அனைகண்டு= தாய் பார்த்து. இறையவ= தலைவனே. மோகம்இயை களவு= காமமயக்குடன் கூடிய கள்ளம். முனிவு அமைந்து= சினமுடன்.

**பொழிப்புரை :** தலைவனே ! வானளாவிய சிராமலை இறைவனது மலைபோல் நிலைகுலையாத தலைவியிடம் முகத்தில் பொருந்திய சோகமும் சோர்வும், உடற்பசப்பும், ஒளிரும் கண்களில் அச்சமும் கண்ட தாய், பாவை போன்ற தன்மகளின் காமமயக்குடன் கூடிய கள்ளமும் பிறவும் உணர்ந்து சினம்கொண்டாள்.

( 254 ) **வெறி அச்சுறுத்தல்**

சொல்வலன் ராமநா ராயணன் நெஞ்சுள் சுடர்உருவாய்
நல்வலன் கொண்டார் சிராமலை நாதர் நளிர்வரைப்பால்
கொல்வலன் கொள்வேல் விழியாள் துயர்ஆய் கொடுதணிக்க
மல்வலன் கொள்புய ஆட்(டு)உயிர் நீக்க மதித்தனளே.

**குறிப்புரை :** சொல்வலன்= வெல்லும்சொல்லின்றிப் பேசும். நல்வலன்= சிறந்த வெற்றி. நளிர்=பெருமை. கொல்வலன் கொள்வேல்= கொல்லுவதில் வெற்றிஉடைய வேல். ஆய்= தாய். ஆட்டு உயிர்கொடு= ஆட்டினைப் பலியிட்டு. துயர் நீக்க= வருத்தத்தைப் போக்க. மதித்தனள்= துணிந்தாள்.

**பொழிப்புரை** : வெல்லும்சொல்லின்றிப் பேசும் ராமநாராயணன் ஆகிய நல்ல வெற்றிகொண்டவரின் மனத்தில் ஒளிஉருவாய் நின்ற சிராமலை நாதரது பெருமைபொருந்திய மலைக்கண், மற்போரில் வெற்றி கொள்ளும் தலைவனே ! கொல்வதில் வெற்றியுடைய வேல்போன்ற கண்களுடைய தலைவியின் வருத்தத்தை, ஆட்டின் உயிர்கொண்டு - ஆட்டினைக் கொன்று - தணிக்கத் தாய்துணிந்தாள்.

( 255 ) **பிறர் வரைவு உணர்த்தல்**

வரோதயன் ராமநா ராயண வள்ளல் வழுத்துநிரந்
தரோதயம் ஆகும் சிராமலை யான்வரைத் தண்மயிலைக்
கரோதய வேலோய் விரும்பார் உளரோ கவின்ஒளிச்சந்
சிரோதய நேர்கடல் போல்நிறைந் தார்அயல் சீர்வரைக்கே.

**குறிப்புரை** : வரோதயன்= வரத்தால்பிறந்தவன். நிரந்தரோதயம்= என்றும் தோன்றும் - அழிவில்லாத. தண்மயில்= மென்மையான மயில். சீர்வரைக்கே அயல் நிறைந்தார்.

**பொழிப்புரை** : வரத்தினால் பிறந்த ராமநாராயண வள்ளல் வணங்கும் அழிவில்லாதவனாகிய சிராமலையானின் மலைக்கண் வாழும் மென்மையான மயில் போன்ற தலைவியை மணக்க விரும்பாதவர் யார் ?, கையில் வேல்தாங்கியவனே ! அழகிய நிலவு தோன்றும் கடல்போல் மிகப்பலராய் மணக்க விரும்பியஅயலார் சிறப்புவாய்ந்த இம்மலைக்கண் வந்து நிறைந்துள்ளனர்.

**இலக்கணக்குறிப்பு** : மயில் - உவமை ஆகுபெயர். இச்செய்யுள் உவமையணி.

( 256 ) **வரைவுஎதிர் உணர்த்தல்**

பாதம் படிவார்க்(கு) அருளும் பெருமான் பனிவரையாம்
போதம் படியும் சிராமலைப் பால்மலை போற்புயநீ
வீதம் படிய மறையவ ரோடும் விழைந்துவரின்
நீதம் படிஎமர் நேர்எதிர் கொள்வர் நினைஉகந்தே.

**குறிப்புரை** : வரைவு= திருமணம். படிவார்= வணங்குவார். பனி= குளிர்ச்சி. போதம்= ஞானம். வீதம்= அமைதி. வரின்= பெண்கேட்க வந்தால். நீதம்= நீதி - முறைமை. நேர் எதிர்கொள்வர்= இசைந்து எதிர்கொண்டழைப்பார்கள்.

**பொழிப்புரை** : தன்திருவடிகளை வணங்குகிறவர்களுக்கு அருள்புரியும் அருள்தரு தாயுமானவரின் குளிர்ச்சிபொருந்திய ஞானம்பொருந்திய சிராமலையில், மலைஒத்த தோள்களுடைய நீ முறைப்படி மறையவருடன் தலைவியை மணக்க விரும்பிவரின் முறைப்படி எம்மவர் உன்னை மகிழ்வுடன் இசைந்து எதிர்கொள்வர்.

( 257 ) **வரையும்நாள்** உணர்த்தல்

பணிபொன் சொரிந்தருள் ராமநா ராயணன் பண்கரம்போல்
கணிபொன் சொரிந்த கலைமதி ஊருற்ற காலம்இதே
மணிபொன் கொழிக்கும்பொன் னித்தென் சிராமலை மாண்வரைப்பால்
அணிபொன் வரைப்புய மன்றலை ஆக்குவர் ஆர்ந்(து)எமரே.

**குறிப்புரை** : பணி= அணிகலன். பண்= தகுதி. கணி பொன் சொரிந்த= வேங்கைமரம் பொன்போல் மலர் சொரிந்த. அணி= அழகு. பொன்வரை= மேருமலை. மன்றலை ஆக்குவர்= மணம்செய்வர்.

**பொழிப்புரை** : பிறர்க்கு அணிகலனும் பொன்னும் சொரியும் ராமநாராயணனின் தகுதிவாய்ந்த கையினைப்போல், வேங்கைமரம் பொன்போல் மலர்களைச் சொரிகின்ற கலைகள் நிறைந்த முழுநிலா வானில் ஊர்ந்துவரும் இக்காலத்தில்தான் , அழகிய மேருமலை ஒத்ததோள்களுடையவனே ! நவமணிகளையும் பொன்னையும் கொழித்துவரும் காவிரியாற்றின் தென்பால் உள்ள சிராமலையாகிய மாட்சிமைப்பட்ட இடத்து எம்மவர், ஆரவாரத்துடன் திருமணம் செய்வர்.

( 258 ) **தலைமகள்அறிவு தலைமகற்கு அறிவுறுத்தல்**

முருகவேள் என்றிடும் ராமநா ராயண மூதறிஞன்
பெருகவே சொல்லும் சிராமலை யான்வரைப் பேரணங்(கு)உள்
உருகவே கொள்ளும் தனதுயர் எற்கும் உணர்த்திலள்மன்
கருகவே நீத்த நினைப்பழி சாரல் கருத்(து)உணர்ந்தே.

**குறிப்புரை** : அறிவு= எண்ணம். மூதறிஞன்= ஞானி. சொல்லும்= புகழும். தன துயர்= தனது துயரம். எற்கும்= எனக்கும். மன்கருக= பெருமை அழிய. பழிசாரல்= பழி சேர்தல்.

**பொழிப்புரை** : முருகப்பெருமான் என்றுசொல்லத்தக்க ராமநாராயணன் ஆகிய ஞானி மிகுதியும் புகழும் சிராமலை இறைவனது மலைத் தலைவி தனது உள்ளம் உருகக்கொண்ட தனதுதுயரத்தை எனக்காவது உணர்த்தின் அதனால் உன்பெருமை அழிய, நீ தன்னைப்பிரிந்த பழி உன்னைச் சேர்ந்துவிடும் என்ற எண்ணத்தால் எனக்குச் சொல்லவில்லை.

(259 ) **குறி பெயர்த்துஇடுதல்**

நற்றேன் அலம்பும் தொடையாய் சிராமலை நல்வரைப்பால்

உற்றே உணர்தர இங்ஙன் அயிர்த்தார் உறின்உறுவர்
மற்றே இவண்விடுத்(து) அன்னமும் நீயும் மகிழ்கலந்து
சற்றே நிலவுசேண் ஆர்குறி சேரத் தயைபுரியே.

**குறிப்புரை** : அலம்பும் தொடை= ததும்பும் மாலை. அயிர்த்தார்= ஐயம்கொண்டார். உறின் உறுவர்= வந்தாலும் வருவர். இவண்விடுத்து= இவ்விடம் விட்டு. மகிழ்கலந்து= மகிழ்வுடன் கலந்திருக்க. சற்றே சேண் நிலவு ஆர் குறி= சிறிது தொலைவில் உள்ள குறியிடம்.

**பொழிப்புரை** : தூயதேன் ததும்பும் மாலையணிந்தவனே ! சிராமலையின் நல்ல எல்லையில், சிறிது உணர்ந்ததால் ஐயம்கொண்டவர் இங்கு வந்தாலும்வருவர். எனவே இவ்விடம்விட்டு, நீயும் அன்னம்போன்ற தலைவியும் மகிழ்வுடன் கலந்திருக்கச் சிறிதுதொலைவில் உள்ள குறியிடம் அடைவதற்குக் கருணைகாட்டுக.

**( 260 )** **பகல்வருவானை இரவுவருக என்றல்**

பல்லவர் கோன்பணி கொண்ட சிராமலைப் பண்ணவன்வாழ்
நல்லவர் போற்றும் வரைப்பால் இறைவ நயந்(து)இனிய
பல்லவ மேனி மதிமுகம் கண்(டு)அணை பாக்(கு)இனிநீ
சொல்அவம் சாரா இரவின் இடைவரச் சூழுகவே.

**குறிப்புரை** : பல்லவர் கோன்= மகேந்திரவர்ம பல்லவ அரசன். பணிகொண்ட= குடைவரைபெற்ற. பல்லவம்= தளிர். அணைபாக்கு= புணர்வதற்கு. அவம்சொல்சாரா= பழிச்சொல் வராத. சூழுக= முற்றும் ஆராய்க.

**பொழிப்புரை** : தலைவனே ! மகேந்திரவர்ம பல்லவஅரசனின் குடைவரை பெற்ற சிராமலையில், இறைவன் வாழும் இடமாகிய நல்லவர் போற்றும்மலைப்பக்கம் நீ விருப்புடன் இனியதலைவியின் தளிர்போன்றமேனி, நிலவுபோன்றமுகம் ஆகியன கண்டு புணர்வதற்கு, இனிமேல் பழிச்சொல் வராத இரவுநேரத்தில் குறியிடம் வருவதற்கு ஆராய்க.

**விளக்கம்** : அருள்தரு தாயுமானவர் திருக்கோயில்நுழைவாயிலுக்கு எதிரே, அருள்தரு உச்சிப்பிள்ளையார் கோயிலுக்குச் செல்லும்படிகட்டு இடப்புறம் உள்ள குடைவரைமண்டபக்கல்வெட்டு, மகேந்திரவர்மபல்லவன், சமண சமயத்திலிருந்து இருந்து சைவனாக மாறியதை அறிவிக்கிறது. மகேந்தரவர்மபல்லவனைக் குணபரன் என்றும் குறிக்கிறது. “ லிங்கத்தை வழிபடும் குணபரன் என்னும் பெயர்கொண்ட அரசன், இந்த லிங்கத்தினால் புறச்சமயத்திலிருந்து திரும்பிய ஞானம் உலகத்தில் நீண்டநாள் நிலைநிற்பதாக” என்கிறது அக்கல்வெட்டு. ( டாக்டர். மா. இராசமாணிக்கனார். பல்லவர் வரலாறு. 1952. பக்கம். 94 )_

**( 261 )** **இரவுவருவானைப் பகல்வருக என்றல்**

கூடல் அழகர்சா மிப்பேர்ப் புலவன் குறித்துபணி
நாட விரும்பும் சிராமலை அண்ணல் நளிர்வரைப்பால்
தேட வரும்எம் திருவின் முகமாம் திருக்கமல
நீடமை செவ்வி கொளப்பகல் வாஅளி நீள்புயனே.

**குறிப்புரை** : கூடல் அழகர்= மதுரைச் சோமசுந்தரப் பெருமான். பணி= கவிதைப்பணி. நாட= செய்ய. நளிர்= பெருமை. தேட= ஆராய - காண. நீடு அமை செவிகொள= மிகுதியாக அமைந்த அழகைக் காண அளிநீள்= அணிந்த மாலைகாரணமாக வண்டுகள்.மிகுதியாக மொய்க்கும்.

**பொழிப்புரை** : மதுரை சோமசுந்தரப்பெருமானின் பெயர்ஆகிய சுந்தர நாதன் என்றபெயர் கொண்ட புலவனாகிய நான் செய்யும் கவிதைப்பணியை விரும்பும் சிராமலை இறைவனின் பெருமைபொருந்திய மலைக்கண், எமது திருமகளின் முகமாகிய அழகிய தாமரைமலரின் அழகைக் கண்டுகொள்ள, அணிந்த மாலைகாரண மிக்க வண்டுகள் மொய்க்கும் தோள்களுடையவனே ! இனிமேல் பகற்பொழுதில் வருக.

**( 262 )** **பகல்வருவானைப் பகலிலும் இரவிலும் பயின்று வருகஎன்றல்**

பூஇரும் கீர்த்தியன் ராமநாராயணன் பூண்டுதொழும்
தூஇரும் சென்னிச் சிராமலை யான்வரைத் தோகைமுலை
பூஇரும் தார்ப்புய நீபடிந் தால்மதன் பூசல்இலை
மாஇரும் கண்ணி களிக்கநீ ராப்பகல் வந்தருளே.

**குறிப்புரை** : பூ இரும்= பொலிவு உடைய பெரிய. பூண்டு= மனத்தில் கொண்டு. தூ= வலிமை. சென்னி= உச்சி. பூஇரும் தார்= அழகிய பெரிய மலர்மாலை. படிந்தால்= தழுவினால். மதன்பூசல்= மன்மதனின்போர். மா இரும்= அழகிய கரிய. கண்ணி= கண்களுடைய தலைவி.

**பொழிப்புரை** : பொலிவு உடைய பெரிய புகழுடைய ராமநாராயணன் மனத்தில் கொண்டு வணங்கும் வலிமையான பெரிய உச்சியையுடைய சிராமலையானின் மலைக்கண், அழகிய பெரியமாலையணிந்த தலைவனே ! நீ மயில்போன்ற தலைவியின் முலையைத் தழுவினால், மன்மதனின் போர் இல்லை. எனவே அழகிய கரிய கண்களுடயவள் களிக்க இரவும் பகலும் குறியிடத்துக்கு வருக.

**( 263 )** **பகலினும் இரவினும் வாரலென்றல்**

எல்லியில் ஆம்பல் சிவக்கும் பகலில் இருள்மலராம்

நல்லியல் தோயும் சிராமலை நாதர் நளிர்வரைநேர்
மல்இயல் தோளா இருபோதும் வாரல் மருவுசுக
வல்லியல் காட்டு முலைபொருட்(டு) இந்த வரையகத்தே.

**குறிப்புரை** : எல்லியில்= இரவில். ஆம்பல்= அரக்காம்பல்மலர். சிவக்கும்= செந்நிறமுடன் மலரும். இருள்மலர்= துன்புறும் - குவியும் மலர். நளிர்= பெருமை. மல் இயல்= வலிமைபொருந்திய. மருவு சுக வல்லியல்= தழுவுவதால் வரும் இன்ப வல்லமை, காட்டும்= தரும். இந்த வரையகத்தே வாரல்.

**பொழிப்புரை** : இரவில் அரக்காம்பல் மலர்ந்து செந்நிறம் காட்டும், பகலில் துன்புறும் - கூம்பும் நல்ல இயல்புகொண்ட சிராமலைக்குரிய இறைவனது பெருமைபொருந்திய மலையினை ஒத்த வலிமைவாய்ந்த தோள்களுடைய தலைவனே ! தழுவுவதால் வரும் இன்ப வல்லமைதரும் தலைவியின் முலைப்பொருட்டு இரவிலும் பகலிலும் இம்மலைக்கண் வராதே.

**இலக்கணக்குறிப்பு** : வாரல் - அல்ஈற்று எதிர்மறை வியங்கோள் வினைமுற்று.

( 264 ) **உரவோன் நாடும் ஊரும் குலனும் மரபும் புகழும் வாய்மையும் கூறல்**

கூட்டிற்கு நாயகன் வாழும் சிராமலைக் கூர்வரைப்பால்
காட்டிற்கு மேலா விளங்கும் பெரும கவினும்உன்றன்
நாட்டிற்கும் ஊர்க்கும் குலத்திற்கும் ஒத்த நலக்குடிக்கும்
பாட்டிற்கும் வாய்மைக்கும் ஆகா களவைநீ பற்றிடலே.

**குறிப்புரை** : கூடு = உடம்பு - உயிர். கூர் காட்டு= மிகுந்த எடுத்துக்காட்டு. மேலா= மேலானவனாக. பாட்டு= புகழ். வாய்மை= சிறப்பு. களவை நீ பற்றிடல் ஆகா= களவு ஒழுக்கத்திலேயே தொடர்தல் பொருந்தாது.

**பொழிப்புரை** : உயிர்க்குத் தலைவனாகிய பெருமான்வாழும் மலைக்கண், மிக்க எடுத்துக்காட்டுக்கும் மேலானவனாக விளங்கும் சிறந்தவனே ! சிறந்த உனதுநாடு, ஊர், குலம், குலத்துடன்ஒத்த மரபு, புகழ், சிறப்பு ஆகியவற்றுக்கு, நீ களவு ஒழுக்கத்திலேயே தொடர்தல் பொருந்தாது.

**இலக்கணக்குறிப்பு** : கூடு - இடவாகுபெயர்.

( 265 ) **இதுவும் அது**

வடிக்கும் அயில்விழி தன்னைக் களவில் மருவிடல்தான்
படிக்கும் படியில் பழியைப் பரப்பிடும் பாரபுய
துடிக்கும் வினைதீர் சிராமலை யானைத் தொழும்உனது
குடிக்கும் பதிக்கும் குலக்கும் குணமாம் குறிவரைவே.

**குறிப்புரை** : வடிக்கும் அயில்= கூர்மையான வேல். படிக்கும் படி= பழகும் உலகு. பார= திண்ணிய. துடிக்கும்= துன்புறுத்தத் துடிக்கும். வரைவே குடிக்கும்........குணமாம்.

**பொழிப்புரை** : கூர்மையான வேல்போன்ற கண்களுடைய தலைவியைக் களவில் தழுவுதல், பழகும் உலகில் பழியைப்பரப்பும். துன்புறுத்தத்துடிக்கும் வினையைத் தீர்க்கும் சிராமலை இறைவனை வணங்கும் உனது குடி, ஊர், குலம் அனைத்திற்கும் நன்மைதர. அவளை மணப்பதையே குறிக்கோளாகக் கொள்.

( 266 ) **ஆறுபார்த்து உற்ற அச்சம் கூறல்**

அந்தேன் விளரி இசைக்கும் சிராமலை யாய்வரைப்பால்
அந்தேன் பிளிற்றுதார்த் தோளநீ கல்அதர் ஆறுகடந்(து)
அந்தேன் மொழிக்கா வருநெறி பாப்(பு)அரி ஆம்பலுக்கா
நொந்தேன் மெலிதல் தலைவி வரல்தவிர் நோயறவே.

**குறிப்புரை** : அம் தேன்= அழகிய வண்டுகள். விளரி= விளரிப்பண். அம் தேன் பிளிற்று= சிறந்த வண்டுகள் கிண்டும். தார்த்தோளா= மாலையணிந்த தோள்களுடையவனே ! கல் அதர்= பருக்கைக் கற்கள் செறிந்த குறுகியவழி. அம் தேன் மொழிக்கா= அழகிய இன்மொழி பேசும் தலைவிக்காக. பாப்பு= பாம்பு. ஆம்பல்= யானை. மெலிதல்நோய் அறவே= வருந்தும் துன்பம் நீங்க. தலைவிவரல்= தலைவிக்காக வருதல்.

**பொழிப்புரை** : அழகிய வண்டுகள் விளரிப்பண் இசைக்கும் சிராமலைக்கு உரியவனே ! சிறந்த வண்டுகள் கிண்டும் மலர்மாலை அணிந்த தோள்களுடையவனே ! நீ மலைப்பகுதிக்கண் பருக்கைக்கற்கள் செறிந்த குறுகிய வழியில் பாம்பு, சிங்கம், யானை இவற்றைக் கடந்து, தலைவிக்காக நீ வருவதை எண்ணி மனம்நொந்தேன். வருந்தும் துன்பம் நீங்கும்பொருட்டு வருவதைத் தவிர்க.

**இலக்கணக்குறிப்பு** : பாப்பு - வலித்தல் விகாரம். தேன் மொழிக்கா - உவமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. மொழிக்கா, ஆம்பலுக்கா - ஆ - ஆக என்பதன் குறுக்கங்கள்.

( 267 ) **ஆற்றாத்தன்மை ஆற்றக் கூறல்**

பழிசேர் பிறப்பை அகற்றும் சிராமலைப் பால்வணன்தான்
பிழிசேர் மலர்இட்(டு) அருச்சியார் பெற்றியில் பேதுறுமான்
விழிசேர் துளிஉதிர்த்(து) ஏங்கும் விழும்எழும் விம்மிடும்இன்
மொழிசேர் துணைபிரிந் தார்எனும் காத்தருளே.

**குறிப்புரை** : ஆற்றாத்தன்மை= பொறுத்துக்கொள்ள இயலாத நிலைமை. ஆற்ற= பொறுத்துக்கொள்ளச் செய்ய. பால்வணன்= சிவபிரான். பிழி= தேன். பெற்றி= தன்மை. துளி= கண்ணீர். துணை= காதலன்.

**பொழிப்புரை** : பழித்தற்குக் காரணமான பிறப்பைப் போக்கும் சிராமலைச் சிவபிரானைத் தேன்பொருந்திய மலர்தூவி வழிபடாதவர்போல வருந்தும் மான்போன்றவள் கண்ணீர்த்துளிசிந்திஏங்குவாள், மயங்கிவிழுவாள், எழுவாள், அழுவாள், இனிய சொற்கள் கூறும் என்காதலர் என்னைப் பிரிந்தார் என்பாள். அவளை நீ காத்தருள்க.

**விளக்கம்** : சிவபிரான் பொன்மேனியனாயினும், வெண்ணீறு தரித்ததால் பால்வண்ணன் ஆனான் திருக்கழிப்பாலைத் திருக்கோயில் இறைவன் திருப்பெயர் பால்வண்ணநாதர் ஆகும்.

**இலக்கணக்குறிப்பு** : பிழி - காரணப்பெயர்.

**( 268 )** **காவல் மிகவுரைத்தல்**

பொன்னைக் கலந்(து)அரி ஏய்க்கும் சிராமலை போல்புயனே
மின்னைக் கடந்(து)ஒளிர் வேல்துணை யாக்கட மேல்கடந்து
பொன்னைக் களவில் கொளநீ வரல்எவன் பூண்டுதுயில்
மின்னைக் குறித்தனை கொள்ளாள்கா வல்துயில் மேவினுமே.

**குறிப்புரை** : பொன்னைக் கலந்து= பொன்நிறத்துடன் கூடியதால். அரி ஏய்க்கும்= சிவபிரானை ஒக்கும். கடந்து= வென்று. கடம்= காடு. பொன்னை= திருமகள்போன்ற தலைவியை. வரல்எவன்= வருவது ஏன் - வராதே. துயில்பூண்டு= உறங்குவதன் காரணமாக. கொளாள்= உன்னை ஏற்கமாட்டாள்.

**பொழிப்புரை** : பொன்னிறத்துடன் கூடியதால் சிவபிரானை ஒக்கும் சிராமலை போன்ற வலிய தோள்களுடையவனே ! மின்னலை ஒத்த தலைவியை எண்ணி,மின்னலை வென்று ஒளிரும் வேலினைஏந்தி, காட்டினைக் கடந்து திருமகள் போன்ற தலைவியைக் களவில் கூட நீ வருதல்ஏன் ? ஊர்காவலர் உறங்கினாலும் அவள் உறங்குவதால் உன்னை ஏற்கமாட்டாள்.

**இலக்கணக்குறிப்பு** : எவன் - இழிஇருபால்வினா வினைக்குறிப்பு முற்று. வரல் - தொழிற்பெயர்.

**( 269 )** **காமம் மிகவுரைத்தல்**

நாகம் செருந்தி கலந்து மணக்கும் நளிர்துறைவா
ஏகம் செறிமல ரேஆல் சிராமலை வித்தகர்தாள்
ஊகம் செறிமனத்(து) எண்ணார் எனத்துடித்(து) ஒண்மயில்இங்(கு)
ஆகம் செயல்கடந் தாள்மருந் தாம்உன(து) அன்(பு)அவட்கே.

**குறிப்புரை** : நாகம், செருந்தி - மலர்வகைகள். நளிர் துறை= பெருமைபொருந்திய இடம். ஏகம் செறி ஒப்பற்று விளங்கும். ஆல்= ஆதலாக. வித்தகர் தாள்= இறைவன் திருவடிகள். ஊகம் செறி= கருத்துச் செறிந்த. ஆகம் செயல் கடந்தாள்= உடம்பின் செயல்பாட்டினை இழந்தாள். உனது அன்பு அவட்கு மருந்தாம்.

**பொழிப்புரை** : நாகம் செருந்தி மலர்களின் மணம் கலந்து மணக்கும் பெருமைபொருந்திய இடத்தில் வாழ்கிறவனும், ஒப்பற்ற தாமரைமலரேயாக விளங்கும் திருவடிகளையுடையவனும் ஆகிய இறைவனை, கருத்துச்செறிந்த தனது மனத்தில் நினைக்காதவர் போல்வருந்துகிறவளாகிய அழகிய மயில்போன்றவள் தனது உடலின் செயல்பாடுகளை - சீரான நடவடிக்கைகளை - காமம் காரணமாக இழந்தாள். உனது அன்பு ஒன்றே அந்நோய்க்கு மருந்தாகும்.

**விளக்கம்** : உடம்பின் சீரான நடவடிக்கைகள் : உண்ணல் உறங்கல் முதலியவற்றில் இயல்புநிலை. காமம் மிகுதியால் இவற்றை இழந்தாள் என்றாள்.

**( 270 )** **கனவு நலிபு உரைத்தல்**

கந்தனை ஈன்ற சிராமலை நாதன் கவின்வரைப்பால்
கொந்(து)அனை யாள்கொள் அருந்துயில் வாய்நீ குலத்தொடையாய்
வந்தணை யாமுத்தம் தந்தனை யாம்பின் மருவினையாம்
நிந்தனை யாப்பின் பிரிந்தனை யாம்மின் நிகழ்த்தினளே.

**குறிப்புரை** : கொந்து= பூக்கொத்து. குலத்தொடை= தலைவியின் குலத்திற்கு வாய்த்த மாலை. அணையா= அணைத்து. யாப்பு மருவினை=இறுகத் தழுவும் செயல். நிந்தனை பிரிந்தனையாம்=பழிக்கும் வகையில் பிரிந்தாயாம். மின் நிகழ்த்தினள்=தலைவி கூறினாள்.

**பொழிப்புரை** : முருகப்பெருமானைத்தந்த சிராமலை இறைவனது அழகிய மலைப்பக்கம் பூக்கொத்துப்போன்ற தலைவியின் ஆழமான உறக்கத்தில் அவள்குலத்திற்கு வாய்த்த மாலையாம் நீ வந்து அவளை அணைத்து முத்தம் தந்தாயாம், பிறகு அடுத்த செயலாகிய இறுகத் தழுவும் செயல் இல்லாமல் பழிக்குமாறு பிரிந்தாயாம். இதனை மின்னல்போன்ற தலைவி கூறினாள்.

**( 271 )** **கவின்அழிபு உரைத்தல்**

தேவர்என் றேதருக் கும்சாம் பிராணிகள் சேர்வரிய
மூவர்என் போர்க்கு முதல்வன் சிராமலை முன்வரைப்பால்
ஈவர்என் போர்அலர் மாதனம் தேயும் இயல்பின்அண்ணால்
பூவர்என் மா(து)எழில் தேய்ந்தாள் பிரிவுநீ பூண்டதுமே.

**குறிப்புரை :** தருக்கும்= செருக்குக்கொள்ளும். சாம் பிராணிகள்= இறக்கும் உயிர்க்கூட்டம். மூவர்= அயன் அரி அரன். முதல்வன்= தலைவன். வரைப்பால்= மலைக்கண். முன்ஈவர் என்போர் அலர்= முற்பட்டு உனக்கு மணம்செய்து தருவோம் என்று கூறமாட்டார்கள். அனம் மாது தேயும் இயல்பின்= அன்னம்போன்ற தலைவி வருந்திமெலிதலை எண்ணி. பூவர்என் மாது= மலராக விளங்கும் தலைவி. தேய்ந்தாள்= குன்றினாள். நீ பிரிவு பூண்டதுமே பூவர்என் மாது எழில் தேய்ந்தாள் என்க.

**பொழிப்புரை :** தங்களைத் தேவர்கள் என்று கூறிக்கொண்டு செருக்குக்கொண்டு இறக்கும் உயிர்க் கூட்டம் சென்றடைவதற்கு அரியவனும், அயன் அரி அரன் ஆகிய மூவர்க்கும் முதல்வனும் ஆகிய சிவபிரானின் சிராமலையின் மலைப்பக்கம் உள்ளவர்கள், அன்னம்போன்ற தலைவி வருந்திமெலிதலை எண்ணித் தாமேமுற்பட்டுவந்து - வலிய வந்து -உனக்குத் தலைவியை மணம் செய்துதருகிறோம் என்று கூறமாட்டார்கள். நீ குறியிடம் வராது பிரிந்திருப்பதை எண்ணி அலராக விளங்கும் தலைவி தன்அழகில் குன்றினாள்.

( வரைவு கடாதல் முற்றிற்று )

## ஒருவழித் தணத்தல்

******************************

### தன்பதிக்கு அகற்சி தலைவன் சாற்றல்

எருமை கடிக்கமுத்(து) இக்கில் உடுக்கணம் ஏய்ந்து உதிரும்
பெருமை கவின்என் சிராப்பள்ளி சென்(று)இமை ஓர்பொழுதில்
ஒருமை கவினும் இடையான் வருவன் அதுவரையும்
உருமைக் கணிதுயர் ஆற்றுதல் உன்கடன் ஒள்அணங்கே.

**குறிப்புரை** : தணத்தல்= பிரிதல் இக்கு= கரும்பு. ஏய்ந்து= ஒப்ப. ஒருமை கவினும்= நிச்சயமாக விளங்கும். இடை= பொழுது. உரு மைக் கணி= அழகிய மைதீட்டப்பெற்ற கண்களுடையவள். ஒள்= மேன்மை.

**பொழிப்புரை** : மேலானவளே ! எருமைகள் கடித்ததால் முத்துகள் கரும்பிலிருந்து விண்மீன்கூட்டம் போல் உதிரும் பெருமைபொருந்திய எனது சிராப்பள்ளிக்குச் சென்று கண்ணிமைப்பொழுதில், உறுதியாக அந்த நேரத்தில் நான் வரும்வரை அழகிய மைதீட்டப்பெற்ற கண்களுடைய தலைவியின் பிரிவுத்துயரைத் தணித்தல் உனது கடமையாகும்.

( 273 ) **பாங்கி விலக்கல்**

மடைவாய்க் கயல்உகள் நின்றன் மருதம் மருவினையேல்
கடைவாய்ப் பிடிஅனை யாளை மறத்தலும் நாடும்அண்ணல்
படைவாய்ப் பெருமழு வாளி சிராமலைப் பண்வரைவிட்(டு)
அடைவாய்ப் புறப்பட்(டு) உமக்குமுன் சேர்வள்நீ ஆர்பதியே.

**குறிப்புரை :** உகள்= பிறளும். மருவினையேல்= அடைந்தால். கடைவாய்= முடிவில். மறத்தலும் நாடும்= மறக்கவும்கூடும். படைவாய் அண்ணல்= படைகளுக்குள் தலைமைசான்ற. மழுவாளி= மழுப்படை ஏந்திய சிவபிரான். பண்வரை= தகுதிவாய்ந்த மலை. அடைவாய்= விரைந்து / துணையாக. நீ ஆர்பதி உமக்குமுன் சேர்வள்.

**பொழிப்புரை** : நீர்பாயும் மடைக்கண் கெண்டைமீன்கள் பிறளும் உனது மருதநிலத்து ஊர்க்கு நீ சென்றால், பிடிபோன்ற இவளை முடிவில் மறந்தாலும் மறக்கலாம். எனவே, படைகளுள் தலைமைசான்ற மழுப்படை ஏந்திய சிவபிரானின் சிராமலையாகிய தகுதிவாய்ந்த மலையினைவிட்டு இவள் விரைந்து புறப்பட்டு - உயிர்விட்டு - உமக்குமுன்னதாகவே நீ அடையவேண்டிய ஊரை அடைவாள்.

( 274 ) **தலைவன் நீங்கல்வேண்டல்**

வெற்றித் திருப்புயன் ராமநா ராயணன் விள்ளுகவி
பற்றித் திகழும் சிராமலை அண்ணல் பருவரைவாழ்
முற்றித் திருந்(து)இழாய் யான்செலல் உற்றதும் முறைவினையே
மற்(று)இத் திருவை மறவேன் வருவன்நான் மாத்திரைக்கே.

**குறிப்புரை :** வெற்றித்திருப்புயன்= வெற்றிமகள் தங்கிய தோள்களுடையவன். விள்ளு= சொல்லும். திருந்து இழாய்= அழகிய அணிகலன் அணிந்தவளே. செலல் உற்றதும்= சென்றதும். உறைவினையே மாத்திரைக்கே முற்றி= முறைப்படி செயலை நொடியில் முடித்து.

**பொழிப்புரை** : வெற்றித்திருமகள் தங்கிய தோள்களுடைய ராமநாராயணன் சொல்லும் கவிதைகளைப் பெற்று விளங்கும் சிராமலை இறைவனது பெரிய மலைக்கண்வாழும் அழகிய அணிகலன் அணிந்தவளே ! நான் சென்றதும் முறைப்படி செயலை நொடியில்முடித்து வருவேன். தலைவியை மறக்கமாட்டேன்.

**இலக்கணக்குறிப்பு :** மற்று - அசைநிலை. மாத்திரைக்கே - உருபுமயக்கம்.

( 275 ) **தலைவனைப் பாங்கி விடுத்தல்**

வண்(டு)ஆர் குழலி நினைப்பிரிந் தால்உறு வாதனையை
வண்தார்ப் புயநீ சிராமலைப் பால்அறி வாய் அலையோ
கொண்டார் புகுந்தார் தன(து)ஊர் எனமின்பால் கூறுமுனம்

பண்(டு)ஆர்ப் பெருங்கால் எனவரல் உண்டேல் படருகவே.

**குறிப்புரை :** குழலி= கூந்தலுடைய தலைவி. வாதனை= பெருந்துன்பம். அறிவாய் அலையோ= அறிவாய் அல்லவா. சிராமலைப்பால் கொண்டார். கொண்டார்= தழுவியவர். தனது ஊர் புகுந்தார். பண்டு ஆர்ப்பெருங்கால்= முன்பு ஆரவாரத்துடன் வந்த பெருங்காற்று - புயல். படருக= செல்க.

**பொழிப்புரை :** வளமான மாலையணிந்த தோள்களுடையவனே ! வண்டுகள் ஆரவாரிக்கும் கூந்தலுடைய தலைவியைச் சிராமலையில் தழுவிய நீ பிரிந்தால், அவள் அடையும் பெருந்துன்பத்தை நீ நன்கு அறிவாயல்லவா ! தலைவர் தனது ஊர்சென்றடைந்தார் என்று தலைவியிடம் சொல்லி முடிக்குமுன், முன்பு ஆரவாரத்துடன் வீசிய புயல்போல் வருவாயானால் சென்றுவருக.

( 276 ) **பாங்கி தலைவிக்கு அவன்செலவு உணர்த்தல்**

அடாஒரு பேச்சென நையேல் சிராமலை ஆயிழையே
தடாஒரு காரியம் கொண்டு பதிதான் தனதுபதி
விடாஒரு வாக்(கு)உரைத்(து) ஏகினர் மீள்வர் விரைகணத்தில்
கெடாஒரு வாய்மையர் நம்மிடை அன்பு கிளந்தவரே.

**குறிப்புரை :** அடா= பொருந்தாத - சொல்லக்கூடாத. தடா= விலக்கமுடியாத. பதி= தலைவன். பதி= ஊர். விடாஒரு வாக்கு= தவறாத ஒரு சொல் - உறுதிமொழி. கெடா= தவறாத. நம்மிடை அன்பு கிளந்தவர் கெடாஒரு வாய்மையர். கிளந்தவர்= கூறியவர் - தலைவர்.

**பொழிப்புரை :** சிராமலையில் ஆராய்ந்தெடுத்த அணிகலன் அணிந்தவளே ! சொல்லக்கூடாத சொல் சொன்னதாக வருந்தாதே. விலக்கவியலாத ஒருகாரியம் மேற்கொண்டு, தலைவர் தமது ஊர்க்குத் தவறாத உறுதிமொழி கூறிச் சென்றார். விரைந்து நொடியில் மீண்டுவருவார். நம்மிடம் அன்புடன் கூறியவர் வாய்மை கெடாதவராவார்.

( 277 ) **தலைவி நெஞ்சொடுபுலத்தல்**

வாட்டும் பவப்பிணி ஓட்டும் சிராமலை வள்ளல்அருள்
காட்டும் வரைவாய் முலைத்தடம் மூழ்கினன் காமநலம்
நீட்டும் படிஉண்(டு) அளித்(து)அஞ்சல் என்றார் நிறைதுயரை
ஓட்டும் பரி(சு)அளித் தார்இன்(று) ஒளித்தார் உரைமறந்தே.

**குறிப்புரை :** பவப்பிணி= பிறவிநோய். தடம்= குளம். நீட்டும்= மிகுமாறு. அளித்தார்= கொடுத்தவர். ஒளித்தார்= பிரிந்தார்.

**பொழிப்புரை :** உயிரை வதைக்கும் பிறவிநோயை ஓட்டும் சிராமலை வள்ளல் ஆகிய இறைவன், அருள்பொழியும் மலைக்கண் என்முலைக்குளத்தில் முழுகி, எனது காமஇன்பம் மிகுமாறு சுவைத்து, அஞ்சாதே என்று கருணைகாட்டி மிக்க துயரை ஓட்டும் தன்மைதந்தவர், இன்று தன்சொல்லை மறந்து என்னைப் பிரிந்தார்.

( 278 ) **சென்றோன் நீடலில் காமம்மிக்க கழிபடர்கிளவி**

பாடும் சிராமலை அண்ணல் பதிசார் பனிக்கரையில்
சாடும் சிறைக்(கு)உரு மேஎன நாடும்உள் சஞ்சலமே
தேடும் சிறைக்குரு கேஉளம் வாடும் சிறைக்(கு)உருகே
ஓடும் செயல்மோ(து) அலையே இறைக்(கு)என் நோய் ஓதலையே.

**குறிப்புரை :** நீடல்= வரக் காலம் தாழ்த்தல். மிக்ககாமம் கழிபடர் கிளவி= மிக்க காமத்தால் மிகுந்த துன்பப்பட்டுச் சொல்லும் சொல். பாடும்= புகழ்ந்து பாடப்பெறும். பனி= குளிர்ச்சி. கு சிறை உருமே என சாடும்= நிந்திக்கத்தக்க காமம் இடியைப்போல் வருத்தும். உள் சஞ்சலம் நாடும்= மனம் கவலைப்படுகிறது. சிறை தேடும் குருகே= அழகியைத் தேடும் நாரையே. உளம் வாடும்= என்னுளம் வாடுகிறது. சிறைக்கு உருகே= என்காமநிலைக்கு மனம் உருகு. ஓடும்செயல்= விரையும் செயலால். மோது அலையே= கரையில் மோதும் அலையே. இறைக்கு= தலைவனுக்கு. என்நோய் ஓதலையே= என்துன்பத்தைச் சொல்லவில்லையே.

**பொழிப்புரை :** புகழ்ந்து பாடப்பெறும் சிராமலை இறைவனது சிராப்பள்ளியைச்சார்ந்த குளிர்ந்த கரையில், உன் அழகியைத்தேடும் நாரையே ! நிந்திக்கத்தக்க காமம் என்னை இடியைப்போல்வருத்தும் ! மனம் கவலைப்படுகிறது ! என்காமநிலைக்கு நீ மனம்உருகு ! விரையும் செயலால் கரையில் மோதிமீளும் அலையே ! என்தலைவனுக்கு என்நோய்பற்றிச் சொல்லவில்லையே !

**விளக்கம் :** “ கேட்குந போலவும்......... அஃறிணை மருங்கினும் அறையப்படுமே “ ( நன்னூல் 409 ) என்பதை உட்கொண்ட செய்யுள் இது.

( 279 ) **தலைவியைப் பாங்கி ஆற்றுவித்தல்**

போற்றுவம் வாநம் சிராமலை யான்கழல் பூண்(டு)இறைசீர்
சாற்றுவம் வாநன் னதிஆ டுவம்வா தனிமலர்கள்
ஊற்றுவம் வாநம் இறைவரு தூநெறி தோன்றிடவே
மாற்றுவம் வாதுயர் அன்பர் தடந்தேர் மகிழ்ந்துகண்டே.

**குறிப்புரை :** கழல்= திருவடி. ஊற்றுவம்= தூவுவோம். இறை= தலைவன். தட= பெருமை.

**பொழிப்புரை** : நமது சிராமலை இறைவனது வீரக்கழல் அணிந்த திருவடிகளைப் போற்றுவோம் வா. அத்திருவடிகளைத் தலைமேல் கொண்டு அவனது சிறப்புகளைப் போற்றுவோம் வா. புனிதஆறுகளில் நீராடுவோம் வா. நம்தலைவன் வழியில் வருவதைப்பார்க்க நாம் சிறந்த மலர்களை இறைவன் திருவடிகளில் சொரிவோம் வா. தலைவன் வரும் பெரியதேரினை மகிழ்வுடன் கண்டு நம் துயரைப் போக்குவோம் வா.

**இலக்கணக்குறிப்பு** : போற்றுவம், சாற்றுவம், ஆடுவம், ஊற்றுவம், மாற்றுவம் - உளப்பாட்டுத் தன்மைப்பன்மை வினைமுற்றுகள். இச்செய்யுள் சொற்பொருள் பினருநிலையணி.

( 280 ) **தலைவன் வந்தமை பாங்கிஉணர்த்தல்**

அந்தார் பிரமா தியர்தலை யாக்கொளும் அண்ணல்அன்பு
வந்தார் சிராமலைப் பாங்(கு)அமர் தோகாய் வளருமுலைப்
பந்(து)ஆர் பசப்பும்நின் கண்ணீர் உகுப்பும் பறக்கஇறை
வந்தார் தடந்தேர்க் கொடியிது காண்நீ மனம்மகிழ்ந்தே.

**குறிப்புரை** : அம்தார்= அழகியமாலை. தலையா= தலைவராக. அண்ணல்= தலைமைசான்ற அருள்தரு தாயுமானவர். அன்பு= அன்புபூண்டவர். வளரும்= பருத்த. இறை= தலைவர்.

**பொழிப்புரை** : சிராமலைக்கண் வாழும் மயில்போன்றவளே ! அழகிய மாலையணிந்த பிரமன்முதலியவர் தலைவராக ஏற்கும் தலைமை சான்ற அருள்தரு தாயுமானவரிடம் அன்பூண்டவர் வந்துவிட்டார். தலைவர், உனது பருத்த முலைப்பந்தின் பசப்பும், கண்ணீர் சிந்துதலும் பறந்தோட வந்துவிட்டார். நீ மனம் மகிழ்ந்து அவர்வரும் பெரியதேரில் கட்டப்பெற்ற இக்கொடியைக் காண்க.

( 281 ) **வந்தோன் தன்னொடு பாங்கி நொந்துவினாதல்**

புரவலர் வேண்டிடும் ராமநா ராயணன் போல்நிலையாம்
விரவலர் காட்டும் சிராமலை வாய்எம் விளங்(கு)இழையைப்
பர(வு)அலர் காட்டத் துயர்உறு தன்மையைப் பார்த்(து)அகன்ற
புரவலர் கோநீ எவண்தரித் தாய்அவண் புந்திவைத்தே.

**குறிப்புரை** : விரவலர் காட்டும்= கலந்திருப்பவரை - இறைவனைக்காட்டும்.. பரவு அலர் காட்ட= ஊரில்பரவிய பழிச்சொல் சுட்டிக்காட்ட. அவண் புந்திவைத்து எவண் தரித்தாய். எவண்= எப்படி. தரித்தாய்= தங்கியிருந்தாய்.

**பொழிப்புரை** : புரவலர்களும் விரும்பும் ராமநாராயணபுகழ்போல் நிலையாக எங்கும்கலந்திருப்பவரை - இறைவனை - உணர்த்தும் சிராமலைக்கண் வாழும் காப்பவர்க்கு அரசே - தலைவனே ! எமது தலைவியை ஊரவர் பழிச்சொல்லால் சுட்ட அதனால் தலைவி மிக்கதுயருற்றதைப் பார்த்தும் பிரிந்த நீ, சென்ற அவ்விடத்தில் மனம் வைத்து எப்படித் தங்கியிருந்தாய் ?

( 282 ) **தலைவன் பாங்கியொடு** நொந்து வினாதல்.

ஆற்றுக்(கு) ஒருதலை காட்டும் சிராமலை ஐயர்இனி(து)
ஏற்றுக் கொளும்பிறை போல்நுதால் திங்கள் எரிக்குமதன்
ஊற்றுகொள் தேன்அலர்க் கும்ஊர் அலர்க்கும் உடற்றுதென்றல்
காற்றுக் குமெங்ஙன் பொறுத்தீர் எனைப்போல் கருத்(து)அமைத்தே.

**குறிப்புரை** : ஆறு= கங்கையாறு. ஒரு= ஒப்பற்ற. ஐயர்= தலைவர் - இறைவன். நுதால்= நெற்றியுடையவளே. மதன்= மன்மதன். உடற்று= வருத்தும்.

**பொழிப்புரை** : வானிலிருந்த பெருவெள்ளமாக வந்த கங்கையின் வேகம் தணிக்கத் தன் ஒப்பற்ற தலையைக்காட்டி அதன்வேகம் தணித்த சிராமலைச் சிவபிரான் சூட்டிக்கொண்ட பிறைபோல் நெற்றியளே ! காமத்துயரடையச் செய்யும் நிலவு, மன்மதனது தேன்சொரியும் மலரம்பு, வருத்தும் தென்றல் ஆகியவற்றை என்னைப்போல் கருத்துடன் எங்ஙனம் பொறுத்திருந்தீர் ?

**விளக்கம்** : உலகை அழிப்பதுபோல் வானிலிருந்து பெருகிப்பாய்ந்த கங்கை வெள்ளத்தைச் சிவபிரான் தமது தலையில் ஏற்று அதன்வேகம் அடக்கினான் என்பது புராணச்செய்தி.

( 283 ) **தலைவியை ஆற்றுவித்திருந்தமை கூறல்**

பொன்னிக்(கு) உரம்தரும் ராமநா ராயணன் போற்றும்உரை
மன்னிக் குலவும் சிராமலை யான்வரை மானுபுய
துன்னிக் குறித்(து)உரை நின்சொற் படியே துயர்அகலப்
பின்னிக் குல(வு)உன்ஊர் காட்டி மயில்உயிர் பேணினனே..

**குறிப்புரை** : பொன்னி= திருமகள். உரம்= மார்பு. உரைமன்னிக் குலவும்= புகழ் நிலைத்து விளங்கும். மானு= போன்ற. குறித்து துன்னி உரை நின்சொல்= குறிப்பிட்டு நெருங்கியிருந்து சொன்னஉனது சொல். பின்னிக்குலவு= தொடர்ந்து சிறந்துவிளங்கும்.

**பொழிப்புரை** : திருமகளுக்குத் தன் மார்பில் இடம்தந்த திருமால் போன்ற ராமநாராயணன் போற்றிப்புகழும் சொல் நிலைத்து விளங்கும் அருள்தரு தாயுமானவனின் மலைபோன்ற தோள்கள் உடையவனே ! நீ குறிப்பிட்டு நெருங்கி இருந்து கூறிய உனது சொற்படி, தலைவியின் பிரிவுத்துயர்

அகல்வதற்கு, தொடர்ந்து சிறந்துவிளங்கும் உனது ஊரினைக்காட்டி, மயில்போன்ற தலைவியின் உயிரைக் காத்தேன்.

( ஒருவழித்தணத்தல் முற்றிற்று )

## வரைவிடை வைத்துப் பொருள்வயின் பிரிதல்

*******************************************************

( 284 ) **என்பொருட்பிரிவு உணர்த்து ஏந்திழைக்கு என்றல்**

நிலைக்கும் கலைக்கும் தலைக்கும் பொருள்பொருள் நேர்அதனால்
அலைக்கும் கரும்பிணி ஓட்டும் சிராமலை ஆயிழைமான்
அலைக்கும் கணிக்(கு)உரை காவிரி பாய்ஊர் அடைந்துபொலம்
சிலைக்கும் கனமா முலைவிலைப் பொன்கொடு சேருவனே

**குறிப்புரை :** நிலை= உயர்நிலை. தலை= தலைமை. பொருள்= உறுதி. பொருள்நேர்= பொன்தேவை. அலைக்கும்= வருத்தும். கரும்பிணி= துன்பநோய். அலைக்கும் கணி= வருத்தும் கண்களுடைய தலைவி. உரை= புகழ். பொலம்சிலை= பொற்சிலை ஒத்த தலைவிக்கும். முலைவிலை= பரிசம்.

**பொழிப்புரை :** உயர்நிலை, கலைகள், தலைமைதாங்குதல் முதலியவற்றுக்கு உறுதியாகப் பொன்தேவை. எனவே வருத்தும் துன்பநோயினை ஓட்டும் சிராமலைவாழ் பெண்ணாகிய மான்போல் மருளும்கண்களால் வருத்தும் தலைவிக்குப் புகழ்வாய்ந்த காவிரியாறு பாயும் ஊர்சென்று பொற்சிலையாக விளங்கும் தலைவிக்கும், கனத்த அழகிய முலைவிலையாக - பரிசமாகப் பொன்கொண்டு வருவேன்.

**விளக்கம் :** “ முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னால் முடியும் “ ( திருக்கோவையார் 332 ) தலைவன் இதுவரை வாழ்ந்தது பெற்றோர் வளமைகொண்டு. இனி வாழவிரும்புவது தான் ஈட்டிய பொருளால். எனவே வரைவு இடைவைத்துப் பொருள்வயிற்பிரிந்தான்.

( 285 ) **பாங்கி நின்பொருட்பிரிவு உரை நீஅவட்கு என்றல்**

பங்(கு)ஆள மாதைப் புணர்ந்தோன் சிராமலைப் பார்வரைப்பால்
வெங்காள மாம்இம் மொழியான் புகலேன் விர(கு)உளதேல்
கங்காள மாமின் கரையா வகைநீ கவின்தொடையாள்
அங்காள மாமுகில் ஓதிக்(கு) இ(து)ஓதி அடைபிரிவே.

**குறிப்புரை :** பங்கு ஆள= ஒருகூறில் வைத்துப் பயன்கொள்ள. மாது= உமையவள். புணர்ந்தோன்= கொண்ட சிவபிரான். வெம்காளமாம்= கொடிய நஞ்சுஆகிய. விரகு= சாமர்த்தியம். கம்காள மாமின்= நீர்கொணட மேகத்து மின்னல்போன்ற தலைவி. கரையாவகை= அழாதவாறு. தொடையாள்= மாலையணிந்தவள். அம்காளமாமுகில்= அழகிய கரிய பெரியமேகம். ஓதி= கூந்தலுடையவள். இதுஓதி= உன்பொருள்வயிற்பிரிவைச் சொல்லி.

**பொழிப்புரை :** ஒருகூறில் வைத்துப் பயன்கொள்ள உமையம்மையை இடப்பாகம் கொண்டவனது பாறைப்பகுதியில் வாழ்கின்றவளாகிய நீர்கொண்ட கரிய மேகத்தில் தோன்றும் மின்னலொத்தவளும், அழகிய மாலைசூடியவளும் ஆகிய அழகிய பெரியகார்மேகம் ஒத்த கூந்தலுடைய தலைவியிடம் நஞ்சுபோன்ற இச்சொல்லை - உன்பொருள்வயிற்பிரிவைச் சொல்லமாட்டேன். உனக்குச் சாமர்த்தியம் இருப்பின் அவள் அழாதவாறு உன்பிரிவைச்சொல்லிப் பிரிந்து செல்.

**விளக்கம் :** “ நம்கையினால் நாம்அனைத்தும் செய்தாற்போல் நாடனைத்தும், நங்கையினால் செய்துஅளிக்கும் நாயகனும் “ ( திருக்களிற்றுப்படியார். 78 )என்பதனால் சிவபிரான் தொழில் வீடுபேற்றில் பேரின்பம் வழங்குவது ஒன்றே. படைத்தல் காத்தல் முதலியன அனைத்தும் அம்மையின் தொழில்கள் என்ற சித்தாந்த சாத்திரச் செய்தியைப் “ பங்கு ஆள மாதைப்புணர்ந்தோன் “ என்றதொடர் நுட்பமாகக் குறிக்கிறது

( 286 ) **நீடேன் என்றுஅவன் நீங்கல்**

விரிமேற் குலவளன் ராமநா ராயணன் விள்ளரும்சீர்
கிரிமேல் குடிகொள் பெருமான் வரைநிகர் கிஞ்சுகமே
கரிமேல் பறிநிறைத்(து) ஓர்அரி உற்றெனக் காணும்உம்ஊர்
அரிமேல் திசையடை மாலைமீள் வான்யான் அமைந்தனனே .

**குறிப்புரை :** விரி மேற்குல வளன்= பெரிய மேற்குலத்து வளமையுடையவன். கிரி= மலை. . கிஞ்சுகம்= கிளி. கரி= யானை. பறி= பொன். ஓர்அரி= ஒரு சிங்கம். உம்ஊர் காணும். அரி= சூரியன். மீள்வான்= மீள. அமைந்தனன்= தீர்மானித்தேன்.

**பொழிப்புரை :** பெரிய மேற்குலத்து வளமையுடையவனாகிய ராமநாராயணனின் சொல்லலுதற்கரிய சிறப்புடைய மலைமேல் எழுந்தருளியுள்ள அருள்தரு தாயுமானவனின் மலைகண், கிளிஒத்தவளே ! சூரியன் மேற்றிசை அடையும்மாலையில் மீண்டுவரத் தீர்மானித்தேன். வரும்போது யானைமேல் பொன்னை நிறைத்துக்கொண்டு ஒரு சிங்கம் வருவதை உமதுஊர் காணும்.

**இலக்கணக்குறிப்பு :** பறி - பொற்கொல்லர் பொன்னைப் பறி என்பர் ஆதலின் இது குழூஉக்குறி யாகிய தகுதிவழக்கு. அரிஉற்றென - அரி - உவமை ஆகுபெயர். மீள்வான் - வான் ஈற்று எதிர்கால வினையெச்சம்.

**( 287 )** **பாங்கி தலைவிக்கு அவன் செலவு உணர்த்தல்**

பாதகம் நீக்கும் சிராமலை யான்வரைப் பாவைநல்லாய்
தோதக மேவா வளர்உன் முலைவிலை தூக்கரிமேல்
பீதகம் ஏற்றிக் கொடுவந்(து) உனைமணம் பெற்றிடுவான்
நீதக மாச்சுரம் புக்கார் வருவார் நினைகணத்தே.

**குறிப்புரை :** செலவு= (பொருள்தேட) செல்லுதல். பாதகம்= பெரும்பாவம். தோதகம் மேவா= வஞ்னை இல்லாமல். கரிமேல் தூ பீதகம்= யானைமேல் மாற்றுக்குறையாத பொன். மணம் பெற்றிடுவான்= மணந்துகொள்ள. நீ தக= உன்னுயர்வுக்குத் தக்கவாறு. நீதக உனை மணம் பெற்றிடுவான் என்க. சுரம்= கடத்தற்கரிய வழி. நினை கணம்= நினைக்கும் நொடிப்பொழுதில்.

**பொழிப்புரை :** பெரிய பாவங்களையும் நீக்கும் அருள்தரு தாயுமானவனது மலையவளே ! வஞ்சனையில்லாமல் பருத்துள்ள உனது முலைக்குப் பரிசமாக, யானைமேல் மாற்றுக்குறையாத பொன்னினை ஏற்றிக்கொண்டுவந்து உன் உயர்வுக்குத் தக்கவாறு உன்னை மணந்துகொள்ளக் கடத்தற்கரிய வழியில் சென்றுள்ளார். நினைக்கும் நொடிப்பொழுதில் வந்துவிடுவார்.

**( 288 )** **தலைவி இரங்கல்**

நிலைமேல் சிறந்த சிராமலைச் சித்தர் நெடுவரைவாய்
முலைமேல் படிந்து முயங்கிப் பிரிய மொழிஉரைத்(து)என்
தலைமேல் கரம்வைத்(து) உனைப்பிரி யேன்எனச் சாற்றினர்அன்(பு)
இலைமேல் பகரார் சுரம்பிரிந் தார்என் பெறும்பொருட்டே.

**குறிப்புரை :** மேல் நிலை சிறந்த= மேலான நிலைபேற்றில் சிறந்த. சித்தர்= ஞானியாகிய அருள்தரு தாயுமானவர். படிந்து முயங்கி= பொருந்திப் புணர்ந்து. பிரியமொழி= அன்புச்சொல். அன்பு இலைமேல்= அன்பு இல்லாத என்னிடம். பகரார்= சொல்லாதவராய். என்பெறும்பொருட்டு= எதனைச் சம்பாதிப்பதற்காக.

**பொழிப்புரை :** மேலானதாகிய நிலைபேற்றில் சிறந்தவராகிய சிராமலை ஞானியாகிய அருள்தரு தாயுமானவரின் பெரியமலைக்கண், என்முலைமேல் பொருந்திப்புணர்ந்து அன்புமொழி கூறி என்தலையில் தன்கையினை வைத்து , " உன்னப்பிரியேன் " என்று அன்புமொழி கூறியவர், அன்பில்லாது என்னிடம் சொல்லாமலேயே கடத்தற்கரிய வழிக்கண் சென்றஎன்னவர் எதைப்பெறும்பொருட்டு என்னைப் பிரிந்தார் ?

**விளக்கம் :** தலைமேல் கைவைத்துக் கூறுதல் என்பது சத்தியத்தின் குறியீடு.

**( 289 )** **பாங்கி கொடுஞ்சொல் சொல்லல்**

பூநாறு கூந்தால் இறைவர் பொருட்காப் புகைச்சுரக்கு
மாநாறு தோள்துணை யாச்சென் றதுநின் மணம்குறித்தே
கூநாறு மானார் பிறர்பொருட்(டு) இன்றால் குணவிழியே
பேநாறு மா(று)இருந் தாய்அலர் ஆகும் இனிப்பெரிதே.

**குறிப்புரை :** பூநாறு= மலர்மணக்கும். புகைச்சுரம்= மிகுவெப்பம் காரணமாக மரங்கள் தீப்பற்றிப் புகையும். மா= அழகு / வலிமை. கூநாறு= உலகில் மிகுதியாக உள்ள. குணவிழி= நல்லபார்வை - நோக்கம். பேநாறுமாறு= அச்சம்மிக.

**பொழிப்புரை** மலர்மணம் கமழும் கூந்தலுடையவளே ! தலைவர் பொருளீட்ட, வெப்பத்தால் மரங்கள் புகையும் சுரத்திற்குத் தனது தோள்வலிமையே துணயாகக்கொண்டு சென்றது உன்னைமணக்கவேண்டும் என்பதற்காகவே தவிர உலகில் மிகுதியாக உள்ள மான்போன்ற பிறமகளிர் பொருட்டன்று. நல்லநோக்கம் உடையவளே ! அச்சம் மிகுமாறு நீ இருக்கிறாய். அதனால் உன்னைப்பற்றிய பழிச்சொல் இனிப் பெருகும்.

**விளக்கம் :** பாங்கியின் சொல்லில் கொடுஞ்சொல் என்றது, " தலைவன் பிரிவுபற்றி அஞ்சாதே. உன்னச்சம் உன்னைப் பிறர் அலர்தூற்ற வாய்ப்பாய்விடும் " என்றதாகும்.

**இலக்கணக் குறிப்பு :** கூந்தால் - அண்மை விளி.

**( 290 )** **இதுவும் அது**

தண்டா யுதன்பணி ஆறு முகன்தொழும் சாமிஉறை
விண்தா உறும்சீர்ச் சிரகிரி மானே விளங்குபொனைக்
கொண்(டு)ஆர் வுறத்தேடச் சென்றது நின்மணம் கூர்ந்திடவே
அண்டாத் துயர்ஏன் அரிவை அறி(வு)ஏ(று) அணங்(கு)உனக்கே.

**குறிப்புரை :** தண்டாயுதன் பணி= தண்டினை ஆயுதமாக்க கொண்டவன் என்றுசொல்லப்பெறும் . சாமி= அருள்தரு தாயுமானவன். விண்தாவுறும்= விண்நோக்கி உயர்ந்த. பொனை= பொன்னை. நின் மணம் கூர்ந்திடவே= உன்னை மணம் செய்துகொள்ளவே. அண்டா= அளவற்ற. அரிவை அறிவுஏறு அணங்கு உனக்கு= பெண்களில் அறிவில் மிக்க பெண்ணாகிய உனக்கு. விளங்கு நின்மணம் என்க.

**பொழிப்புரை :** தண்டினை ஆயுதமாக ஏந்தியவன் என்று சொல்லப்பெறும் ஆறுமுகப்பெருமான் வணங்கும் அருள்தரு தாயுமானவன் எழுந்தருளியுள்ள விண்ணோக்கி உயர்ந்த சிராமலையில் வாழும் மான்போன்றவளே ! பொன் ஈட்டிவர ஆர்வமுடன் சென்றது, சிறந்த உன்னை மணம்செய்துகொள்ளவே. பெண்களில் அறிவில்மிக்க பெண்ணாகிய உனக்கு அளவற்ற துயரம் ஏன் ? துயர்ப்படாதே.

**விளக்கம் :** அரிவை அறிவில் ஏறு அணங்கு உனக்கு அண்டாத்துயர் ஏன் என்பதே கொடுஞ்சொல்.

( 291 ) **தலைவி கொடுஞ்சொல் சொல்லல்**

அண்டும் பவப்பிறப்(பு) ஓட்டும் சிராமலை யார்வரைப்பால்
இண்டும் முரம்பும் படர்சுரம் அன்பர்இன்(று) ஏகும்முது(கு)
அண்டும் விழிவழி முத்தம்என் கொங்கை கலத்தல்உன்கண்
கொண்டும் மொழிந்தாய் இரும்போ உளம்மொழி கோதைநிற்கே.

**குறிப்புரை** : பவப்பிறப்பு= பாவமும் பிறப்பும். இண்டு= இண்டங்கொடி. முரம்பு= வன்நிலம். ஏகும்= செல்லும். முதுகு அண்டும் விழிவழி= முதுகைக்காணும் விழிகளில் வழியும். முத்தம்= கண்ணீர்முத்து. கண்கொண்டு பார்த்தும். கோதை= தோழியே. கோதை நிற்கே உளம் இரும்போ மொழி என்க.

**பொழிப்புரை** : நம்மைச் சேரும் பாவம், பிறப்பு ஆகிய இரண்டையும் ஓட்டும் சிராமலை இறைவனது மலைகண்ணதான, இண்டங்கொடியுடன் கூடிய வன்நிலம் படர்ந்தசுரத்தில் தலைவர் இன்று செல்லும்போது, அவரது முதுகைக்காணும் விழிகளின் வழியேவரும் கண்ணீர்முத்துகள்என்கொங்கைகளில் கலத்தலை நீ பார்த்தும்கூட தலைவரின் பொருள்வயிற்பிரிவு என்மணத்தின் பொருட்டே என்று கூறினாய். தோழியே உனக்கு மனம் இரும்போ சொல்.

( 292 ) **வருகுவர் மீண்டுஎனப் பாங்கி வலித்தல்**

வாட்டம் சிதைக்கும் சிராமலை நாதர் வளர்வரைப்பால்
பாட்(டு)அம் சிறைஅளி பாடும் குழலாய் படர்சுரக்கண்
நீட்(டு)அம் சிறையால் கபோதம் பெடைக்கு நிழல்செயும்அத்
தேட்டம் சிறந்தவர் கண்டுநிற் பாரோ திரும்புவரே.

**குறிப்புரை** : வளர் வாட்டம்= மிகும் சோர்வு. அம்சிறை அளி பாட்டுப்பாடும்' அளி= வண்டுகள். படர் சுரம்= வருத்தம்தரும் சுரவழி. நீட்டு= நன்கு. விரித்த.அம்சிறை= அழகிய இறக்கை. கபோதம்= புறா. பெடைக்கு நிழல் செயும்= தனது பெண்புறாவுக்கு நிழலைச்செய்யும். தேட்டம்= பராமரித்தல்.

**பொழிப்புரை** : அழகிய சிறகுனையுடைய வண்டுகள், சூடிய மலரில்மொய்த்துப் பாடும் கூந்தலுடையவளே ! மேன்மேலும்மிகும் சோர்வினைப்போக்கும் சிராமலை இறைவனது மலைப்பகுதியில் வருத்தம்தரும் பாலைவழியில், ஆண்புறா தனதுநன்கு விரித்தசிறகினால் பெண்புறாவுக்கு நிழலைச்செய்யும் அந்தப் பராமரிப்பினைக் கண்டு, சிறந்ததலைவர் பொறுக்கமாட்டார், மீண்டுவந்துவிடுவார்.

**விளக்கம்** : சுரவழியில் பெடையின் துன்பத்தை ஆண்புறாஆற்றுதல் :

" இன்பத்தின் இகந்துஒரீஇ இலைதீந்த உலவயால்,
துன்புறூஉம் தகையவே காடுஎன்றார் அக்காட்டுள்
அன்புகொள் மடப்பெடை அசைஇய வருத்தத்தை
மென்சிறக ரால்ஆற்றும் புறவுஎனவும் உரைத்தனரே. " ( பாலைக்கலி. 10 )

( 293 ) **பருவம் கண்டு பெருமகள் புலம்பல்**

தருக்கொள் சிராமலைத் தாயான செல்வர் தனிவரைவாய்
உருக்கொள் பகைபோல் கறுத்(து)ஆர்த்துச் சாபம் உறவளைத்துப்
பருக்கொள்ளும் அம்(பு)எய்யும் கார்வரக் கண்டும் படர்உறயான்
குருக்கொள் வடிவே லவர்வந் திலர்என் கொடுமைஇதே

**குறிப்புரை** : தரு= மரங்கள். உரு= சினம். கறுத்து= சினந்து. ஆர்த்து= இடியால் முழங்கி. சாபம்= வில் - வானவில். அம்பு= மழைத்துளி / கணை. படர்= துன்பம். குரு= ஒளி. வடி= கூர்மை.

**பொழிப்புரை** : மரங்களுடைய சிராமலையில் அருள்தருதாயுமானவரின் ஒப்பற்ற மலைப்பகுதியில், சினம்கொண்ட பகைவர்போல் சினந்து, இடிகளால் ஆரவாரித்து, (வான)வில்வளைத்து, பருத்த மழைத்துளி களாகிய அம்புகளை எய்யும் மேகம் வருவதைப் பார்த்து நான் துன்பமுற, ஒளிபொருந்திய கூரிய வேலேந்திய என்காதலர் வந்தாரில்லை.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

( 294 ) **இகுளை வம்பென்றல்**

நயம்காட்டும் ராமநா ராயணன் வண்மை நயந்துகற்க
வியம்காட்டும் உன்குழல் ஒவ்வாத கொண்டல் விரிகடல்நீர்
குயம்காட்டு மேன்மைச் சிராமலைக் கொம்பே கொளச்செலுமுன்
பயம்காட்டும் வம்பே குறித்தாய் இதுகார்ப் பருவமன்றே.

**குறிப்புரை** : நயம்= இனிமை. வண்மை= கொடை. நயந்து= விரும்பி. வியம்காட்டும்= பெருமையைக் காட்டும். குழல் ஒவ்வாத= கூந்தலுக்கு ஒப்புமை ஆகாத. கொண்டல்= மேகம். குயம் காட்டும்= முலைக்கு ஒப்புமையான. கொள= கடல்நீர் கொள்ள. வம்பே பயம்காட்டும் குறித்தாய்= வீணே அச்சுறுத்துவதைக் கார்காலமென்று குறிப்பிட்டாய்.

**பொழிப்புரை** : உன்முலைக்கு ஒப்புமையாகச் சொல்லப்பெறும் சிராமலைக்கண் வாழும் கொம்பு ஒத்தவளே ! பெருமைபொருந்திய உனது கூந்தலுக்கு ஒப்புமை ஆகாத மேகம், இனிமைசெய்யும்

ராமநாராயணனின் கொடைத்திறத்தை விரும்பிக்கற்க, அகன்ற கடல்நீரினைப் பருகச்செல்லும்முன்னதாக வீணே கார்காலம்போல் அச்சுறுத்துவதைக் கார்காலம் என்று குறிப்பிட்டாய். இது கார்காலமன்று.

**விளக்கம்** : தலைவியின் கூந்தலுக்கு ஒப்புமையாதற் பொருட்டும், ராமநாராயணனின் வள்ளண்மை போல் பொழியவும் மேகம் கடலுக்குச் சென்றது தற்குறிப்பேற்றக் குறிப்புப்பொருள்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் தற்குறிப்பேற்றவணி. கொண்டுகூட்டுப் பொருள்கோள்

( 295 ) **தலைவி மறுத்தல்**

பொன்நனி வேங்கை சொரியக் கரம் காந்தள் பூண்(டு)எடுக்க
மன்நனி கோபம் பரவ எழிலி வருநிலையை
என்நனி நீபொய் எனல்இச் சிராமலை யில்செலுவோர்
சொல்நனி கூறினும் கேட்பார் மதிக்குமெய் தோன்றிடுமே.

**குறிப்புரை** : பொன்= பொன்போலும் மலர்கள். கரம் காந்தள் பூண்டு எடுப்ப=உள்ளங்கைபோன்ற காந்தள் மலர்ச்செடி தோன்ற. நனி மன்கோபம் பரவ= மிகுதியும் பெருமைபொருந்திய இந்திரகோபப்பூச்சி எங்கும் பரவ. எழிலி= கார்மேகம். நீ நனிபொய் எனல் என். என்= என்னகருதி. நனி செல்லுவோர் சொல் கூறினும்= மிகுதியாகச் செல்வோர் உறுதியாகச் சொன்னாலும். மெய் தோன்றிடும்= உண்மை விளங்கும்.

**பொழிப்புரை** : கார்காலம் விரைந்து வருவதை, பொன்போலும் மிக்க மலர்களை வேங்கை மரங்கள் சொரிய, உள்ளங்கை ஒத்த காந்தள்மலர்ச் செடிகள் தோன்ற, மிகுதியாகப் பெருமைக்குரிய இந்திரகோபப் பூச்சிகள் - ஒண்செம் மூதாய் - எங்கும் பரவ உள்ளதன்மைகள் காட்டவும், நீ என்னகருதிக் கார்காலமன்று என்று கூறுகிறாய் ? இந்தச் சிராமலை வழியில் மிகுதியாகச் செல்வோர் இது கார்காலமன்று என்று உறுதியாகக் கூறினாலும், அதனைக் கேட்போர் அறிவில் இது கார்காலமே என்ற உண்மை தோன்றவே செய்யும்.

**விளக்கம்** : வேங்கமலர்கள் சொரிதல், காந்தட்செடி முளைத்தல், இந்திரகோபப் பூச்சிகள் எங்கும்பரவி இருத்தல் ஆகியன கார்காலஅறிகுறிகள். செக்கச்சிவந்த, பட்டுபோன்ற மென்மையான உடம்பு, கடிக்காத தன்மைஉடைய மூதாய்ப்பூச்சிகளை என் இளமையில் கையில் ஏந்தி விளையாடியதுண்டு. இன்று அவற்றைக் காண இயலவில்லை.

( 296 ) **அவர் தூதாகிவந்தது இப்பொழுதுஎனத் தோழிகழறல்**

கூர்வந்த வேல்கணி பங்கன் சிராமலைக் கூர்பொழில்வாய்
வார்வந்த மாமுலை யாய்இறை வந்திலர் வண்ருதுவாம்
கார்வந்த தேஎன நையல் கவின்புயக் காவலர்தம்
தேர்வந்த தாம்எனச் சொல்லஇக் கார்வந்த சீர்இதுவே.

**குறிப்புரை** : கணி= கண்களுடையவள் - உமையம்மை. கூர்= மிக்க. ருது= பருவம். சொல்ல= முன்னதாகக் கூற.

பொழிப்புரை : கச்சணிந்த அழகிய முலைகளுடையவளே ! வேல்போல் கூர்மையான கண்களுடைய உமையம்மையை இடப்பாகம் உடையவனது சிராமலையின் மிக்க சோலைக்கண், தலைவர் வரவில்லை. வளமான கார்ப்பருவம் வந்துவிட்டதே என்று வருந்தாதே. அழகிய தோள்களுடைய தலைவரின் தேர் வந்துகொண்டிருக்கிறது என்று முன்னதாகக் கூற இந்தக் கார்மேகம் தூதாக வந்த சிறப்பு இது.

( 297 ) **தலைமகள் ஆற்றல்**

வாழி சிராமலை நாதர் சிலம்பில் மருவினனை
ஆழி அனைய சுகத்தில் கலந்தவர் ஆருயிர்எவ்
ஊழி யிலும்எற்(கு) உனக்கும்ஒன் றேஎன ஓதினரால்
தோழி உரைசரி கார்தூ(து) அனுப்பினர் தோன்றுவரே.

**குறிப்புரை** : வாழி= வாழ்க. ஆழிஅனைய சுகம்= கடல்போன்ற இன்பம். எற்கு= எனக்கு. அனுப்பினர்= அனுப்பிய தலைவர்.

**பொழிப்புரை** : சிராமலை இறைவனது மலையில், என்னைக்கூடிக் கடல்போன்ற இன்பத்தில் என்னுடன் கலந்தவர் ஆருயிர் வாழ்க. எந்த ஊழிக்காலத்திலும் எனக்கும் உனக்கும் உடம்புதான் வேறுவேறேதவிர உயிர் ஒன்றேயாகும் என்று கூறினார். இக்கார்ப்பருவம், தம்வருகையைமுன்னதாக அறிவிக்க அவர் நமக்கு விட்ட தூதுஎன்று தோழிகூறியது சரிதான். கார்ப்பருவத்தைத் தூதாக அனுப்பியவர் வந்துவிடுவார்.

( 298 ) **அவன் அவண் புலம்பல்**

எனைச்சீர் திருத்தும் சிராமலை நாதர் இரும்பொழில்வாய்
மினைச்சீர் திருத்(து)இடை கண்ணீர் விடும்கொல் விழுந்திடும்கொல்
நனைச்சீர் திருத்(து)இதழ் கூந்தல் சரிய நலிந்திடும்கொல்
கனைச்சீர் திருத்திய காரினைக் கண்டஎன் காதலியே.

**குறிப்புரை** : சீர்திருத்தும்= செம்மைப்படுத்தும். இரும்= பெரிய. இடை= இடையுடைய தலைவி. நனைச் சீர்திருத்து இதழ்= மொட்டினைச் செம்மைபடுத்தும் இதழ்கள். நலிந்திடும்கொல்= துன்புறுவாளோ. கனை= இடிஒலி.

**பொழிப்புரை** : என்னைச் செம்மைப்படுத்தும் சிராமலை இறைவனது பெரிய சோலைக்கண், இடிஒலியைச் செம்மைப்படுத்தி முழங்கிய கார்மேகம் கண்ட என்காதலியாகிய மின்னலைச் செம்மைப்படுத்தும் இடையுடையவள் - தலைவி, அழுவாளோ ! துயரால்மயங்கிக் கீழே விழுவாளோ ! மொட்டினைச் செம்மைப்படுத்தும் இதழ்களுடைய மலர்சூடிய கூந்தல் அவிழத் துன்புறுவாளோ !

**இலக்கணக்குறிப்பு** : எனை, மினை - இடைக்குறைகள். கொல் - ஐய இடைச்சொல். இதழ்= சினையாகுபெயர்.

( 299 ) **மீண்டு வருங்காலை பாகனொடு சொல்லல்**

கார்கண் டிடில்விழி நீர்கண் டிடுமே கலையிடைக்(கு)என்
தேர்கண் டிடில்துயர் பீர்விண் டிடுமால் சிராமலைவாய்
கூர்கண் டிடில்பறி மாலை வருவன்என் கூற்றுமெய்யாம்
நேர்கண் டிடில்தேர் வலவா நலமா நிறைஎமக்கே.

**குறிப்புரை** : விழிநீர்= கண்ணீர். கலை இடை= மேகலை என்ற அணிஅணிந்த இடுப்புடையவள் - தலைவி. துயர் பீர்= பிரிவுத் துயரமும் பசலையும். விண்டிடும்= வெடித்து ஒழியும். பறி கூர் கண்டிடில்= பொன்மிகச் சேர்ந்ததும். மெய்= உண்மை. நேர்கண்டிடில்= தகுதியை எண்ணி. தேர்வலவா= தேரோட்டியே.

**பொழிப்புரை** : சிராமலைவாழ் மேகலையணிந்த இடையுடைய தலைவி, கார்மேகம் கண்டதும் அழுவாள். நான்வரும் தேரினைக்கண்டால் அவளது துயரமும் பசலையும் வெடித்து ஒழியும். பொன்மிகச் சேர்ந்ததும் மாலையிலேயே வந்திடுவேன் என்ற என்சொல் உண்மையாகும் வண்ணம் என்தகுதியை எண்ணித் தேரோட்டியே ! எனக்கு மிக்க நலமுண்டாகத் தேரை விரைந்து செலுத்து.

( 300 ) **மேகத்தொடு சொல்லல்**

வேண்டும் வரம்தரு நாதர் சிராமலை மின்பொழிற்பால்
தூண்டும் பரிக்குமுன் செல்செல் கணைகண் துணைமுலைமேல்
ஈண்டும் பசலை தணியப் பொன்வரைக்(கு) ஈழமொடு
காண்டும் மலைவாய்ப் பொழுதில் வரல்சொல்அம் காரிகைக்கே.

**குறிப்புரை** : மின் பொழிற்பால்= ஒளிரும் சோலைக்கண். தூண்டும் பரி= விரைந்துசெல்லும்குதிரை. செல் செல்= மேகமே செல்க. கணைக்கண்= அம்பு ஒத்த கண்களுடையவள். பொன்= திருமகள் ஒத்தவள். பரிக்குமுன் கணைகண் துணைமுலைமேல் ஈண்டும்பசலை தணிய செல் செல் என்க. ஈழமொடு மலைவாய் பொழுதில் காண்டும்= பொன்னொடு மலைக்கண் பொழுதுக்குள் காண்போம்.

**பொழிப்புரை** : நாம் விரும்பும் வரம்தரும் இறைவனுடைய சிராமலையின் ஒளிரும் சோலைக்கண் அம்புஒத்த கண்களுடையவளின் இருமுலைகளிலும் செறிந்த பசலைநோய் தணியும்பொருட்டு, விரைந்து செல்லும் தேர்க்குதிரைகளுக்குமுன் மேகமே ! விரைந்து செல். பொன்னுடன் மலைக்கண் பொழுதுக்குள் காண்போம். அழகிய தலைவியை வரச்சொல்.

**இலக்கணக்குறிப்பு** : செல் செல் - சொற்கள் இரண்டில் முன்னது மேகத்தை விளித்த அண்மைவிளி. பின்னது வினைப்பகுதி. கணைகண் - உவமைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. காண்டும் - உளப்பாட்டுத் தன்மைப்பன்மைவினைமுற்று.

( 301 ) **பாங்கி வலம்புரிகேட்டு அவன்வரவு அறிவுறுத்தல்**

நலம்புரி ராமநா ராயணன் போற்றிடு நங்கைபங்கர்
நிலம்புரி மேன்மைச் சிராமலை நேரணி நீல்விழிய
அலம்புரி சோகம் தணிஇறை வந்தார் மலர்க்கரம்கொள்
வலம்புரி ஓசைகேள் தேர்மணி ஓசைகேள் வண்செவிக்கே.

**குறிப்புரை** : மேன்மை நிலம் புரி= மேலான இடமாக விரும்பும். அணி நீல்நேர் விழிய= அழகிய கருங்குளை ஒத்த கண்களுடையவளே. அலம்புரி சோகம் தணி= சஞ்சலம் தரும் வருத்தம் தணிக்கும் வண்செவி= அழகிய காது.

**பொழிப்புரை** : நலம்செய்யும் ராமநாராயணன் போற்றும் சிவபிரான், மேலான இடமாக விரும்பும் சிராமலையில், அழகிய கருங்குவளை ஒத்த கண்களுடையவளே ! சஞ்சலம் தரும் வருத்தம் தணிக்கும் பொருட்டுத் தலைவன் வந்துவிட்டார். உன்அழகிய செவிகளால், அவர் தமது தாமரைமலர் ஒத்த கையில் ஏந்திய வலம்புரிச்சங்கின் ஓசையைக் கேள். வரும் தேரில் கட்டிய மணிகளின் ஓசையைக்கேள்.

( 302 ) **வலம்புரி கிழத்தி வாழ்த்தல்**

கொடைதங் கியகையன் ராமநா ராயணன் கூர்புகழ்போல்
சடைதங் கியநீர்ச் சிராமலை அண்ணல் தழைஅருளால்
புடைதங் கியஐந் திணைஅன்பர் சங்கம் புரிந்(து)ஒலித்துக்
கிடைதங் கியஎன் துயர்தீர்த்த தால்வாழி கே(டு)அறவே.

**குறிப்புரை** : ஐந்திணை அன்பர் புடைதங்கிய சங்கம்= அன்புடைக்காமம் கொண்ட அன்பர் கூடவே இருந்த சங்கு. கிடை தங்கிய= நீங்காமல் தங்கிய. கேடு அறவே வாழி.

**பொழிப்புரை** : கொடையே தங்கிய ராமநாரயணனின் மிக்கபுகழ்போல், சடையில் தங்கிய கங்கையுடைய இறைவனின் மிக்கஅருளால், அன்புடைக்காமம் கொண்ட அன்பர்கூடவே இருந்து ஒலித்து, நீங்காமல் என்னிடம் தங்கிய துயரத்தைத் தீர்த்த சங்கு, கேடின்றி வாழ்க.

( 303 ) **தலைவன் வந்துழி பாங்கி நினைந்தமை வினாதல்.**

பிஞ்சில் கனியில் திகழும் சிராமலைப் பேண்பொழில்வாய்
பஞ்சில் கனிதாள் முலைப்பொன் படரப்பொன் பற்றுவைத்த
நெஞ்சில் கனிந்துவைத் தாயோ இறைவ நினைமறவா
மஞ்சில் கனிகரும் கூந்தலைச் சொல்லுக வாய்திறந்தே.

**குறிப்புரை** : பேண்= பாதுகாப்புடைய. பஞ்சில் கனிதாள்= பஞ்சுபோல் மென்மயான பாதங்களுடையவள். பொன்= பசலை.. பொன்பற்று வைத்த= பொற்காசுகள் மேல் ஆசைவைத்த. நெஞ்சில் கனிந்து= மனம்கனிந்து. மஞ்சில் கனி= கார்மேகம்போல் மென்மையான. கூந்தலை= கூந்தடையவளை. கூந்தலை நெஞ்சி கனிந்து வைத்தாயோ என்க.

**பொழிப்புரை** : பிஞ்சுகளும் கனிகளுமாக சிராமலையில் பேணப்பெற்று விளங்கும் சோலைக்கண், பஞ்சுபோல் மென்மையான பாதங்களுடையவளின் முலைகளில் பசலை பூக்க, பொற்காசுகள்மேல் பற்றுவைத்த உன் மனத்தில், உன்னை மறவாதவளான கார்மேகம்போல்கருமையான மென்மையான கூந்தலுடைய தலைவியை உன்மனத்தில் கனிவுடன் வைத்திருந்தயோ ! வாய்திறந்து சொல்லுக.

**விளக்கம்** : பருவந்தோறும் பலன்தரும் பலவகை மரங்களாதலின் அவற்றில் அவ்வப்பருவத்துக்குரிய பிஞ்சுகளும் கனிகளும் விளங்கின என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : இறைவ - அண்மைவிளி. கூந்தலை - அன்மொழித்தொகை. சொல்லுக= வேண்டிக்கோடற் பொருளில்வந்த வியங்கோள் வினைமுற்று.

( 304 ) **தலைமகன் தன்நினைவு செப்பல்**

அண்ணா எனச்சொலி எண்ணா இறைஞ்சும் அவர்க்குதுயர்
அண்ணா(து) அருளும் சிராமலை யார்வரை ஆயிழையே
கண்ணாலும் எண்ணாலும் காண்ப(து) எவண்உம் கருதும்மொழிப்
பெண்ணா ரையும்முனை யும்சுரம் சென்ற பிரிவிடத்தே.

**குறிப்புரை** : அண்ணா= பெரியோனே. எண்ணா= நினைத்து. அண்ணாது= நெருங்காமல். கருதுமொழி= மதிக்கத்தக்க சொ.ல். பெண் ஆரையும்= எந்தஒரு பெண்ணையும். முனையும்= வெறுக்கத்தக்க.

**பொழிப்புரை** : அனைவர்க்கும் பெரியவனே என்று சொல்லியும் நினைத்தும் வணங்குகிறவரைத் துயரம் நெருங்காமல் செய்யும் சிராமலை இறைவனது மலைக்கண் வாழ்கிறவளே ! நான்சென்ற வெறுக்கத்தக்க சுரத்தில்உம்மைப்போன்ற மதிக்கத்தக்க பெண் யாரையும் கண்ணால் நினைவால் காண்பது எப்படி இயலும் ?

**விளக்கம்** : உம்மைப்போன்ற பெண்யாரையும் காண நினைக்கவில்லை என்றதனால் தலைவியையே நினைத்தேன் என்பது எச்சப்பொருள்.

( 305 ) **தலைமகளை ஆற்றுவித்திருந்த அருமை பாங்கி கூறல்**

நிலவாய் விளங்கும் சிராமலை அன்ன நிறைஇழையை
பலவாய் நினது குணத்தைப் புகழ்ந்தும் படிவமதன்
சொலவாய் நினது உருத்தீட்டி யும்உம்ஊர் சுதைமதிலைத்
தலவாய் அருகுறல் காட்டியும் சோகம் தணித்தனனே.

**குறிப்புரை** : நிலவாய்= உலகில். நிறை இழை= மிக்க அணிகலன் அணிந்தவள் - தலைவி. மதன்படிவம்= மன்மதனின் ஓவியம். சொலவாய்= புகழ்வாய்ந்த. உம் ஊர்த்தலவாய்= உமது ஊரிடத்தில் உள்ள. சுதைமதிள்= சுண்ணச்சாந்தினாலான மதிள். அருகு உறை= அருகில் இருப்பதை. இழையைச் சோகம் தணித்தனன் என்க.

**பொழிப்புரை** : உன்னுடைய உயர்குணங்களைப் பலவாறு புகழ்ந்து கூறி, மன்மதனது அழகிய ஓவியம்போன்ற புகழ்வாய்ந்த உனது உருவத்தை வரைந்து, உமது ஊரிடத்தில் உள்ள சுண்ணச்சாந்தினால் ஆன மதிள் நமக்கு மிகஅருகில் இருப்பதைக் காட்டி, உலகில் விளங்கும் சிராமலை போன்ற தலைவிக்கு நீ அவளைப் பிரிந்தனால் ஏற்பட்ட துயரைத் தணித்தேன்.

( வரைவிடை வைத்துப் பொருள்வயின் பிரிதல் முற்றிற்று )

## வரைவு மலிவு

************************

( 306 ) **காதலன் முலைவிலை விடுத்தமை பாங்கி காதலிக்கு உணர்த்தல்**

பணம்திகழ் மண்பவம் ஓட்டும் சிராமலைப் பார்வரைப்பால்
குணம்திகழ் தந்(து)இடைப் பாவாய் கடம்சுரம் கூர்ந்துகடந்(து)
எணம்திகழ் பொன்னைமா தங்கம் சுமக்க இனிதுகொடு
மணம்திகழ் சந்த முலைவிலை தந்தனர் மன்னவரே.

**குறிப்புரை :** பணம்= ஆதிசேடனது படம். மண் பவம்= உலகவர் பாவம். குணம் திகழ்= பண்பில் சிறந்த. தந்து= நூல். கடம் சுரம்= காடு பாலைநிலம். எணம் - எண்ணம் = மதிப்பு. மாதங்கம்= யானை. மணம்= திருமணம். சந்த முலைவிலை= சுகம்தரும் பரிசம்.

**பொழிப்புரை :** ஆதிசேடனின் படம் தாங்கும் உலகில் வாழ்கிறவர்களின் பாவத்தை ஓட்டுகிற சிராமலைப் பாறைஅருகில் வாழும்,பண்பில் சிறந்தவளாம் நூல்போன்ற இடையுடைய பதுமைஒத்தவளே ! தலைவர், காடு பாலைநிலம்ஆகியவற்றை நலமுறக் கடந்துவந்து, மதிக்கத்தக்க பொன்னுடைய மூட்டைகளை யானை சுமக்கக்கொண்டுவந்து, விளங்கும் திருமணத்தின் பொருட்டுப் பரிசப்பொருள் தந்தார்.

( 307 ) **காதலி நற்றாய் உள்ளமகிழ்ச்சி உள்ளல்**

மண்மழை யால்வன் பராந்தகன் வீய மகிழ்ந்தஇறை
கொண்மழை ஆரும் சிராமலை வாய்மணக் கோலமுடன்
எண்மழை யாய்விழி அன்பர் நமதூர் இனிதுவரின்
உண்மழை யார்அ வரைமகிழ் கூறும் உறவுகொண்டே.

**குறிப்புரை : வீய=** அழிய. இறைமகிழ்ந்த கொண்மழை ஆரும் சிராமலை. கொண் - கொன்= காலம் - பருவம். எண்மழையாய்= மதிக்கத்தக்க குளிர்ச்சி. விழி= பார்வை. உண்மழையார்= மனம் குளிர்ந்தவர். உறவுகொண்டு மகிழ்கூறும்= அன்புடன் மகிழ்ந்து வரவேற்பர்.

**பொழிப்புரை :** மண்மாரியால் பராந்தகமன்னன் உறையூருடன் அழிய, இறைவன் மகிழ்ந்துவாழும் சிராமலைக்கண், மணக்கோலமுடன் குளிர்ந்த பார்வையுடைய தலைவர் நமது ஊருக்கு வந்தால், மணம்குளிர்ந்த அனைவரும் அன்புடன் மகிழ்ந்து வரவேற்பர்.

**விளக்கம் :** சாரமாமுனிவர், அருள்தரு தாயுமானவர்க்குச் சூட்டி வழிபட வைத்திருந்த செவ்வந்திமலர்களை, உறையூர் அரசன் - கொடியவனாகியபராந்தகன் - தன்மனைவிக்குச் சூட்டக் கவர்ந்துகொண்டதால் சாரமாமுனிவர் சினந்து இட்ட சாபத்தால் மன்னனும் உறையூரும் மண்மாரியால் அழிந்த செய்தியைக் குறிப்பது, " மண்மழையால் வன்பராந்தகன் வீய " என்றதொடர்.

( 308 ) **பாங்கி, தமர் வரைவுஎதிர்ந்தமை தலைவிக்கு உணர்த்தல்**

வண்(டு)இசை கூட்ட மலர்மணம் நாட்ட வளர்அடம்பில்
கொண்(டு)இசை நீட்டு பவளம் படரும் குளிர்துறைவன்
பண்(டு)இசை சாரும் சிராமலைப் பாவாய் பரியஅன்பர்
மண்(டு)இசை ஈழம் கலிங்கம் தரநமர் வாங்கினரே.

**குறிப்புரை :** நாட்ட= நிலைபெறச்செய்ய. அடம்பில்கொண்டு= அடம்பங்கொடியைப் பற்றிக்கொண்டு. இசைநீட்டு= புகழ்மிக்க. குளிர்துறைவன்= குளிர்ந்த துறைக்குரியவன். பரிய அன்பர்= மிக்க அன்புடைய தலைவன். ஈழம்= பொன். கலிங்கம்= ஆடை. பரிய அன்பர் மண்டு இசை ஈழம் கலிங்கம் தர நமர் வாங்கினர்.

**பொழிப்புரை :** பண்டைப்புகழும் சேர்ந்த சிராமலைவாழ் தலைவியே ! வண்டுகள் இசைபாட, மலர்கள் நறுமணம் நிலைபெறச்செய்ய, உயிர்ப்புடைய அடம்பங்கொடியைப் பற்றிக்கொண்டு படரும் பவளக்கொடியுடைய குளிர்ந்த நீர்த்துறையுடையவன் ஆகிய மிக்க அன்புடைய தலைவர், புகழ்மண்டிய பொன், ஆடை ஆகியவற்றைத் தர நம்மவர் பெற்றுக்கொண்டனர்.

**விளக்கம் :** பொன்னும் ஆடையும் முலைவிலைப்பொருள்கள் - பரிசப்பொருள்கள்.

( 309 ) **தலைமகள் உவகையாற்றாது உளத்தொடு கிளத்தல்**

ஆட்டுக்(கு) உவந்த சிராமலை நாதர் அணிவரைவாய்
கேட்டுக் களிமன மேஇறை வந்த கிளர்ஒலிநீ
நாட்டுக்(கு) உளர்அயல் கூ(று)அல ரோடு நலிதுயரும்
ஓட்டுக் கொளும்விடி காலையின் நாளை உனக்(கு)இனியே.

**குறிப்புரை :** ஆட்டுக்கு= திருக்கூத்தின்கண். மனமே இறைவந்த கிளரொலி நீகேட்டுக் களி. களி= மகிழ். கிளர்ஒலி= உயர்ந்த பேச்சு. நாட்டுக்கு= நாட்டில். கூறுஅலர்= பழிதூற்றல். ஓட்டுக்கொளும்= ஓட்டமெடுக்கும். இனி உனக்கு நாளை விடிகாலையின் ஓட்டுக்கொளும்.

**பொழிப்புரை :** மனமே ! திருக்கூத்தின்கண் மகிழும் சிராமலை இறைவரின் அழகிய நகரின்கண் , தலைவன் முலைவிலையுடன் வந்ததுபற்றிய உயர்ந்த பேச்சினை நீ கேள். நாளை விடியற்காலைப்பொழுதுமுதல் இப்பகுதியினர், மற்றும் அயலார் கூறும் அலராகிய பழிச்சொல்லும், அது நம்மை வருத்தும் துயரமும் ஓட்டமெடுக்கும். அதனால் களிப்புக்கொள்.

**இலக்கணக்குறிப்பு :** விடிகாலையின் - இன் - எல்லைப்பொருளில் வந்த ஐந்தன் உருபு.

( 310 ) **தலைவனைப் பாங்கி வாழ்த்தல்**

பொன்ஆர் அகல இராமநா ராயணன் போதம்என
முன்னா மிளிர்செய் சிராமலை அண்ணல் முதுதிணைவாய்
மின்னாள் உளத்துயர் ஓட மணஒலி வீங்கிடவே

துன்னா வரும்இறை வாழிஎம் தேவியும் தோய்தரவே.

**குறிப்புரை** : பொன்= திருமகள். போதம்= அறிவு. முன்னா மிளிர்செய்= நினைத்தவுடன் ஒளிதரும். முதுதிணைவாய்= தொன்மையான ஒழுக்கமாகிய களவொழுக்கத்தில். உளத்துயர் ஓட= மனத்துயரம் ஓடவும். வீங்கிட= மிக. துன்னாவரும்= நெருங்கிவரும். இறை துன்னாவரும் எம் தோழியும். தோய்தர வாழிய= கலந்து வாழ்க.

**பொழிப்புரை** : திருமகள் வாழும் மார்புடைய இராம நாராயணனது அறிவைப்போல் நினைத்தவுடன் ஒளிதரும் சிராமலை இறைவன் வகுத்த தொன்மையான களவொழுக்கத்தால், மின்னலொத்த தலைவிக்கு ஏற்பட்ட மனத்துயரம் ஓடவும், திருமண ஆரவாரம் மிகவும், தலைவனும் அவன் நெருங்கிவரும் எம்தலைவியும் கலந்து வாழ்க.

**விளக்கம்** : பண்டே இறைவன் வகுத்தது “ இறையனார் களவியல் “ ஆதலின் அதனை முதுதிணை என்றார்.

( 311 ) **தலைவி மணம்பொருட்டாக அணங்கைப் பராநிலை பாங்கி தலைமகற்குக் காட்டல்**

மாலாய பெண்ணைத் தழுவிமுன் சாத்தனை மன்அளித்தோன்
பாலாய துய்ய சிராமலை அன்ன பருமுலையாள்
மேலாய நின்மணம் வேண்டி அணங்கை மிகவணங்கி
நூலாய சொல்லால் பராவுதல் காண்டி நுவல்இறையே.

**குறிப்புரை** : மால்= திருமால். மன் அளித்தோன் பாலாய= பெருமையுறத்தந்த சிவனுக்குரிய. மேலாய= மேலான. அணங்கை= பெண்தெய்வத்தை. நூலாய சொல்= விதிப்படி அமைந்த சொல். நுவல் பராவுதல்= சொல்லிப் போற்றுதல். .

**பொழிப்புரை** : முன்னாளில் திருமாலாகிய ( மோகினி ) பெண்ணைத் தழுவிச் சாத்தனாரைப் பெருமையுற அளித்த சிவனது தூய சிராமலை ஒத்த பருத்த முலையுடைய தலைவி, மேலான நின்னை மணக்கவேண்டி, பெண்தெய்வத்தை நன்கு வணங்கி, விதிப்படி அமைந்த சொற்களைச் சொல்லிப் போற்றுவதைத் தலைவனே ! காண்பாயாக.

**விளக்கம்** : பாற்கடலில் தோன்றிய அமுதத்தை, அசுரர்களை ஏமாற்றித் தேவர்களுக்கே படைக்கத் திருமால், மோகினியாகிய பெண்ணுருவம் கொண்டுவந்தபோது மோகினியைக் காமுற்றுச் சிவபிரான் தழுவ, தோன்றியவர் மாசாத்தன் என்பதை மாதவச் சிவஞானமுனிவரின் காஞ்சிப்புராணம் “ மாசாத்தன் தளிப்படலம் “ விரித்துக் கூறும்.

( 312 ) **பராநிலை கண்ட தலைமகன் மகிழ்தல்**

கள்ளார் மலர்க்குழல் காரிகை நம்மணம் காதலித்தே
நள்ளார்க்(கு) அருளாச் சிராமலை நாதன் நளிர்வரைவாய்
உள்ளார் தரும்பெரும் ஆர்வம் பெருக உயர் அணங்கைப்
புள்ளார் குரலில் பரவுதல் காண்நெஞ்சு பூதலத்தே.

**குறிப்புரை** : கள்= தேன். காதலித்து= மிகவிரும்பி. நள்ளார்= பகைவர். உள்ளார்= உள்ளதலைவி. புள்= குயில். பூதலத்தே நம்மணம் காதலித்து. நெஞ்சு காண்.

**பொழிப்புரை** : பகைவர்க்கு அருளாத சிராமலை இறைவனது குளிர்ந்த மலைக்கண், தேன்பொருந்திய மலர் சூடிய இவள் - தலைவி - மிக்க ஆர்வம் பெருகிட, நம்மை மணக்க மிகவிரும்பி, உயர்ந்த பெண்தெய்வத்தைக் குயிலின் குரலில் போற்றுவதை நெஞ்சே ! காண்பாயாக.

( வரைவு மலிவு முற்றிற்று )

## அறத்தொடு நிற்றல்

***************************************

(313 ) **கையறு தோழி கண்ணீர் துடைத்தல்**

விடையார் பெருமான் சிராமலை யன்ன விளங்கிழைநீர்
மடைஆர் திருஅன உன்திரு நீல மலர்இணைகள்
தடையார் தராது தரளம் சொரிவ(து)என் தாய்முனிவோ
புடையார் புகன்றன உண்டோ புகல்வாய் புரிந்(து)எனக்கே.

**குறிப்புரை** : கையறு= துன்புற்ற. உன் திருநீலமலர் இணைகள். மடைஆர் நீர் தடையார்தராது தரளம் சொரிவது என். புடையார்= பக்கத்தில் இருப்பவர். புரிந்து= விளங்க.

**பொழிப்புரை** : விடை ஏறும் சிவபிரானது சிராமலை ஒத்த சிறந்த அணிகலன் அணிந்தவளே ! திருமகள் போன்ற உனதுஅழகிய நீலமலர்ஒத்த கண்கள், யாராலும்தடுக்கமுடியாதபடி மடையிலிருந்து வரும் நீர்போல் கண்ணீர் சொரிவதேன் ? தாயார் சினந்தாளா ? பக்கத்தில் இருப்பவர் யாரும் ஏதும் கூறினரா ? விளக்கமாக எனக்குச்சொல்.

( 314 ) **தலைமகள் கலுழ்தல் காரணம் கூறல்**

விண்தலைத் தங்கு சிகரச் சிராமலை மெல்லியலே
கண்டலைத் தண்டலை வண்டலை ஐஅலை கான்றுகழூஉம்

மண்டலைத் தண்ணிடத்(து) என்னை மருவி மகிழ்ந்தஇறை
எண்டலைத் தங்காப் பிரிந்தது காரணம் என்துயர்க்கே.

**குறிப்புரை** : கலுழ்தல்= கண்ணிர் சிந்துதல் விண்தலை தங்கு= வானில்பொருந்திய. கண்டலைத் தண்டலை= கண்டல் மரங்கள் நெருங்கிய சோலை. வண்டலை= வண்டல்மண்ணை. ஐ அலை கான்று கழூஉம்= அழகியஅலைகள் சிந்திக்கழுவும். அலைமண்டு தண்ணிடத்து= அலைகள் மிக்க குளிர்ச்சியான இடத்தில். மருவி= தழுவி. எண்தலை - என்தலை= என்னிடம். தங்காப் பிரிந்தது= தங்காமல் பிரிந்ததே..

**பொழிப்புரை** : வானில் பொருந்திய உச்சியுடைய சிராமலைவாழ் மென்மையான இயல்பினளே ! கண்டல் மரங்கள் / தாழை நெருங்கிய சோலையிலும், வண்டல் மண்ணை அழகிய அலைகள் சிந்திக் கழுவும் அழகிய தண்ணிய அலைகள் மிக்கஇடத்திலும் என்னைத்தழுவி மகிழ்ந்த தலைவன், என்னிடம் தங்காமல் பிரிந்ததே என்துயரத்திற்குக் காரணம்.

**இலக்கணக்குறிப்பு** : விண்தலை - தலை - ஏழன் உருபு. என் தலைஎன்பது, எண் தலை என்றுவந்தது எதுகை நோக்கிய செய்யுள் விகாரம்.

( 315 ) **தலைவன் தெய்வம் காட்டித் தெளிப்பத் தெளிந்தமை கூறல்**

பிழிகாட்டும் கொன்றைத் தொடையான் சிராமலைப் பித்தன்அருள்
மொழிகாட்டும் வாய்மை உடையார் கலந்து முனம்உரைசூள்
விழிகாட்டும் வண்டினம் சொல்லுமன் தேவும் விளம்பிடுமால்
கழிகாட்டும் சொல்லைக் கனங்குழாய் மெய்யாக் கருதினனே.

**குறிப்புரை** : பிழிகாட்டும்= தேன் துளிக்கும். மொழிகாட்டும்= சொல் உணர்த்தும். சூளுரை= வாக்குறுதி. விழிகாட்டும்= கண்கள்போன்ற. மன்சொல்லும்= உறுதியாகக் கூறும். தேவு= தெய்வம்.. கழிகாட்டும்= மிக்க உறுதிஉணர்த்தும்.

**பொழிப்புரை** : கனமான காதணி அணிந்தவளே ! தேன்துளிக்கும் கொன்றைமலர்மாலை அணிந்த சிராமலை இறைவன் அருளும் சொல்ஒத்த வாய்மொழியுடைய தலைவன் முன்பு என்னைக்கூடியபின் கொடுத்த வாக்குறுதியை, விழிபோன்ற வண்டுகள் கூறும் ; பெருமைபொருந்திய தெய்வமும்கூறும். மிக்க உறுதிஉணர்த்தும் உண்மைஎன்றே அச்சொல்லைக் கருதினேன்.

( 316 ) **தலைவி தலைமகன் இகந்தமை இயம்பல்**

வில்லாய் மலையாம் சிராமலை அண்ணல் விழுச்சிலம்பில்
நல்லாய் கரிஎனத் தெய்வம் பலவே நனிகுறித்துச்
சொல்லாய் கருத்துறச் சூள்உரைத் தார்பின்அச் சொல்மறந்தார்
கல்லாய் மனம்தான் பிரிந்தார் பெரியர்தாம் காண்குவையே.

**குறிப்புரை** : இகந்தமை= உறுதிச்சொல்லை மீறியமை. வில்= ஒளி. கரி= சாட்சி. குறித்து= அத்தெய்வங்கள்மேல் வைத்து. மனம்தான் கல்லாய்ப் பிரிந்தார்.

**பொழிப்புரை** : நல்லவளே ! ஒளிவடிவ மலையாம் சிராமலை இறைவனின் மேலான மலைக்கண் சாட்சி என்று பலதெய்வங்களைக் குறிப்பிட்டு அவற்றின்மேல் வைத்து உறுதிகூறும் சொல்கூறினார். பின்னர் அதனை மறந்தார், மனத்தினைக் கல்லாக்கிக்கொண்டு தலைவர் பிரிந்தார். பார்த்தாயா !

( 317 ) **பாங்கி இயற்பழித்து உரைத்தல்**

தும்பி உரிகொள் சிராமலை வித்தகர் தூச்சிலம்பில்
நம்பி உரிமையில் சேர நனிசூள் நவின்றஇறை
வெம்பி உளம்நீ மெலியப் பிரிந்தார் விளம்பிடுங்கால்
நம்பி உவரே நலத்தவர் கூறிடின் நாயகமே.

**குறிப்புரை** : இயல்பழித்தல்= இயல்பைப்பழித்தல். தும்பி உரி= யானைத்தோல். உரிமையில் சேர= உரிமையுடன் வந்து கூட. நீ உளம் வெம்பி மெலிய. நம்பி உவரே நாயகம் நலத்தவர்= தலைவர் அத்தகு தலைமைக்குணத்தவர்.

**பொழிப்புரை** : யானைத்தோல் போர்த்த சிராமலை ஞானியாகியசிவனின் தூய மலைக்கண், உரிமையுடன் நம்பி உன்னைகூட, மிக உறுதிகூறிய தலைவர் , நீ மனம்வெம்பி உடல்மெலிய உன்னைப் பிரிந்தார். சொல்லப்போனால், தலைவர் அத்தகு குணத்தவரேஆவார்.

( 318 ) **தலைமகள் இயற்பட மொழிதல்**

பொன்மழை போல்தரும் ராமநா ராயணன் புந்திசெயும்
இன்மழை நோக்கி இடத்தன் சிராமலை ஏண்பொழில்வாய்
மன்மழை நோக்கும் பயிர்போல் மறந்த மகிழ்நரையே
துன்மழை போல்கண்ணின் நீர்வர நோக்குவன் தூமொழியே.

**குறிப்புரை**: புந்திசெயும்= நினைந்து வழிபடும். ஏண்= பெருமை. மன்= பெருமை. துன்= நெருக்கம்

**பொழிப்புரை** : தூயமொழிபேசுகிறவளே ! பொன்மாரிபோல் வழங்கும் ராமநாராயணன் நினைந்து வழிபடும் கருணைமழை போன்ற பார்வையுடைய உமையவளை இடப்பாகம் கொண்டவனின் சிராமலையின் பெருமை பொருந்திய சோலைக்கண், பெருமைபொருந்திய மழையை எதிர்பார்க்கும் பயிர்போல் உள்ள என்னை மறந்த கணவராகிய தலைவரை, நெருங்கிய மழைபோல் கண்ணீர் பெருக

எதிர்நோக்கி இருக்கிறேன்.

**இலக்கணக்குறிப்பு :** இச்செய்யுள் உவமையணி.

( 319 ) **தெய்வம் பொறைகொளச் செல்குவம் என்றல்**

மெய்உரைத் தார்க்(கு)அருள் பெம்மான் சிராமலை மெல்லியலே
பொய்உரைத் தார்என்று தெய்வம் சினந்து புரவலர்க்கு
நொய்உரைத் தாம்நோய் செயாவகை சென்று நுவன்மலர்தூய்
செய்உரைத் தாம்துதி கூறவா தாயான செல்வரையே.

**குறிப்புரை :** நொய் உரைத்தாம் நோய்= பழிக்கத்தக்க துன்பம். நுவன்மலர்= சிறப்பானதாகக் கூறும் மலர். தூய் செய் உரை= தூவிச் சொல்லும் வேண்டுதல். துதிகூற= போற்ற.

**பொழிப்புரை :** மென்மையான இயல்புடையவளே ! உண்மை பேசுகிறவர்களுக்கு அருள்புரியும் சிராமலை இறைவன், பொய்கூறினார் என்று தலைவரைச் சினந்து, பிறர் பழிக்கத்தக்க துன்பம் செய்யாதவாறு சிறந்தமலர்கள் தூவி, கூறும் வேண்டுதல் சொல்லி, அருள்தரு தாயானசெல்வரைப் போற்றுவோம் வா.

( 320 ) **இல்வயிற் செறித்தமை கூறல்**

கேட்டாள் அனைஊர் அலரை உடல்மேல் கிளர்பசப்பை
நீட்டாள் அயில்வேல் விழியுறக் கண்டாள் நினைந்துபொங்கிப்
பாட்(டு)ஆள் அளிமுரல் சோலைச் சிராமலைப் பால்எனையும்
போட்டாள் அணிமனைக் குள்ளே புழுங்கயான் பொற்றொடியே.

**குறிப்புரை :** இல்வயின் செறித்தமை= வீட்டில் அடைத்து வைத்தல். அளிமுரல் சோலைப்பால் ஊர் அலரை அனை கேட்டாள். அயில்வேல்விழி உடல்மேல் பசப்பு உறக்கண்டாள், நீட்டாள். நீட்டாள்= மிகுதியாக்க விரும்பாதவளாய். அணிமனைக்குள்ளே யான்புழுங்க எனையும் போட்டாள்.

**பொழிப்புரை :** பொன்னாலான வளையலணிந்தவளே ! வண்டுகள் முரலும் சிராமலைக்கண், ஊரவரின் அலர் தூற்றுதலைத் தாய் கேட்டாள். கூரிய வேல்போன்ற விழியுடைய என்மேல் மேன்மேலும் மிகும் பசலைநோயினை நேரில் கண்டாள். என்நிலைமையை எண்ணிமனம் பொங்கி அழகிய மனைக்கண் நான் மனம்புழுங்க என்னைச் சிறைப்படுத்தினாள்.

**இலக்கணக்குறிப்பு :** அனை, எனை - இடைக்குறைகள். பொற்றொடியே - மூன்றாம் வேற்றுமை உருபும்பயனும் உடன்தொக்கத் தொகைப்புறத்துப் பிறந்த அண்மொழித்தொகை.

( 321 ) **செவிலி கனைஇருள் அவன்வரக் கண்டமை கூறல்**

அஃகிய நுண்இடை பங்கன் சிராமலை யார்பொழில்வாய்
எஃகியல் பெற்ற விழியாய் இரவில் இறைகுறிவாய்
வெஃகியல் கொண்டு வரவனை கண்டு மிகமருண்(டு)எற்(கு)
எஃ(கு)இயல் கைக்குகன் வந்ததாக் கூறினள் என்இயைந்தே.

**குறிப்புரை :** அஃகிய= சுருங்கிய - மெல்லிய. எஃகு இயல்= வேல்போல் கூர்மை. வெஃகியல்= விருப்பம். வரவனை= வந்த தலைவனை. எற்கு= என்னிடம். எஃகு இயல் குகன்= வேல்தாங்கிய முருகன். என் இயைந்து= எனக்குப்பொருந்த.

**பொழிப்புரை :** வேல்போல் கூர்மையான கண்களுடையவளே ! மெல்லிய இடையுடைய உமையவளை இடப்பாகம்கொண்ட தாயுமானவனின் சோலைக்கண் இரவில் குறிஇடத்தில் விருப்பமுடன் வந்தவனைக்கண்டு மிகமருண்டு, என்னிடம் வேலேந்திய முருகன் வந்ததாகப் பொருத்தமாகக் கூறினாள்.

( 322 ) **செவிலி தலைமகள் வேற்றுமை கண்டு பாங்கியை வினாதல்**

தாயான செல்வன் சிராமலை யன்ன தனிமகட்கு
நோயான(து) என்உடல் எய்த்துப் பசந்து நுவல்குமுத
வாயான தும்திற வாள்பால் பருகாள் வரைப்புனத்துப்
போயான(து) உண்டோ புகல்பாங்(கு)ஆம் பொற்கொடி பூண்(டு)எனக்கே.

குறிப்புரை : தனிமகள்= ஒரேமகள். என்= என்ன. எய்த்து= இளைத்து. குமுதவாய்= செங்குமுதம் ஒத்தவாய். வரைப்புனம்= மலைகண்ணதான தினைக்கொல்லை. ஆனதும்= நடந்ததும். பூண்டு எனக்கே புகல்= சரிவர எனக்குக் கூறு.

**பொழிப்புரை :** தலைவிக்கு நெருக்கமான பொற்கொடி போன்றவளே ! அருள்தரு தாயுமானவரின் சிராமலைபோன்ற எனது ஒரேமகளுக்கு, என்ன நோய் ? உடம்பு இளைத்து, பசலைபூக்க, செங்குமுதம் ஒத்த வாய்திறந்து பேசவில்லை, பாலும் பருகவில்லை. மலைக்கண்ணதான தினைக்கொல்லைக்குப் போனபோது ஏதேனும் நடந்ததா ? எனக்குச் சரிவரக்கூறு.

( 323 ) **பாங்கி வெறிவிலக்கல்**

வினாஒன்று வேல உரைப்பாய் விளங்கிழை மெல்உயிரை
முனாஒன்று காக்கவோ ஆட்(டு)உயிர் போக்கவோ மூதறிவின்
மனாஒன்று தேவன் சிராமலைப் பாங்(கு)இங்கு வந்(து)அடைந்தாய்

எனாஒன்று கூறும் பலிஇவள் நோய்க்(கு)எண் இரும்பழியே.

**குறிப்புரை** : உரைப்பாய்= விடைகூறு. முனா காக்கவோ= முதலில் காக்கவோ. மூதறிவு= ஞானம். மனா ஒன்று= மனத்தில் பொருந்திய. எனா ஒன்றுகூறு= என்று விடை ஒன்றினைக்கூறு. எண்பலி இரும்பழியே= மதிக்கும் பலியிடல் பெரும்பழிதரும்.

**பொழிப்புரை** : ஞானமுடன் கூடிய மனத்தில் பொருந்தும் இறைவனது சிராமலைப் பாங்கிலான வேலனே ! ஒருவினாவுக்கு விடை கூறு. மென்மையான தலைவியின் உயிரைக் காக்க இங்கு வந்தாயா ? ஆட்டின் உயிரைப் போக்க இங்குவந்தாயா ? என்று ஒன்றுக்கு விடை கூறு. இவள் நோய்க்குப் பலியிடல் பெரும்பழிதரும்.

( 324 ) **வெறி விலக்கியவழிச் செவிலி தோழியை வினாதல்**

மஞ்சிற் கரிய குழல்மினே வேலன் மறிஅறுக்கா(து)
எஞ்சிற்(று) இருக்க அவன் செலக் கூறினை என்மதியோ
விஞ்சிற்(று) இலங்கு சிராமலைக் கண்ணே விளங்குகடல்
நஞ்சில் கலந்த கணாட்(கு)உற்ற(து) என்னோ நவிலுகவே.

**குறிப்புரை** : மஞ்சு= மேகம். மினே= மின்னல் ஒத்தவளே. மறி= ஆடு. எஞ்சிற்று இருக்க= உயிருடன் இருக்க. என்மதி= ஏன். விஞ்சிற்று இலங்கு= மேலானதாக விளங்கும். நஞ்சில் கலந்த= நஞ்சுடைய.

**பொழிப்புரை** : மேலானதாக விளங்கும் சிராமலையில் வாழ்கிறவளாம் மேகம் போல் கருமையான கூந்தலுடைய மின்னல் ஒத்தவளே ! ஆட்டினைக் கொல்லாது அது உயிருடன் இருப்பதற்கு வேலனைப் போகுமாறு ஏன்கூறினாய் ? பாற்கடலின் நஞ்சுடைய பார்வை கொண்டவளுக்கு நேர்ந்ததுஎன்ன ? கூறுக.

( 325 ) **பூத்தரு புணர்ச்சியால் அறத்தொடு நிற்றல்**

வேடனின் ஐந்தாம் கணைதனைக் கொண்(டு)அனாய் மேலொருவன்
பாடல்இன்(று) ஓங்கும் சிராமலைக் காவிடைப் பாவைஉன்கண்
நீடல்நின்(று) ஓர்ந்தது(து)அறிந் தேநீர் புகும்இது நேர்மதன்கை
கூடல்நின்(று) ஆரும் எனநின் மகள்உது கொண்டனரே.

**கூட்டுமுறை** : அனாய் மேல்ஒருவன் பாடலின்று ஓங்கும் சிராமலைக் காவினிடை உன்கண்பாவை நீடல்நின்று ஓர்ந்தது அறிந்தே மதன் கைநேர் வேள்தனின் ஐந்தாம் கணைதனைக் கொண்டு கூடல் நின்று ஆரும் என நீர்புகும் இது நின்மகள் உது கொண்டனரே.

**குறிப்புரை** : அன்னாய்= தாயே. காவினிடை= சோலையில். உன்கண்பாவை= உனது கண்ணின் பாவைபோன்றவள். நீடல்நின்று ஓர்ந்தது அறிந்தே= நெடுநேரம் நின்று பார்த்ததை அறிந்து. மதன் கைநேர்= மாட்சிமை தரும், வேள்தனின்= மன்மதனின். ஐந்தாம் கணை= மாம்பூ. கொண்டு= ஏற்றால். கூடல்நின்று ஆரும் என= தழுவி இன்புறுவாள் என்று, நீர்புகும் உது= அத்தன்மை உண்டாக்கும் மாம்பூவினை. கொண்டனரே= ஏற்றாள்.

**பொழிப்புரை** : தாயே ! தனக்குமேல் யாரும் பாடல் பெறாதவகையில் சிறந்த சிராமலைச் சோலையில், உனது கண்ணின் பாவைபோன்றவள் - மகள், நெடுநேரம் நின்று பார்த்ததை அறிந்து, மாட்சிமைதரும் மன்மதன் எய்யும் ஐந்தாவதான மாம்பூவினைத்தர ஏற்றால், நம்மைத்தழுவி இன்புறுவாள் என்று தர , அத்தன்மையை உண்டாக்கும் மாம்பூவினை ஏற்றாள்.

**விளக்கம்** : மன்மதன், திருமாலின் காம உணர்வில் உதித்தமானச புத்திரன் என்பர். அவன்கணைகள் ஐந்து. கணைகளும் அவை விளைவிப்பனவும் : தாமரை - மயக்குதல்; அசோகம் - ஸ்தம்பிக்கச் செய்தல்; முல்லை - பைத்தியம் ஆக்கல்; நீலோத்பலம் - மாய்த்தல்; மாம்பூ - மோகத்தால்வாடச்செய்தல். இதனை;

" நினைக்கும் அரவிந்தம், நீள்பசலை மாம்பூ,
அனைத்துஉணவும் நீக்கும் அசோகம், - வனத்திலுறு
முல்லை கிடைகாட்டும், மாதே முழுநீலம்
கொல்லும்,மதன் அம்பின் குணம் " இரத்தினச்சுருக்கம். ( நன்றி :ஞானப்பேழை பகுதி 1 )

மாம்பூவால் விளைந்த புணர்ச்சியேதவிர உன்மகள் மேல்தவறில்லை என்றாள்.

(326 ) **புனல்தரு புணர்ச்சியால் அறத்தொடு நிற்றல்**

மதிமிகு ராமநா ராயண வள்ளல் வழுத்தும்உயர்
துதிமிகு மேன்மைச் சிராமலைப் பாங்(கு)ஒளிர் தூநதியாம்
கதிமிகு காவிரி நின்மகள் கொண்(டு)ஓடல் கண்(டு)ஒருவர்
துதிமிகு வேலர் புகுந்(து)அணைத் தேதந்தார் நோயறவே.

**குறிப்புரை** : கதி= வேகம். நோய்= துன்பம்.

பொ**ழிப்புரை** : அறிவுமிக்க ராமநாராயண வள்ளல் வணங்கும் போற்றுதல் மிக்க மேன்மையுடைய சிராமலையின் பக்கம் விளங்கும் தூயதும், விரைந்து ஓடுவதும் ஆகிய காவிரிப்பேராற்று நீர், உன்மகளை இழுத்துக்கொண்டு ஓட, அதுகண்ட ஒருவராகிய போற்றத்தக்க வேலேந்தியவர், நீருட்புகுந்து அவளைத்தன் மார்புடன் அணைத்துக்கொண்டு நீந்திவந்து துன்பமின்றிக் கரைசேர்த்தார்.

**விளக்கம்** : அவரால் மார்புடன் அணைக்கப் பெற்றாள் என்பதால் இவளுக்குஉரியவர் அவரே என்றாள்.

( 327 ) **களிறுதரு புணர்ச்சியால் அறத்தொடு நிற்றல்**

கொங்கைக்(கு) உடைந்த களிறுஒன்று கோபம் கொடுபகையை
நங்கைக்கு எதிர்வந்து வென்றிட அன்னாய் நணுகிடுங்கால்
செங்கைக் கொடுவேல் கொடுதாக்கி விண்ஆர் சிராமலைவாய்
தங்கைக்(கு) உறாவணம் காத்(து)அளித் தார்ஒரு சற்குணரே.

**குறிப்புரை :** கொங்கைக்கு உடைந்த= முலைக்குத் தோற்ற. நங்கை= தலைவி. பகையை வென்றிட. நணுகுதல்= நெருங்கல். கைக்கொடு வேல் கொடு= கையில் ஏந்திய வேலால். தங்கைக்கு உறாவணம்= அந்த யானையின் கையில் அகப்படாதவாறு. சற்குணர்= நற்குணமுடையவர்.

**பொழிப்புரை :** வானளாவிய சிராமலைக்கண், இவளது முலைக்குத்தோற்ற ஒரு ஆண்யானை கோபத்துடன் தன்பகைதீர்க்க இவள் எதிரே வந்தபொழுது, தனது சிவந்த கையில் ஏந்திய கொடிய வேலால் யானையைத்தாக்கி, அதன்கையில் இவள் அகப்படாதவாறு நற்குணமுடைய ஒருவர் இவளைக்காத்தார்.

**விளக்கம் :** யானையின் கையில் அகப்படாதபடி இவளைத்தன்கையால் காத்தவர்க்கே இவள் உரியவள் என்றாள்.

( 328 ) **தலைமகள் வேற்றுமைகண்டு நற்றாய் செவிலியை வினாதல்**

பாசத் தளைஅறுத்(து) ஆளும் சிராமலைப் பண்ணவன்தன்
நேசத் திரிசிர மாமலை வாய்நம் நிறைஇழைக்கு
வாசத் திருஉடல் எய்த்துச் சிவசிவ மாறியுரு
பேசத் தளர்ந்த(து)என் கூ(று)ஒளி யா(து)உயிர்ப் பேரணங்கே.

**குறிப்புரை :** பாசத்தளை= பாசமாகிய கட்டு. நேசம்= அன்பு. நிறை இழை= நிறைந்த அணிகலன் அணிந்தவள்( தலைவி ). திரு வாசம்= திருமகள் வாழும். எய்த்து= இளைத்து. உருமாறி பேச= அழகு மாறியது என்று கூறுமாறு. என்= எப்படி. உயிர்ப்பேரணங்கே= தலைவிக்கு உயிராக விளங்கும் தோழியே.

**பொழிப்புரை :** தலைவியின் உயிராக விளங்குகிறவளே ! உயிர்களின் ஆணவம் கன்மம் மாயையை ஆகியவற்றை அறுத்தெரிந்து ஆட்கொள்ளும் இறைவனாகிய அருள்தரு தாயுமானவனின் அன்புக்குரிய சிராமலையில், நமது தலைவியின் திருமகள்வாழும் உடல் இளைத்துப் பிறர்பேசுமாறு அழகு குன்றியது எப்படி ? உண்மையை மறைக்காமல் கூறு.

**விளக்கம் :** சொல்லக்கூடாததைச் சொல்ல , கேட்கக்கூடாததைக் கேட்க நேருங்கால் சிவசிவ என்பது அடியவர் வழக்கம்.

**இலக்கணக்குறிப்பு :** சிவசிவ - இரட்டைக்கிளவி.

( 329 ) **செவிலி நற்றாய்க்கு முன்னிலைப் புறமொழியால் அறத்தொடு நிற்றல்**

அனமும் பருந்தும் உகைக்கும் இருவர்க்(கு)அரியஅரன்
தினமும் பொருந்து சிராமலை அன்னாய் திறல்ஒருவர்
தனமும் பயில்கார்க் குழலும் முளைக்குமுன் தண்குழலை
மனமும் வனமும் களிக்கக் கலந்தாராம் வந்(து)இடத்தே.

**குறிப்புரை :** முன்னிலைப் புறமொழி= யாருடனோ பேசுவதுபோல் தன்முன்னே இருப்பவரிடம் பேசுதல். அனமும் பருந்தும் உகைக்கும் இருவர்= அன்னப்பறவை, கருடன் ஆகியவற்றின்மேல் ஏறிச் செலுத்தும் நான்முகன், திருமால். தினமும்= எந்நாளும். அன்னாய்= போன்றவளே. தனம்= முலை. பயில்கார்க் குழல்= அடர்ந்த கார்மேகம்போன்ற கூந்தல். தண் குழல்= மென்மையான கூந்தலுடைய தலைவி. வனம்= அழகு.

**பொழிப்புரை :** அன்னப்பறவை, கருடன் ஆகியவறின்மேல் ஏறிச்செலுத்தும் நான்முகனுக்கும் திருமாலுக்கும் அரியவனாகிய அருள்தரு தாயுமானவர் எந்நாளும்பொருந்தியுள்ள சிராமலைபோன்ற சிறப்புடையவளே ! ஆற்றல்மிக்க ஒருவர், மென்மையான கூந்தலுடைய தலைவிக்கு முலைகளும், அடர்ந்த கார்மேகம்போன்ற கூந்தலும் முதலிய பக்குவம்வருமுன், அவளுடைய மனமும் அழகும் களிப்புற உரிய இடம்வந்து புணர்ந்தாராம்.

( 330 ) **நற்றாய் தமருக்கு அறத்தொடு நிற்றல்**

கடுக்கறை அத்தர் சிராமலைப் பாலே கவின்நமர்காள்
மிடுக்(கு)அற அன்னம் முதுக்குறை வுற்றாள் விளங்கநனி
நடுக்கறை கொள்ளா வகைஅவள் முன்புணர் நாயகற்கே
தடுக்(கு)அற நன்மணம் செய்வாம் தனிமறை சார்முறையே.

**குறிப்புரை :** கடுக்கறை= நஞ்சினாலான களங்கம். அத்தர்= சிவபிரான். கவின்= சிறப்பு. மிடுக்கு அற= செருக்கின்றி. முதுக்குறை= மிக்க அறிவு. நடுக் கறைகொள்ளாவகை= நீதி களங்கமுறாவண்ணம். தடுக்கு அற= தடையின்றி. தனிமறைசார் முறை= சிறந்த மறைகள் கூறும் வண்ணம்.

**பொழிப்புரை :** நஞ்சின் களங்கம்கொண்ட சிவபிரானது சிராமலைக்கண் சிறப்புற வாழும் நம்மவர்களே ! அன்னம்போன்றவள் - தலைவி - மிக்க அறிவு உடையவளானாள். நாம் செருக்குக்கொள்ளாமலும், மிகச்சிறந்துவிளங்கவும், நீதி களங்கமுறாவண்ணமும் அவள் முன்னாளில் புணர்ந்த தலைவனுக்கே தடையின்றி நன்முறையில் சிறந்த மறைகூறும் வழியில் மணம்முடிப்போம்.

( அறத்தொடு நிற்றல் முற்றிற்று )

## உடன்போக்கு

********************

( 331 ) **பாங்கி தலைவற்கு உடன்போக்கு உணர்த்தல்**

சீரெலாம் கொண்ட சிராமலை வாய்எமர் செந்திருவின்
வாரெலாம் கொண்ட முலைவிலை யாக வளர்உலகைக்
கூரெலாம் கொண்டு தரினும் எமர்கொளார் கோமளத்தை
நேரெலாம் கொளிறை வாவுடன் கொண்(டு)ஏ(கு)உன் நீள்பதிக்கே.

**குறிப்புரை** : எமர்= எம்மவர். கூர்= மிகுதி. கோமளம்= இளமைச்செவ்வி. கொண்டு ஏகு= அழைத்துக்கொனண்டு செல்.

**பொழிப்புரை** : திருமகளின் அழகுடன் கூடிய தலைவியின் கச்சணிந்த முலைப்பரிசமாக மிகப்பெரிய உலகப்பொருள்களை மிகுதியாகக் கொடுத்தாலும் சிறப்புகள் எல்லாம் கொண்ட சிராமலைவாழ் எம்மவர் அதை ஏற்றுக்கொண்டு இளமைச்செவ்வியுடைய தலைவியை உனக்குத்தரமாட்டார்கள். எனவே தலைவனே இவளை உன்னுடன் அழைத்துக்கொண்டு உனது பேரூருக்குச் செல்.

( 332 ) **தலைவன் உடன்போக்குக்கு மறுத்தல்**

கண்ட விழியும் சொல்நாவும் கருதும் கருத்தும்உடன்
மண்ட எரியும் சுரம்கடந்(து) எங்ஙன் மலர்த்திருவைக்
கொண்டல் உறங்கும் சிராமலை நாட்டுக் குணக்கொடியே
அண்ட அரும்தூரம் என்ஊர்க்(கு) உடன்கொண்டு அடைவதுவே.

**குறிப்புரை** : மண்ட= மிகவும். அண்ட அரும்தூரம் என்ஊர்க்கு எங்ஙன் உடன்கொண்டு அடைவது. அண்ட அரும் தூரம்= கடத்தற்கரிய நெடும்தொலைவு. எங்ஙன்= எப்படி.

**பொழிப்புரை** : கார்மேகம் தங்கும் சிராமலைப் பகுதியில் வாழும் நற்குணக் கொடிஒத்தவளே ! பார்த்த கண், சொல்லிய நா, நினைக்கும் மனம் ஆகியன உடனே மிகவும் எரிபற்றும் பாலைநிலத்தைத், திருமகள்போன்ற தலைவியை உடன் அழைத்துக்கொண்டு கடத்தற்கரிய தொலைவைக் கடந்து என் ஊரினை அடைவது எப்படி ? அது இயலாத ஒன்று.

**விளக்கம்** : பாலையின் கடுமையான வெப்பம்பற்றி,

" அணிகொண்ட குரங்கினங்கள் அலைகடலுக்கு அப்பாலை
மணல்ஒன்றும் காணாமல் வரைஎடுத்து மயங்கினவே " ( கலிங்கத்துப் பரணி. 96. )

( 333) **பாங்கி தலைமகனை உடன்படுத்துதல்**

நூலே றியபுகழ் ராமநா ராயணன் நோன்(பு)எனவே
மேலே றியசீர்ச் சிராமலை எங்கள் விளங்கிழைக்(கு அ)ன்
பாலே றியநின் னுடன்செலின் பாலை பனிவயலாம்
தாலே றியவிசை வேல்அக லும்போதாம் தாளிணைக்கே.

**குறிப்புரை** : நோன்பு= விரதம். அன்பால் ஏறிய= மிக்க அன்புடைய. செலின்= சென்றால். வயல்= மருதநிலம். தால் ஏறிய - தாள் ஏறிய= காலில் குத்திய. விசை= வேகமாக. வேல்= மூங்கில் / வேலமுள். அகலும் போதாம்= மலர்ந்த மலராகும்.

**பொழிப்புரை** : நூல்களில் பதியப்பெற்ற மிக்க புகழ்வாய்ந்த ராமநாராயணன் கொண்ட விரதம்போல் உயர்ந்து விளங்கும் சிராமலைவாழ் எம்தலைவி, மிக்க அன்புடைய உன்னுடன் சென்றால் அவள் கால்களுக்குப் பாலை நிலமும் குளிர்ந்த மருதநிலம் ஆகும். காலில் வேகமாகக் குத்தும் மூங்கிலும் மலர்ந்த மலராகும். ( எனவே உடன்கொண்டேகு )

**இலக்கணக்குறிப்பு** : தாளேறியஎன்பது தாலேறிய என்றுவந்தது எதுகை நோக்கிய செய்யுள் விகாரம்.

. ( 334 ) **தலைவன் போக்குஉடன்படுதல்**

மஞ்(சு)ஊட்டம் மிக்க சிராமலைப் பாங்(கு)உறை மாமயிலே
பஞ்(சு)ஊட்ட உள்சுளிக் கும்பதப் பாவை பரல்கடத்தில்
நெஞ்(சு)ஊட்ட அன்புகொண்(டு) என்பின் வரின்மனம் நீள்நெருப்பின்
மிஞ்சூட்(டு) அரக்காம் எனினும் மழைத்(து)என்ஊர் மேவுவனே.

**குறிப்புரை** : ஊட்டம் மிக்க= வளம்மிக்க. பஞ்சு ஊட்ட= செம்பஞ்சுக்குழம்பு தடவ. உள்சுளிக்கும்= வலிக்கிறதென்று முகம் சுளிக்கும். பதம்= பாதம். பரல்=பருக்கைக்கற்கள். கடம்= பாலை நிலத்துவழி. ஊட்ட அன்பு= மிக்க அன்பு. மிஞ்சு நீள்நெருப்பின் ஊட்டு அரக்கு= அளவற்ற மிக்க நெருப்பில் இட்ட அரக்கு. மழைத்து= குளிர்ச்சியுடையதாகும்.

**பொழிப்புரை** : மேகத்தால் - மழையால் வளம்மிக்க சிராமலைப்பக்கம் வாழ்கிற மயில்போன்றவளே ! செம்பஞ்சுகுழம்பு ஊட்டும்போதே வலிக்கிறதென்று முகம்சுளிக்கும் பாதங்களுடைய பதுமைபோன்றவள், பருக்கைக்கற்கள் மிக்க பாலைநிலவழியில் மனத்தில் மிக்க அன்புடன் என்னுடன்

வந்தால், அளவற்ற மிக்க நெருப்பில் இட்ட அரக்குப்போல் நிலம் சுட்டாலும் மழைபோல் மனம்குளிர்ச்சியடையும் ஆதலின் எனது ஊரடைவோம்.

( 335 ) **தலைவிக்கு உடன்போக்கு உணர்த்தல்**

சோலை திகழும் சிராமலைத் தோகைநம் தோன்றல்எனை
நூலை நிகர்இடை நும்தனி அன்னம் நுவலுசுடு
பாலை விரும்பும்கொல் என்றார் அவருள் பதிகருத்தை
வேலை நிகர்விழி மானே எனக்கு விளக்குகவே.

**குறிப்புரை** : தோகை= மயிபோன்றவளே. தோன்றல்= ஆண்களுள் சிறந்தவன் - தலைவன். நும் தனி அன்னம்= உமது ஒப்பற்ற அன்னப்பறவை போன்றவள் - தலைவி. சுடுநுவல் பாலை= வெப்பத்தில் புகழ்பெற்ற பாலைநிலம். விரும்பும்கொல்= என்னுடன் விரும்பி வருவாளா. உள்பதி கருத்து= மனத்தில் பதிந்தகருத்து. எனக்கு விளக்குக= எனக்கு விடையாக விளக்கிக் கூறு.

**பொழிப்புரை** : சோலைவிளங்கும் சிராமலை வாழ்மயில்போன்றவளே ! நம்தலைவன் என்னிடம் " நூல்போன்ற இடையுடைய உமது அன்னப்பறவை போன்ற தலைவி, வெப்பத்தில் புகழ்பெற்ற பாலை வழியில் வர விரும்புவாளா ?" என்றார். வேல்போன்ற விழியுடைய மான்போன்றவளே ! அவர் மனத்தில்கொண்ட குறிப்பிற்கு விடையை எனக்குக் கூறுக.

( 336 ) **தலைவி நாண்அழிவு இரங்கல்**

வல்லில் திகழும் முலையாய் சிராமலை மாண்வரைவாழ்
இல்லில் கடந்(து)அனை ஆதியர் தேட இரும்கடம்தம்
மல்லில் திரள்தோளர் பின்செலு நாணழி வாழ்க்கைஇது
சொல்லில் பெறப்பெறும் பெண்பிறப்(பு) எங்ஙன் தொலைப்பதுவே.

**குறிப்புரை** : இல்லில் கடந்து= வீட்டைவிட்டு வெளியேறி. இரும்கடம்= கொடிய பாலைவழி. மல்= வலிமை. செலும்= செல்லும். நாண் அழிவாழ்க்கை= வெட்கம்கெட்ட வாழ்க்கை. இது சொல்லில்= இதனால் வரும் இகழ்ச்சி. எங்ஙன் தொலைப்பது= எப்படி அழிப்பது.

**பொழிப்புரை** : சூதாடு கருவிபோல் விளங்கும் முலைகளுடையவளே ! மாட்சிமைப்பட்ட சிராமலை வீட்டினை நீங்கித் தாய்முதலியவர் என்னைத்தேட, கொடியபாலைவழியை வலிமைமிக்க தோள்களுடைய தலைவரைப் பின்தொடர்ந்து செல்வதால் நாணழியும் வாழ்க்கை பற்றிய இகழ்சியுடைய பெண்பிறப்பை எப்படித் தொலைப்பது !

( 337 ) **கற்பு மேம்பாடு பாங்கி கழறல்**

கண்ணுக்கும் எண்ணுக்கும் இன்பாம் சிராமலைக் கண்ணுதலார்
விண்ணுக்கும் அப்பால் உயர்மலை வாழும் வியன்பிடியே
பெண்ணுக்குத் தன்உயி ரின்நாண் சிறந்தது பேணதினும்
எண்ணுக்கும் மிக்கதாம் கற்புச் சிறந்ததா ஏத்துவரே.

**குறிப்புரை** : எண்= நினைவு. வியன்= சிறந்த. பேண்அதினும்= பேணப்பெறவேண்டிய அதைவிட, எண்ணுக்கும் மிக்கதாம்= மதிப்பில் மேம்பட்டது. ஏத்துவர்= போற்றுவர்.

**பொழிப்புரை** : காணவும் நினைக்கவும் இன்பம்தரும் சிராமலைச் சிவபிரானின் வானத்தைத் தாண்டி உயர்ந்த மலைக்கண் வாழும் சிறந்த பெண்யானை போன்றவளே ! பெண்ணுக்கு அவள் உயிரைவிடச் சிறந்தது நாணம். பேணப்பெறவேண்டிய நாணத்தைக் காட்டிலும் மதிப்பில் மேம்பட்டதாகிய கற்புச் சிறந்தது என்று உலகம்போற்றும். ( உடன்போய்வா என்பது குறிப்பு )

( 338 ) **தலைவி ஒருப்பட்டு எழுதல்**

மடவார் அலரும் மனைமார் கொதிப்பும் மனத்(து)எழும்என்
கடவா மயல்தரு நோயும் கடக்கக் கடம்கடக்கக்
கடவா ரணமுலை நல்லாய் இறைவர் கருத்(து)இசைய
நடவா இருக்கும் சிராமலைப் பாங்(கு)என் நயவுளமே.

**குறிப்புரை** : மடவார்= அயல்மகளிர். மனைமார்= வீட்டில் இருப்பவர். கடவா= விலக்கமுடியாத. மயல்= விரகம். கடக்க= போக்க.. கடம் கடக்க= பாலைவழி தாண்டிச்செல்ல. கடவாரணம்= மதயானை. கருத்து= எண்ணம். சிராமலைப்பாங்கு என்நயவுள்ளம் நடவா இருக்கும். நடவா= நடக்க - தலைவருடன் உடன்போக. நயம்= மேன்மை.

**பொழிப்புரை** : அயல்மகளிர் அலர்தூற்றுதலும், வீட்டில் இருப்பவர் பெரும்சினமும், என் மனத்தில் மிகும் விலக்கவியலாத விரகமும் போக்க, தலைவரது எண்ணத்துக்கு ஏற்ப, அவருடன் சிராமலைப் பக்கத்துப் பாலைவழி, நடந்துகடக்க என்மேலான உள்ளம் விரும்புகிறது.

( 339 ) **விருப்புடைப் பாங்கி சுரத்துஇயல்பு உரைத்தல்**

ஒட்டும் விதத்தினில் கற்புச் சிறந்த(து) உரைமறையே
மட்டும் விழவும் மலியும் சிராமலை மாமயிலே

சுட்டும் விரலும் சொலுநாவும் தீயும் சுடுசுரத்துஎம்
மட்டும் அள(வு)உன் தாள்செலும் என்(று)உனி வாடுவனே.

**குறிப்புரை** : ஒட்டும் விதம்= கணவனுடன் ஒட்டி வாழும்விதம். உரைமறையே மட்டும்= சொல்லும் மறையின் எல்லை. விழவு= திருவிழாக்கள். தீயும்= தீய்ந்து போகச்செய்யும். எம்மட்டும் அளவு= எந்த எல்லை அளவு. உன்தாள் செலும்= உன்னால் நடக்க முடியும். உனி= நினைத்து.

**பொழிப்புரை** : மறை கூறும் அளவு விழாக்கள் மலிந்த சிராமலைவாழ் அழகிய மயில்போன்றவளே ! கணவனொடு ஒட்டிவாழும் விதத்தில் கற்புச் சிறந்ததாகும். சுட்டிக்காட்டும் விரலும் சொல்லும்நாவும் தீய்ந்துபோகச்செய்யக் கொதிக்கும் பாலைவழியில் எந்த எல்லைஅளவு உன்னால் நடக்கவியலும் ? என்பதை நினைந்து வருந்துகிறேன்.

( 340 ) **பாங்கி சுரத்துஇயல்பு உரைத்துழித் தலைமகள் சொல்லல்**

ஊரார் அலரும் உருவிலி எய்யும் உ(று)அலரும்
பேரார் அனையின் கடுமொழியும் கூட்டும் பெருஞ்சிறையில்
சீரார் அறிவால் தெளியின் சிராமலைச் செங்கரும்பே
கூர்ஆர் அருநர கிற்சுரம் சொர்க்கம் குறையிலையே.

**குறிப்புரை** : உருவிலி= மன்மதன். உறு அலர்= மிக்க ஐந்து மலர்க்கணை - காமம். பெருஞ்சிறையில் கூட்டும்= மிக்க சிறையாகிய வீட்டில் அடைத்தல். கூர் ஆர் அரு நரகில்= மிக்க துன்பமான நரகத்தைக் காட்டிலும்.

**பொழிப்புரை** : ஊரவர் பழிதூற்றல்; மன்மதன் தனது தாமரை மாமுல்லை தண்குவளை பிண்டி ஆகியவற்றால் ஊட்டும் காமம்; புகழ்பெற்ற தாயின் கடுஞ்சொல்; பெரிய சிறையாகிய வீட்டில் அடைத்து வைத்தல் ஆகிய மிக்க துன்பம்தரும் நரகத்தைக் காட்டிலும் தலைவனுடன் சுரத்தில் உடன்போதல் சொர்க்கம் ஆகும். அதில் எக்குறையும் இல்லை.

( 341 ) **பாங்கி கையடை கொடுத்தல்**

சடையார் அரவர் இடையார் சிராமலைச் சார்வரைவாழ்
நடையார் அனம்உன் அடைக்கலம் அண்ணால் நரைதிரையாய்த்
தொடைஆர் இருமுலை நாலும் முலையாத் துவளினும்நூல்
இடையார் இவரிடம் அன்பும் அறாமல் இயைந்தருளே.

**குறிப்புரை** : அரவர்= நாகம். அன நடையார்= அன்ன நடையுடைய தலைவி. தொடைஆர்= மாலை அணிந்த. திரை= தோல்சுருங்கல் நாலும்முலை= வயதுகாரணமாகத் தொய்ந்து தொங்கும் முலைகள். இயைந்தருள்= ஒன்றுபட்டு வாழ்க.

**பொழிப்புரை** : தலைமைசான்றவனே ! சடையும் இடையில் கட்டிய நாகமும் உடைய அருள்தரு தாயுமானவர் வாழும் சிராமலையைச் சார்ந்த மலைப்பகுதியில் வாழும் அன்ன நடையுடைய தலைவியை அடைக்கலமாகத் தருகிறேன். நரை, திரையுடன், மாலையணிந்த இவள் முலைதுவண்டு தொங்கினாலும், நூல்போன்ற இடையுடைய இவளிடம் அன்பற்றுப்போகாமல் ஒன்றுபட்டு வாழ்ந்தருள்.

**இலக்கணக்குறிப்பு** : வண்டு வண்டர் ஆனாற்போல் அரவு, அரவர் ஆனது மொழி ஈற்றுப்போலி.

( 342 ) **பாங்கி வைகிருள் விடுத்தல்**

நொச்சி மலர்உதிர் நள்ளிருள் வாய்இனி நுண்ணுணர்வ
மெச்சி அமரர் தொழூஉச் சிராமலை மின்வரைஎம்
கச்சில் உறைமுலை யாளுடன் நின்ஊர் கடி(து)அடைக
நச்சி அலர்வாய் அடக்கி அடைகுவன் நானுமையே.

**குறிப்புரை** : நுண்ணுணர்வ= நுட்பமான உணர்வு உடையவரே. மெச்சி= பாராட்டி. சிராமலைவரை எம் மின். மின்= மின்னல் போன்றவள். நான் அலர்வாய் அடக்கி உமையே நச்சி அடைகுவன். அலர்வாய் அடக்கி= அலர்தூற்றுவோர் பேச்சினை அடக்கி. நச்சி= விரும்பி.

**பொழிப்புரை** : நுட்பமான உணர்வு உடையவரே ! நொச்சிமலர் உதிரும் நள்ளிருளில் தேவர்கள் வணங்கும் சிராமலையில் உள்ள மின்னல் போன்றவளும், கச்சில் ஒளிந்திருக்கும் முலையுடையவளும் ஆகிய எமது மின்னல் போன்றவளுடன் இனிமேல் உனது ஊரினை அடைக. நான், அலர்தூற்றுகிறவகளின் பேச்சினை அடக்கி, உம்மை வந்து அடைவேன்.

**விளக்கம்** : நொச்சிமலர், மதில் காக்கும் வீரர்சூடுவது. தலைவன், தலைவியுடன் புறப்படும்நேரமாக நள்ளிருள் என்று கூறாமல் நொச்சிமலரை இணைத்துக் கூறியது, எயில்காக்கும் வீரர்கள்போல் நீ இவளைக் காக்கவேண்டும் என்ற நோக்குடையது.

**இலக்கணக்குறிப்பு** : தொழூஉ - இசைநிறை அளபெடை. அடைக - விதித்தற் பொருளில் வந்த வியங்கோள் வினைமுற்று.

( 343 ) **தலைமகளைத் தலைமகன் சுரத்து உய்த்தல்**

தளிரும் மலரும் கவினும் பொழிலும் தவழ்நதியும்
ஒளிரும் அரவ மணியும் தரள உருக்குவையும்
நளிரும் அருவிச் சிராமலை மின்நீ நயந்துகண்டு

குளிரும் மலர்த்தாள் பயப்பயப் போந்தருள் கூர்ந்(து)இனியே.

**குறிப்புரை** : அரவ மணி= நாகரெத்தினமணி. உருதரளக்குவை= அழகிய முத்தின் குவியல். மின்= மின்னல் போன்றவளே.பயப்பய= மெதுவாக மெதுவாக.

**பொழிப்புரை** : சிராமலைக்கண் வாழும் மின்னல் ஒத்தவளே ! தளிர் மலர் முதலியவற்றால் அழகுற விளங்கும் சோலை, நீர்ஓடும் நதி, நாகத்தின்ஒளிவீசும் அரதனம், அழகிய முத்துக்குவியல், குளிர்ந்த அருவி ஆகியவற்றை நீ விருப்புடன் கண்டு, அருள்கூர்ந்து குளிர்ந்த உன்பாதங்களை மெள்ள மெள்ள எடுத்துவைத்து இனிது வா.

**இலக்கணக் குறிப்பு** : பையப் பைய என்பது பயப்பய என்றானது மொழிமுதற்போலி-

( 344 ) **தலைமகள்** பொழில்கண்டு வியத்தல்

ஓம்படை கூறிடும் ஒண்நதி இன்இசை ஓங்(கு)உரையால்
பாம்(பு)அடை கூறிடும் அல்குல்நல் லாய்பொழில் பைங்குயிலும்
காம்(பு)அடை சோலைச் சிராமலை நீத்(து)அடை காதல்நமை
கூம்(பு)அடை மாஒலிச் சோலை உதுக்காண் குறையறவே.

**குறிப்புரை** : ஓம்படை= அடைக்கலம். ஒண்நதி= நீர்தெளிந்த ஆறு. அடைகூறிடும்= பாதுகாக்கக் கூறும். பொழில்= சோலை. பைங்குயில்= இளைய குயில். காம்பு= மலர்க்கொம்பு. அடை= அடைந்த. கூம்பு அடை= மலர்ப் போதுகளுடன் கூடிய. மா அடை= வண்டுகளுடைய. உது= அது. ( உது= சேய்மைக்கும் அண்மைக்கும் இடைப்பட்டதைக் குறிக்கும் சுட்டுச்சொல் )

**பொழிப்புரை** : தான் தோற்றதால் தன்னைப் பாதுகாக்குமாறு பாம்பு வேண்டும் அல்குலுடையவளே ! கடலிடை அடைக்கலம் வேண்டி ஓடும் தெளிந்த நன்னீர் ஆறும், தன்இனியஇசையின் குரலில் சிறந்த இளங்குயிலும், மலர்க்கொம்புடன் கூடிய சோலையும் கடந்துவந்து, அடைந்த காதலுடைய நம்மை வரவேற்கும் மலர்ப்போதுகளுடன் கூடியதும் ரீங்காரமிடும் வண்டுகளுடையதும் ஆகிய சோலையதனை உன்குறைதீரக் காண்.

( 345 ) **தலைமகன், தலைமகள் அசைவுஅறிந்து இருத்தல்**

இப்பார் புகழ்ராம நாரா யணவேள் எணில்மருவும்
ஒப்பார் இலாத சிராமலை அண்ணல் உயர்வரைவாய்
வெப்(பு)ஆர் சுரஅழல் ஆறநின் சோர்வு மிகஅகல
கொப்(பு)ஆர் குராநிழல் சேர்வம்இந் நண்பகல் கொள்பொழுதே.

**குறிப்புரை** : அசைவு= சோர்வு. எணில் மருவும்= நினைவில்பொருந்திய. சுர அழல்= பாலைநிலவெப்பம். கொப்பு= மரக்கொம்பு. சேர்வம்= தங்குவோம்.

**பொழிப்புரை** : இவ்வுலகம் புகழும் ராமநாராயண வள்ளல் நினைவில் பொருந்திய தன்ஒப்பார் இல்லாத சிராமலை இறைவனது உயர்ந்த மலைக்கண், வெப்பம் மிக்க பாலைவெப்பம் ஆறவும், உன்சோர்வு நன்கு நீங்கவும், இந்த நண்பகலில் மரக்கொப்புமிக்க குராமரத்தின் நிழலை அடைந்து தங்குவோம்.

**இலக்கணக்குறிப்பு** : எணில் - எண்ணில் என்பதன் இடைக்குறை.

( 346 ) **உவந்து அலர்சூட்டி உள்மகிழ்ந்து உரைத்தல்**

நின்மலர்த் தாள்கள் தடவிக் குழற்கு நிறைகுரவ
நன்மலர்த் தார்அணிந்(து) ஒண்முக வேர்வை நனிதுடைக்கப்
பொன்மலர்த் தாரான் வாழும் சிராமலைப் பூங்கிளியே
என்மலர்த் தாள்இரு கைசெய் தவம்பெரி(து) எண்எனக்கே.

**குறிப்புரை** : தார்= மாலை. பொன்மலர்= கொன்றை மலர். மலர்த்தாள்= மலரின் காம்பு. எண்= நினைக்கும்.

**பொழிப்புரை** : கொன்றைமாலை அணிந்த சிவபிரான் வாழும் சிராமலைக்கண்ணதான அழகிய கிளியே ! மலர்போன்ற உனது பாதத்தைத் தடவிக்கொடுத்து, கூந்தலில் மிக்க குராம்பூக்களால் ஆன மாலைசூட்டி, ஒளிபொருந்திய முகத்தின் வியர்வையை நன்கு துடைக்க எனது மலர்க்காம்பு ஒத்த இருகைகயும் நினக்கும்போது அவை செய்ததவம் பெரியதாகும்.

( 347 ) **கண்டோர் அயிர்த்தல்**

யாரோ வரும்இவர் காமுறு காட்சியர் யானையுரி
நேரே அணிபரன் வாழும் சிராமலை நீள்வரையார்
போரே(று) எனும்முரு(கு) என்னில் கடம்(பு)அலர் பூண்டிலர்அவ்
வாரே அணிமுலை வள்ளிஎன் நிற்கார் வணம் இலையே.

**குறிப்புரை** : அயிர்த்தல்= ஐயுறல். காமுறு காட்சி= கண்டார் விரும்பும் அழகு. நேரே= பதனிடாமல். போர் ஏறு= போர்வல்ல ஆண்சிங்கம். முருகு= முருகன். பூண்டிலர்= அணியவில்லை. அ= அழகு. கார்வணம்= கருநிறம்.

**பொழிப்புரை** : யானையின் பதனிடாத தோல்போர்த்திய சிவபிரான் வாழும் உயரமான சிராமலையில் இருந்துவரும் இவர்கள் யாரோ தெரியவில்லை. கண்டார் விரும்பும் அழகினர். ஆண்மகனை முருகன் என்றால் கடம்பமாலை அணியவில்லை. கச்சணிந்த அழகிய முலைகளுடையவரை வள்ளி என்றால் இவள்நிறம் கருமையில்லை.

( 348 ) **கண்டோர் காதலின் விலக்கல்**

அலைவாய் இனன்உற்றான் மின்னும் மெலிவுற்றாள் ஆ(று)அலைபுன்
கொலைவாயி னர்இங்(கு) உண்டால் இனிஉளம் கூர்ந்துசிரா
மலைவாழ் அரன்கழல் உன்னார் எனஇருள் வாய்ச்செலல்எம்
நிலைவாழ் அணிகுடில் தங்கி விடிந்(து)ஏக நேர்குவிரே.

**குறிப்புரை** : அலைவாய்= கடல். இனன்= சூரியன் .ஆறு அலை-= வழிப்பறிக்கும். கொலைவாயினர்= கொடுஞ்சொல்பேசுவோர். உன்னார் என= நினைக்காதவர் போல். இருள்வாய்= இருளில். செலல்= செல்ல வேண்டா. வாழ்நிலை= வாழிடம். நேர்குவிர்=இசையுங்கள்.

**பொழிப்புரை=** சூரியன் மேலைக்கடல் அடைந்தான். மின்னலொத்த இவளும் சோர்ந்தாள். வழிப்பறிசெய்யும் கொடுஞ்சொல் பேசுவோரும் வழியில் உண்டு. எனவே அன்பு கூர்ந்து சிராமலைவாழ் அருள்தரு தாயுமானவரை நினைக்காதவர்போல் இருளில் செல்லாதீர் ! நாங்கள் வாழும் அழகிய குடிலில் இரவுதங்கி விடிந்தபின் செல்ல இசையுங்கள்.

இல்க்கணக்குறிப்பு : அலைவாய் - சினையாகுபெயர். செலல் - இடைக்குறையாய்வந்த எதிர்மறை வியங்கோள் வினைமுற்று.

( 349 ) **தன்பதி அணிமை சாற்றல்**

இலங்(கு)அணி வேல நலம்கிளர் மின்னோ(டு) இனி(து)இனிநன்
நிலம்கணி நீடாத பாலையும் முல்லையும் நீர்கடந்தே
தலம்கணி மேன்மைச் சிராமலை நாதர் தனிப்பதியை
நலம்கனி வாக நணுகுவிர் இன்பின் நடந்திடினே.

**குறிப்புரை** : தன்பதி= தன்னூர். கணிநிலம்= மருதநிலம். நீடாதபாலை= சிறிதளவேயுள்ள பாலைநிலம். கணிதலம்= நன்செய்நில மேன்மையுடைய. கனி நலம் ஆக= இனிய நலம் உண்டாக. தனிப்பதியை நணுகுவிர்= சிறந்த ஊரை அடைவீர்.

**பொழிப்புரை** : அழகுவிளங்கும் வேலேந்தியவரே ! நலம்மிகும் மின்னல்போன்றவளோடு, இனிது இனிமேல் நன்செய்நிலம், சிறிதளவேயுள்ள பாலைநிலம், முல்லைநிலம் ஆகியவற்றை நீங்கள் நடந்து கடந்தால், மருதநில மேன்மைவாய்ந்த சிராமலை இறைவனது ஒப்பற்ற ஊரை, இனிய நலம் உண்டாக இன்பமுடன் அடைவீர்.

( 350 ) **தலைவன் தன்பதி அடைந்தமை சாற்றல்**

போ(து)ஒரும் அங்கையன் ராமநா ராயணன் பொன்உரைகொள்
மா(து)ஒரு பங்கன் சிராப்பளி வந்தோம் மடப்பிடியே
ஈ(து)ஒரு வண்மையன் ராசரா சச்சோழன் இன்புடனே
தீ(து)ஒரு வக்கோல் தனிஓச் சியநல் திருப்பதியே.

**குறிப்புரை** : போது ஒரும்= மலர் ஒத்த. சிராப்பளி= திரிசிராப்பள்ளி. வண்மையன்= கொடையாளன் ஒருவ= நீங்க. தனிக்கோல் ஓச்சிய= ஒப்பற்ற செங்கோல் செலுத்திய.

**பொழிப்புரை** : மலர்போன்ற அழகிய கைகளுடைய ராமநாராயணனின் புகழ்ச்சொற்கள் கொண்ட அம்மையப்பனின் திரிசிராப்பள்ளியை வந்தடைந்தோம். இது, ஒப்பற்ற வள்ளண்மையுடைய இராசராசச் சோழன், தீமைகள் எல்லாம் நீங்க ஒப்பற்ற செங்கோல் செலுத்திய நல்லஅழகிய ஊர் ஆகும்.

( உடன்போக்கு முற்றிற்று )

## கற்பொடு புணர்ந்த கவ்வை

*****************************************

( 351 ) **செவிலி பாங்கியை வினாதல்**

ஊ(று)அற்ற துங்கச் சிராமலை நம்மான்இவ் வூர்விடுக்க
நீ(று)அற்ற நெற்றிபோல் ஊரும் மனையும் நிறைஅழகின்
பே(று)அற்ற அன்னையும் நீயு மியானும் பெரி(து)அயர்ந்தோம்
மா(று)அற்ற பொன்னே மகள்எங்கு சென்றாள் மனம்இசைந்தே.

**குறிப்புரை** : கவ்வை= துன்ப ஒலி. ஊறு= துன்பம். துங்கம்= பெருமை. நம்மான்= இறைவன். விடுக்க= விடுவிக்க.. மாறு[= மாறுபாடு - மாற்றுக்குறையாத.

**பொழிப்புரை** : துன்பமில்லத பெருமைபொருந்திய இறைவனின் இவ்வூர் விடுவிக்க, வெண்ணீறு தரிக்காத நெற்றிபோல், ஊரும், வீடும், நிறைந்த அழகுஇழந்த தாயும் நீயும் யானும்மிகவும் சோர்ந்தோம். மாற்றுக்குறையாத பொன்போன்றவளே என்மகள் மனமிசைந்து எங்குச் சென்றாள் ?.

**விளக்கம்** : " நீறு இல்லா நெற்றிக்கு அழகு பாழ் " என்பது முன்னோர் மொழி.

**இலக்கணக்குறிப்பு** : ஊறு, பேறு - முதனிலை திரிந்த தொழிற்பெயர்கள்.

( 352 ) **பாங்கி செவிலிக்கு உணர்த்தல்**

கச்சியின் மாவடி நின்ற குயிலைக் கலந்தஇறை
மெச்சிஇன் பாஉறை வெற்பாம் சிராமலை மின்வரைவாய்
நச்சிஇன் பாவரு வார்மணம் வேண்டிலர் நம்மவர்கற்(பு)
உச்சியின் மேவ மயிலவர் பின்சுரம் உற்றனளே.

குறிப்புரை : கச்சியின் மாஅடி= காஞ்சிபுரத்தில் மாமரத்தின் அடியில். குயிலைக்கலந்த இறை= உமாதேவியாரை மணந்த சிவபிரான். மெச்சி இன்பா= மதித்து இன்பத்துடன்வாழும். நம்மவர்= நம்மினத்தார். மணம்வேண்டிலர்= திருமணம் செய்துதர விரும்பவில்லை. நம்மவர்= தலைவி. கற்பு உச்சியின் மேவ= கற்புநிலையைத் தலைமேல் கொண்டு. மயிலவர்= மயிலேறியாகிய முருகன். பின்= பின்னே - கூட.

**பொழிப்புரை** : குயில்போன்ற உமையம்மையை மணந்த சிவபிரான் மதித்து இன்பத்துடன் வாழும் சிராமலையில், மின்னல்போன்றவளை விரும்பி இன்புற வருகிறவர்க்கு, அவளை நம்மவர் மணம்செய்துதர விரும்பவில்லை. எனவே தலைவி, கற்புநிலையைத் தலைமேற்கொண்டு காஞ்சிபுரத்தில் மாமரத்தடியில் எழுந்தருளியுள்ள மயிலேறியாகிய முருகன்போன்றவரைப் பின்தொடர்ந்து பாலையை அடைந்தாள்.

**விளக்கம்** : காஞ்சிமாவடி நிற்கிறவன் முருகன் :

" காஞ்சி மாவடி வைகும் செவ்வேள் மலரடி போற்றி " ( காஞ்சிப்புராணம் )

கச்சி மாவடி நின்றவனைப் பற்றிய காளமேகப்புலவரின் எண்அலங்காரமும் சிலேடையும் ஒருசேரக் கொண்ட தனிப்பாடல்.

" முக்காலுக்கு ஏகாமுன் முன்னரையில் வீழாமுன்
அக்கா லரைக்கால்கண்(டு) அஞ்சாமுன் - விக்கி
இருமாமுன் மாகாணிக்(கு) ஏகாமுன் கச்சி
ஒருமாவின் கீழரைஇன்(று) ஓது."

இதில் அமைந்த பின்னஎண்கள் - எண்அலங்காரம் : முக்கால் - 3/4; அரை - 1/2; கால் - ¼; அரைக்கால்- 1/8; இருமா - 1/10; மாகாணி - 1/16; ஒருமா - 1/20.

மற்றுமொரு பொருள் : முக்காலுக்கு ஏகாமுன்= தண்டு ஊன்றி நடக்குமுன். முன்நரையில் வீழாமுன்= முடி முதலில் நரைப்பதற்கு முன். அக்காலரைக் கால்கண்டு அஞ்சாமுன்= (இறுதிக்காலத்தில் வரும்) எமதூதரைக் கண்டு உயிர் அஞ்சுமுன். விக்கி இருமாமுன்= விக்கலுடன் இருமுவதற்கு முன். மாகாணிக்கு ஏகாமுன்= (உயிர் பிரிந்து) சுடுகாடு செல்லுமுன். கச்சி= காஞ்சீபுரத்தில் உள்ள. ஒருமாவின்= ஒப்பற்ற மாமரத்தின். கீழரை= கீழ்எழுந்தருளியுள்ள முருகப்பிரானை. ஓது= போற்றி வழிபடு.

( 353 ) **பாங்கியின் உணர்ந்த செவிலி தேற்றுவார்க்கு எதிர்அழிந்து மொழிதல்**

என்துயர் நீக்க மொழிபல கூறிடும் எம்மவரே
வன்துயர் வீட்டி அறுசுவை ஊட்டி வளர்த்தஎற்கும்
மன்(று)உயர் கூத்தன் சிராமலை வாய்த்துயர் வந்தடைய
நன்(று)உயர் காளைபின் சென்றாள் கடன்கற்பு நாடிமின்னே.

**குறிப்புரை** : பலமொழி= பலவகை ஆறுதலான சொற்கள். வீட்டி= ஒழித்து. எற்கும்= எனக்கும். மன்று= பொன்னம்பலம். சிராமலைவாய்= சிராமலைக்கண். நன்று= அறம். காளை= காளைபோன்ற தலைவன். கற்புக்கடன் நாடி மின்சென்றாள். கற்புக்கடன்= கற்பு முறைமை.

**பொழிப்புரை** : எனது துயரத்தைப் போக்கப் பலவகை ஆறுதல் கூறும் எம்மைச்சேர்ந்தவரே ! கொடிய துயரத்தை ஒழித்து அறுசுவை உணவுஊட்டி வளர்த்த எனக்கும், சிறந்த பொன்னம்பலத்தில் திருக்கூத்து ஆடுகிறவனது சிராமலையினர்க்கும் துயரம் வந்துசேர, அறத்தில் உயர்ந்த காளைபோன்ற ஆண்மகனுடன் கற்புமுறைமையை விரும்பி மின்னல்போன்றவள் சென்றாள்.

( 354 ) **செவிலி தன்னறிவின்மை தன்னை நொந்துஉரைத்தல்**

உள்ளும் புறமும்சூ டுற்றதா யேசுனை உட்குடைய
உள்ளும் மனமென மின்குறிப்(பு) ஆயாமல் ஓங்குசுரம்
கொள்ளும் விடுபோ எனமொழிந் தேன்அது கொண்டுசுரம்
விள்ளும் பரி(சு)ஆர் சிராமலை விட்டாள்பின் மேவினளே.

**குறிப்புரை** : சுனையுள் குடைய= சுனையில் திளைக்க. உள்ளும்= விரும்புகிறது. ஓங்கு சுரம் கொள்ளும் விடு போ= மிக்க காய்ச்சல்வரும் இவ்விடம் விட்டுப்போ. சுரம் விள்ளும்= சுரம் - பாலைநிலம் தழுவும். பரிசு= குணம். விட்டாள்= நீங்கினாள். பின்மேவினள்= பிறகு ஆசைகொண்டாள். .

**பொழிப்புரை** : மனமும் உடம்பும் வெதும்பும் தாயே ! " சுனையில் விழுந்து திளைக்க என்மனம் விரும்புகிறது " என்றுகூறியவளின் மனக்குறிப்பினை ஆராயாமல், அதனால் " சுரம் - காய்ச்சல்வரும்

என்னைவிட்டுப்போ " என்று கூறினேன். அதனால் சுரம் - பாலைநிலம் தழுவும் குணத்தால் சிராமலையை நீங்கிப்பின் சுரத்தை - பாலைநிலத்தில் செல்ல ஆசைகொண்டாள்.

**விளக்கம்** : " சுனையில் திளைத்தால் சுரம் - காய்ச்சல் - வரும், என்னைத் தொந்தரவு செய்யாமல் என்னைவிட்டுப் போ என்று செவிலி கூறியதில் " சுரம் - பாலைநிலம் - வரும் என்னைவிட்டுப்போ " என்று கொண்டு சென்றுவிட்டாள் என்று தன்சொல்லில் உள்ளது தவறு என்று நொந்துகொண்டாள்.

**இலக்கணக்குறிப்பு** : சுரம் - செம்மொழிச்சிலேடைச் சொல்.

( 355 ) **இதுவும் அது**

வந்தாள் மகள்எனைக் கட்டி அணைந்தாள் மகிழ்ந்(து)அனையே
அந்நாள் பரவ அருளும் சிராமலை அண்ணல்அவர்
வந்(து)ஆள் தரமூவர் பாடிய பாட்டின் வளம்சொல்என்சொல்
தந்தாள் கருத்(து)ஓரேன் பண்சுரப் போக்(கு)எனத் தாயினளே.

**குறிப்புரை** : பரவ அருளும்= போற்ற அருளிய. ஆள்தர= பயன்கொள்ள. என்சொல்தந்தாள்= எவ்வகை என்றுசொல் என்றாள். கருத்து ஓரேன்= உட்கருத்தைப் எண்ணிப்பார்க்கவில்லை. சுரப்போக்கு= சுரத்தில் போதல் / இராகபேதமுடையது. தாயினள்= குதித்தாள்.

**பொழிப்புரை** : மகள் வந்தாள், மகிழ்வுடன் என்னைக் கட்டிஅணத்துக்கொண்டாள், " தாயே முன்னாளில் சிராமலை இறைவனைப் போற்றிப் பயன்கொள்ள வந்து, மூவர்பாடிய தேவாரத்தின் பொதுவானவளமை என்னவகை என்றுகேட்டள். அவள் சொன்னதன் உட்கருத்தை நான் எண்ணிப்பார்க்கவில்லை. அவளே அது " இராகபேதமுடையது / சுரப்போக்கு " என்றுகூறி, ( என்அறியாமையை எண்ணி மகிழ்ந்து ) குதித்தாள்.

**விளக்கம்** : சுரப் போக்கு என்பதற்கு, பாலையில் செல்லுதல் என்றும் இராகபேதப் போக்கு என்றும் இருபொருள். இதனைத் தாய் இராகபேதப் போக்கு என்று கொண்டாள். தலைவியோ சுரம்போதல் என்றபொருளில் கூறினாள். தன் உட்குறிப்பைத் தாய் உணராமையால் மகள் மகிழ்ந்துகுதித்தாள் உடன் சுரம் போதல் என்ற தன்குறிப்பைத் தாய்உணரின் தடுப்பாள். உணராமையால் தடுக்கவில்லை என்ற மகிழ்ச்சி குதிக்கவைத்தது.

**இலக்கணக்குறிப்பு** : சுரப்போக்கு - செம்மொழிச்சிலேடை.

( 356 ) **செவிலி தெய்வம் வாழ்த்தல்**

வெள்ளிக்கும் மேல்வளர் செம்பொற் சிராமலை மேவும்எம்மின்
எள்ளிக்கும் பிட்டுப் பலர்சொலக் காளைபின் ஏகினளால்
வள்ளிக்கும் யானைக்கும் கொண்கன்என் சாமி மயிலஉனை
உள்ளிக்கும் பிட்டே துதிப்பன்என் பால்வர ஊட்டிடினே.

**குறிப்புரை** : வெள்ளி= விடிவெள்ளிக் கோள். எள்ளிக் கும்பிட்டு= இகழ்ந்தும், கும்பிட்டும் - பழித்தும் போற்றியும். கொண்கன்= கணவன் - முருகன். மயில= மயில் ஊர்தியுடையவனே. வர ஊட்டிடின்= வரச்செய்தால்.

**பொழிப்புரை** : விடிவெள்ளிக் கோளினைக் கடந்து உயர்ந்த சிறந்த அழகிய சிராமலையில் வாழும் எனது மின்னல்ஒத்தவள், பழித்தும் போற்றியும் பலர் கூற, காளைபோன்ற ஆண்மகனைப் பின்தொடர்ந்து சென்றாள். வள்ளி நாச்சியாருக்கும் தெய்வயானை அம்மைக்கும் கணவனாகிய என்கடவுளே ! மயிலூர்தி உடையவனே ! நீ சிராமலைமின்னை என்னிடம் வரச்செய்தால் உன்னை நினைந்து வணங்கிப் போற்றுவேன்.

( 357 ) **செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நிற்றல்**

களிற்(று)அச்சம் நீக்கிப் பிடியைக் கலந்தருள் காளைமணம்
வெளிற்(று)அச்சம் நம்மவர் வேண்டிலர் மின்னும் வெறுத்ததனால்
பிளிற்(று)அச்சம் மாசேர் சிராமலைப் பின்னாப் பெருஞ்சுரக்கண்
ஒளிற்(று)அச்ச வேல்வல னோடு நடந்தனள் ஓர்அனையே.

**குறிப்புரை** : பிடி= தலைவி. வெளிற்று அச்சம்= அறிவின்மையாலான அச்சம். வெறுத்ததனால்= அறிவற்ற அச்சத்தை வெறுத்ததனால். அச்சம் பிளிற்று= அச்சம் உண்டாகுமாறு பிளிரும். மா= யானை. ஒளிற்று அச்ச வேல்வலனோடு பின்னா நடந்தனள். ஓர்= எண்ணிப்பார்.

**பொழிப்புரை** : தலைவிக்கு ஆண்யானையால் ஏற்பட்ட அச்சத்தை நீக்கி அவளை கூடிய ஆண்மகனுக்கு மணம்செய்துதர, அறிவின்மையால் நம்மவர் விரும்பாமையாலும், அறிவில்லாத அச்செயலைத் தலைவியும் வெறுத்த காரணத்தாலும், அச்சம் உண்டாகப் பிளிறும் யானைகளுடைய சிராமலையில், அச்சம்தருமாறு ஒளிரும் வேல்ஏந்திய வல்லவனுடன் அவனைத்தொடர்ந்து சென்றாள். அன்னையே ! அவள்நிலையை எண்ணிப்பார்.

**இலக்கணக்குறிப்பு** : மின்னும் - இறந்தது தழுவிய எச்சவும்மையாய்ப் பாங்கியையும் குறித்தது.

( 358 ) **நற்றாய் பாங்கியொடு புலம்பல்**

பக்கத்(து) இருந்தாய் சிராமலை யன்ன பனிமொழிக்கு
மிக்கத் திருவே ளிடம்காதல் என்று விளம்பினையேல்

ஒக்கத் திருந்தவர் நன்மணம் முற்ற உதவுவனே
துக்கத்(து) இருக்கநாம் போக்கினை அந்தோ சுரத்தினுக்கே.

**குறிப்புரை** : பனிமொழி= குளிர்ந்த சொல்பேசும் தலைவி. திருவேளிடம் மிக்க காதல். திருவேள்= அழகிய முருகன் / மன்மதன். ஒக்கது இருந்து= ஒருசேர இருந்து. முற்ற= முடியுமாறு. நாம் துக்கத்து இருக்க.

**பொழிப்புரை** : சிராமலைபோன்ற சிறப்புடைய குளிர்ந்த சொற்கள்பேசும் தலைவிகூடவே இருந்தாய். மிக்க அழகுடைய முருகனைப்போன்றவனிடம் அவளுக்குக்காதல் என்று சொல்லிஇருந்தால், அனைவரும் ஒருசேரஇருந்து அவர்களின் திருமணம் நன்முறையில் முடிவதற்கு உதவிஇருப்பேன். ஆனால் நாம் அனைவரும் வருந்துமாறு அந்தோ ! சுரத்தில் போக்கிவிட்டாய்.

( 359 ) **தோழி அழுங்க நற்றாய் புலம்பல்**

பாலை விரும்பியே காளைபின் அன்னம் படர்ந்ததொரு
வேலை வருத்தும் அதினும் வருத்தும் மிகநினைந்தே
நூலை அனைய இடையாய் சிராப்பளி நுண்வரைவாய்
வேலை நிகர்நின் விழிஉதிர் முத்தம் மிகஎனக்கே.

**குறிப்புரை** : வேலை வருத்தும்= நோயாக வருத்தும். மிக நினைந்தே நின்விழி உதிர் முத்தம். முத்தம்= கண்ணீர் முத்து. அதினும் மிக எனக்கே வருத்தும்.

**பொழிப்புரை** : சுரத்தில் செல்ல விரும்பிக் காளைபோன்ற தலைவனுடன் சென்றது, நோயாக வருத்துகிறது. அதனைக்காட்டிலும், சிராப்பள்ளிமலைக்கண், நூல்போன்ற இடையுடையவளே ! அவளை நினைத்து, வேல்போன்ற உன் கண்கள் சொரியும் நுண்ணிய கண்ணீர் முத்து மிகவும் வருத்துகிறது.

**விளக்கம்** : பாலை விரும்பி அன்னம் படர்ந்தது - நயம்காண்க.

( 360 ) **நற்றாய் பாங்கியர் தம்மொடு புலம்பல்**

அலைகடந்(து) அப்பர் கரையேறச் செய்தோன் அணிசிரமா
மலைகடந்(து) அன்பன் அடிதொடர் மான்தனை மன்நினைந்து
நிலைகடந்(து) ஆழும் துயர்ப்பாங் கியர்நீர் நிறைமதியின்
கலைகடந்(து) ஆர்இரா என்ன இருந்தனம் காய்பவமே.

**குறிப்புரை** : அலை= கடல். மன்அன்பன்= பெருமைபொருந்திய காதலன். மான்= மான்போன்ற தலைவி. நிலைகடந்து= எல்லையின்றி. நீர்= தன்மை. நிறைமதியின் கலைகடந்து= முழுநிலவின் ஒளியின்றி. ஆர் இரா= மிக்க இருள். காய்பவமே இருந்தனம்= வருத்தும் பாவத்துடன் இருந்தோம்.

**பொழிப்புரை** : அப்பரடிகள் கடலினைக் கடந்து கரைஏறச்செய்தவனது அழகிய புகழ்வாய்ந்த சிராமலையைத் தாண்டி, பெருமைபொருந்திய காதலனைப் பின்தொடர்ந்த மான்போன்ற தலைவியை நினைந்து, எல்லயற்ற துயரத்தில் ஆழும் தன்மையுடைய பாங்கியரே ! முழுநிலவின் ஒளிஇல்லா மிக்க இரவுபோல் நாமும் வருத்தும் பாவத்துடன் இருந்தோம்.

**விளக்கம்** : அப்பரடிகள் கடல் கடந்து கரையேறியது :

" கல்லி னோ(டு)எனைப் பூட்டி அமண்கையர்
ஒல்லை நீர்புக நூக்கஎன் வாக்கினால்
நெல்லு நீள்வயல் நீலக் குடிஅரன்
நல்ல நாமம் நவிற்றிஉய்ந் தேனன்றே. ( திருமுறை. 5. திருநீலக்குடி. 7 )

**இலக்கணக்குறிப்பு** : அலை - தானியாகுபெயர்.

( 361 ) **நற்றாய் அயலார் தம்மொடு புலம்பல்**

குவளை அலர்த்தொடை ராமநா ராயணக் கோன்துதிசங்
குவளை அணிஉமை பங்கன் சிராமலைக் கூர்வரைத்தங்
குவளை அயலீர் வருந்தல்என் என்பீர் குணத்தின்இலங்
குவளை அருந்தவத் தாற்பெற்ற என்துயர்க் கூறுமுண்டே.

**குறிப்புரை** : அலர்த்தொடை= மலர்மாலை. கூர்வரை= சிறந்தமலை. வளை அயலீர்= வளையல் அணிந்த அயலவரே. வருந்தல் என் என்பீர்= வருந்துவது ஏன் என்பீர். குணத்தின் இலங்கு வளை= சிறந்த குணத்துடன் விளங்கும் வளையல் அணிந்தவளை - தலைவியை. துயர்க்கூறு= துயரத்திற்குக் காரணம்.

**பொழிப்புரை** : குவளைமலர்மாலை அணிந்த ராமநாராயணனாகிய தலைவன் வணங்கும் சங்குவளையல் அணிந்த உமையம்மையை இடப்பாகம் கொண்டவனது சிறந்த மலையில் வாழும் வளையலணிந்த அயலவரே ! என்னை வருந்தவேண்டாம் என்பீர்கள். சிறந்தகுணமுடையவளான வளையல் அணிந்தவளை அரிய தவத்தால் பெற்ற என்துயரத்திற்குக் காரணம் உண்டு.

( 362 ) **இதுவும் அது**

அந்திக் கவின்பிறை சூடும் சிராமலை அண்ணலையே
முந்திக் கனிய அருச்சித்துப் பெற்ற முறைதெரிந்தும்
வந்(து)இக் கலக்கம்ஏன் என்றீர் அயலீர் வழுத்(து)உயர்செவ்

வந்திக் கடவுள் எனைச்செய் திலரேபுன் வந்திஎன்றே.

**குறிப்புரை** : கனிய முந்தி= மனம் கனிய முற்பட்டு. பெற்ற= வரங்கள் பெற்ற. செவ்வந்திக்கடவுள்= அருள்தரு தாயுமானவர். புன்வந்தி= அற்பமான வழுத்துதல். எனைச்செய்திலர்= எனக்கு அருள் செய்யவில்லை.

**பொழிப்புரை** : " அந்திநேரத்து அழகிய மூன்றாம்பிறைசூடும் சிராமலை இறைவனை மனம் கனிய முற்பட்டு வழிபாடு செய்து வரங்கள்பெற்ற முறைமை தெரிந்தும் இவ்வருத்தம் ஏன் ? " என்றுகேட்கும் அயலவரே ! சிறந்த செவ்வந்திக் கடவுள் என்வழுத்துதல் அற்பமான வழுத்துதல் என்று எனக்கு அருள் செய்யவில்லை.

( 363 ) **நற்றாய் தலைமகள் பயிலிடம் தம்மொடு புலம்பல்**

புள்ஊர்தி யார்இரு வோரும் பணியும் புராரிவரைக்
கள்ஊறு திருச்சுனை யேநற் சிராமலைக் கான்பொழிலே
நள்ஊர் தினைப்புன மேஎமக்(கு) என்னோ நவின்றனள்தன்
ஒள்ஊர் திறல்அயில் காளைபின் செல்லும் உளத்தினளே.

**குறிப்புரை** : கள்= இனிமை. கான்= மணம். நள்ளூர்= உறவுகொண்ட. ஒள்ளூர் அயில்= ஒளிபொருந்திய வேல். திறல்காளை

**பொழிப்புரை** : அன்னப்பறவை, கருடன் ஆகியவற்றை ஊர்தியாகக் கொண்ட நான்முகனும்,திருமாலும் வணங்கும் முப்புரம் எரித்த சிவனதுமலைக்கண் உள்ள, இனிமைமிக்க அழகிய சுனையே ! சிராமலையில் மணக்கும் நல்ல சோலையே ! உறவுகொண்ட தினைப்புனமே ! தனது ஒளிபொருந்திய வேலேந்திய ஆற்றல்மிக்க காளையைத் தொடர்ந்துசெல்லும் உளம்கொண்டவள், எமக்குக்கூறுமாறு என்ன கூறினாள் ?
**இலக்கணக்குறிப்பு** : " கேட்குந போலவும் கிளக்குந போலவும் ... என்பதை அடிப்படையாகக் கொண்டது இச்செய்யுள். புராரி - காரணப்பெயர்.

( 364 ) **நிமித்தம் போற்றல்**

மருங்கொடி மோஎன ஐயுறு நுண்இடை வந்தவன்பின்
தரும்கொடி தாம்சுரம் மேவினள் நற்பலி தந்திடுவன்
அரும்கொடி யாளர் சிராமலை நாதன் அருவரைவாய்
கருங்கொடி யேமகள் எம்பால் வரநீ கரைகுவையே.

**குறிப்புரை** : மருங்கு ஒடிமோ= இடுப்பு ஒடிந்துவிடுமோ. பலி= உணவு. அருங்கொடியாளர்; சிறந்த உமையம்மையை ஆள்கிறவர் - சிவபிரான். கருங்கொடி= கருங்காக்கை.

**பொழிப்புரை** : ஒடிந்துவிடுமோ என்னுமாறுள்ள இடுப்புடைய என்மகள், தன்னைநாடி வந்தவன் பின்னே கொடிய துன்பம்தரும் பாலையில் சென்றாள். மென்மையான கொடிபோன்ற இடையுடைய உமையம்மையை இடப்பால் கொண்ட சிராலை இறைவனது மலைக்கண் வாழும் கரிய காக்கையே ! என்மகள் எம்மிடம் வரக்கரைவாயாக.

**விளக்கம்** : காக்கை கரைந்தால் விருந்தினர் வருவர் என்பதை உட்கொண்டு கூறியதுஇது. " கொடியே வரக்கரைவாய் கொடியேன் பெற்ற கொம்பினையே " ( தஞ்சைவாணன் கோவை ). " வாயச மேஇவண் எம்மகள் மீண்டு வரக்கரையே " ( சிராமலைக்கோவை. 349 )

( 365 ) **சுரம் தணிவித்தல்**

பெண்ணார் மகிழப் பெருந்தாய் எனவந்த பெற்றியனே
பண்ணார் சிராமலை மேவும் பரன்எம் பாவைசெலும்
நண்ணார் நனிஉறை பாலை மருதமா நன்மலரா
எண்ணார் பரல்உற நல்அருள் செய்க இனி(து)அவட்கே.

**குறிப்புரை** : பெண்ணார்= இரத்தினாவதி. பெரும்தாய்= சிறந்ததாய். பண் ஆர்= நன்செய் மிக்க. நண்ணார் நனிஉறை= பகைவர் - கொடியவர் மிகுதியாக வாழும். எண்ஆர் பரல் உறை பாலை= அளவற்ற பருக்கைக்கற்கள் உள்ள பாலைநிலம்.

**பொழிப்புரை** : கருவுயிர்க்க இருந்த இரத்தினாவதி மகிழ, அவளுக்கு மகப்பேறு மருத்துவம் பார்க்கச் சிறந்த தாயாக வந்த தன்மையுடையவனே ! நன்செய்மிக்க சிராமலைவாழும் மேலானவனே ! எமது மகள் செல்லும் வழியாகிய கொடியவர் மிகுதியாக வாழும் அளவற்ற பருக்கைக்கற்கள் மிக்க பாலைநிலம், மருதநிலமாக, மென்மையான மலர்வழிஉடையதாக என்மகள் பொருட்டு நல்லருள்இனிது புரிக.

( 366 ) **தன்மகள் மென்மைத்தன்மைக்கு இரங்கல்**

அனிச்ச மலர்மேல் மிதிப்பினும் சேக்கும் அணிபதங்கள்
பனிச்சந் தனம்பனி நீர்கல வாக்கால் பதைத்திடும்மெய்
இனிச்ச மொழியாள் பரல்மிகு வெங்சுரம் எப்படியோ
தனிச்சங் கரனார் சிராமலை தாண்டியே தான்செலுமே.

**குறிப்புரை** : சேக்கும்= சிவக்கும். அணி= அழகு. பனி= குளிர்ந்த. பனிநீர்= பன்னீர். கலவாக்கால்= கலந்து ஊற்றினால். மெய்பதைக்கும். பதைக்கும்= நடுங்கும்.

**பொழிப்புரை** : இனிய சொற்களைப்பேசுகிறவளின் பாதம் அனிச்சமலரை மிதித்தாலும் சிவக்கும், குளிர்ந்த சந்தனத்துடன் பன்னீர்கலந்து ஊற்றினால் உடல்நடுங்கும். இத்தகைய மென்மையள் ஒப்பற்ற சிவபிரானின் சிராமலை, பரல்கற்கள் மிக்க கொடியபாலை ஆகியவற்றைத் தாண்டி எப்படிச் செல்லுவாள் !

( 367 ) **நற்றாய் தன்மகள் இளமைத்தன்மைக்கு உளம்மெலிந்து இரங்கல்**

வரும்பாவம் நீக்கும் சிராமலை நாதன் மடமகள்தான்
அரும்பா முலையாள் திருந்தா மொழியாள் அணிகனிவாய்
பெரும்பால் மணம்அறாத் தன்மையள் காதலற் பேணிஉளம்
பரும்பாலை சென்றனள் எங்ஙன் தொடர்வாள் பதிபதியே.

**குறிப்புரை** : மடமகள்= இளமைபொருந்திய மகள். பெரும்பால்= தாய்ப்பால். பதி பதியே எங்ஙன் தொடர்வாள். பதி பதி= கணவனை ஊர்வரை.

**பொழிப்புரை** : செய்யவுள்ள பாவங்களைச் செய்யாமல் நீக்கும் சிராமலை இறைவனே ! இளமை பொருந்திய என்மகள் முலைஅரும்பா வயதினள், திருந்தாத சொற்கள் பேசுகிறவள், அவளது அழகிய கொவ்வைக்கனிபோன்ற வாய் தாய்ப்பால் மணம் மாறாதது. இந்நிலையில் தன்காதலனை மனம்விரும்பிப் பெரிய பாலைவழிச் சென்றாள். தன்கணவனை ஊர்வரை எப்படித் தொடர்ந்துசெல்வாள் !

( 368 ) **அச்சத்தன்மைக்கு அச்சமுற்று இரங்கல்**

முயல்மிதித் தேமான் பிடித்த சிராமலை மூர்த்திவரைக்
கயல்மிதித்(து) ஓங்கும் விழியாள் செலும்வழிக் காய்உழுவை
அயல்மிதித் தேகுழி மண்கொளப் பாயும் அதுகுமுறும்
இயல்மதித் தேஉளம் அஞ்சும்என்(று) அஞ்சுமால் என்னுளனே.

**குறிப்புரை** : முயல் மிதித்தே= முயலகனைக் காலால் மிதித்துக்கொண்டு. மான்பிடித்த= மானினைக் கையில் உயர்த்திப்பிடித்த. வரை= மலையில். கயல் மிதித்து= கெண்டைமீனினை வென்று. காயுழுவை= சினம்மிக்க வேங்கைப்புலி. அயல் மண் குழிகொள மிதித்து= அருகில் மண்ணில் குழிவிழுமாறு மிதித்து. குமுறும் இயல்= சீறும் இயல்பை. மதித்தே= எண்ணி. என் உளன் அஞ்சுமால்.

**பொழிப்புரை** : முயலகனைக் காலால் மிதித்து, மானினைக் கையில் உயர்த்திப்பிடித்த சிராமலை இறைவனது மலைக்கண், கெண்டைமீனினை வென்றுசிறந்த விழிகளை உடையவள் செல்லும் வழியில் சினம்மிக்க வேங்கைப்புலி, அவள் அருகில் மண்ணில் குழியுண்டாக மிதித்துப் பாயும்; சீறும் அதன் இயல்பை எண்ணி மனம் அஞ்சுவாளே என்று என்மனம் அஞ்சுகிறது.

( 369 ) **கண்டோர் இரக்கம்**

மன்உயர் அன்பினன் ராமநா ராயணன் மாண்பின்உரை
இன்உயர் மேன்மைச் சிராமலை நாதன் எழில்வரைவாய்
பொன்உயர் ஆட்(டு)அயர் காவைச் சுனையை புரிந்துகண்டால்
துன்உயர் துக்கம் கொளுமால் வயிற்றில் சுமந்தவளே.

**குறிப்புரை** : மன்= நிலையான. மாண்பு= பெருமை. இன் உயர்= இனிய உயர்ந்த. பொன்= திருமகள் போன்றவள். ஆட்டு அயர் உயர்கா= விளையாட விரும்பும் சிறந்த சோலை. ஆட்டுஅயர் சுனை= நீராட விரும்பும் சுனை. புரிந்து= விருப்புடன். துன்= வருத்தம்.

**பொழிப்புரை** : நிலைத்த உயர்ந்த அன்புடையவனாகிய ராமநாராயணன் பெருமைபொருந்தச் சொல்லும் இனிய உயர்ந்த மேலான சிராமலை இறைவனது அழகிய மலைக்கண், திருமகள்போன்ற இவள் வழக்கமாக விளையாடவிரும்பும் சோலையை, நீராடவிரும்பும் சுனையை, இவளைப்பெற்றவள் விருப்புடன் கண்டால் வருத்தமும் மிக்க துக்கமும் கொள்ளுவாள்.

**விளக்கம்** : இச்செய்யுளின் இறுதி இரண்டடிகள் உளவியல் நுட்பமுடையன.

( 370 ) **இதுவும் அது**

தொண்டன்நல் ஆறு முகற்குத் துணையாம் சுடர்உருவான்
கொண்டநன் மேன்மைச் சிராமலை வண்வரைக் கூர்பொழிலை
விண்டநற் கிள்ளையை ஊஞ்சலைப் பந்தை வியன்கழங்கைக்
கண்டநற் றாயும் வருந்துவள் பாங்கின் கழிநினைந்தே.

**குறிப்புரை** : கொண்ட= வாழிடமாகக் கொண்ட. கூர்= மிக்க. விண்ட= பேசிய. கிள்ளை= கிளி. வியன்= -சிறந்த. பாங்கின் கழி= அருகில் இருந்துநீங்கியது.

**பொழிப்புரை** : அடியவர்க்குத் தொண்டனாகிய அருள்தரு ஆறுமுகப்பெருமானுக்குத் துணையாய் விளங்கும் ஒளிவடிவன் - ஞானவடிவன் - சிவபிரான் தனதாகக் கொண்ட மேன்மைபொருந்திய வளமான சிராமலையின் பெரிய சோலையை, அவளுடன் பேசிய கிளியை, அவள் ஆடிய ஊஞ்சலை,பந்தினை, சிறந்த கழங்கைக் கண்ட நற்றாயும் தன்கூட இருந்த அவள்பிரிவை நினைத்து வருந்துவாள்.

**இலக்கணக்குறிப்பு** : முன்னதுபோல இதுவும் உளவியல் அடிப்படையானது.

( 371 ) **செவிலி ஆற்றாத்தாயைத் தேற்றல்**

ஆள்பின் நடந்த மகட்கா இனையல் அனைதுருவி

கோட்பின் நடந்த சிகரச் சிராமலைக் கூர்குடியார்
வாள்பின் னடைந்த விழியுமை பங்கர் மகிழ்அருளால்
தாள்பின் நடந்தவ ளைக்கொணர் வேன்இரு தாழ்(வு)அறவே.

**குறிப்புரை :** ஆள்= ஆண்மகன் / வீரன். இனையல்= வருந்தாதே. அனை= அன்னையே. துருவி= ஆராய்ந்து. கோள்பின்நடந்த= மதிக்கத்தக்க வழியில் நடந்த. சிகரம்= உயர்ந்த. கூர்குடியார் துருவி. வாள் பின்னடைந்த= ஒளியுடைய வாள் தோற்ற. தாழ்வு= துன்பம்.

**பொழிப்புரை :** தாயே ! வீரன் பின்னே சென்ற மகளுக்காக வருந்தாதே. மதிக்கத்தக்க வழியில் நடந்த உயர்வு உடையவராகிய சிராமலை வாழ்மிக்க குடியினரியையே ஆராய்ந்து, வாள்ஒளியை வென்ற விழியுடைய உமையம்மையை இடப்பாகமுடையவரின் மகிழ்ச்சிதரும் அருளால், முயற்சியுடையவன்பின் சென்றவளை உன்துன்பமறக் கொண்டுவருவேன். துன்பமின்றி இரு.

**இலக்கணக்குறிப்பு :** இனையல் - வேண்டிக்கோடற் பொருளில் வந்த அல் ஈற்று எதிர்மறை வியங்கோள் வினைமுற்று. தாள் - பண்பாகுபெயர்.

( 372 ) **ஆற்றிடை முக்கோல் பகவரை வினாதல்**

செங்கண் விடையார் சிராமலை நாதர் திருவடியைத்
தங்கள் மனத்(து)எண்ணார் போல்வெஞ் சுரத்தில் தலைவனுடன்
எங்கள் மயில்செலக் கண்டீர்கொ லோநல் இயல்தவத்து
வெங்கண் பவமகற் றத்திரி கோல்கொளும் வேதியரே.

**குறிப்புரை :** நல் இயல் தவம்= உதவும் இயல்புடைய தவம். வெங்கண் பவம்= கொடிய பாவம். திரிகோல்= முக்கோல். வேதியர்= அந்தணர்.

**பொழிப்புரை :** உதவும் இயல்புடைய தவத்தால், கொடிய பாவத்தை நீக்க முக்கோல் ஏந்திய அந்தணரே ! சிவந்த கண்களுடைய விடைஏறும் சிராமலை இறைவனின் திருவடிகளைத் தமது மனத்தால் நினைக்காதவர் போன்ற கொடிய பாலையில், தலைவன் ஒருவனுடன் எமது மயில்போன்றவள் சென்றதைப் பார்த்தீர்களா ?

**விளக்கம் :** முக்கோல், அயன், அரி, அரன் மூவரும் ஒருவரே என்பதை உணர்த்துவது ( கலித்தொகை நச்சினாரிகினியர் உரை. கலித்தொகை. 9 )

( 373 ) **மிக்கோர் ஏதுக்காட்டல்**

உருவத்து உயர்ந்த சிராமலை நாதனை உன்னலர்போல்
துருவத் தொடர்ந்(து) அலைந்(து) ஏங்கித் துயர்உறு தோகைஉயர்
பருவத் தனிக்கனி யால்தருக்(கு) என்பயன் பாரசிலைப்
புருவத் தனிக்கனி அன்னள் உமக்கும்இப் பூதலத்தே.

**குறிப்புரை :** உருவம்= அழகு. உன்னலர்= நினைக்காதவர். துருவ= தேடி. தோகை= மயில்போன்றவளே. உயர் பருவத் தனிக்கனி= சிறந்த பருவகாலத்து ஒப்பற்ற பழம். தரு= மரம். பாரச்சிலைப் புருவம்= பெருமை பொருந்திய வில்போன்ற புருவம். இப்பூதலத்தே உமக்கும் பாரச்.........தனிக்கனி அன்னள்.

**பொழிப்புரை :** அழகில் சிறந்த சிராமலை இறைவனை எண்ணாதவர்போல், தொடர்ந்து தேடிஅலைந்து ஏங்கித் வருந்தும் மயில் போன்றவரே ! சிறந்த பருவகாலத்தில் பழுத்த ஒப்பற்ற கனியால், அதனைப்பெற்ற மரத்துக்கு என்னபயன் ? அக்கனியைப் பெற்றுச்சுவைப்பவர்க்கே அதுஉரியது.அதுபோலவே இவ்வுலகில் பெருமைபொருந்திய வில்போன்ற புருவமுடைய கனிபோன்றவளால் உமக்குப் பயனில்லை. ( அவளை அடைந்துள்ளவனுக்கே அவள் உரியவள் )

**விளக்கம் :** உன்மகள் உனக்குப் பயன்படாள், அடைந்து அனுபவிப்பவனுக்கே பயன்தருவாள் :

" பலவுறு நறும்சாந்தம் படுப்பவர்க்கு அல்லதை
மலையுளே பிறப்பினும் மலைக்கு அவைதாம் என்செய்யும்
நினையும்கால் நும்மகள் நுமக்கும்ஆங்கு அனையளே ;
சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க்கு அல்லதை
நீருளே பிறப்பினும் நீர்க்கு அவைதாம் என்செய்யும்
தேருங்கால் நும்மகள் நுமக்கும்ஆங்கு அனையளே ;
ஏழ்புணர் இன்னிசை முரல்பவர்க்கு அல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்குஅவைதாம் என்செய்யும்
சூழுங்கால் நும்மகள் நுமக்கும்ஆங்கு அனையளே . ( கலித்தொகை. 9 )

" சுரும்புஇவர் சந்தும் தொடுகடல் முத்தும்வெண் சங்கும் எங்கும்
விரும்பினர் பாற்சென்று மெய்க்குஅணி யாம்வியன் கங்கைஎன்னும்
பெரும்புனல் சூடும் பிரான்சிவன் சிற்றம் பலம்அனைய
கரும்பன மென்மொழி யாரும்அந்நீர்மையர் காணுநர்க்கே " ( திருக்கோவையார். 248 )

( 374 ) **செவிலி எயிற்றியொடு புலம்பல்**

வேங்கை திகழும் சிராமலை நின்றும் வியன்அயில்வேல்

பூங்கை திகழும் களிற்றுடன் மான்ஒன்று பூண்டவன்பால்
காங்கை திகழும் சுரத்திடை நீவரக் கண்டதுண்டோ
வேங்கை திகழும் எயி(று)அணி வேடர்தம் மென்பிடியே.

**குறிப்புரை** : எயிற்றி= பாலை நிலப்பெண். வியன் அயில்= பெருமைபொருந்திய கூரிய. பூங்கை= பூப்போன்ற கை. பூண்டவன்= பொருந்தியவன் - தலைவன். வேங்கை திகழும் எயிறு அணி= புலிப்பல் அணிகலன்.

**பொழிப்புரை** : புலிப்பல் அணிகலன் அணிந்த வேடர்களின் மென்மையான பெண்யானை ஒத்தவளே ! வேங்கைமரம் விளங்கும் சிராமலையிலிருந்து, பெருமைபொருந்திய கூரிய வேல் ஏந்திய காளை போன்றவனுடன், பூப்போன்ற மென்மையான கையினையுடையவளாகிய மான்போன்றவள் ஒருத்தி, தன்னைப்பொருந்தியவனாகிய அத்தலைவனுடன் வந்ததை நீ கண்டதுண்டோ.

**இலக்கணக்குறிப்பு** : களிறு, மான் - உவமையாகுபெயர்கள்.

( 375 ) **செவிலி குரவொடு புலம்பல்**

குழைஅணி கொண்ட குரவே பலபாவை கொண்டிருந்தும்
கழைஅணி தோளிஎன் பாவை சுரம்செலக் கண்டிருந்தாய்
உழைஅணி அத்தர் சிராமலைச் சித்தர் உயர்வரைஎன்(று)
அழைஅணி நெஞ்சத் துயர்அற ஓர்சொல் தராத(து)என்னே.

**குறிப்புரை** : குழைஅணி கொண்ட= தளிர்களால் அழகுடன் விளங்கும். குரவு= குரவமரம். பலபாவை= பல பாவைபோன்ற பூக்கள். கழை அணிதோளி= மூங்கில்போல் அழகுவிளங்கும் தோள்களுடையவள். பாவை= பாவைபோன்றவள். உழை= மான்கன்று. என்று= என்றாலும். துயர் அற= துயரம் நீங்க. அழை= அழைத்து.

**பொழிப்புரை** : தளிர்களால் அழகுடைய குரவமரமே ! நீ பாவைஒத்த பல பூக்களைப் பெற்றிருந்தும், நீ இருப்பது மான்கன்றினை ஏந்திய சிவபிரானாகிய ஞானியின் மலையில் - உயரத்தில் - என்பதால், மூங்கில் போன்ற தோள்களுடைய என்பாவைபோன்ற மகள் பாலைவழியில் செல்வதைப் பார்த்துக்கொண்டிருந்தாய். அவளை அழைத்து அவளது மனத்துயர் நீங்க அழகிய ஒருசொல் சொல்லாததேன் ?

**விளக்கம்** : குரவம் பூ, பாவை வடிவிலிருக்கும் என்பர். பலபாவைகளைப் பெற்ற நீ என்னொருபாவை பாலைவழிச்செல்லாமல் சொல்லித் தடுக்காது இருந்தாய் என்றாள். மேலும் நீ இருப்பது உயர்மலையில் என்பதால் என்மகள் செல்வதைக் காணும் வாய்ப்பு உண்டு. எனினும் சோல்லித் தடுக்கவில்லையே என்றாள்.

( 376 ) **சுவடுகண்டு இரங்கல்**

வாழைக் கனிபதித் தன்ன அதுபுலி வல்அடியே
ஏழைக்(கு) அருளும் பெருமான் சிராமலை என்புயன்முன்
ஊழைக் கடுப்ப எதிர்க்கமுன் ஊன்றிய(து) உவ்அடியே
மாழைக் கனம்அணி எம்மகள் பொன்னடி மற்றிதுவே.

**குறிப்புரை** : அது= கால்பதிந்த அந்தச் சுவடு. ஏழை= அறிவில்லாதவன். என்சிராமலை புயன்= எனது சிராமலை ஒத்த தோள்களுடைய தலைவன். கடுப்ப= போல. மாழைக் கனம் அணி= மாற்றுயர் பொன்னாலான கனமான அணிகலன்.

**பொழிப்புரை** : சீப்புடன் வாழைப்பழங்களைப் பதித்தது போன்ற சுவடு, வலிமையான புலியின் காலடிச்சுவடு. அதன் அருகில், ஊழ்வினையைப்போல் பிறரை எதிர்க்க ஊன்றிய காலடிச்சுவடு அறிவில்லாதவனுக்கும் அருளும் இறைவனது சிராமலைபோல் வலிமையான தலைவனின் காலடிச் சுவடு; அடுத்துள்ள சுவடு மாற்றுயர் பொன்னாலான அணிகலனணிந்த எமது மகளின் அழகிய காலடிச்சுவடி ஆகும்.

( 377 ) **கலத்துடன் வருவோரைக் கண்டுகேட்டல்**

கண்கவின் மாரனும் தேவியும் என்னக் கலந்துசுரப்
பண்கவின் பாலை வருவீர் உமதுஎதிர் பார்த்த(து)உண்டோ
விண்கவின் கோட்டுச் சிராமலை நின்றும் விளங்கும்உம்போல்
எண்கவின் தோன்றலும் மின்னுமாச் செல்லும் இருவரையே.

**குறிப்புரை** : கண்கவின்= கண்ணுக்கு அழகுதரும். சுரப்பண்= பாலைப்பண். விண்கவின்= வானிற்கு அழகு தரும். கோட்டு= உச்சியுடைய. எண்கவின்= எண்ணத்திற்கு அழகுதரும். தோன்றல்= ஆண்களுட் சிறந்தவன்.

**பொழிப்புரை** : கண்ணுக்கு அழகுதரும் மன்மதனும் ரதியும்போல் சேர்ந்து, பாலைப்பண்விளங்கும்பாலைநிலத்தில் வருகிறவரே ! வானிற்கு அழகுதரும் உச்சியுடைய சிராமலையிலிருந்து சிறந்து விளங்கும் உங்களைப்போல், எண்ணத்திற்கு அழகுதரும் ஆண்களுட் சிறந்தவனும் மின்னலை ஒத்த ஒருத்தியுமாகச் செல்லும் இருவரை உமது எதிரே பார்த்தீரா ?

( 378 ) **கலந்துடன் வருவோர் புலம்பல் தேற்றல்**

இப்பால் மொழிகண்ட அன்னமும் யான்கண்ட ஏந்தலும்காய்

வெப்பான் மிகுசுரம் தாண்டிச் சிராமலை மேவுவட
அப்பால் வருபொன்னி அப்பால் குளிர்துறை வாய்ந்(து)அடைவர்
தப்பால் மெலிந்(து)உழ லேல்மீள்க அன்னைஉன் தன்பதிக்கே.

**குறிப்புரை** : இ காய்வெப்பால் என்று கூட்டுக. பால்மொழி= பால்போலும் இன்சொல். ஏந்தல்= பெருமையில் சிறந்தவன். காய் வெப்பால்= எரிக்கும் வெப்பத்தால். பொன்னி அப்பால்= காவிரியைத்தாண்டி. தப்பால்= தவறான எண்ணம். அன்னை உன்தன் பதிகே மீள்க.

**பொழிப்புரை** : நான்கண்ட பால்போலும் இன்சொல்பேசும் அன்னம்போன்றவளும் பெருமையில் சிறந்தவனும் இந்த எரிக்கும் வெப்பம்மிக்க பாலைநிலம் தாண்டி, சிராமலைக்கு வடக்கில்வரும் காவிரிக்கு அப்பால் உள்ள குளிர்ந்த இடத்தைப் பொருந்தி அடைவர். தவறாக எண்ணி மனம் வருந்தித் துன்புறவேண்டா. தாயே ! நீ உன் ஊர்க்கு மீண்டு செல்க.

( 379 ) **செவிலி புதல்வியைக் காணாது கவலை கூர்தல்**

பகைஎலாம் வென்(று)ஒளிர் ராமநா ராயணன் பத்திசெயும்
நகைஎலாம் கொண்ட சிராமலை நாதரை நாடலரின்
வகைஎலாம் கொண்டு சுரம்புகுந்(து) எய்த்தனம் மற்றினிக்காண்
தகைஎலாம் சென்றன தாய்க்(கு)உரை சொல்வ(து)என் சார்ந்(து)அவணே.

**குறிப்புரை** : பகை= பகைக்குணம். நகை= இன்பம். நாடலரின்= விரும்பாதவர் போல். வகைஎலாம் கொண்டு= எல்லாவகையையும் மேற்கொண்டு. எய்த்தனம்= சோர்ந்தோம். காண்தகை எலாம் சென்றன= காணத்தக்கன ஏதும் இல்லை. அவண் சார்ந்து தாய்க்கு உரைசொல்வது என். அவண்= அவ்விடம் - வீடு.

**பொழிப்புரை** : பகையான குணங்களை எல்லாம் வென்று புகழ்பெற்ற ராமநாராயணன் வணங்கி இன்பமெல்லாம் கொண்ட சிராமலை இறைவனை விரும்பாதவர் போல், எல்லாவகையினையும் மேற்கொண்டு, பாலையை அடைந்து சோர்ந்தோம். மேலும் இனிமேல் காணத்தக்க இடமில்லை. வீடு சென்று தாய்க்கு என்ன பதில்கூறுவது !

( கற்பொடு புணர்ந்த கவ்வை முற்றிற்று )

## மீட்சி

**********

( 380 ) **தலைவி சேண்அகன்றமை செவிலி தாய்க்கு உணர்த்தல்**

நிலம்காத்தல் செய்யும் சிராமலை நாதரை நித்தநினை
கலங்காத நெஞ்சினன் ராமநா ராயணன் கண்ணுபுகழ்
விலங்காத இந்நிலம் முற்றும் துருவினன் மென்மயிலைப்
பலம்காதல் கொண்டயான் கண்டிலன் சென்றாள் பதிநகரே.

**குறிப்புரை** : கண்ணு= குறித்த. விலங்காத= விலகாத. பலம்= உறுதி. பதி= கணவன்.

**பொழிப்புரை** : உலகைக்காக்கும் சிராமலை இறைவனை நாடோறும் நினைத்தலால் கலங்காத மனமுடைய ராமநாராயணன் குறித்த புகழ்விலகாத இந்நிலப்பகுதி முழுவதும், மனஉறுதியுடன் கூடியநான் துருவித்தேடினேன். ஆனால் தலைவியைக் காணவில்லை. அவள் கணவனின் நகருக்குச் சென்றுவிட்டாள்.

( 381 ) **தலைவன் தம்ஊர் சார்ந்தமை சாற்றல்**

மதுகாண் மலர்ச்சுனை மேய சிரகிரி மான்இதுகாண்
இதுகாண் தடம்பொழில் நீபயில் தண்புனம் ஈ(து) அறிக
அதுகாண் சிவதீர்த்தம் வந்தனம் நம்பதி ஒங்கும்எழில்
அதுகாண் வளநம் ஊர்மனை ஆருமென் ஆருயிரே.

**குறிப்புரை** : மதுகாண்= தேன்சுரக்கும். மேய= பொருந்திய. மான்= மலை. புனம்= தூறு அடர்ந்த காடு. நம்பதி வந்தனம். ஆரும்= வாழும்.

**பொழிப்புரை** : என் ஆருயிரே ! தேன் சுரக்கும் மலர்களுடைய சுனை இதுகாண். இச்சுனையில் நிழலாகத் தோன்றும் சிரராப்பள்ளி மலை இது. இது பெரியசோலை. நீ பயிலவேண்டிய தண்ணிய தூறுடைய காடுஇது அறிக. அது சிவதீர்த்தம். அழகுமிக்க நம்மூர் வந்துவிட்டோம். அது நமது வளமான ஊர், நாம்வாழும் வீடு.

( 382 ) **தலைவி முன்செல்வோர் தம்மொடு தான்வரல் பாங்கியர்க்கு உணர்த்திவிடுதல்**

விதுக்காண் பரிய பெருமான் சிராமலை மெல்லிடம்செல்
விதுக்காண் முகத்(து)எழில் தோகையீர் சென்று விளங்(கு)எனது
மதுக்காண் மொழிமொழிப் பாங்கியர் தம்பால் மகிழ்ந்(து)உரைமின்
மதுக்காண் தொடைவரன் சாரயான் நின்பின் வருதலையே.

**குறிப்புரை** : விது= பிரமன் / திருமால். விது= நிலவு. மதுக்காண் மொழி= தேன்போன்றசொல். மதுக்காண் தொடை வரன்= தேன்பொருந்திய மாலையணிந்த மேலானவன் - காதலன்.

**பொழிப்புரை** : நான்முகன் / திருமால் காணவியலாத இறைவனது சிராமலையின் வளமான இடத்திற்குச் செல்லும் மயில்போன்றவரே ! நீவிர் சென்று, விளங்கும்எனது தேன்போன்ற சொற்கள் பேசும்

பாங்கியரிடம், " தேன்பொருந்திய மாலையணிந்த மேலானவனாகிய காதலனுடன் நான் உங்களையடுத்து வருவதை மகிழ்வுடன் கூறுங்கள்.

( 383 ) **முன்சென்றோர் பாங்கியர்க்கு உணர்த்தல்**

கடம்கொண்ட உம்பலன் ராமநா ராயணன் காதலிற்சொல்
திடம்கொண்ட துய்ய சிராமலை நாதர் திகழ்வரைவாழ்
படம்கொண்ட அல்குல் மடவீர்யாம் கண்டனம் பாவைஅணும்
இடம்கொண்ட அன்பில் வந்தனள் ஆளன்முன் எய்திடவே

**குறிப்புரை :** கடம்= நீதி. உம்பலன்= குலத்தினன். மடவீர்= பெண்களே. அணும்= பொருந்திய ஆளன்= கணவன்.

**பொழிப்புரை :** நீதியை மேற்கொண்ட குலத்துவந்த ராமநாராயணன் அன்புடன் சொல்லித்துதிக்கும் வலிமைவாய்ந்த தூய சிராமலை இறைவனது அருள்விளங்கும் மலைக்கண் வாழும் அரவின்படம்போன்ற அல்குலுடைய மகளிரே ! தலைவி, பொருந்திய இடம்கொண்ட அன்புடன் கணவன் முன்னேவர அவனைத்தொடந்து அன்புடன் வந்தாள். இதை நாங்கள் கண்டோம்.

**இலகணக்குறிப்பு :** அணும் - அண்ணும் என்பதன் இடைக்குறை.

( 384 ) **பாங்கியர் கேட்டு நற்றாய்க்கு உணர்த்தல்**

ஆயே இனிநீ வருந்தலை சுரக்(கு)ஒரு ஆண்டகைபின்
போயே இனிதா மருதத்(து) இருந்துபின் பூண்(டு)அலர்ஊர்
வாயே இனிமூட வந்தாள் சிராமலை வாய்இறைபின்
நோயே இனிஓட என்றார் நலர்உரை நுண்ணுரையே.

**குறிப்புரை :** ஆயே= தாயே, ஆண்டகை= ஆண்களுள் சிறந்தவன். ஆண்டகைபின் அலர்பூண்டு. நலர்= நல்லவர். நுண்ணுரை= மேன்மையான சொல்.

**பொழிப்புரை :**. தாயே ! இனிநீ வருந்தாதே. பாலைக்கண் ஆண்களுள்சிறந்த ஒருவன் பின், ஊரவர் அலர்தூற்றச் சென்றவள், இனிதாக ஒருமருதநிலத்து ஊரில் இருந்து, பின் சிராமலைக்கண் இனிமேல் நம்துன்பம்ஓட வந்தாள் என்று நல்லவர் கூறிய சொல் மேன்மையான சொல்லாகும்.

( 385 ) **நற்றாய் கேட்டுஅவன்உளங்கோள் வேலனை வினாதல்**

காலம் உணர்ந்(து)உரை வேலமின் னைக்கொள் கருணைமுகில்
ஞாலம் உணர்ந்திட இந்தச் சிராமலை நற்பதிவாய்க்
கோலம் உணர்ந்திட வந்தனர் எம்இலோ கொள்தம்இலோ
சீலம் உணர்ந்துஎம் மயிலை வளர்த்திடும் செப்புகவே.

**குறிப்புரை :** அவன் உளம்கோள்= தலைவனின் கருத்து. வேல= குறிகூறுகிறவனே. மின்= மின்னலை ஒத்த உமையம்மை. கோலம்= தழுவல் - கூட்டம். இலோ= இல்லமோ.

**பொழிப்புரை :** எதிர்காலத்தை உணர்ந்து சொல்லும் குறிகூறுகிறவனே ! மின்னல்ஒத்த உமையவளை இடப்பாகம் கொண்ட கருணைமேகம் ஆகிய இறைவனால் உலகவர் உணருமாறு செய்யப்பெற்ற இந்தச் சிராமலையாகிய நல்லிடம், தமது கூட்டத்தை உணருமாறு வந்தவர்களை, அவர்களது நற்பண்பை உணர்ந்து ஏற்றுவளர்ப்பது எமது இல்லமா ? மனைவியாக ஏற்றவர் தமது இல்லமா ? கூறுக.

( மீட்சி முற்றிற்று )

**தன்மனை வரைதல்**

*******************************

( 386 ) **நற்றாய் மணன்அயர் வேட்கையில் செவிலியை வினாதல்**

பச்சைக் கொடிபுணர் பங்கன் சிராமலைப் பாங்(கு)அடைந்து
கச்சைக் கொளுமுலை மின்னைக் கவர்கள்வன் காணவந்தான்
செச்சைக் கொளுமணம் நம்அனை வாய்மணம் செய்கஎன
இச்சை கொளும்இறை தாய்பால் விரும்பியாம் வேண்டுவமே.

**குறிப்புரை :** பச்சைக்கொடி= உமையம்மை. செச்சை= வெட்சிப்பூ. அனைவாய்= தாயிடம். இச்சை= விருப்பம் / ஆசை

**பொழிப்புரை :** உமையம்மையை இடப்பாகம் கொண்ட அருள்தரு தாயுமானவனின் சிராமலைப் பக்கம்அடைந்து, கச்சணிந்த முலைகளுடைய மின்னல்போன்றவளைக் கவர்ந்துசென்ற கள்வன் - தலைவன் அவளைக் காணவந்தான், வெட்சிப்பூச் சூடும் திருமணம் செய்யுமாறு நம் அன்னையிடம் சொல்லி, ஆசைகொண்ட தலைவனின் தாயிடம் நாம் விரும்பி வேண்டுவோம்.

( 387 ) **செவிலிக்கு இகுளை வரைந்தமை உணர்த்தல்**

தருமணம் செய்யும் சிராமலை நாதரின் தண்வரைமிற்(கு)
ஒருமணம் செய்ய உளம்கொளும் நற்றாய்க்(கு) உரைப்ப(து)என்னோ
பெருமணம் செய்யும் குழலியை அன்னாய் பிறங்கஅன்பர்
திருமணம் செய்தனர் தன்ஊரில் என்(று)ஒற்றர் செப்பினரே.

**குறிப்புரை** : தருமணம்= நிலைத்த மணம். மிற்கு= மின்னலொத்த தலைவிக்கு. ஒரு= ஒப்பற்ற. உளம்கொளும்= விரும்பும். பெருமணம்= மிக்க நறுமணம். அன்னாய்= தாயே.

**பொழிப்புரை** : நிலையாக மணம்புரிந்துகொண்ட சிராமலை நாதரின் குளிர்ந்த மலையினளாகிய மின்னல்போன்ற தலைவிக்கு ஒப்பற்ற திருமணம் செய்யவிரும்பியுள்ள நற்றாய்க்கு நாம் சொல்லத் தேவையில்லை. தாயே ! மிக்கநறுமணம் கமழும் கூந்தலுடைய தலைவியைத் தலைவர் தன்ஊரில் சிறந்துவிளங்கும் திருமணம் செய்துகொண்டார் என்று ஒற்றர் வந்து கூறினர்.

( 388 ) **தலைவன் பாங்கிக்கு யான்வரைந்தமை நுமர்க்கு இயம்புக என்றல்**

சொல்லாண்ட பாக்கொள் சிராமலை நாதர் சுடர்வரைவாழ்
வல்லாண்ட பார முலைஉங்கள் அன்னை மதித்(து)அறியச்
செல்லாண்ட பாகஜங் கூந்தலை யான்மணம் செய்ததனை
எல்லாண்ட பாரமுத்(து) ஆர மடவாய் இயம்புகவே.

**குறிப்புரை** : சொல்லாண்ட= புகழ்வாய்ந்த. வல் ஆண்ட= வல்லுக் கருவியை வென்ற. மதித்து அறிய= தெளிவாவாக அறியுமாறு. செல் ஆண்ட= கார்மேகத்தை வென்ற. ஐங்கூந்தலை= ஐந்துவகையாக முடிக்கப் பெற்ற கூந்தலுடைய தலைவியை. எல்ஆண்ட= ஒளியுடைய. பார= பருமனான.

**பொழிப்புரை** : புகழ்வாய்ந்த பாக்கள்கொண்ட சிராமலை நாதரின் ஒளியுடைய மலைக்கண் வாழும் சூதாடுகருவியை வென்ற கனத்தமுலையுடைய உமதுதாயார் தெளிவாக அறியுமாறு, கார்மேகத்தை வென்ற ஐவகையாக முடிக்கப்பெற்ற கூந்தலுடைய தலைவியை நான் மணந்துகொண்டதை, ஒளியுடைய பருமுத்துமாலை அணிந்தவளே கூறுக.

**விளக்கம்** : கூந்தலை முடிக்கும் ஐவகை - கொண்டை, குழல், பனிச்சை, சுருள், முடி என்பனவாகும்.

( 390 ) **பாங்கி தான் அதுமுன்னரே சாற்றியது உரைத்தல்**

சிங்கக் கொடிதிகழ் ராமநா ராயணன் சிந்தைசெயும்
துங்கக் கொடிசேர் சிராமலை நாதரின் தொல்வரைஎம்
புங்கக் கொடியை வதுவைநின் ஊரில் புரிந்ததனை
தங்கக் கொடித்தாலி யால்உணர்ந்(து) ஓதினன் தாயருக்கே

**குறிப்புரை** : துங்கக்கொடி= வெற்றிக்கொடி - விடைக்கொடி. புங்கம்= உயர்வு. தங்கத் தாலிக்கொடி.

**பொழிப்புரை** : சிங்கக் கொடியுடைய ராமநாராயணன் நினைத்து வணங்கும் வெற்றிக்கொடியான விடைக்கொடியுடைய சிராமலை இறைவனது தொன்மையான மலைக்கணுள்ள எமதுஉயர்ந்த கொடியாகிய தலைவியை, நீ உனதுஊரில் மணந்துகொண்ட செய்தியை அவளது கழுத்தில் இருந்த தங்கத்தாலான தாலிக்கொடியால் உணர்ந்து தாய்க்குச்சொல்லிவிட்டேன்.

( தன்மனை வரைதல் முற்றும் )

## உடன்போக்கு இடையீடு

*******************************************

**நீங்கும்கிழத்தி பாங்கியர்தமக்குத் தன்செலவு உணர்த்தி விடுத்தல்**

( 391 ) தீ(து)ஒன்று சாராச் சிராமலை நாதர் திகழ்வரைக்கண்
போ(து)ஒன்று மாமுகத் தீர்செலின் தோழியர் புந்திகொள
வாது)ஒன்றும் ஊர்விடுத்(து) அன்பர்பின் இந்த வரைகடந்து
கா(து)ஒன்று நீள்கணாள் சென்றாள் எனநீர் கழறுவிரே.

**குறிப்புரை** : போது= மலர். வாது = மரக்கிளை - மரம். கழறுவிர்= கூறுங்கள்.

**பொழிப்புரை** : தீயது யாதொன்றும் சேராத சிராமலை நாதர் விளங்கும் மலையில் வாழும் மலரொத்த கண்களுடைய அழகிய முகத்தவரே ! நீவிர் சென்றால், என்பாங்கிமார் அறியுமாறு, மரங்கள் மிக்க இவ்வூர்விட்டுக் கணவன்பின் இம்மலை கடந்து, காதினைத் தொடும்நீண்ட கண்களுடைய தலைவி தன் கணவன்பின்னே சென்றாள் என்றுகூறுங்கள்.

**விளக்கம்** : காதுஒன்று நீள்கண் -

" சென்று செவிஅளக்கும் தன்மையவாய்ச் சிந்தைஉளே
நின்றுஅளவில் இன்பம் நிறைப்பவற்றுள் - ஒன்று
மலர்இவரும் கூந்தலார் மாதர்நோக்கு ஒன்று
மலரிவரும் கூத்தன்தன் வாக்கு " ( தண்டிஅலங்காரம். வேற்றுமைச்சமவணி )

**இலக்கணக்குறிப்பு** : இது, வேற்றுமையணியின் பிரிவான இருபொருள்வேற்றுமைச் சமவணி.

( 392 ) **தலைமகள் தன்செலவு ஈன்றாட்கு உணர்த்திவிடுத்தல்**

சீர்திகழ் மாதவத் தீர்தொழு வேன்நான் சிராமலைசென்(று)
ஏர்திகழ் வேலன்ன கண்ணி களிப்பொடும் இவ்வரையை
நீர்திகழ் மாமரு தக்கிழ வோனுடன் நீங்கினள்என்(று)
ஓர்திகழ் சேதி உரைமின் எனைஈன்ற உத்தமிக்கே.

**குறிப்புரை** : ஏர்= அழகு. மருதக்கிழவோன்= மருதநிலத்துக்கு உரியவன் - தலைவன். ஏர்திகழ்........ ......களிப்பொடும், நீர்திகழ்.......... சேதி, சிராமலை சென்று, எனைஈன்ற உத்தமிக்கு உரைமின்.

**பொழிப்புரை** : சிறப்பு விளங்கும் பெருந்தவத்தோரே ! நான் வணங்குகிறேன். அழகு விளங்கும் வேல்போன்ற கண்களை உடையவள் - தலைவி - நீர்வளம்மிக்க மருதநிலத்துக்கு உரியவனுடன் - தலைவனுடன் களிப்புடன் இவ்விடம்நீங்கினாள் என்ற ஒப்பற்று விளங்கும்செய்தியை, சிராமலை சென்றதும் என்னைப்பெற்ற உத்த்மியாகிய தாய்க்குச் சொல்லுங்கள்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் கொண்டுகூட்டுப் பொருள்கோள் உடையது.

( 393 ) **நற்றாய்க்கு அந்தணர் மொழிதல்**

கொற்றவை மேய புயத்(து)ஒரு காளைபின் கூர்ந்துசுரம்
உற்றவை வேல்விழி மீள்வள் கவல்ஒழி ஓங்குகற்புச்
சொற்றவை ஆர்புகழ் நல்வட மீன்நிகர் தூய்மையினாள்
மற்றவை கூறில் பெருகும் சிராமலை மான்பிணையே.

**குறிப்புரை** : கொற்றவை= வெற்றித்திருமகள். கூர்ந்து சுரம்= மிக்கபாலை. உற்ற= அடைந்த. வைவேல்= கூர்மையானவேல். கவல்= கவலை. கற்புச்சொற்றவை புகழ் ஆர்= கற்புநெறிக்குச் சொன்னவற்றில் புகழ்பெற்ற. வடமீன்= அருந்ததி விண்மீன். மான்பிணை= பெண்மான்

**பொழிப்புரை** : சிராமலைவாழ் பெண்மானே ! “ சிறந்த கற்புநெறிக்குச் சொன்னவற்றில் புகழ்பெற்ற அருந்ததி விண்மீன்போன்ற தூய்மையுடையவள் - தலைவி, வெற்றித்திருமகளைத் தோளில் தாங்கிய ஒருகாளையாகிய தன்கணவன் பின்னே மிக்க பாலைநிலமடைந்தவளாகிய கூரிய வேல்போன்ற விழியுடையவள், மீண்டுவருவாள் கவலைப்படாதே. அவள் கூறியபிறவற்றைக் கூறத்தொடங்கினால் பெருகும். “

( 394 ) **நற்றாய் அறத்தொடு நிற்றலின் தமர்பின் சேறலைத்**
**தலைவி கண்டு தலைவற்கு உரைத்தல்**

வெண்பொடி பூசும் சிராமலை நாதர் வியன்கிரியை
எண்பொடி நீர்த்துளி பெய்(து)உறும் காரினம் என்(று)இசைக்க
விண்பொடி மேவச் சினந்து துடித்(து)உடன் வில்வளைத்தே
ஒண்பொடி யேவிடுத்(து) உற்றனர் எம்மவர் ஓர்துரையே.

**குறிப்புரை** : வெண்பொடி= திருநீறு. வியன்= பெருமை. எண்பொடி நீர்த்துளி= எண்ணற்ற சிறிய மழைத்துளி. இசைக்க= கூறுமாறு. விண்பொடிமேவ= புழுதி வானில் பொருந்த. பொடியே விடுத்து=வெறுப்புக்கொண்டு

. **பொழிப்புரை** : திருநீறு பூசும் சிராமலைநாதரின் பெருமைபொருந்திய மலையை, எண்ணற்ற சிறுதுளிகளைத் தூவும்கார்மேகம் வானவில்வளைத்துச் சூழ்ந்ததுபோல், சினத்துடன் துடித்துக் கூடவே வில்லினையும் வளைத்து வானத்தில் புழுதிபறக்க எம்மவர் நம்மைச் சூழ்ந்துள்ளனர். தலைவனே ! இதனை எண்ணிப்பார். ( என்னை மீட்க உம்மீது சினத்துடன் வில்லேந்தி எம்மவர் நம்மைச் சூழ்ந்துள்ளனர் என்றாள் )

**இலக்கணக்குறிப்பு : இச்செய்யுள் உவமையணி.**

( 395 ) **தலைமகளைத் தலைமகன் விடுத்தல்**

பாலை நிலக்கள்வர் என்னில் பகைஎன்னில் பாவைபொரும்
காலை நிலைத்(து)எதிர் பூளையில் தீஎதிர் காணுபஞ்சில்
சேலை நிகர்விழி யாய்அழி வார்உனைச் சேர்ந்தவரேல்
கோலை நிலைஎடேன் நீநில் சிராமலைக் குன்றகத்தே.

**குறிப்புரை** : பாவை= பதுமை போன்றவளே. பொரும்காலை= போரியும்போது. நிலைத்து= நிலையாக நின்று - புறமுதுகு காட்டிஓடாமல். எதிர்= எதிர்த்து. பஞ்சில்= பஞ்சுபோல். கோல்= அம்பு. நிலைஎடேன்= அது இருக்கும் இடமாகிய தூணியில் இருந்து எடுக்கமாட்டேன். சிராமைலக் குன்றகத்தே நீ நில்.

**பொழிப்புரை** : பதுமை போன்றவளே ! சூழ்ந்தவர் பாலைநிலத்து ஆறலைக்கள்வர் என்றால், அல்லது பகைவர் என்றால் போரிடும்போது எதிர்த்து தீஎதிரேகண்ட பூளைப்பூவை, பஞ்சினைப்போல் அழிவர். கெண்டை மீனொத்த விழியுடையவளே ! உன்னைச் சேர்ந்தவர் என்றால் அவர்கட்கு எதிராக அம்பினை அதன் தூணியிலிருந்து எடுக்கமாட்டேன். நீ இச்சிராமலைப் பக்கத்திலேயே நில். ( என்று புறப்பட்டான் )

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

( 396 ) **தமருடன் செல்பவள் அவன்புறம்நோக்கிக் கவன்றுஅரற்றல்.**

பகைத்தார் உயிரைப் பருகலின் கூற்(று)எனும் பண்பினர்தான்
நகைத்தார் புரம்எரித் தார்வாழ் சிராமலை நல்வரைஎம்
வகைத்தார் வரஅஞ்சி னார்போல் நடித்தார் வளர்அருளால்
தகைத்தார் திறல்அறி வர்தேர் பரிவாழி தாரணிக்கே.

**குறிப்புரை** : எம்வகைத்தார்= எமது வகையினர். தகைத்தார் அறிவர் தேர் பரி திறல். தகைத்தார்= எதிர்த்தவர்.

**பொழிப்புரை** : இவர், தன்னைப் பகைத்தவரின் உயிரைக்குடிப்பதில் எமனென்றுகூறும் பண்புடையவர் ஆவார். நகைத்து முப்புரம் எரித்த சிவபிரான் வாழும் சிராமலையாகிய நல்லமலைகண், எம்வகையினர் வர, அதுகண்டு அவர்களுக்கு அஞ்சினவர்போல் வளரும் அருளால் நடித்தார். இவரை எதிர்த்தவர் இவரது ஆற்றலை அறிவர். உலகில் இவருடன் இவரது தேர் குதிரை வாழ்க.

( உடன்போக்கு இடையீடு முற்றிற்று )

## வரைதல்

*************

( 397 ) **சென்றோன் மீண்டுவந்து, அந்தணரையும் சான்றோரையும் முன்னிட்டு வரைந்துகொண்டுழி கண்டோர் மகிழ்ந்து கூறல்**

வரம்மிகு ராமநா ராயணன் சொல்சிர மாமலைவாய்த்
தரம்மிகு மாமணம் காணயாம் செய்தவம் சால்புடைத்தே
சரம்மிகு ராமனே காளை சனகியே தையலுநல்
உரம்மிகு நீர்ஊர் இதுவும் மிதிலையே உண்மையினே.

**குறிப்புரை** : வரம்= மேன்மை. சால்பு= மேலானது. சரம்= போர். உரம்= வளம்.

**பொழிப்புரை** : மேன்மைமிக்க ராமநாராயணன் போற்றும் சிறந்த சிராமலைக்கண் தகுதிமிக்க சிறந்த திருமணத்தைக் காணச்செய்த தவம் மேலானதாகும். உண்மையாகவே, போரில் சிறந்த இராமனே இத்தலைவன், சானகியே இத்தலைவி. வளம் வாய்ந்த இவ்வூர் மிதிலையாகும்.

( வரைவியல் முற்றிற்று )

## இல்வாழ்க்கை

*********************

( 398 ) **தலைவன் தலைவிமுன் பாங்கியைப் புகழ்தல்**

தேயாத மேன்மைச் சிராமலை யார்பதம் சேர்த்தும்ஒரு
வீயாத மேன்மை முயற்சியின் பாவையை மேவிடயான்
ஓயாத மேன்மை முயற்சிசெய் தாயுனை உள்களங்கம்
தோயாத மேன்மைஎன் நெஞ்சில் அமைத்துத் துதிப்பனன்றே.

**குறிப்புரை** : சேர்தும்= அடையச்செய்யும். வீயாத= தாழ்வில்லாத. முயற்சியின்= முயற்சிபோல். பாவையை யான் மேவிட= பதுமைபோன்ற தலைவியை நான் அடைய. உள்களங்கம் தோயாத= மனத்தில் களங்கமில்லாத.

**பொழிப்புரை** : எந்நாளும் குறையாத மேன்மையுடைய சிராமலை இறைவனது திருவடியில் சேர்க்கும் ஒப்பற்ற தாழ்வில்லாத மேலான முயற்சிபோல், பதுமைபோன்ற தலைவியை நான் அடைய ஓயாத சிறந்த முயற்சிகள் செய்தாய். எனவே உன்னைநினைக்கும் களங்கம் இல்லாத மேலானஎன் மனத்தில் அமைத்துப் போற்றுவேன்.

**இலக்கணக்குறிப்பு** : முயற்சியின் - இன் - ஒப்புமைப்பொருளில் வந்த ஐந்தன் உருபு. இச்செய்யுள் உவமையணி.

( 399 ) **தலைவனைப் பாங்கி வாழ்த்தல்**

பணைஆர் இணைமுலைப் பாவையைக் கைப்பிடி பாக்கியனே
இணையாரும் இல்லாத் திறலோய் புகழ்வ(து)என் ஏழைஎனைத்
துணைஆர் எழில்முலைப் பங்கன் சிராமலைத் தொல்லவன்போல்
கணைஆர் இருவிழித் தோகையோ(டு) இன்பில் கலந்(து)இருமே.

**குறிப்புரை** : பணைஆர்= திரட்சிஉடைய. தொல்லவன்= அநாதியான இறைவன். கணை= அம்பு.

**பொழிப்புரை** : திரட்சியுடைய இருமுலைகள்பெற்ற தலைவியை மணந்த பேறுபெற்றவனே ! ஒப்பற்ற ஆற்றலுடையவனே ! என்னைப் புகழ்வதேன் ! அழகிய இரு முலைகளுடைய உமையவளை இடப்பாகம் கொண்ட சிராமலையில் அநாதியனான இறைவனைப்போல், அம்புகளாகப் பொருந்திய இரு விழிகளுடைய மயில்போன்ற தலைவியுடன் இன்பத்தில் கலந்து வாழுங்கள்.

( 400 ) **பாங்கி தலைவியை வரையுநாள்அளவும் வருந்தாது இருந்தமை உரையாய் எனல்**

சீரங்கம் பாதியில் பெண்சேர் சிராமலைச் செல்வர்எழில்
போரங்கம் பார்சிலை போல்முலை யாய்எங்ஙன் பூண்(டு)இறைபொன்
நேரங்கம் பாடியை தாலியைப் பூட்டு நிகழ்(வு)இதுகால்
ஊரங்கம் பாய அலர் சுமந்(து) உற்றாய் உரைத்தருளே.

**குறிப்புரை** : சீர் அங்கம் பாதியில்= சிறந்த உடம்பில் பாதியில். எழில்போர்= அழகு செறிந்து விளங்கும். அங்கம்= உடம்பு. பார்சிலை= பாறையில் வடித்த சிலை. இதுகால்= இக்காலம்வரை. ஊர் அங்கம்= ஊரவர் (சுமத்திய) களங்கம். அலர்= பழி.

**பொழிப்புரை** : சிறந்த உடம்பின் இடதுபாதியில் உமையம்மையைக் கொண்ட சிராமலைச்

செல்வராகிய அருள்தரு தாயுமானவரின் அழகுசெறிந்து விளங்கும் பாறையில் வடித்த சிலைபோன்ற முலைகளுடையவளே ! தலைவன் பொன்னாலான அழகிய தாலியை உன்உடம்பில் - கழுத்தில்பூட்டும் இந்நிகழ்வுஆகிய இக்காலம்வரை, ஊரவர் சுமத்திய களங்கம் ஆகிய அலர் - பழி தூற்றுதலைச் சுமந்து எங்ஙனம் வாழ்ந்தாய் ? கூறியருள்.

**விளக்கம் :** சிராமலை இறைவனைச் செல்வர் என்னும் மரபு - " தாயான செல்வர்க்கே சென்று ஊதாய் கோத்தும்பி " ( திருவாசகம் )

( 401 ) **பெருமகள் உரைத்தல்**

கந்தன்அத் தைக்(கு)ஒப்(பு)எனும் மின்னே அன்பர் கனிந்(து)உரைத்தே
சந்தனத் தைச்செழிப் பிக்கும் தழையினைத் தந்தனரே
வந்தனத் தைக்கொள் சிராமலை வாய்அ(து) ஆனஅருள்
முந்தனத் தைச்சொல் நின்சொல் உடன் ஆற்றிய முற்றவுமே.

**குறிப்புரை :** கந்தன் அத்தை= முருகப்பிரானுக்கு அத்தையாகிய திருமகள். செழிப்பிக்கும் செழுமைஉறச்செய்யும். வந்தனம்= வணக்கம். அருள் ஆன அது= அருட்சொல்லான அச்சொல். மு தனத்தை= அருளுக்கு முற்பட்ட.செல்வத்தை - அறம்பொருள் இன்பத்தை.. உடன் முற்றவுமே ஆக்கிய= உடனடியாக முழுப்பயனையும் செய்தது.

**பொழிப்புரை :** அருள்தரு முருகப்பிரானுக்கு அத்தையாகிய திருமகளுக்கு ஒப்பான மின்னல் போன்றவளே ! அனைவர் வணக்கத்தையும் கொள்ளும் சிராமலைக்கண், தலைவர் சந்தனத்தையும் செழிப்புறச் செய்யும் தழையினைத் தந்தார். அருள்வடிவான அத்தழையுடன், அருளுக்கு - வீடுபேற்றினுக்கு - முற்பட்டவையாகிய அறம் பொருள் இன்பம்தரும் உன்சொல், உடனடியாகப் பயன்முழுவதும் செய்தது.

( 402 ) **தலைவனைப் பாங்கி வரையுநாள் அளவும் நிலைபெற ஆற்றிய நிலைமைவினாதல்**

கன்னன் மதன்எனும் ராமநா ராயணன் காதலிற்சொல்
மன்னன் மதிச்சிர மாமலை எம்குற மாமயிலை
முன்னாள் வரைவிடை வைத்துஅகல் நாள்முதல் மொய்ப்புயனே
பொன்நன் மலர்த்தொடை சூட்டள(வு) எங்ஙன் பொறுத்தனையே.

**குறிப்புரை :** கன்னன்= கர்ணன். மதன்= மன்மதன். மன்னன்= அரசன். மதிச்சிரமா மலை= நிலவை உச்சியில் சூடிய சிராமலை. மொய்ப்புயனே= வலிமைவாய்ந்த தோள்களுடையவனே.

**பொழிப்புரை :** வலிமைவாய்ந்த தோள்களுடையவனே ! கொடையில் கர்ணன், அழகில் மன்மதன் என்றுகூறப்பெறும் ராமநாராயணன் அன்புடன் போற்றிக்கூறும் அரசனாகிய இறைவனின் மதிசூடிய சிறந்த சிராமலைவாழ் எமது குறவர்குடி மயில்போன்றவள் பிரிவை, வரைவிடை வைத்துப் பொருள்வயிற்பிரிந்த அன்றுமுதல் அழகிய நல்ல மலர்மாலை சூட்டும் வரை எவ்வாறு பொறுத்திருந்தாய் !

( 403 ) **மன்றல் மனைவரு செவிலிக்கு இகுளை அன்புற உரைத்தல்**

கராமலை அத்தன் வலிகெடு யானையைக் காத்தருள்அன்(பு)
அராமலைப் பள்ளியன் அன்னாய்முன் காணாப் பரம்பரனாம்
சிராமலை அத்தர் வரைநம் கொடிதன் திகழ்மலர்வாய்
விராமலை நல்அமுது ஈந்(து)இறை இன்புற வீக்கினளே.

**குறிப்புரை :** கராமலை= முதலையொடு போரிட்டு. வலிகெடு= வலிமை இழந்த. அத்தன்= திருமால். அன்பு அரா - அன்பு அறா = பத்திமை நீங்காத. பரம்பரன்= மேலானவற்றுகெல்லாம் மேலானவன். அத்தன்= சிவபிரான். நம்கொடி= நம்தலைவி. மலர் மலை திகழ் வாய்= மலர்போன்று விளங்கும் வாய். நல் அமுது விரா ஈந்து= சிறந்த உணவைக் கலந்துஊட்டி. இறை= தலைவன். வீக்கினள்= தழுவிக்கொண்டாள் - கட்டிப் பிடித்துக் கொண்டாள்.

**பொழிப்புரை:** தாயே ! முதலையொடு போரிட்டுத் தன்வலிமை இழந்த கசேந்திரன் என்ற யானையைக் காத்து அருளிய திருமாலின் பத்திமைநீங்காதவனும், அவனால் முன்புகாணப் பெறாதவனாய் மேலானவர்க்கெல்லாம் மேலானவனும் ஆகிய சிராமலையில் குடிகொண்ட சிவபிரானது மலைக்கண், நமது கொடியாக விளங்கும் தலைவியின் மலர்போன்ற வாயில், தலைவன் மகிழச்சிறந்த அமுதத்தை ஊட்டி அன்புடன் கட்டிப்பிடித்துக் கொண்டாள்.

**இலக்கணக்குறிப்பு :** மலர் மலை - மலைய - உவமஉருபு.

( 404 ) **பாங்கி இல்வாழ்க்கை நன்றுஎன்று செவிலிக்கு உரைத்தல்**

பொன்பார்த்த கொன்றை அணியும் சிராமலைப் பொற்பர்உறை
மின்பார்த்த வெற்(பு)அமர் நல்லளாய் உன்மகள் வேதியர்க்கும்
முன்பார்த்த மற்றையர்க் கும்பரிந்து ஊட்டி முதல்அளித்தே
இன்(பு)ஆர்த்த அன்பர் மகிழுற நாட்டினள் ஏய்ந்த(து)என்றே.

**குறிப்புரை :** பொன்பார்த்த= பொன்னைப் பார்த்தது போன்ற. பொற்பர்= அழகர். மின்பார்த்த= ஒளியுடைய. நல்லளாய்= நல்லவளே. முன்பார்த்த= எதிரே கண்ட. முதல் பரிந்து ஊட்டி. இன்பு ஆர்த்த= இன்புற்ற. ஏய்ந்தது என்றே நாட்டினள்= பொருத்தமானது என்று செய்தாள்.

**பொழிப்புரை** : நல்லவளே ! பொன்னைப்பார்த்தது போன்ற பொலிவுற்ற கொன்றைமலர் சூடிய அழகர் வாழும் ஒளியுடைய மலைக்கண் உள்ள வேதியர்க்கும், தன் எதிரேகண்ட மற்றவர்க்கும் முதலில் பரிவுடன் உணவு ஊட்டி, அதுவே பொருத்தமானது என்று இன்புற்ற காதலர் மகிழுமாறு செய்தாள்.

( 405 ) **மணமனை சென்றுவந்த செவிலி பொற்றொடி கற்பியல் நற்றாய்க்கு உணர்த்தல்**

பருந்தில் ஊர்வாற்(கு) அரிய சிராமலைப் பண்ணர்இயல்
பொருந்(து)அதி மாவரை அன்னாய் நினது பொலன்மகள்தன்
திருந்(து)அதி வான்கற்(பு) உணர்ந்து விணில்போய்த் திகழும்அந்த
அருந்ததி யாள்அரும் தூதிஅ ருந்துதி யாயினளே.

**குறிப்புரை** : பருந்தில் ஊர்வான்= கருடனில் ஏறிவருகிறவராகிய திருமால். பண்ணர்= சிவபிரான். அதிமா வரை= மிகச்சிறந்த மலை. பொலன்= பொலிவு. விணில் போய்த்திகழும்= வானத்தில் விளங்கும். அருந்ததியாள்= வசிட்ட முனிவரின் மனைவி.அருந்ததி. அரும்துதி= சிறப்பாக வணங்கல்.

**பொழிப்புரை** : கருடனில் ஏறிவரும் திருமாலாலும் காண்பதற்கரிய சிராமலை இறைவனது இயல்புடைய மிகச்சிறந்த மலைபோன்றவளே ! உனது பொலிவுசான்ற மகள், தனது மிகத்திருந்திய மிகமேலான கற்பினை உணர்ந்துநடந்து, வானத்தில் போய்ப்பொருந்தி விளங்கும் அருந்ததியின் சிறந்தவணக்கத்திற்கும் உரியவளானாள்.

**விளக்கம்** : அருந்ததியின் கற்பு - கண்ணகியைத் " தீதிலா வடமீனின் திறம் இவள்திறம் " என்று சிலம்பு போற்றும்.

**இலக்கணக்குறிப்பு** : ஊர்வாற்கு - வினையாலணையும் பெயர். விணில்- இடைக்குறை.

( 406 ) **இதுவும் அது**

எத்தேவ ரும்பணி மேன்மைச் சிராமலை என்அனையே
முத்தேவ ரும்முறு வல்குண நின்மகள் முன்னுகற்பின்
முத்தேவ ரும்சிறு சேயாக ஆக்கும் மொழிஅழகி
ஒத்தேஅ ரும்கற்(பு) உடையளாய் நின்றாள்இஃ(து) உன்தவமே.

**குறிப்புரை** : அனையே= தாயே. முத்தே வரும் முறுவல்= முத்துகளாகப் பொருந்திய பற்கள். முன்னு கற்பின்= போற்றத்தக்க கற்பினால். முத்தேவரும்= அயன் அரி அரன் ஆகிய தேவர்கள் மூவரையும். சிறுசேயாக= கைக்குழந்தையாக.

**பொழிப்புரை** : தேவர்கள் எல்லாரும் வணங்கும் மேன்மையுடைய சிராமலைவாழ் என்தாயே ! முத்துகளாகவந்து பொருந்திய பற்களுடைய குணவதியாகிய உனதுமகள், போற்றத்தக்க தன்கற்பினால் அயன் அரி அரன் ஆகிய தேவர்கள் மூவரையும் தன்சொல்லால் சிறுகுழந்தையாக ஆக்கும் வாக்கு உடையவளை ஒத்த அரிய கற்புடையவளாய் விளங்குகிறாள். இது தவப்பயனாகும்.

( 407 ) **நன்மனை வாழ்க்கைத் தன்மை உணர்த்தல்**

நல்ல விருந்தோம்பிக் கொண்டான் குறிப்பில் நனிஒழுகி
அல்ல பரிந்(து)ஓட்டி ஆங்கே வரவுக்(கு) அமைசெலவில்
சொல்ல உயரும் சிராமலை நாதர் சொலும்உமைபோல்
வல்ல அறம்புரி கின்றாள் அனைநின் வளமகளே.

**குறிப்புரை** : அல்ல ஓட்டி= தகாதவற்றை முற்றாக விலக்கி. பரிந்து வரவுக்கு அமைசெலவில்= வருவாய்க்குத் தக்க செலவுசெய்வதில். சொலும் உமை= போற்றும் உமையம்மைபோல். வல்ல= திறமையுடன். வளமகள்= செல்வமகள்.

**பொழிப்புரை** : தாயே ! உன் செல்வமகள், நல்ல விருந்தினரைப் பேணி, கணவன் குறிப்பின்வழி முற்றும்வாழ்ந்து, தகாதவற்றை முற்றாக விலக்கி, வருவாய்க்குத்தக்க செலவு செய்வதில் புகழில் உயர்ந்த சிராமலை இறைவன் போற்றும் உமையம்மைபோல் திறமையுடன் அறங்களைச் செய்துவருகிறாள்.

**விளக்கம்** : " நங்கையினால் நாடுஅனைத்தும் செய்தாற்போல் நாடுஅனைத்தும்
நங்கையினால் செய்துஅளிக்கும் நாயகன் " ( திருக்களிற்றுப்படியார். 78 )
" ........................................................................இன்னும் உனக்கு ஆண்டுதோறும்
நல்வாய்மை அறம்வளர்க்கும் வித்தாநெல் இருநாழி தருகேம் அந்த
நெல்லாலே இகபரத்தும் உயிர்ப்பைங்கூழ் தழைகஎன நிறுவல் செய்தார். "
( காஞ்சிப்புராணம். தழுவக் குழை.... 426 )

என்பன இங்கு எண்ணுக.

( 408 ) **செவிலி நற்றாய்க்கு இருவர்காதலும் அறிவித்தல்**

உமையு மானும் எனஓர் உடலை உறாரெனினும்
அமையும் இருஉடலுக்(கு)ஓர் உயிர்பெற் றனநிலையர்
இமையும் இணைபிரி யாரால் சிராமலை ஏத்(து)அனையே
சமையும் உலுக்குமுன் மீள்வர் பகைமேற்செல் தார்இறையே.

**குறிப்புரை :** மான்= மகத்துவன் - சிவபிரான். நிலையர்= தன்மையர். இமை= இமைப்பொழுது. உலுக்கு சமையும்முன்= நொடித்து முடிக்குமுன். பகைமேல் தார் செல்= பகைவர்மேல் சேனையொடு செல்லும். இறை = தலைவன்.

**பொழிப்புரை :** சிராமலையைப் போற்றி வணங்கும் தாயே ! உமையம்மையும் சிவபிரானும்போல் ஒரேஉடம்பினைப் பெறாத போதிலும் வாய்த்த இருஉடலுக்கு ஓருயிர் பெற்றதன்மையர். இமைப்பொழுதும் பிரியார். பகைவர்மேல் படைநடத்தித் தலைவர் சென்றாலும் நொடித்து முடிக்குமுன் வெற்றியுடன் மீள்வர்.

( இல்வாழ்க்கை முற்றிற்று )

## பரத்தையிற் பிரிவு

****************************

( 409 ) **காதலன் பிரிவுழிக் கண்டோர் புலவிக்கு ஏதுஇதாம் அவ்விறைவிக்கு என்றல்**

வனம்காட்டி ஊரர் வரும்அப் பவனி வளமருகில்
தனம்காட்டி மன்னு பணம்காட்டிக் காசு தனைப்பறிக்கும்
கனம்காட்டி மின்னும் சிராமலைக் கோயில்நல் காரிகையார்
மனம்காட்டி வாள்ஓட்டி னார்இது மான்ஊடச் செய்திடுமே.

**குறிப்புரை :** வனம்= அழகு. ஊரர்= ஊர்மக்கள். பவனிவரும்= சுற்றும். வளமருகு= வளமான தெரு. மன்னு= பெருமைபொருந்திய. பணம்= நாகப்படம் போன்ற அல்குல். கனம்= மேகக்கூட்டம். கோயில் நல்காரிகையார்= தேவரடியார் - தேவடியாள். மனம்= விருப்பம் - ஆசை. வாள் ஓட்டினார்= பார்வை செலுத்தினார். மான்= மான்போன்ற தலைவி.

**பொழிப்புரை :** மேகக் கூட்டம் காட்டி மின்னும் சிராமலையில், ஊரில் உள்ளகாமுகர் தமது அழகினைக்காட்டிச் சுற்றும் வளமானதெருவில், தமது முலைகளைக்காட்டிப் பெருமைபொருந்திய நாகப்படம்போன்ற அல்குலைக்காட்டிக் காசுபறிக்கும் தேவடியாள்கள் தமது மனத்தினைக் காட்டி, வாள்போன்ற கண்களால் காமப்பார்வை செலுத்தினர். இப்பார்வை மான்போன்ற தலைவி ஊடல் கொள்ளச்செய்யும்.

**விளக்கம் :** " நகர நம்பியர் திரிதரு மருகு " ( சிலம்பு என்ற தொடர் இதில்" வனம் காட்டி ஊரர் பவனிவரும் வளமருகு "என்று வந்துள்ளது. ஒழுக்கம்தீர்ந்த தேவரடியாராகிய பரத்தையர் இயல்பை;

" நறுந்தாது உண்டு நயன்இல் காலை
வறும்பூ துறக்கும் வண்டு போல்குலம் " ( மணிமேகலை )
" இழிபவர் உயர்ந்தோர் மூத்தோர் இளையவர் கழியா நோயால்
கழிபவர் யாவ ரேனும் கண்வலப் பட்டு நெஞ்சம்
அழிபவர் பொருள்கொண்டு எள்ளுக்கு எண்ணெய்போல் அளந்து காட்டிப்
பழிபடு போகம் விற்பார் " ( திருவிளையாடற்புராணம். நகரச்சிறப்பு. 46 )
" அப்பன் வருவான் அவன்பின் மகன்வருவான்
தப்புமுறை என்றுநீ தள்ளாதே " ( விறலிவிடுதூது )

( 410 ) **தனித்துழி இறைவி துனித்து அழுது இரங்கல்**

சொல்லும் கவின்ஆர் சிராமலை வாய்இது சொல்தரமோ
நெல்லும் கரும்பும் விளைவயல் ஊர்இறை நீர்மைகுன்றிப்
புல்லும் கருத்தில் பரத்தை விரும்பிப் புகழ்அகத்தைக்
கொல்லும் கணைவே டனுக்(கு)இலக்(கு) ஆக்கினர் கொள்கைநன்றே.

**குறிப்புரை :** சொல்= புகழ். சொல்தரமோ= சொல்லத்தக்கதன்று. இறை= தலைவன். நீர்மை= ஒழுக்கம். புல்லும்= தழுவும். அகத்தை= மனைவியை. கொல்லும் கணை வேடனுக்கு இலக்காக்கினர்= மனத்தைக் கொல்லும் அம்பினை எய்யும் வேடனுக்குக் குறிப்பொருள் ஆக்கிவிட்ட தலைவன். கொள்கை= நட்பு. நன்றே= நன்மை தருவதன்று. .

**பொழிப்புரை :** நெல்லும் கரும்பும் விளையும் நன்செய்களுடைய ஊர்வாழ் தலைவன் தன்ஒழுக்கம் குன்றிப் பரத்தையைத் தழுவ விரும்பும் நட்பாக, புகழ்வாய்ந்த அழகிய சிராமலைக்கண் நிகழும் இச்செயல் அவன் மனைவியின் மனத்தை, அம்பெய்து கொல்லும் வேடனுக்கு இலக்காக்கியது. இது புகழும் தரமுடையதன்று.

( 411 ) **ஈங்குஇது என்னெனப் பாங்கிவினாதல்**

தினமே அறம்புரி ராமநா ராயணன் செவ்வியநன்
மனமே குடிகொள் சிராமலை நாதர் வரைமயிலே
அனமே இறைஉனக்(கு) அச்சென மேவி அணைந்திருக்க
இனமே யஆண்பிரி அன்றிலின் துன்புறல் என்உனக்கே.

**குறிப்புரை :** செவ்விய= பண்பட்ட. அனமே= அன்னப்பறவைபோன்றவளே. அச்சு= உயிர். இனம்மேய= தன்இனத்துடன் கூடிய.

**பொழிப்புரை** : நாடோறும் அறம்செய்யும் ராமநாராயணனின் பண்பட்ட நல்ல மனத்தில் குடிகொண்ட சிராமலைநாதரின் மலைக்கண் வாழும் மயிலே ! அன்னமே ! உன்கணவன் உன்உயிராகப் பொருந்தி இருக்கும்போது தன்இனமாகிய ஆண் அன்றில்பறவையைப் பிரிந்த பெண்அன்றிலைப்போல நீ துன்புறுவது ஏன் ?

( 412 ) **இறைமகன் புறத்துஒழுக்கு இறைமகள் உணர்த்தல்**

அரு(கு)உறு நற்சுவைக் கன்னலை ஏறி அழித்(து)உதைத்து
மரு(கு)உறு முள்செருந் திக்கே எருமைசெல் வண்பழனம்
பெரு(கு)உறு நல்லூரன் மின்னே சிராமலைப் பேர்வரைப்பால்
திருகுறு நெஞ்சக் கணிகையர் சேரியில் சேர்ந்தனரே.

**குறிப்புரை** : அருகுஉறு= அருகில் உள்ள. கன்னல்= கரும்பு. ஏறி உதைத்து அழித்து. மருகு= காட்டுமல்லிகை. முள் செருந்தி= முள்ளுடன் கூடிய ஒருவகைக்கோரை. வண்பழனம்= வளமான நன்செய். ஊரன்= மருதத்தலைவன். திருகு= வஞ்சனை. கணிகையர்= பரத்தையர்.

**பொழிப்புரை** : மின்னல் போன்றவளே ! தன் அருகிலுள்ள இனிய சுவையான கரும்பின்மேல் ஏறி கால்களால் உதைத்து அழித்துவிட்டு, எருமையானது காட்டுமல்லிகையுடன்கூடிய முள்ளுடைய கோரையைச் சுவைக்கச் செல்லும் வளமான நன்செய் நிலம்மிக்க மருதநிலத்துத் தலைவன், சிராமலையின் பெரியபாறைக்கண் உள்ள வஞ்சனையான பரத்தையர் சேரிக்குச் சென்றுவிட்டான்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் எடுத்துக்காட்டு உவமையணி.

( 413 ) **தலைவியைப் பாங்கி கழறல்**

காட்(டு)ஆம் நளாயினி கண்ணகி காதையைக் கா(து)உறமுன்
கேட்(டு)ஆம் பயன்என் சிராமலை நல்வரைக் கேகயமே
கூட்(டு)ஆம் புருடன் குறைகாணல் தூற்றல் கொளத்தகுமோ
தாட்(டு)ஆம் பலில்தங்கு தேன்வரின் தள்ளுமோ தாமரையே.

**குறிப்புரை** : காட்டு= எடுத்துக்காட்டு. ஆம்பயன்என்= என்னபயன். கேகயம்= மயில். கொளல் தகுமோ= ஏற்கத்தக்கதாகுமா. தாட்டு - தாள் + து= தண்டுடைய. .தேன்= வண்டு. தள்ளுமோ= வெறுத்து ஒதுக்குமோ.

**பொழிப்புரை** : சிராமலையாகிய நல்லமலைப் பக்கத்து வாழும் மயில்போன்றவளே ! எடுத்துக்காட்டாக விளங்கும் நளாயினி, கண்ணகி ஆகியவர் கதையினைக் கேட்பதால் பயன்என்ன ? வாழ்க்கையின் கூட்டாளியான கணவனிடம் குறைகாணல், அவனைத் தூற்றல் ஏற்கத்தக்கதன்று. தண்டுடையஆம்பல்மலரில் தங்கிப்பின் தன்பால்வரும் வண்டினைத் தாமரைமலர் வெறுத்து ஒதுக்குமோ ? ஒதுக்காது.

**இலக்கணக் குறிப்பு** : இச்செய்யுள் வேற்றுப்பொருள் வைப்புஅணி.

( 414 ) **தலைவி செவ்வணியணிந்து சேடியை விடுப்புழி அவ்வணி உழையர்கண்டு அழுங்கிக்கூறல்**

கானத்தில் ஆடும் சிராமலை நாதர் கவின்வரைப்பால்
மீனத்தி லேபுதன் உற்ற தெனஅலர் மீத்தொடுக்கும்
ஈனத்தி யார்முன் இருள்செவ் அலரி இனி(து)இமைக்கப்
போனாத்தி னால்இவள் பூச்சொன்ன தால்பழி பூணுவளே.

**குறிப்புரை** : செவ்வணி அணிந்து சேடியை விடுத்தல்= பரத்தையுடன் இருக்கும் தலைவனுக்குத் தனது பூப்பினை உணர்த்தி அழைக்கத் தலைவி, ஏவற்பெண்ணைச் செந்நிறத்தால் அலங்கரித்து அனுப்புதல். உழையர்= ஏவலர் / அருகில் இருப்போர். கானம்- சுடுகாடு. மீனத்திலே புதன் உற்றதென= மீனராசியில் புதன்வந்து நின்றாற்போல.. அலர் மீத்தொடுக்கும்= மிக்கபழிகூறும். ஈனத்தியார்= இழிந்த பரத்தையர். இருள் செவ்அலரி= மிக்க துன்பம் தரும் அவதூறு. இமைக்க= ஒளிர. பூச்சொன்னதால்= பூப்பினை வெளிப்படுத்தியதால்.

**பொழிப்புரை** : சுடுகாட்டில் ஊழிக்கூத்தாடும் சிராமலை இறைவனது அழகிய மலைப்பக்கம், மீனராசியில் புதன் நின்றாற்போலப் பழிமிகக்கூறும் இழிந்த பரத்தைரிடம் மிக்க துன்பம்தரும் அவதூறு ஒளிர, இவள் தனது பூப்பினை வெளிப்படுத்தியதால் பழிக்கப்பெற்றவள் ஆவாள்.

**விளக்கம்** : மீனத்தில் புதன்நிற்பது அவறூறு விளைக்கும் என்பர்.

( 415 ) **பரத்தையர் கண்டு பழித்தல்**

பொன்வண்ண மேனியன் ராமநா ரயணன் போற்றும்உயர்
மன்வண்ணம் மேவும் சிராமலை நாதர் வரையகத்தீர்
மின்வண்ண மேல வரில்சிவப் பைக்கரு வேல்விழியாள்
தன்வண்ண மேசிவப் பாக்கி வெளுக்கநான் சாற்றினனே.

**குறிப்புரை** : மன்வண்ணம்= பெருமைபொருந்திய அழகு. மின்வண்ண மேலவர்= ஒளிபொருந்திய வானவர். சிவப்பை= சினத்தை. சிவப்பு ஆக்கி= சினங்கொள்ளச்செய்து. வெளுக்க= தன்நிறம்கெட. . சாற்றினன்= கூறினேன்.

**பொழிப்புரை** : பொன்னிறத்தவனாகிய ராமநராயணன் போற்றும் உயர்ந்த பெருமையும் அழகுமுடைய சிராமலை இறைவனது மலைப்பக்கத்தவரே ! கருமையான வேல்போன்ற விழிகளுடைய தலைவியின் சினத்தால் சிவந்த கண்ணைத் தேவர்கள்போல் மேலும் சிவப்புடையதாக்கி, ஒளிபொருந்திய தன்நிறம் கெடக்கூறினேன்

**(416 )** **பரத்தையர் உலகியல்கண்டு விடுத்தலின் தலைவன் வரவுகண்டு வந்து வாயில்கள் மொழிதல்**

தேனைக்கா வல்கொள் இதழி அணிவார் சிராமலையில்
ஆனைக்கா வில்குடி கொள்வார் வரைவாய் அறியஇயல்
மானைகா வல்சொல் விழிகுழல் நன்முலை மாதுவிட்ட
மானைக்கா வல்இறை கண்டுபூப்((பு) ஓர்ந்(து)இவண் வந்தனரே.

**குறிப்புரை** : தேனைக் காவல்கொள்= தேனினைப் பாதுகாத்து வைத்திருக்கும். இதழி= கொன்றைமலர். ஆனைகாவில் குடிகொள்வார்= திருவானைகாவில் எழுந்தருளியவர். - அருள்தரு வெண்ணாவல் ஈசர். மானைக்காவல் சொல்இயல் விழி= மானுக்குப் பாதுகாப்பாகப் புகழப்பெறும் கண். குழல்= கூந்தல். காவல் இறை= தலைவியைக் காக்கும் தலைவன். கண்டு ஓர்ந்து அறிய= பார்த்து ஆராய்ந்து அறிந்த. இவண் வந்தனர்= இங்குவந்தார்.

**பொழிப்புரை** : திருவானைக்காவில் எழுந்தருளியவரும், தேனினைப் பாதுகாத்து வைத்திருக்கும் கொன்றைமலர் மாலைஅணிந்த சிராமலையாரும் ஆகிய சிவபிரான் உள்ள பாறைக்கண், மானுக்குப் பாதுகாப்பாகப் புகழப்பெறும் விழியும், கூந்தலுடன் அழகிய முலையும் கொண்ட தலைவி அனுப்பிய மான்போன்றவளை, தலைவியைக் காக்க வேண்டியதலைவன் கண்டு, தலைவியின் பூப்பினை ஆராய்ந்து அறிந்து இங்கு வந்துசேர்ந்தார்.

**( 417 )** **வரவுஉணர் பாங்கி அரிவைக்கு உணர்த்தல்**

குறுக்கா அருட்கொடை ராமநா ராயணன் கும்பிடுகொள்
வெறுக்கா வனப்(பு)ஆர் சிராமலை நாதர் வியன்வரைவாய்
சிறுக்கா வளத்தூரர் சேரிவிட்(டு) உற்றனர் செய்பிழையைப்
பொறுக்கா அவரை எதிர்கொளல் மாண்(பு)அறி பூங்கொடியே.

**குறிப்புரை** : குறுக்கா= குறைவின்றி. வெறுக்கா வனப்பு= யாரும் வெறுக்காத அழகு. சிறுக்கா= மிகுந்த. ஊரர்= தலைவன். உற்றனர்= வந்தார். பொறுக்கா= பொறுத்துக்கொள்ளாத எதிர்கொளல் கொள்= எதிர்கொண்டு அழைத்தலைக்கொள். பூங்கொடியே மாண்பு அறி..

**பொழிப்புரை** : குறைவின்றி அருளை வழங்கும் ராமநாராயணன் கும்பிடும் யாரும்வெறுக்காத அழகுடைய சிராமலைநாதரின் பெருமைபொருந்திய மலைக்கண், மிகுந்த வளமுடைய ஊரராகிய தலைவர், தலைவியைப் பிரிந்து பரத்தைபாற் சென்ற தன்பிழையைப் பொறுக்காதவராய் வந்துள்ளார். அவரை எதிர்கொண்டழைத்தலை மேற்கொள். பூங்கொடி போன்றவளே ! இதுவே மாண்பு என்பதறிக.

**இலக்கணக்குறிப்பு** : குறுக்கா, வெறுக்கா, சிறுக்கா, பொறுக்கா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்கள்.

**( 418 )** **தலைவனைத் தலைவி எதிர்கொண்டு பணிதல்**

விரும்பும் எறும்பீச் சுரத்தில் சிரகிரி மேல்தளியில்
அரும்பு முலையோ(டு) அமரும் சிவனார் அருள்அதனால்
திரும்பு மனத்தில் பரத்தைவிட் டேவீடு சேர்பவர்முன்
இரும்பு நிகர்த்தனள் காந்தரும் காந்தமா எய்தினரே.

**குறிப்புரை** : எறும்பீச்சுரம்= திருஎறும்பியூர். மேல்தளி= மேற்பால் உள்ள கோயில். திரும்பு மனத்திற் பரத்தை விட்டு வீடு சேர்பவர். நிகர்த்தனள்= ஒத்ததலைவி. காந்தர்= கணவன்.

**பொழிப்புரை** : அனைவரும்விரும்பும் திருவெறும்பியூரிலும்( திருவெறும்பூர் ), சிராமலையின் மேற்பால் கோயிலிலும் உமையம்மையுடன் எழுந்தருளியுள்ள சிவபிரானின் அருளால், பரத்தையை விட்டுத் திரும்பிவரும் மனத்துடன் வீடுவந்த கணவன் காந்தமாக வந்து சேர்ந்தார்; தலைவி காந்தத்தைப் பொருந்தும் இரும்புஆனாள்

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

**( 419 )** **புணர்ச்சியின் மகிழ்தல்**

பொன்மலைக் கும்இரட் டைமலைக்கும் பொருந்துவடக்
கின்மலை கொள்சிர மாமலை நாதர் எழில்பதம்சேர்
தன்மலைக் கைக்(கு)என் ஒருதலை இன்பே தழுவும்முலை
பொன்மலை கொண்டார் அடையின் இருதலை பூண்டதுவே.

**குறிப்புரை** : பொன்மலை, இரட்டை மலை= சிராப்பள்ளி மலையை அடுத்துள்ள பொன்மலை, மற்றும் உய்யகொண்டான் என்ற இருமலைகள். சிராமலை நாதர் எழில்பதம்சேர் தன்மலை= அருள்தரு தாயுமானவர் எழுந்தருளியுள்ள மலை. கைக்கைக்கு= இடத்துக்கு. ஒருதலை இன்பேதழுவும்= எனக்குமட்டுமே இன்பம் கிடைக்கும். பொன்மலை முலைகொண்டார் அடையின்= அழகிய முலைகள்

கொண்டவரை - தலைவியை - அடையின். அதுவே இருதலை பூண்டது= அவ்வின்பம் இருபாலும் ( அவளுக்கும் எனக்கும் ) பொருந்துவதாகும்.

**பொழிப்புரை:** பொன்மலைக்கும் இரட்டைமலையாகிய உய்யகொண்டான்மலைக்கும் இடையே வடக்கில் உள்ள மலையை - சிராப்பள்ளி மலையிடத்தை - அடைந்தால் அதனால் எனக்குமட்டுமே இன்பம் கிடைக்கும். ஆனால் அழகிய பொன்மலை போன்ற முலைகள் கொண்ட தலைவியை அடைந்தால் இன்பம் எனக்குமட்டுமன்றி அவளுக்கும் பொருந்துவதாகும்.

**விளக்கம் :** ஒருமலையான சிராப்பள்ளி மலையை அடைதல்= சிராப்பள்ளியானை வணங்குதல். இதனால் எனக்குமட்டுமே இன்பம். தலைவியின் மேருமலைபோன்ற இருமலைகளை அடைதல் - புணர்தல், இதனால் எனக்கும் அவளுக்கும் இன்பம் என்றான்

( 420 ) **வெள்ளணி அணிந்து விடுத்துழித் தலைவன் வாயில்வேண்டல்**

குருமனை யைப்புணர் சின்மதி யும்மணி கொள்சடையார்
அருமனை என்னும் சிராமலை மாவரை ஆயிழைப்பால்
ஒருமனை விட்(டு)இரும் சூளைசெல் என்பிழை உள்பொறுத்துத்
திருமனை உள்கொளச் சொல்லுக வெள்ளுடைச் சேடியரே.

**குறிப்புரை :** அகத்திணையில் வெள்ளுடைஅணிந்து சேடியை விடுத்தல் என்பது தலைமகள், மகனை ஈன்றதை அறிவிப்பது. குருமனை= தேவகுருவாகிய பிரகஸ்பதியின் மனைவி தாரை. சின்மதி= அற்பச் சந்திரன். மணி= அழகு. அருமனை= சிறந்தவீடு. ஒருமனைவிட்டு= ஒப்பற்ற மனைவியை விட்டு. இரும்சூளைச் சொல்= சிறந்த சூள் - வாக்குறுதி - சொன்ன. உள்பொறுத்து= மனத்தில் பொறுத்துக்கொண்டு. உள்கொள= உள்ளே அழைத்துக்கொள்ள. வெள்ளுடைச் சேடியரே= வெள்ளாடை அணிந்த ஏவல்செய்பவரே.

**பொழிப்புரை :** சேடியரே ! தேவகுருவாகிய பிரகஸ்பதியின் மனைவிதாரையைப் புணர்ந்த அற்பப்புத்தியுடைய சந்திரனையும், தனது அழகிய சடையில் தரித்த சிவபிரானின் சிறந்த வீடாகிய சிராமலைஎன்னும் சிறந்தமலைக்கண் வாழும், ஆராய்ந்து எடுத்த அணிகலன் அணிந்த தலைவியிடம், ஒப்பற்ற மனைவியாகிய உன்னைவிட்டுப் பிரியேன் என்ற என்உறுதிமொழியைக் கைவிட்ட என்பிழையை மனத்தில்பொறுத்துக்கொண்டு அழகிய வீட்டின் உள்ளே அழைத்துக் கொள்ள சொல்லுக.
**இலக்கணக்குறிப்பு :** ஆயிழை - வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. சொல்லுக - வேண்டிக்கோடற் பொருளில் வந்த ககரஈற்று வியங்கோள் வினைமுற்று.

( 421 ) **இதுவும் அது**

நாமகள் என்ன வணவெள் ஒளிசெய் நறுநுதலீர்
மாமகள் என்மனை ஈன்றமை காட்டி மகிழ்ந்(து)அளித்தீர்
பூமகள் என்பிழை கண்(டு)உள் கொளும்சினம் போக்கிஎன்னைத்
தாம்அகம் உற்றே சிராமலை யில்கொளச் சாற்றுவிரே.

**குறிப்புரை :** நாமகள்= கலைமகள். வணவெள் ஒளி= அழகிய வெண்மையான ஒளி. மாமகள்= திருமகள். என்மனை= என்மனைவி. பூமகள்= நிலமகள் போன்றவள் - தலைவி. உள்= மனம். சிராமலையில் தாம் அகம் உற்றே கொள= சிராமலைக்கண்ணதான தமது வீட்டிற்கு நான்வருவதை ஏற்றுக்கொள்ள.

**பொழிப்புரை :** கலைமகளைப்போல் அழகுடன் வெண்மையாக ஒளிரும் மணங்கமழ் நெற்றியுடையவரே ! திருமகள் போன்ற என்மனைவி மகப்பெற்றதைக் கூறி மகிழ்வித்தீர். நிலலமகள் போன்ற அவளை நான்பிரிந்து பரத்தையர்பால் சென்ற என்பிழையை எண்ணி மனத்தில் கொண்ட அவளது சினத்தைப் போக்கிச், சிராமலைக்கண்ணதான தமது வீட்டிற்கு நான்வருவதை ஏற்றுக்கொள்ளுமாறு சொல்லுங்கள்.

( 422 ) **தலைவி நெய்ஆடியது இகுளை சாற்றல்**

குளம்கொண்ட கண்ணர் சிராமலை நாதர் குலவரைமின்
களம்கொண்ட கண்டர் அருளின்ஈந் தாள்ஒரு கான்முளையை
வளம்கொண்ட நன்நெய்யும் ஆடினள் வந்தஉன் வண்மையையும்
உளம்கொண்ட அன்பில் ஓர்ந்தனள் நீர்மைகாண் ஊரவனே.

**குறிப்புரை :** நெய்ஆடியது= மகவீன்றசின்னாகில் எண்ணெய் தேய்த்துக்குளித்ததை. இகுளை= தோழி. குளம்= நெற்றி. குலமின்= உயர்குலத்துமின்னல் போன்றாள் - தலைவி. களம்= நஞ்சுக்கறை. கான்முளை= மகவு. வண்மை= நற்குணம். நீர்மை= இயல்பு.

**பொழிப்புரை :** நல்லியல்புடைய மருதநிலத்தலைவனே ! நெற்றிக்கண்ணர் ஆகிய சிராமலை இறைவராகிய நஞ்சினால் ஏற்பட்ட களங்கமுடையகழுத்தர் அருளால், உயர்குலத்து மின்னல் போன்ற தலைவி ஒரு மகவினை ஈன்றாள். வளமான மணமுடைய எண்ணெயிலும் நீராடினாள். அதனால் காணவந்த உனது நற்குணத்தையும் மனத்தில் கொண்ட அன்புடன் நினைந்தாள்.

( 423 ) **தலைவன் தன்மனத்து உவகைகூர்தல்**

தேட்டுக்கு வந்த மதலையைச் செங்கரம் சேர்த்திமுலைக்
கோட்டுகு வந்தபா லாறுடன் நிற்கஎன் கோமளத்தை
நாட்டுக்(கு) உவந்த சிராமலை பால்கண்டு நான்களித்தல்

ஆட்டுக்(கு) உவந்த சிரகிரி நாதர் அருட்செயலே.

**குறிப்புரை** : தேட்டு= தேடிய செல்வம். மதலை= குழந்தை. முலைக்கோடு= முலைக்காம்பு. பாலாறுடன் நிற்கும்= மிக்க பாலூட்டும். கோமளம்= அழகு. நாட்டுக்கு உவந்த= நாட்டில் சிறந்த. ஆட்டு= கூத்து.

**பொழிப்புரை** : தேடிய செல்வமாகப்பிறந்த குழந்தையைச் சிவந்த கைகளில் ஏந்தி, முலைகாம்பில் சுரக்கும் ஆறுபோன்ற பாலினை ஊட்டும் என்அழகியை, நாட்டில் சிறந்த சிராமலைக்கண் நான் கண்டு களிப்பது, திருக்கூத்தாட்டினால் மகிழும் சிராமலை இறைவனது அருட்செயல் ஆகும்.

**இலக்கணக்குறிப்பு** : தேட்டுக்கு - கு - சாரியை. முலைக்கோட்டுக்கு , நாட்டுக்கு , ஆட்டுக்கு - குகரங்கள் உருபுமயக்கங்கள்.

( 424 ) **தலைவிக்கு அவன்வரல் பாங்கி சாற்றல்**

உப்பு முலையாள் முகமஞ்சள் பூச்சாள் ஒளிரும்ஒரு
செப்பு பெருங்காயத் தேவெள்ளைப் பூண்டுமின் சென்றதனால்
ஒப்பும் ஒருசேய் பிறந்த(து) உணர்ந்(து)இறை உற்றனர்நம்
தப்பும் தவிர்க்கும் சிராமலை யார்வரைத் தம்மனைக்கே.

**குறிப்புரை** : செப்புஒரு பெருஞ்காயத்தே வெள்ளை ......சென்றதனால், உப்புமுலையாள் முகமஞ்சள் பூச்சாள், ஒளிரும் ஒப்பும் ஒருசேய் பிறந்தது..... தம்மனைக்கே என்றுகூட்டுக. செப்பு பெருங்காயத்தே= குறிப்பு உணருமாறு பெரிய உடம்பில். வெள்ளைப் பூண்டு= வெள்ளுடை அணிந்து. ஒருமின்சென்றதனால்= மின்னல் போன்றவள் ஒருத்தி சென்றதால், உப்பும் முலையாள்= பால்கட்டியதால் பருத்த முலையுடைவள். ஒப்பும் ஒரு சேய்= அழகிய ஒருகுழந்தை.

**பொழிப்புரை** : குறிப்புணருமாறு உடம்பில் வெள்ளுடை அணிந்து, மின்னல் போன்றவள் ஒருத்தி சென்றதால், பால்கட்டியதால் பருத்த முலையுடையவளும் மஞ்சள் பூசிய முகத்தவளும் ஆகிய தலைவிக்கு ஒளியும் அழகும் உடைய ஒருகுழந்தை பிறந்ததைத் தலைவன் உணர்ந்து, நம் பிழைகளைத் தவிர்க்கும் சிராமலை நாதரின் மலைக்கண் உள்ள தம்வீட்டுக்கு வந்தார்.

( 425 ) **தலைவி உணர்ந்து தலைவனொடு புலத்தல்**

சடையில் கரந்துபெண் வைத்த சிராமலைச் சங்கரர்தாள்
நடையில் பிறழா(து) உளத்தில் துதிக்கும் நலத்தவரே
உடையில் கரத்தில் பிடிப்(பு)என் விடும்உம் உரம்புணர்வார்
இடையில் செலுமே மகப்பெற்ற பச்சுடல் என்றனுக்கே.

**குறிப்புரை** : பெண்= கங்கை. நடை= வழக்கம். பிடிப்பு என்= பிடிப்பது ஏன். உரம்= வலிமை. புணர்வார் இடையில்= தழுவுகிறவரிடம். செலுமே= செல்லாது - நடக்காது.

**பொழிப்புரை** : தனது சடையில் கங்கையை மறைத்துவைத்த சிவபிரானின் திருவடிகளை, உள்ளத்தில் வணங்கும் வழக்கத்தில் பிறழாத பண்புடையவரே ! என் உடையை, கையைப் பிடிப்பது ஏன் ? விடுங்கள். உமது வலிமை தழுவுகிற என்னிடம் நடக்காது. குழந்தை ஈன்ற பச்சுடல் எனக்கு.

**இலக்கணக்குறிப்பு** : செலுமே - ஏகாரம் எதிர்மறைப்பொருளது.

( 426 ) **தலைவி பாணனை மறுத்தல்**

எண்வளர் மேன்மையன் ராமநா ராயணன் ஏத்திடுசீர்
விண்வளர் மேன்மைச் சிராமலை நாதர் வியன்வரைவாய்ப்
பண்வளர் மேன்மை இசைஇசைப் புன்புலைப் பாணசெல்செல்
மண்வளர் மேன்மையர் ஆரூரர் என்ற மதியுநன்றே.

**குறிப்புரை:** எண்= எண்ணம். வியன்= பெருமை. இசை இசை= இசைபாடும். புன்புலை= அற்பமான - இழிந்த. ஆரூரர்= மருதநிலத்தலைவர். மதி= அறிவு நன்று= கீழானது.

**பொழிப்புரை** : அனைவர் எண்ணத்திலும் வளரும்மேன்மையுடைய ராமநாராயணன் வணங்கும் வானளாவிய மேன்மையுடைய சிராமலை இறைவரது பெருமைபொருந்திய பண்ணினை வளர்க்கும் மேலான இசைபாடும் அற்பமான இழிந்த பாணனே ! போ போ. நீ மருதநிலத்தலைவராகிய இத்தலைவர் மேலானவர் என்று கூறிய உன்அறிவு கீழானதாகும்.

**விளக்கம்** : பாணனை இழித்துக் கூறியது -

" ஈட்டு புகழ்நந்தி பாணநீ எங்கையர்தம்
வீட்டில் இருந்து பாட விடிவளவும்
காட்டில் அழும்பேய்என்றாள் அன்னை பிறர்நரி என்றார்
நாய்என்றாள் தோழி நீஎன் றேன்நான் " ( நந்திக்கலம்பகம் )

( 427 ) **வாயில் மறுக்கப்பட்ட பாணன் கூறல்**

வல்என்ற பூண்முலைத் தோகாய் முனியேல் மனம்கசந்து
சொல்என்ற தெல்லாம் தெழித்தனை மண்டையில் சோரிபொங்கக்

கல்என்ற தும்கொண்(டு) எறிந்தாய் சிராமலைக் காரிகைநீ
செல்என்ற போதே திரும்பாப் பிழைக்(கு)இது செய்தல்நன்றே.

**குறிப்புரை** : வாயில்= தூது. பூண்= அணிகலன். தோகாய்= மயில் போன்றவளே. தெழித்தனை= சினம் கொண்டாய். சோரி= இரத்தம். திரும்பா= திரும்பிவராத. நன்றே= தக்கதாகும்.

**பொழிப்புரை** : சூதாடு கருவிபோன்றனவும் அணிகலன் அணிந்தனவுமாகிய முலைகளுடைய மயில் போன்றவளே ! என்மேல் சினம் கொள்ளாதே ! நீஉன்மனம் கசந்து சொற்களெல்லாம் சொல்லிச் சினம் கொண்டாய். மேலும் என் தலையில் இரத்தம் பொங்கக் கல்லாலும் அடித்தாய். சிராமலைப் பெண்ணே ! நீ என்னைப் போஎன்றபோதே திரும்பிபோகாத என்பிழைக்கு உன்செயல் தக்கதே ஆகும்.

( 428 ) **விறலி வாயில் மறுத்தல்**

விரும்பை விரும்பும் சிராமலைக் கண்யான் மிகவருந்தக்
கரும்பை வெறுத்துமன் வேம்பை விழையும் கணக்கில்கோங்(கு)
அரும்பை நிகர்முலைப் பரத்தையை நாடும் அவர்புகழைப்
பரும்பை அர(வு)அல்குல் சூளைபாற் பாடுக பாடினியே.

**குறிப்புரை** : விறலி= பாடிக்கொண்டே விறல்பட ஆடுகிறவள் - பாடினி. விரும்பை= விரும்புதலை. கணக்கில்= போக்கில். கோங்கு அரும்பு= தென்னங்குரும்பை. அரவு பரும்பை= நாகத்தின் பெரிய படம். சூளை= வேசி - பரத்தை.

**பொழிப்புரை** : பாடினியே ! தன்னை விரும்புகிறவரைத் தானும் விரும்பி அருள்புரியும் சிராமலையில் நான்மிகவும் வருந்த, பெருமைபொருந்திய கரும்பை வெறுத்து வேம்பினை விரும்பும்போக்கில் ( என்னை வெறுத்து ) தென்னங்குரும்பை போன்ற முலையினையுடைய பரத்தையை விரும்பும் அவரது புகழை நாகத்தின் பெரிய படம்போன்ற அல்குலுடைய பரத்தையிடம்போய்ப் பாடு.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

( 429 ) **விருந்தொடு வந்துழிப் பொறுத்தல்கண்டு இறையோன் மகிழ்தல்**

வருந்தா வகைசெய் சிராமலை நாதர் வளவரைவாய்
முருந்(து)ஆம் எனும்நகைக் காரிகை கொண்ட முனி(வு)அகற்றும்
மருந்(து)ஆம் எனவந்(து) இவள்செங் கணைக்(கு)அரு வட்டம்இட்ட
விருந்(து)ஆன(து) என்தவம் என்றே விளம்புவன் மீத்துதித்தே.

**குறிப்புரை** : முருந்துஆன் எனும் நகை= முத்துப்போன்ற பற்கள். செங்கண்ஜ= சினங்கொண்ட கண்அழகு. அருவட்டம்= வலிமையான எல்லை. என்தவம் விருந்து ஆனது. மீத்துதித்து= மிகப்போற்றி.

**பொழிப்புரை** : வருந்தாதவாறு காக்கும் சிராமலை இறைவனது வளமான எல்லையில், முத்துபோன்ற பற்கள் கொண்ட இவளின் சினங்கொண்ட அழகிய கண்ணுக்கு எல்லையிடும் - சினத்தை நீக்கும் மருந்தாக, என்முன்னைத்தவம் விருந்தினர்வழி வந்துசேர்ந்தது என்று மிகவும் போற்றிக்கூறுவேன்.

( 430 ) **விருந்துகண்டு ஒளித்த ஊடல், பள்ளியிடத்து வெளிப்படத் தலைவன், சீறேல் என்று அவள்சீரடி பணிதல்**

தெரியார் மதிநதி சூடும் சிராமலைத் தேவர்உறை
விரிஆர் வரைமயி லேசீறல் உன்தாள் மிகத்தொழுதேன்
உரியார் பிழையை நல்லார் பொறுப்பர் உணர்பெரியோர்
தெரியார் சிறியர் பிழைபொறுப் பார்இது தேருகவே.

**குறிப்புரை** : தெரி ஆர்= ஆராய்ந்து அறிந்து. விரி ஆர்= ஒளிபொருந்திய. சீறேல்= சினங்கொள்ளாதே. மிக= பெரிதும். தெரியார்= நல்லது கெட்டது தெரியாதவர். தேருக= உணர்க.

**பொழிப்புரை** : ஆராய்ந்து அறிந்து பிறை, கங்கை ஆகியனசூடிய சிராமலை இறைவர் எழுந்தருளிய ஒளிபொருந்திய மலையில் வாழும் மயில்போன்றவளே ! உன் கால்களைப்பெரிதும் வணங்குகிறேன். சினம்கொள்ளாதே ! தக்கவர் செய்த பிழையை நல்லவர் பொறுத்துக்கொள்வர் என்பதை உணர்க. நல்லது கெட்டது தெரியாதவர் செய்த பிழையைப் பெரியோர் பொறுத்துக்கொள்வர். இதனை அறிக.

**விளக்கம்** : “ சிறியோர் செய்த சிறுபிழைஎல்லாம் பெரியோராயின் பொறுப்பது கடனே “ ( வெற்றி வேற்கை / நறுந்தொகை. 31 )

( 431 ) இஃது எங்கையர்காணின் **நன்றன்று எனல்**

பிடிதந்த வாமச் சிராமலை நாதர் பிறங்கலிடைப்
படிதந்த நீர்வள ஊர எனைநீ பசப்பிடவே
கடிதந்த வான்சிரத் தால்பணிந் தாய்கால் கரம்பிடித்தாய்
வடிதந்த வேல்விழி எங்கையர் காணில் வரும்துயரே.

**குறிப்புரை** : வாமம் பிடிதந்த= இடதுபாகத்தை உமையம்மைக்குத்தந்த. பிறங்கல்= மலை. படிதந்த= தகுதிவாய்ந்த. பசப்பிட= மயக்க. கடிதந்த வான்சிரம்= சிறப்புடைய மேலான தலை. வடிதந்த= கூர்மையான. எங்கையர்= என் தங்கைமார்.

**பொழிப்புரை** : உமையம்மைக்குத் தன்இடதுபாகம் கொடுத்த சிராமலை இறைவரது மலைக்கண் உள்ள தகுதிவாய்ந்த நீர்வளமுடைய ஊருக்கு உரியவரே ! நீஎன்னை மயக்கவே உனது சிறப்புடைய தலைதாழ்த்திப் பணிந்தாய், கைகளால் என் காலும் பிடித்தாய். இதனைக் கூர்மையான வேல்போன்ற கண்களுடைய என்தங்கைமார் கண்டால் வருத்தம் உண்டாகும்.

**இலக்கணக்குறிப்பு** : கடி - பலகுணம் தழுவிய பண்புச்சொல். எங்கையர் - என்தங்கையர் என்பதன் மரூஉ.

( 432 ) **அங்கு அவர்யாரையும் அறியேன் என்றல்**

தொழுதே வணங்கும் அவர்க்(கு)அருள் ஈசன் சுடர்த்தளியாம்
விழுதேன் ஒழுகும் சிராமலைச் சார்வரை மாமயிலே
அழுதேன் அடியும் தொழுதேன் இரங்கலை யார் உனக்(கு)இப்
பழுதே புகன்றார் தினுமோ பசிக்குப்புல் பாய்புலியே.

**குறிப்புரை** : சுடர்= ஒளி - அருள் ஒளி. தளி= கோயில். விழு= அடையிலிருந்து இறங்கும் . இரங்கலை= மனம் இரங்கவில்லை. பழுது= ( பசப்புவேன் என்ற ) பொய். தினுமோ= தின்னுமோ - தின்னாது.

**பொழிப்புரை** : கைகூப்பித் தொழுது, தலைதாழ்த்தி வணங்குகிறவர்க்கு அருள்புரியும் இறைவனது அருளொளி வீசும் திருக்கோயிலுடையதும், அடையிலிருந்து இறங்கும் தேனொழுகுவதும் ஆகிய சிராமலைசார்ந்த பாறைக்கண் வாழும் அழகிய மயில் போன்றவளே ! உன்மனம் இளக அழுதேன், உன்கால்களிலும் விழுந்து வணங்கினேன். ஆயினும் நீ மனம் இரங்கவில்லை. நான்பசப்புவேன் என்ற பொய்யினை உனக்கு யார்சொன்னார் ? பாயும் புலி தன்பசிக்குப் புல் தின்னாது.

**விளக்கம்** : இதில் புலிபசித்தாலும் புல் தின்னாது என்ற பழமொழி காண்க. இதில் புல் என்ற சொல் ஓரறிவுடைய தாவரத்தை - புல்லினைக் குறிக்காது. புல்= அற்பம். எலிமுதலிய அற்ப உயிர்கள் என்பதே பொருந்தும்.

( 433 ) காமக்கிழத்தியைக் கண்டமை பகர்தல்

மட்டுவார் கூந்தல் இடத்தர் சிராமலை மாண்வரைப்பால்
கட்டுவார் கொங்கை ஒருத்திநம் பாலகனைக் கண்(டு)அணைத்துப்
பெட்டுவார் முத்திட மற்றவள் சிற்றனைப் பெற்றியள்என்(று)
இட்டுவார் வாயணைத் தார்அவர் எங்கையர் என்பவரே.

**குறிப்புரை** : வார்கட்டு கொங்கை. பெட்டு= விரும்பி. வார்முத்து இட= நீண்டநேரம் முத்தமிட. பெற்றியள்= தன்மையள். என்றிட்டு= என்றுசொல்லி. வார்வாய் அணைத்தார்= நேர்மையுடன் கூறி வாய்மூடச்செய்தார்.

**பொழிப்புரை** : மட்டுவார்குழல் அம்மையை இடப்பாகம் கொண்ட சிவபிரானின் சிராமலையின் மாண்புடைய பாறைப்பக்கம் வாழும் கச்சினால்கட்டிய முலையுடைய ஒருத்தி நம்மகனைக் கண்டு தழுவி, நீண்டநேரம் முத்தமிட அவள் இக்குழந்தைக்குச் சிற்றன்னைத் தன்மையுடையவள் என்று என்தங்கைமார் சொல்லிப் பிறர்வாயை அடைத்தார்.

**இலக்கணக்குறிப்பு** : மட்டுவார் கூந்தல் - வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

( 434 ) **தலைவியைப் பாங்கி தணித்தல்**

வெள்ளம் மிசைத்த சடையார் சிராமலை மீவரைப்பால்
கள்ளம்இ லாமல்அன் பர்பல கூறியே கால்பிடித்தும்
உள்ள மிளகாய் ஒருபேச் சுரைக்காய் உயர்அணங்கே
வெள்ளம் இருமுப் பிழைபொறுக் கும்தேர்இம் மேதினிக்கே.

**குறிப்புரை** : வெள்ளம் சடை மிசைத்தார்= கங்கையைச் சடைமேல் தாங்கியவர். மீ= மேன்மை. உள்ளம் இளகாய்= மனம் இரங்கவில்லை. பேச்சு உரைக்காய்= பேசவில்லை. இரு வெள்ளம்= மிகப்பெரிய ஆற்றலுடைய நீர். தேர்= அறிவாயாக.

**பொழிப்புரை** : கங்கையைச் சடைமேல் தாங்கிய சிவபிரானின் சிராமலையாகிய மேன்மை பொருந்திய மலைக்கண், சிறந்தவளே ! உன்அன்பராகிய தலைவர் கள்ளமில்லாமல் பலவாறு சொல்லிக், கால்களைப் பிடித்தபோதிலும் நீ உன்மனம் இரங்கவில்லை; ஒருசொல்லும் சொல்லவில்லை. மிகப்பெரிய ஆற்றலுடைய வெள்ளநீரும் ஒருவன் செய்த பிழையைப் பொறுத்துக்கொளும் என்பதை நீ அறிக. ( நீ உன் அன்பன்பிழையைப் பொறுத்துக் கொள் என்றாள். )

**விளக்கம்** : உள்ளம் இளகாய், பேச்சு உரைக்காய் என்பன; மிளகாய் பேய்ச்சுரைக்காய் என்று இருகாய்களைக் குறிக்கும் தொனியில் அமைந்த நயம்காண்க.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் பிறிதுமொழிதல் அணி.

( 435 ) **தலைமகள் புலவிதணியாளாகத் தலைமகன் ஊடல்.**

ஒட்டாரம் கட்டி உளம்மெலி விக்கும் ஒருசுகம்தான்
மட்(டு)ஆரம் கட்டிப் புனைவார்க்(கு) அருள்சிர மாமலையார்
நெட்(டு)ஆரங் கள்திகழ் வெற்புவிட் டேசுர நீள்நிழல்போல்

தட்டார்அங் கண்தீ செயா(து) உற்ற அஞ்சுகம் தான்அலவே.

**குறிப்புரை :** ஒட்டாரம் கட்டி= பிடிவாதம் பிடித்து. உளம்= பிறர் மனத்தை. மட்டு ஆரம் கட்டி= தேன்பொருந்திய மாலை கட்டி. புனைவார்= சூட்டுகிறவர். நெட்டு= உயரமான. ஆரங்கள்= சந்தனமரங்கள் / கடம்பமரங்கள். சுரம் தட்டாது அங்கண் தீ செய்யாது நிழல்போல் உற்ற அஞ்சுகம் தானலவே. சுரம் தட்டாது= சுரத்தில் வரமறுக்காது. அங்கண் தீ செய்யாது= அழகிய கண்கள் சிவக்காது - சினம்கொள்ளாது. நிழல்போல் உற்ற= நிழல்போல் தொடர்ந்த. அஞ்சுகம் தானல= கிளி நீ அல்லை.

**பொழிப்புரை :** பிடிவாதம் பிடித்துப் பிறர் மனத்தை நோகச்செய்வதும் ஒருவகைச்சுகம் தருவதுதான். தேன்பொருந்திய மலர்மாலை கட்டிச் சூட்டுகிறவர்க்கு அருளும் உயர்ந்த சிராமலை இறைவனது மலையை விட்டு நீங்கி, நீள்சுரம் வர மறுக்காதவளாகவும், சினங்கொள்ளாதவளாகவும் என்னை நிழல்போல் தொடர்ந்த கிளி நீஅல்லை..

( 436 ) **அன்பிலை கொடியையெனத் தலைவனைப் பாங்கி இகழ்தல்**

உய்யக்கொண் டான்மலைக் கும்வட கீழ்ப்பால் உயர்தருபூப்
பெய்யக்கொண்(டு) ஆரும் சிராமலை யார்வெற்ப பேணுநடு
நையக்கொண்(டு) ஆரும் முலைமுன் அமுதா நயந்தனையே
ஐயக்கொண் டார்இலா வேசையர் இன்(று)அமு தாய(து)என்னே.

**குறிப்புரை :** வடகீழ்ப்பால்= வடகிழக்கில். தரு= மரம். ஆரும்= பொருந்தி இருக்கும். நடு= இடுப்பு. நைய= வருந்த. ஆரும் முலை= பொருந்திய முலையுடையளவள். முன் பேணு அமுதா நயந்தனை= முன்னாளில் ஆசைப்பெருக்குடன் அமுதமாக விரும்பினாய். ஐயக் கொண்டார் இலா வேசையர்= கணவன் இல்லாத பரத்தையர். என்னே= வியப்புக்குரியது.

**பொழிப்புரை :** உய்யக்கொண்டான்மலைக்கு வடகிழக்கில் உயரமான மரங்கள் மலர்களைச் சொரியப் பொருந்தி இருக்கும் சிராமலை இறைவனது மலைக்கண் வாழ்கிறவனே ! இடுப்பு வருந்தப் பொருந்திய முலைகளையுடையவளை முன்னாளில் ஆசைப்பெருக்குடன் அமுதமாக விரும்பினாய். கணவர்யாருமில்லாத பரத்தையர் இன்று உனக்கு அமுதமாக ஆனது வியப்புக்குரியது.

( 437 ) **பாங்கி தலைவற்கு மகப்பொறை கூர்ந்தவண்ணம் உரைத்தல்**

பிறைதிகழ் சென்னியர் வாழும் சிராமலைப் பேர்வரைஎம்
விறைதிகழ் மென்குழல் சேய்ப்பொறை கூர்ந்ததும் வேல்வலனே
பொறைதிகழ் பங்கயம் பூத்தது பூகம் பொலிந்ததுமென்
நிறைதிகழ் தெங்கு மலிந்தது தோன்றிற்று நீலமுமே.

**குறிப்புரை :** விறை - விரை = நறுமணம். பூகம்= பாக்குமரம்போன்ற கழுத்து. தெங்கு= தென்னங்குரும்பை போன்ற முலைகள். நிறைமலிந்தது= பருத்தன. நீலம்= உடம்பில் மென்மையான நீலநிறம்.

**பொழிப்புரை :** வேலோச்சுவதில் வல்லவனே ! தலையில் பிறைசூடிய சிவபிரானின் புகழ்வாய்ந்த மலைக்கண் வாழும் நறுமணம் விளங்கும் கூந்தலுடைய தலைமகள் கருவுற்றதும், அவளது பொறுமை விளங்கும் தாமரைபோன்ற முகம் மலர்ந்தது, கமுகுமரம் ஒத்த கழுத்துப் பொலிவுபெற்றது, மென்மையான தெங்கிளங்குரும்பை போன்ற முலைகள் பருத்தன, உடம்பில் மென்மையான நீலம் படர்ந்தது.

**இலக்கணக்குறிப்பு :** விரை என்பது விறை என்றுவந்தது எதுகைநோக்கிய செய்யுள் விகாரம்.

( 438 ) **தலைவன் புதல்வனைக் காண்டல்**

தாக்கும் பிறவியை நீக்கும் சிராமலைத் தற்பரன்தாள்
ஆக்கும் பெருஉளன் ராமநா ராயணன் அன்(பு)அருளில்
தூக்கும் படிதரு நற்கொடை போல் இறை தூப்பொருட்கை
சேக்கும் படிஈந்து பாலனைத் தூக்கித் திகழ்ந்தனவே.

**குறிப்புரை :** தாக்கும்= தன்கைப்படுத்தும். தற்பரன்= பிறரன்றித் தமக்குத்தாமே தலைவன் - சிவபிரான். ஆக்கும்= தனதாக்கும். தூக்கும் படி= கூடுதலாக - மிகுதியாக. சேக்கும்படி தரு. சேக்கும்படி= சிவக்கும் வண்ணம். இறை= தலைமகன். கை ஈந்து= கைகளில் தந்து. தூக்கி= தூக்கிக்கொண்டு.

**பொழிப்புரை :** உயிரைத் தன்னகப்படுத்தும் பிறவியை நீக்கும் சிராமலை இறைவன் திருவடிகளைத் தனதாக்கும் பேருளம்கொண்ட ராமநாரயணன் தனது அன்பு அருள் ஆகியவை காரணமாக மிகுதியாக வழங்கும் சிறந்த கொடையைக் கைசிவக்குமாறு தருவதுபோல்போல், தலைவன் கையில் புதல்வனைத்தர அவன்கைகள் புதல்வனைத் தூக்கிக்கொண்டன.

**விளக்கம் :** பிறவிகள்தோறும் செய்யும் இருவினைகள் மீண்டும் பிறந்து அனுபவிக்க வேண்டியனவே தவிரப் பிறவியை நீக்காவாகலின் தாக்கும் பிறவிஎன்றார். தொடர்புடையார்மாட்டுச் செலுத்துவது அன்பு. தொடர்பிலாரிடத்துச் செலுத்துவது அருள். இருவகையார்க்கும் வாரி வழங்குகிறவன் ராமநாராயணன் என்றார்

**இலக்கணக்குறிப்பு :** இச்செய்யுள் உவமையணி.

( 439 ) **பள்ளியிடத்துத் தலைவி புறம்காட்டக்கண்டு தலைமகன் கூறல்**

பூதப் படையான் சிராமலை நாதன் புகழ்வரைவாய்

ஏதப் படநும் மதன்செய் சமரில் இளைக்கும்எற்குச்
சீதப் பனிவாய் அமுதும் இளநீரும் சேர்த்(து)அணைவை
ஓதப் படுதேன் குழல்வெந்நீர் தந்த(து)என் ஓங்(கு)அணங்கே.

**குறிப்புரை** : பள்ளிஇடம்= படுக்கையறை. புறம்காட்டல்= குப்புறப் படுத்துக் கிடத்தல். ஏதப்பட= துன்புற. சமர்= போர். இளைக்கும்= வருந்தும். எற்கு= எனக்கு. சீதப் பனி வாய்= குளிர்ந்த சொல் பேசும்வாய். இளநீர்= முலை. அணைவை= தழுவுவாயாக. ஓதம்= ஈரம் - நைப்பு. வெந் நீர் தந்தது= புறம் - முதுகு காட்டிப்படுத்த தன்மை. ஓங்கு அணங்கே= பெருமைபொருந்தியவளே.

**பொழிப்புரை** : ஐம்பூதங்களைத் தன்படையாகக் கொண்ட சிராமலை இறைவனது புகழ்வாய்ந்த மலைக்கண், நைப்புடைய தேன்பொருந்திய மலர்சூடிய கூந்தலுடையவளே ! உனது மன்மதன் - காமம் - என்னுடன் செய்த போரில் துன்புற்று வருந்தும் எனக்கு, உனது குளிர்ச்சி பொருந்திய சொற்கள் பேசும் இதழ்அமுதும், முலைகளாகிய இளநீரும் ஒருசேரத்தந்து தழுவுக. பெருமைபொருந்தியவளே ! அவ்வாறன்றி முதுகு காட்டிப் படுத்திருப்பது ஏன் ?

( 440 ) **காமக்கிழத்தி வாயில்வேண்டல்**

நீராய மங்கை தலையேற விட்ட நிமலர்உறை
சீராய வில்என் சிராமலை வெற்(பு)அமர் செந்திருவே
நேராய அன்பர்பால் ஊடல் பொறுத்திடல் நின்கடனே
கூராய எம்போல் அலைநீ தழீக்கொள்உன் கொண்கரையே.

**குறிப்புரை** : வாயில் வேண்டல்= தூதாகி (ஊடலைக் கைவிட) வேண்டுதல். நீராய மங்கை= கங்கை. சீராய வில்= சிறப்புப்பொருந்திய ஒளி. செந்திரு= திருமகள். ஊடல் பொறுத்திடல்= ஊடாதிருத்தல். கூராய தழீக்கொள்= மிகவும் - இறுக - தழுவிக்கொள்.

**பொழிப்புரை** : கங்கையைத் தலையில் வைத்துக்கொண்ட இயல்பாகவே மலமில்லாதவரும், சிறப்புவாய்ந்த ஒளிவடிவினருமாகிய சிவபிரானின் மலைக்கண் வாழும் திருமகளே ! நேர்மையான அன்பருடன் ஊடாதிருத்தல் உன்கடமையாகும். நீ எம்போன்றவள் இல்லை. உன்கணவரை நீ இறுகத்தழுவிக்கொள்.

( 441 ) **பாங்கி வாயில்நேர்வித்தல்**

நீ(டு)அலை சூழ்புவி ஏத்தும் சிராமலை நித்தர்உறை
கா(டு)அலை நீள்வரை வாழும் எமது களிமயிலே
ஊடலை நீட்டிஉன் அன்பரை வாட்டல் உனக்(கு)அழகோ
நாடலை யோஇஃ(து) அரசர் ஒழுக்(கு)ஆகும் நானிலத்தே.

**குறிப்புரை** : நேர்வித்தல்= உடன்படச்செய்தல். அலை= கடல். நித்தர்= என்றும் உள்ளவர். காடு அலை= காடுமிகுந்த. களி= பெருமை. நாடலையோ= எண்ணிப் பார்க்கவில்லையோ. ஒழுக்கு= நடைமுறை.

**பொழிப்புரை** : நீண்டகடல் சூழ்ந்த உலகம் போற்றும் இறைவர் எழுந்தருளியுள்ள, காடுமிகுந்த நீண்ட சிராமலையில் வாழும் பெருமைபொருந்திய மயில்போன்றவளே ! நீ உன் ஊடலை நீட்டித்து அதன்மூலம் உன்கணவரை வாட்டுதல் உனக்கு அழகன்று. உலகில் பரத்தையர் தொடர்பு அரசர்க்கு நடைமுறை என்பதை நீ எண்ணிப் பார்க்கவில்லையோ.

( 442 ) **மகனும் ஆற்றாமையும் வாயிலாகத் தலைமகன் வந்துழித் தலைமகள் எதிர்கோடல்**

பாம்(பு)அலங் காரப் பரமர் சிராமலைப் பண்வரைவாய்க்
கூம்(பு)அலங் கார முலைவிலைக் கோதையர் கூட்(டு)ஒருவி
ஆம்பல்அம் காண்அணி வாய்மகற் புல்லிஇங்(கு) ஆர்ந்தனரால்
தேம்(பு)அலங் காரஆற் றாமையும் சேர்ந்த(து)என் செய்வதுவே.

**குறிப்புரை** : பரமர்- மேலானவர் - சிவபிரான். பண்= சிறப்பு. அலங்காரக் கூம்பு முலை= அலங்காரத்தால் கூம்பிய முலை. முலைவிலைக் கோதையர்= பரத்தையர். ஒருவி= கைவிட்டு. அம்ஆம்பல்காண்= அழகிய செவ்வாம்பல் போன்ற. புல்லி= தழுவி. ஆர்ந்தனர்= வந்தார். தேம்பு= வருத்தும். அலம் காரம்= சஞ்சலம் மிகுதி. என்செய்வது= எதிர்கொள்வதைத் தவிர வேறுவழியில்லை.

**பொழிப்புரை** : நாகத்தை அழகுற அணிந்த சிவபிரானின் சிறந்த சிராமலைக்கண், அழகுபடுத்தியதால் கூம்பிக்காணப்படும் தமது முலையினைக் காசுக்கு விற்கும் பரத்தையர் கூட்டுறவைக் கைவிட்டு, செவ்வாம்பல் மலர்போன்ற அழகிய இதழ்களுடைய மகனைத் தழுவி இங்குவந்தார். வருத்தும் சஞ்சலம் மிகுதியும் என்பால் சேர்ந்தது. எனவே அவரை எதிர்கொண்டு அழைப்பதைத் தவிரவேறு வழிஇல்லை.

( 443 ) **இதுவும் அது**

வெள்ளம் கலந்த சடையார் சிராமலை மே(வு)இடத்தே
கள்ளம் கலந்த கணிகையர் தம்மைக் கழித்(து)இறைவர்
உள்ளம் கலந்த மகனைத் தழுவிஇங்(கு) உற்றனரால்
விள்ளம் கலந்தஆற் றாமையும் பொங்கும் வியப்(பு)இதுவே.

**குறிப்புரை** : மேவு இடம்= பொருந்திய இடம். கள்ளம்= வஞ்சனை. கழித்து= கைவிட்டு. விள்ளம்கலந்த ஆற்றாமை= தழுவிப் புணராத ஆற்றாமை. பொங்கும்= மேன்மேல் மிகும்.

**பொழிப்புரை** : கங்கை பொருந்திய சடையுடையவர் பொருந்திய சிராமலையில், தலைவன் வஞ்சனை கலந்த பரத்தையரைக் கைவிட்டு, தன்மனம் கலந்தமகனைத் தழுவி இங்கு வந்துள்ளார். என்பால், அவரைத்தழுவிப்புணராத ஆற்றமையும் மேன்மேல் மிகுகிறது. இது வியப்புக்குரியது.

**விளக்கம்** : இச்செய்யுளின் ஈற்றடி, " அன்னாய் இதுகொல் காமத்து இயற்கை " என்ற சங்க இலக்கியத்தொடரை நினைவூட்டும்.

( 444 ) **தலைமகன் புணர்ந்து நீங்கியபின் பாங்கியொடு தன்மகனைப்** புகழ்தல்

நிலைப்புற்ற மேன்மைச் சிராமலை யார்வரை நீல்விழியாய்
கொலைப்புற்(று) அராநிகர் அல்குல் பரத்தையர் கூடிஉறை
அலைப்புற்ற சேரியில் சேருமுன் அன்பரை ஆடைபற்றிக்
கலைப்புற்ற சோமன்என் ஆக்கிஇல் தந்தான்எங் கான்முளையே.

**குறிப்புரை** : நீல்= கருங்குவளைமலர். கூடிஉறை= ஒன்றுகூடி வாழும். அலைப்புற்ற= வருத்தந்தரும் அலைப்புற்ற சோமன்= அவிழ்ந்த ஆடை. கான்முளை= மகன்.

**பொழிப்புரை** : என்றும்நிலைத்த மேன்மையுடைய இறைவனது சிராமலையில் வாழும் குவளை மலர்போன்ற விழியுடையவளே ! புற்றில் வாழும் கொலைத்தன்மையுடைய நாகப்படம் போன்ற அல்குலுடைய பரத்தையர் ஒன்றுகூடி வாழும் வருத்தம்தரும் சேரியினை அன்பர் அடையுமுன் அவரது ஆடையைக் கட்டவிழ்ந்த ஆடையாகுமாறு என்மகன் பற்றிஇழுத்து வீட்டுக்குவரச்செய்தான்.

(445 ) **தலைவி தலைவனைப் புகழ்தல்**

பிறைஊர் சடிலர் சிராமலை நாதர் பிறங்கலிடை
நறைஊர் மலர்க்குழல் மானே இறைமிக நல்லவரே
முறைஊர் பரத்தையர் இல்லம் படரினும் உன்முனம்கொள்
பொறைஊர் தரும்அன்பு மாறிலர் கேண்மையும் போற்றினரே.

**குறிப்புரை** : பிறை ஊர் சடிலர்= பிறை ஏறிய சடையுடையவர். பிறங்கல்= மலை. நறை ஊர்= நறுமணம் பொருந்திய. முறை ஊர் பரத்தையர்= சுற்றமுடன் வாழும் பரத்தையர். முன் உன் கொள் பொறை= முன்பு உள்ளத்தில் கொண்ட பொறுமை. ஊர்தரும்= மிகுந்த. கேண்மை= உறவு.

**பொழிப்புரை** : தேன்பொருந்திய மலர்சூடிய கூந்தலுடைய மான்போறவளே ! பிறை ஏறிய சடையுடைய சிராமலை இறைவனது மலைக்கண், சுற்றமுடன் வாழும் பரத்தைரின் வீட்டுக்குச் சென்றபோதிலும், முன்பு மனத்தில் கொண்ட பொறுமையுடன்கூடிய அன்பில் மாறாமல், உறவினையும் போற்றினார். ஆதலின் தலைவர் மிக நல்லவர் ஆவார்.

( 446 ) **பாங்கி தலைவியைப் புகழ்தல்**

திருத்தம் தரும்அருட் பெம்மான் சிராமலைச் செல்வமின்னாள்
வருத்தம் தனைவிடுத்(து) அன்பர் பரத்தை மனையடைந்தும்
பொருந்தத் தன(து)இல் வரலும் வணங்கு புகழ்இதனால்
அருந்தத் தரும்அமு தோ(டு)உற்ற பொன்மகள் ஐயமின்றே.

**குறிப்புரை** : திருத்தம் தரும்= திருத்தமானவாழ்வுதரும். செல்வமின்னாள்= செல்வச்சிறப்புடைய மின்னல் போன்ற தலைவி, பொருந்த= கூடிவாழ. அருந்த= சுவைக்க. பொன்மகள்= திருமகள்.

**பொழிப்புரை** : திருத்தமான வாழ்வுதரும் அருள்வடிவான இறைவனது சிராமலையைச் சேர்ந்த செல்வச்சிறப்புடையவளும் மின்னல்போன்றவளும் ஆகிய தலைவி, தன்கணவன் பரத்தையின் வீடுசென்றபிறகும் பொருந்திவாழத் தனது வீட்டுக்கு வர, அவரை வணங்கிய புகழ்ச்செயல் காரணமாக, சுவைப்பதற்குத் தரும் அமுதத்துடன் வந்த திருமகள் இவள்என்பதில் ஐயமில்லை.

( 447 ) **பாலனைப் பழித்தல்**

மேலாக வேகாண் சிரகிரி வாய்எம் விளங்(கு)இறைஅப்
பாலாக வேதனம் பாலாக வேஆக்கிப் பார்த்(து)எனையே
மாலாக வேசேர்உன் தாதைக்(கு) எனை நஞ்சா மாமதலாய்
கோலாக வேகண்கொள் வேசையைத் தேனுமாய் கூட்டல்என்னே.

**குறிப்புரை** : அப்பாலாக= என்னைப் பிரியவும். தனம் பாலாகவே ஆக்கி= என்முலைகளைப் பால் சுரப்பனவாக்கி. மாலாகவே சேர்= வேட்கையுடன் கூடும். எனை நஞ்சா= என்னை நஞ்சாக - வெறுக்கத் தக்கவளாக - ஆக்கி, மதலாய்= மகனே. கோலாகவே கண்கொள்= தன்னைத் தூண்டிலாகவே பார்க்கும் - நினைக்கும். கூட்டல்= சேர்த்துவைத்தல்.

**பொழிப்புரை** : அனைவரையும் மேலாக்கும்பொருட்டு எண்ணும் சிராமலையில் வாழும் என்கணவன் என்னைப்பிரிய, என்முலைகளைப் பால் சுரப்பனவாக்கி - எனக்குமகனாகப் பிறந்து, முன்னெல்லாம் என்னை வேட்கையுடன் கூடும் உன்தந்தைக்கு என்னை நஞ்சாகவும் - வெறுக்கத்தக்கவளாகவும், தன்னைத் தூண்டிலாகவே நினைத்துப் பிறரைஅகப்படுத்தும் பரத்தையைத் தேனாகவும் நீ ஆக்கியது இரங்கத்தக்கது.

( பரத்தையிற் பிரிவு முற்றிற்று )

## ஓதற் பிரிவு

*********************

### கல்வியிற் பிரிவைப் பாங்கிக்குத் தலைவன் அறிவுறுத்தல்

(448 )
ஆன்ற அரும்பயன் ஆக்கும் அளிக்கும் அடுத்(து)அடுத்தே
தோன்ற வருநீர் உலகில் இசைநனி சூட்டிடும்உள்
ஊன்ற வரும்சீர்ச் சிராமலை வாய்க்கவல் ஓட்டும்இன்னே
ஈன்ற அனையில் அருள்கல்வி ஓர்தல் இனிதுநன்றே.

**குறிப்புரை** : நீருலகில் வருஆன்ற அரும்பயன். இசை= புகழ். கவல் இன்னே= கவலையை இப்பொழுதே . அனையில்= தாயைப்போல். அருள்= உதவும். ஓர்தல்= கற்றல்.

**பொழிப்புரை** : நீர் சூழ்ந்த உலகில்உண்டாகும் மிகச்சிறந்த அரிய பயன்களை அளிக்கும்; மேன்மேலும்புகழினை மிகுதியாகவழங்கும்; மனத்தில் தைக்குவரும் கவலைகளை இப்போதே - உடனே - ஓட்டும்; எனவே பெற்றதாய் போன்று அருளும் கல்விகற்றல் இனியது; நல்லதுமாகும்.

( 449 )

### தலைவிக்குப் பாங்கி அறிவுறுத்தல்

பெற்றது கல்வியில் போதுமென்(று) எண்ணல்பிழை
கற்றது தன்அள(வு) ஊறும் எனச்சொலிக் காரிகையே
பற்(று)அது கொண்டு சிராமலைப் பாங்(கு)உறை பாவலர்பால்
உற்(று)அது கற்க நடந்தார் இறைசுரம் உள்உகந்தே.

**பொழிப்புரை** : பெண்ணே ! கல்வியால் பெற்றஅறிவு போதும் என்று எண்ணுவது தவறாகும். கற்ற அளவு அறிவுஊறும் என்றுசொல்லிக் கற்பதில் பற்றுக்கொண்டு சிராமலைப்பக்கம் வாழும் கற்றவராகிய பாவலரை அடைந்து கல்விகற்கத் தலைமகன் பாலையை மனமுவந்து கடந்து சென்றார்.

**விளக்கம்** : “ என்ஒருவன் சாந்துணையும் கல்லாதவாறு “ என்பது திருக்குறள்.

( 450 )

### தலைமகள் கார்ப்பருவம் கண்டு புலம்பல்

வடித்(து)உரை சொல்சீர் சிராமலை வாய்எனை வைத்(து)அகன்றார்
இடித்(து)உரை மின்னொடு சாபம் வளைத்(து)அம்(பு) இறைத்ததுகார்
பிடித்(து)உரை வில்லொடு மாரன் வெகுண்டான் பிழைப்ப(து)எவன்
படித்(து)உரை கொண்டிடச் சென்றவர் வந்திலர் பைந்தொடியே.

**குறிப்புரை** : உரை வடித்துச்சொல்= பொருளினைத் தெளியுமாறு கூறும். உரை இடித்து= ஒலியுடன் இடிஇடித்து. மின்னொடு சாபம்= மின்னலும் வானவில்லும். எவன்= எப்படி. கொண்டிட= அறிய.

**பொழிப்புரை** : பசிய வளையல் அணிந்தவளே ! பொருளினைத் தெளியுமாறு கூறும்பொருட்டுப் படித்து உரைஅறியச்சென்றவர் வரவில்லை. கார்ப்பருவம் ஒலியுடன் இடித்து, மின்னி, வானவில்லிட்டு மழைத்துளிகளை இறைத்தது. மன்மதன், புகழக்கூடிய கரும்புவில் பிடித்து என்மேல் சினங்கொண்டான். நான் பிழைப்பது எப்படி !

**இலக்கணக்குறிப்பு** : பைந்தொடி - பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

( 451 )

### தலைமகளைப் பாங்கி ஆற்றுவித்தல்

கரைதேர் கலைவலன் ராமநாராயணக் காமன்உரை
தரைதேர் சிராமலை நாதர் விழைந்த தமிழ்க்கடலை
உரைதேர் வரைகண்(டு) இறைமீடல் நம்பால் உரைக்கவன்றோ
திரைதேர் கனம்கருக் கொண்(டு)இவண் வந்தது தேன்மொழியே.

**குறிப்புரை** : கலை கரை தேர்வலன்= கலைகளின் எல்லைவரை தேர்ந்த. சிராமலை நாதர் விழைந்த தரைதேர் தமிழ்க்கடல். தரை தேர்=உலகு ஆராய்ந்த. உரை தேர் வரை கண்டு= உரையில் தேர்ச்சி எல்லைகண்டு. இறைமீடல்= தலைவன் மீண்டுவருதலை. திரை தேர் கனம்= அலையில் - கடலில் நீர்தேர்ந்த மேகம். கருக்கொண்டு= சூல்கொண்டு.

**பொழிப்புரை** : கலைகளின் எல்லைவரை ஆராய்ந்த வல்லவன்ஆகிய ராமநாராயணன் என்னும் மன்மதன் புகழும், சிராமலைநாதர் விரும்பிய உலகு ஆராய்ந்த தமிழ்க்கடலின் உரையில் தேர்ச்சி எல்லை கண்டு தலைவன் மீள்வதைக் கடலில் நீர்தேர்ந்து சூல் கொண்ட மேகம், நமக்குச் சொல்லவன்றோ இங்குவந்தது. ( வருந்தாதே ! அவர் வந்துகொண்டிருக்கிறார் என்று ஆறுதல்கூறினாள் )

( ஓதற்பிரிவு முற்றிற்று )

## காவற்பிரிவு

*****************

### காவற் பிரிவு தலைவன் பாங்கிக்கு அறிவித்தல்

( 452 )
வலம்காக்கும் பண்புயன்ராமநா ராயணன் வாய்மைமிகு

குலம்காக்கும் துய்ய சிராமலை யார்உறை கூர்மறைகொள்
நிலம்காக்கும் மன்னர் உயிர்க்(கு)உறும் அச்சம் நிறைகளத்தும்
பலம்காக்கும் பண்பினில் நீங்கிப் புரத்தல் பா(டு)உடைத்தே.

**குறிப்புரை :** வலம்= வெற்றி. பண்= தகுதி. கூர்மறை கொள்= மிக்கமறைகளின்படி. உயிர்க்கு உறும் அச்சம்= உயிருக்கு நேர்ந்த அச்சம். களம்= இடம். பலம் காக்கும்= வலிமையுடன்காக்கும். பாடு= கடமை.

**பொழிப்புரை :** வெற்றியைக்காக்கும் தகுதிவாய்ந்த தோள்களுடைய ராமநாராயணனின் வாய்மை மிக்க குலத்தைக்காக்கும் தூய சிராமலை இறைவர் வாழும் பகுதியில், மிக்க மறைகளின்படி நாட்டினைக் காக்கும் மன்னனின் உயிருக்கு நேர்ந்த அச்சம்நிறைந்த இடத்தில், அவனது வலிமையைக்காக்கும் பண்பில் இவ்விடம் விட்டுநீங்கி அவனைப்பாதுகாக்கும் கடமை எனக்கு உள்ளது.

( 453 ) **தோழி, தலைவன் காவற்பிரிவு உணர்த்தல்**

பூத்தலைக் கொண்ட சிரகிரி யார்வரைப் பொன்மயிலே
நாத்தலைக் கொண்ட புகழர்மண் காத்தலை நாடிஉனை
நீத்தலைக் கொண்டனர் என்று கலங்கேல் நிணஅயில்வேல்
கோத்தலைக் கொண்(டு)அணி கொள்கைஅ(து) ஆகும் குவலயத்தே

**குறிப்புரை :** பூ= கொன்றைமலர். பொன்= அழகு. நா= புகழ். புகழர்= புகழுடைய அரசர். மண்காத்தல்= நாடுகாத்தல். நீத்தல்= பிரிதல். நிண அயில் வேல்= புலால் மணக்கும் கூரியவேல். கோ= அரசன். அணி கொள்கை= நெருங்கிக் காக்கவேண்டிய கடமை.

**பொழிப்புரை :** கொன்றைமலரினைத் தலையில் சூடிய சிரகிரியானின் மலைவாழ் மயில்ஒத்தவளே ! புகழ்வாய்ந்தமன்னரின் நாடுகாத்தலை விரும்பி, உன்னைப் பிரிந்தார் என்று வருந்தாதே ! புலால் மணக்கும் கூரியவேல் ஏந்திய மன்னரை நெருங்கிக்காத்தல் என்பது இவ்வுலகில் கடமையாகும்.

( 454 ) **தலைமகள் கூதிர்ப்பருவம் கண்டு வருந்தல்**

கனிதிகழ் சோலைச் சிராமலை யன்னநற் காரிகையே
நனிதிகழ் நாடு புரக்க நடந்தனன் நாயகன்தான்
தனிதிகழ் பேதை துணைஇலள் என்றுஒரு தாப்புலிபோல்
பனிதிகழ் வாடையும் வந்தது வந்திலர் பாதகரே.

**குறிப்புரை :** நனி திகழ்= மிக்கு விளங்கும். நாயகன்= தலைவன் - கணவன். தனிதிகழ்= தனியேஉள்ள. பேதை= பெண். தாப்புலி=தாவிவரும் புலி. பனிதிகழ் வாடை= பனியுடன்கூடிய குளிர். பாதகர்= கூடி இராது என்னைபிரிந்த பாவி - தலைவன்.

**பொழிப்புரை :** கனிகள் விளங்கும் சிராமலைபோன்ற அழகியபெண்ணே ! மிக்குவிளங்கும் நாடுகாக்க என்தலைவன் - கணவன் சென்றுள்ளான். தனியேஉள்ள பெண்இவள் துணை இல்லாதவளானாள் என்பதால் தாவிவரும் புலியைப்போல் பனியுடன்கூடிய குளிர்வந்து வாட்டுகிறது. நம்மைப் பிரிந்த பாவி வரவில்லை.

**விளக்கம் :** பனி வாடைக்கொடுமை, கணவனைப் பாதகர் என்று சொல்லவைத்தது.

( 455 ) **தலைமகளைப் பாங்கி ஆற்றுவித்தல்**

முந்தது முந்தது என்னும் சிராமலை மொய்குழல்உன்
நொந்தது நொந்தது கூடல் வளைத்(து)ஒரு நுண்விரலும்
தந்தது தந்தது செந்நீர் அதுதவிர் தாரவர்தேர்
வந்தது வந்தது நின்உளம் இன்னே மகிழ்தரவே.

**குறிப்புரை :** முந்தது முந்தது= முதன்மையானது முதன்மையானது. மொய்= அடர்ந்த. கூடல்வளைத்து= வளைவாகக் கூடல் சுழியிட்டு. நுண்விரலும் செந்நீர் தந்தது தந்தது. செந்நீர்= குருதி. அது தவிர்= இனிமேல் கூடற்சுழி இடாதே. தாரவர்= வெற்றிமாலை சூடிய தலைவர். இன்னே= இப்பொழுது.

**பொழிப்புரை :** முதன்மையானது முதன்மையானது என்று போற்றப்பெறும் சிராமலைவாழ் அடர்ந்த கூந்தலுடையவளே ! கூடற்சுழி இட்டுஇட்டு உனதுமென்மையான விரலில் குருதி வந்துவிட்டது. இனிமேல் கூடற்சுழி இட வேண்டாம். வெற்றிமாலை சூடிய தலைவர் வரும்தேர் இப்போது வந்தது வந்தது.

**விளக்கம் :** கூடல் சுழியிடலாவது : கண்களை மூடிக்கொண்டு, மணலின் சுட்டுவிரலால் பெருஞ்சுழி இட, சுழியின் இருமுனைகளும் ஒன்றுகூடின் தலைவன் விரைவில் வந்துவிடுவான் என்றும், கூடாவிடின் இப்பொழுது வாரான் என்றும் கொள்ளும் ஒருநம்பிக்கை. இதனை வேறுவகையில்; விரலால் மணலில் பெருஞ்சுழியிட்டு, அதனுள் கண்களை மூடிக்கொண்டு இடப்பெறும் சுழிகளின் எண்ணிக்கை ஒற்றைப்படையாயின் தலைவன் தற்போது வாரான் என்றும், இரட்டைப்படையாயின் மிகவிரைவில் வருவான் என்றும் கொள்ளும் நம்பிக்கை.

" கூடல் இழைத்து இழைத்து அங்குலி தேய " ( சிராமலைக்கோவை. 443. )

( காவற்பிரிவு முற்றிற்று )

## தூதிற் பிரிவு

*****************

### தூதிற்பிரிவு தலைவன் பாங்கிக்கு அறிவுறுத்தல்

( 456 )
பேரிரு மன்னர் பொரநின் றனர்மின்னே பேரமரில்
நேரிரு பல்லுயிர் வீயும் சமரை நிறுத்திவிடச்
சீரிரு வர்க்(கு)ஒரு தூதாகி மீள்வன் சிராமலைவாய்
வாரிரு கொங்கை துயர்மாற் றுகநான் வரும்அளவே.

**குறிப்புரை** : பொர= போரிட. பேரமர்= பெரும்போர். நேர் இருபல்உயிர்=நேருக்கு நேர்மோதும் இருவரிடமும் பற்பலர். வீயும்= இறப்பர். சீர் = சிறப்பு.

**பொழிப்புரை** : பெருமன்னர் இருவர் போரிட உள்ளனர். பெரும்போரில் நேருக்கு நேர் இருவரும் மோதும்போது மிகப்பலர் இறப்பார்கள். எனவே போரினை நிறுத்தும்பொருட்டுச் சிறந்தமன்னர் இருவரிடையே தூதுசென்று வருவேன். நன் வரும்வரை , கச்சணிந்த முலைகளுடையவள்படும் பிரிவுத்துயரை மாற்றுக.

( 457 )

### தலைவிக்குப் பாங்கி அறிவுறுத்தல்

செவ்வாய்க் கருங்கண் பெருமுலைச் சிற்றிடைச் செந்திருவே
எவ்வாய்க் கும்ஒரு சுடராம் சிராமலை ஈச்சுரர்முன்
வெவ்வாய்க் கொடுஇரு ளில்தூதாப் பெண்அகம் ஏகியபோல்
தெவ்வாய்க் கனன்றகோக் கட்(கு)எம் இறைதூது சென்றனரே.

**குறிப்புரை** : செந்திரு= திருமகள். எவ்வாய்க்கும் ஒரு= எவ்விடத்துக்கும் ஒப்பற்ற. வெவ்வாய்= கொடுஞ்சொல். பெண்ணகம்= பரவையார் வீட்டுக்கு. தெவ்வாய்க் கனன்ற= பகைவராகத் தம்முள் மனம் கொதித்த. கோக்கட்கு= அரசர்களுக்கு.

**பொழிப்புரை** : சிவந்த இதழ், மைதீட்டிய கருமையானகண், பருத்தமுலை, சிறுத்த இடை ஆகியன கொண்ட திருமகளே ! எவ்விடத்துக்கும் ஒப்பற்ற சுடரான சிராமலைச் சிவபிரான், முற்காலத்தில் சுந்தரரின் கொடுஞ்சொல்லை ஏற்று இருளில் பரவையார் வீட்டுக்குத் தூதுபோனதுபோல், தம்முள் பகைகொண்டு சினந்திருந்த அரசர்கட்கு இடையே எம்தலைவர் தூதுசென்றார்.

**விளக்கம்** : சுந்தரரின் கொடுஞ்சொல்

" நாயன் நீரே நானுமக்குஇங்கு அடியன் ஆகில் நீர்எனக்குத்
தாயின் நல்ல தோழருமாம் தம்பி ரானா ரேயாகில்
தூய அறிவும் இழந்துஅழிவேன் அயர்வு நோக்கி அவ்வளவும்
போய்இவ் இரவே பரவைஉறு புலவி தீர்த்துத் தாரும்என " ( பெரியபு . 3487 )

( 458 )

### தலைவி முன்பனிப்பருவம் கண்டு வருந்தல்

வேந்தர் இரும்பகை அன்பர் உறவாக்க மேயினரே
மாந்தர் இருவினை ஓட்டும் சிராமலை மானுமின்னே
காந்தர் இருமின் பனியாகும் என்பகை கண்டிருந்தும்
சாந்தர் இருப்பினில் நின்றார் பிரிந்தார் தருமநன்றே.

**குறிப்புரை** : இரும்பகை= பெரும்பகை. மேயினர்= சென்றார். மானும்= ஒத்த. காந்த= கணவர். என் இருமின்= என் இருமலுக்கு. பனிபகையாகும். சாந்தர் இருப்பினில் நின்றார்= அமைதியுடையவர் ஆக்குவதில் அமைந்தவர். தருமம்= இயல்பு.

**பொழிப்புரை** : மனிதர்களின் இருவினைகளைஓட்டும் சிராமலைஒத்த மின்னலாக விளங்குகிறவளே ! அரசரிடை ஏற்பட்ட பகையைத்தீர்த்து உறவுகொள்ளுமாறு செய்ய என்தலைவர் சென்றார். எனது இருமலுக்குப் பனிபகையாகும் என்பதறிந்தும் அமைதியுடையவர் ஆக்குவதில் தலைப்பட்டுப் பிரிந்தவர் இயல்பு நன்று.

**விளக்கம்** : தருமம் நன்றே என்றது புகழ்வதுபோலப் பழித்தல் ஆகும்.

( 459 )

### தோழி ஆற்றுவித்தல்

நாவாய் புகழும் சிராமலை நாதர் நளிர்வரைவாய்
கோவாய் வெகுண்டார் பகையை அகற்றிஉள் கூட்டிவைத்துப்
பாவாய் மகிழ்நரும் வந்தனர் வந்தனர் பார்த்துமகிழ்
நோவாய் வருந்தல்இம் முன்பனிக் காக நுடங்(கு)இடையே.

**குறிப்புரை:** நாவாய் புகழும்= நாவால் வாயாரப் புகழும். நளிர்= பெருமை. கோவாய்= தலைமையராக. உள்= மனத்தால். நோவாய்= நோய்க்கண். நுடங்கு இடையே= ஒசியும் இடையுடையவளே.

**பொழிப்புரை** : ஒசியும் இடையுடையவளே ! நாவால் வாயாரப்புகழும் சிராமலையாரின் பெருமைபொருந்திய மலைக்கண், தம்முள் சினங்கொண்டவர் பகையை அகற்றி, மனத்தால் கூட்டியபின் தலைமையராக உன்கணவர் வந்தார் வந்தார். பாவைபோன்றவளே ! அவரைப்பார்த்துமகிழ்க. நோய்காரணமாக வருந்தாதே.

**இலக்கணக்குறிப்பு** : வந்தனர் வந்தனர் - தெளிவு காரணமாக வந்த அடுக்குத்தொடர். வருந்தல் - அல் ஈற்று எதிர்மறை வியங்கோள் வினைமுற்று.

( தூதிற் பிரிவு முற்றிற்று )

## துணைவயிற் பிரிவு

*****************************

( 460 ) **தலைவன் துணைவயிற்பிரிவு பாங்கிக்கு அறிவுறுத்தல்**

நண்பாய மன்னன் துணையாய் அவன்பகை நா(டு)அழித்துப்
பண்டாய வெற்றி பொறுத்துச் சிராமலைப் பால்வருவன்
விண்பாய நின்ற மலைபோல் முலையாள் மிகமெலிந்து
கண்பாய் அம்முத்(து) உதிராவகை செய்தருள் காரிகையே.

**குறிப்புரை :** நண்பு ஆய= நண்பனாகிய. பகை நாடு அழித்து= பகைவனை நாட்டில் அழித்து. பண்டு ஆய= முன்புபோல். பொறுத்து= தாங்கச்செய்து - வாழச்செய்து. அம்கண்பாய் முத்து= அழகிய கண்களில் இருந்து பாயும்கண்ணீர்முத்து.

**பொழிப்புரை :** நண்பனாகிய மன்னனுக்குத் துணையாய் அவனுடைய பகைவனை அவன்நாட்டில் அழித்து, முன்புபோல் நண்பனை வெற்றியுடன் வாழச்செய்து சிராமலைக்கு வருவேன். அதுவரை வானில் பாய்வது போல் நிமிர்ந்த முலையுடையவள் என்பிரிவால் உடல்மெலிந்து கண்ணீர்முத்துச் சிந்தாதபடி பெண்ணே ! செய்தருள்.

**இலக்கணக் குறிப்பு :** இச்செய்யுள் உவமையணி.

( 461 ) **தோழி அதற்கு உடன்படாமல் மறுத்தல்**

பூவாளி ஏந்தி அநங்கன் பொருமாறு பூவையைவிட்(டு)
ஏவாளி ஆகி ஒருகோக்கு வெம்போர்க்(கு) அருந்துணையாய்
நோவாளி ஆக்காச் சிராமலை அன்ன நுவல்தகையே
கோவாளி நோக்கி எழுந்தனை நன்றாம் குறிஉனதே.

**குறிப்புரை :** அநங்கன்= மன்மதன். பொருமாறு= போரிடுமாறு. பூவை= கிளிஒத்த தலைவி. ஏவாளி= ஏவப்பெறுபவராய். கோக்கு= அரசனுக்கு. நோவாளி ஆக்கா= நோயாளியாக ஆக்கி. நுவல் தகையே= போற்றும்தகுதியுடையவரே. கோவாளி= பகையரசன். குறி= குறிக்கோள் - நோக்கம்.

**பொழிப்புரை :** மலரம்புகளை ஏந்தி மன்மதன் போரிடுமாறு கிளிபோன்ற தலைவியை நோயாளியாக விட்டு, பிறரால் ஏவப்பெறுபவராய், ஒரு அரசர்க்குக் கொடிய போருக்கு அரிய துணையாகப் பகைஅரசனை நோக்கிப் புறப்பட்டாய். உன்நோக்கம் நன்று. ( புகழ்வதுபோல் பழித்தல் )

**இலக்கணக்குறிப்பு :** ஆக்கா - செய்யா என்னும் வாய்பாட்டு இறந்தகால வினைஎச்சம்.

( 462 ) **தலைவிக்குப் பாங்கி அறிவித்தல்**

ஐந்தார் முடியார் சிராமலை நாதர் அணிவரைவாழ்
நைந்(து)ஆர் துடிஇடைப் பாவாய் இறைவர்தன் நண்புகொண்ட
மைந்(து)ஆர் திருமன் ஒருவற்(கு) உறுதுணை வண்மைசெயப்
பைந்தார் அணிந்(து)எழுந் தார்பகை நொச்சிஎன் பா(டு)உறுமே.

**குறிப்புரை :** ஐந்தார்= அழகிய மாலை. நைந்து ஆர்= நுண்மையான. திருமன் ஒருவற்கு மைந்துஆர் உறுதுணை வண்மை. திருமன்= சிறந்தஅரசன். மைந்து= வலிமை. வண்மை= உதவி. பைந்தார் = வளமான மாலை. பகை நொச்சி= பகைவரின் மதில்.

**பொழிப்புரை :** உடுக்குப்போல் மிகநைந்த இடையுடைய பாவை ஒத்தளே ! தலையில் அழகிய மாலை சூடிய சிராமலை இறைவனது அழகிய மலைக்கண் தலைவர் தன்நண்பனாகிய ஒருவற்கு வலிமையான உதவிசெய்ய வளமான மாலையணிந்து சென்றார். பகைவரின் மதில் அவரால் படாதபாடுபடும்.

( 463 ) **தலைவி பின்பனிப்பருவம் கண்டு வருந்தல்**

எனையும் பொருளா அருளும் சிராமலை ஈசர்அமர்
நினையும் வரைவாய் பிரிந்தவர் மீண்டிலர் நீள்புவியே
நனையும் படிமுன் பனியும் மகிழ்நர்செல் நா(டு)அழித்தீ
புனையும் புகைபோல் பரவிற்(று) இதற்(கு)என் புகலெனக்கே.

**குறிப்புரை :** நினையும்= போற்றத்தக்க. புவி= தரை. அழித்தீ= அழிக்க இட்ட தீ. புனையும்= சூழ்ந்த.

**பொழிப்புரை :** என்னையும் ஒருபொருளாகக் கருதி அருள்புரியும் சிராமலை இறைவர் எழுந்தருளியுள்ள போற்றத்தக்க மலைக்கண், என்னைப் பிரிந்த தலைவர் மீண்டு வரவில்லை. நீண்ட தரைஎங்கும் நனையுமாறு முன்பனி, பகைவர் நாட்டினை அழிக்க என்கணவர் இட்டதீயால் எழுந்தபுகை போல் பரவியுள்ளது. இதற்கு நான் என்னவென்று சொல்வேன்.

**விளக்கம் :** பகைவர் நாட்டினை வென்றவர், அந்நாட்டவர் தலையெடுக்காதவாறு கழுதை ஏர்பூட்டி உழுது கவடி - வெள்வரகு - விதைத்தலும், தீ இட்டழித்தலும் செய்வர். இதனை,

“.......... ..........................................................................இருங்களந்தோறும்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டி
வெள்ளை வரகும் கொள்ளும் வித்தும்

வைகல் உழவ "　　　　　　　　　　( புறம். 392 )

" முனைசுட எழுந்த மங்குல் மாப்புகை
மலைசூழ் மஞ்சின் மழகளிறு அணியும்
பகைப்புலத் தோனே "　　　　　　　( புறம். 103 )

முதலியன கூறும்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

( 464 ) **தலைவி, பாணனைப் பாசறை விடுத்தல்**

உண்ணீர் மிகுந்த அரசினைக் காக்க உவந்(து)எழுந்த
எண்ணீர் மைஅன்பர் சிராமலை அன்னவர் இன்செவியில்
கண்ணீர் விடுத்துக் கருத்து மெலிந்து கலங்கும்என்றன்
உண்ணீர் மைசொல்லியே மீள்பாண பாசறை உற்(று)இனியே.

**குறிப்புரை** : உண்ணீர்= மனப்போக்கு. எண்ணீர்மை= போற்றத்தக்க. உண்ணீர்மை= மனநிலை. பாசறை= பகைமேற் சென்றோர் தங்குமிடம்.

**பொழிப்புரை** : பாணனே ! நீ இனிமேல் பாசறைக்குச்சென்று, சிறந்த மனப்போக்குடைய அரசனைக்காக்க மகிழ்வுடன் புறப்பட்ட போற்றத்தக்க என் அன்பர்ஆகிய சிராமலை ஒத்தவரின் இனிய காதுகளில், பிரிவால் கண்ணீவிட்டு, மனம்மெலிந்து கலங்கும் எனது மனநிலையைச்சொல்லி வருவாயாக.

( 465 ) **தலைவன் பாணனை வினாதல்**

கூட்(டு)இசை கூர்ந்(து)ஒளிர் ராமநா ராயணன் கும்பிடுகொள்
நீட்(டு)இசை மேய சிராமலை நாதர் நெடுவரைப்பால்
பாட்(டு)இசை தேர்ந்(து)உயர் பாண வருக பரிந்(து)எனக்குக்
கோட்(டு)இசை மாமுலை நுண்ணிடைக் கோதைஎன் கூறினளே.

**குறிப்புரை** : கூட்டு இசை= பலருடன் கூடிப்பாடுதல். கூர்ந்து ஒளிர்= மிகச்சிறந்து ஒளிரும். கோள்= பாடல். நீட்டு இசை= பெரும்புகழ். பாட்டு இசை= பாடலிசையில். கோட்டுஇசை மாமுலை= யானைக்கோடு என்னுமாறு மேல்நோக்கிய அழகியமுலை. என்= என்ன.

**பொழிப்புரை** : கூட்டிசையில் மிகச்சிறந்து ஒளிரும் ராமநாராயணன் வணங்கும் நீண்ட - மிக்க பாடல்கள் பொருந்திய சிராமலை இறைவரின் பெருமலைக்கண், பாடலிசையில் தேர்ச்சிபெற்று விளங்கும் சிறந்த பாணனே ! வருக. யானைகோடுபோல் மேல்நோக்கிய அழகிய முலைகளையும் நுண்ணிய இடையும் உடைய என் மனைவி, கூறிய செய்தியாது.

**விளக்கம்** : கோட்டிசை மாமுலை - வடிவஉவமை.

(466 ) **தலைவனுக்குப் பாணன் கூறல்**

கரும்(பு)ஓது மென்மொழிப் பாவை திருஆர் கவின்சமுகம்
வரும்போது கும்பிட்டுச் செல்ல விடைஅருள் வாய்எனவே
சுரும்(பு)ஓது பண்மலி தாரர் துணைக்குத் தொடுத்(து)அகன்று
பெரும்போது நின்றால் உயிர்போம் தனக்கெனப் பேசினரே.

**குறிப்புரை** : கரும்பு ஓது= கரும்புபோல் இனியது என்னும். திரு ஆர் கவின் சமுகம்= மேன்மை பொருந்திய அழகிய திருமுன்.. சுரும்பு ஓது பண்மலி தார்= வண்டுகள் பாடும் இசைமலிந்த மாலை. தொடுத்து அகன்று= பொருந்திப் பிரிந்து. பெரும்போது நின்றால்= பலநாட்கள் பிரிந்து இருந்தால். தனக்கு உயிர்போம் எனப்பேசினர்.

**பொழிப்புரை** : இசைமிக்க வண்டுகள் மொய்த்துப் பாடும் மாலையணிந்த தலைவர், நண்பரின் துணைக்குப் பொருந்தி என்னைப்பிரிந்து பலநாட்கள் அங்கிருந்தால் தன்உயிர்போய்விடும் என்று கூறினார். எனவே, கரும்புபோல் இனியது என்னும் மென்மொழியுடையவளின், மேன்மை பொருந்திய அழகிய திருமுன் நீ வரும்போது உன்னை வணங்கி விடைபெற எனக்கு அருள்க. ( விரைவில் வரவேண்டும் என்பதைக் குறிப்பால் உணர்த்தினான் பாணன். )

( 467 ) **தலைவன் பாசறைப் புலம்பல்**

நனிவந்த சொல்ஏர்ச் சிராமலை யார்வரை நாட்டில்இப்பின்
பனிவந்த(து) இன்னும் இறைவந் திலர்என் பதைபதைப்பில்
துனிவந்த நெஞ்சில் புலம்பி அழுமே தொழும்விழுமே
கனிவந்த மெல்இதழ்ப் பூங்கொடி அன்னஎன் காதலியே.

**குறிப்புரை** : நனிவந்த சொல்= மிக்க புகழ். ஏர்= அழகு. துனி= துன்பம். கனிவந்த= கனிபோன்ற.

**பொழிப்புரை** : மிக்க புகழ்வாய்ந்த அழகிய சிராமலை இறைவனது நாட்டில் இந்தப்பின்பனி வந்துவிட்டது; ஆனால் தலைவர் இன்னும் வரவில்லை என்ற பதைபதைபில் துன்புற்ற மனத்துடன் கனிபோன்ற மென்மையான இதழ்களுடைய பூங்கொடிஒத்த என்காதலி, புலம்பி அழுவாள், இறைவனை வணங்குவாள், மயங்கிக் கீழேவிழுவாள்.

( 468 ) **தலைவியைத் தோழி ஆற்றுவித்தல்**

திக்கெட்டும் ஓங்(கு)இசை ராமநா ராயணன் சீர்எனமன்
புக்கெட்டும் ஓங்கல் சிராமலை யாரருள் போந்த(து)என
இக்(கு)எட்டு மாச்சொல் கருங்குழால் அன்பர் இனி(து)இவர்தேர்
மிக்(கு)எட்டும் தீப்பனி உண்ணும் இரவியின் மேவியதே.

**குறிப்புரை :** இசை= புகழ். மன் ஓங்கல் சிராமலையார் அருள் எட்டும் புக்குப் போந்தது என. மன் ஓங்கல்= பெருமைபொருந்திய மலை. எட்டும் புக்குப் போந்த்து என= எட்டுத்திசையிலும் புகுந்துவந்தது என்னுமாறு. இக்கு எட்டும் மாச்சொல்= கரும்புபோன்று இனிய அழகிய சொற்கள். இவர்- ஏறிவரும். மிக்கு எட்டும்= மிகுதியாகப் பொழியும். தீப்பனி= கொடும் பனி. உண்ணும் இரவியின் = அழிக்கும் சூரியன்போல்.

**பொழிப்புரை :** கரும்புபோல் இனிய அழகிய சொற்களுடன், கருமையான கூந்தலுமுடையவளே ! எட்டுத்திசைகளிலும் ஓங்கிய புகழுடைய ராமநாராயணனின் சிறப்புப்போல், பெருமை பொருந்திய மலையுடைய சிராமலை இறைவரது பேரருள் எட்டுத்திசைகளிலும் புகுந்து வந்தது என்னுமாறு, தலைவர் ஏறிவரும் தேர், மிகுதியாகப் பொழியும் கொடியபனியை அழிக்கும் சூரியனைப்போல் வந்துவிட்டது.

**இலக்கணக்குறிப்பு :** இச்செய்யுள் உவமையணி.

## பொருள்வயிற் பிரிவு

******************************

( 469 ) **பொருள்வயிற் பிரிவு தலைவன் பாங்கிக்கு அறிவுறுத்தல்**

பொன்னால் அறம்இன்பம் மேவும்நிற் கும்மெனப் பொய்யிலுரை
நன்நா வலர்கள் புகன்றமொழி பொய்யோ நறுவிழியாய்
முன்னா வரும்சிர மாமலைத் தே(வு)அருள் முற்(று)உறவே
மன்ஆ னதைஈட்டி மீள்அள வும்தேற்(று)என் மாதினையே.

**குறிப்புரை :** நறுவிழி= நன்மைபொருந்திய பார்வை. முன்னாவரும்= நினைக்க அருளும். தேவு= தெய்வம் - அருள்தரு தாயுமானவர். அருள் முற்று உறவே= அருளால் முழுமையுற. மன் ஆனதை ஈட்டி= பெருமைக்குரிய செல்வத்தைச் சம்பாதித்து. என்மாதினையே தேற்று.

**பொழிப்புரை :** நன்மைபொருந்திய பார்வையுடையவளே ! பொன்னால் அறமும் இன்பமும் பொருந்தும் என்று உண்மையுரைக்கும் சிறந்த நாவலர்கள் சொன்ன சொல் பொய்யல்ல. நினைக்க அருளும் அருள்தரு தாயுமானவரின் அருளால் பெருமையுடைய பொன்னை முழுமையுறச் சம்பாதித்து, நான் திரும்பிவரும்வரை என்காதலியைத் தேற்றுவாயாக.

**விளக்கம் :** பொருளின் தனிச்சிறப்பு :

" அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள் " ( பொய்யாமொழி. 754 )

" முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னால் முடியும்.. "
( திருக்கோவையார் .332 )

" வடுவிலா வையத்து மன்னிய மூன்றில்
நடுவணது எய்த இருதலையும் எய்தும்
நடுவணது எய்தாதான் எய்தும் உலைப்பெய்து
அடுவது போலும் துயர் " ( நாலடியார். மெய்ம்மை. 4. )

( 470 ) **பாங்கி மறுத்தல்**

நடைக்கனம் கொண்ட இரும்பொன் தனத்தி நயந்திருக்கக்
கொடைக்கனம் கொண்டசீர் ராமநா ராயணன் கொண்டுபுகழ்
விடைக்கனம் கொண்டமெய்த் தேவர் சிராமலை விண்கிரிவாய்
கடைக்கனம் கொண்டபொன் தேடல்என் கற்றவரே.

**குறிப்புரை :** நடைக்கனம்= செல்வமாகிய பொன். இரும்பொன் தனத்தி= பெருமைபொருந்திய பொன்னாகிய செல்வமுடையவள். நயந்து= தன்பால் விருப்புடன். கொடைக்கனம்= கொடுத்தலை மிகுதியாக. விடைக்கனம்= விடையின் பெருமை. விண்கிரி= வானுயர் மலை. கடைக்கனம்= கடைசியானதாக மதிக்கப்பெறும். என்= ஏன்

**பொழிப்புரை :** செல்வமாகிய பொன்னுக்கு உரியவளாய், பெருமைபொருந்திய பொன்னாகிய செல்வத்துக்கு உரிய திருமகள் விருப்புடன் தன்பால் இருக்குமாறு, பிறர்க்குக் கொடுத்தலை மிகுதியாக மேற்கொண்ட ராமநாராயணன் மனத்தில் கொண்டுபுகழ்ந்துகூறும், விடையின் பெருமையால் அதனை ஊர்தியாகக்கொண்ட ஞானவடிவானவனின் சிராமலையில்வாழும் கற்றவரே ! வான்முட்டும் மலையிலிருந்து போய்க், கடையானதாக மதிக்கப்பெறும் பொன்னை தேடுவது ஏன் ?

**விளக்கம் :** செல்வம் என்றசொல், வாழ்வில் இன்பம்தரும் அனைத்தையும் குறிப்பதுடன், அச்சொல் செல் + வ் + அம் என்றும் நின்று தன்மைப்பன்மையைக் குறிப்பதாய், ஓரிடத்தில் நிலைத்திரோம் நிலைமாறிக்கொண்டே இருப்போம் என்றும் பொருள்தரும். எனவேஅது " கடைக்கனம் கொண்டது " என்றார். இதனை " ஆறிடும் மேடும் மடுவும்போல் ஆம் செல்வம் " ; " மிடுக்குற்றுப் பற்றினும் நில்லாது செல்வம் விடுக்கும் வினைஉலந்தக்கால் " முதலிய ஆன்றோர் வாக்குகள் வலியுறுத்தும்.

( 471 ) **தலைவிக்குப் பாங்கி அறிவுறுத்தல்**

முன்னவர் தேடிய வற்றால்செய் நல்லறம் மூதுலகில்
பின்னவர்க் கேபயன் ஈதல் பெரிதிலை பேசின்என்று
சொன்னவர் நம்பாது மாதே சிராமலைச் சூழ்வரைவாய்
மன்னவர் போயினர் பொன்நசை யால்கான் வழிநடந்தே.

**குறிப்புரை** : தேடியவற்றால்= சேர்த்த செல்வத்தால். பெரிதிலை= பெரியசெயல் இல்லை. பேசின்= ஆராய்ந்தால். சொன்னவர்= சொன்ன தலைவர். நம்பாது= முன்னவர் செல்வத்தை நம்பாமல். நசை= விருப்பம். கான்வழி= காட்டுவழி.

**பொழிப்புரை** : முன்னோர் சேர்த்துவைத்த செல்வத்தால் நல்ல அறங்களைச் செய்தால் அது அவர்களுக்கே பயன்தரும். ஆராய்ந்தால் அது பெரிய செயலில்லை என்றுசொன்ன தலைவர் அதை நம்பாமல், தான்தேடியவற்றால் அறம் செய்வதேநல்லது என்பதால், சிராமலையின் மலையைச் சூழஉள்ள காட்டுவழியில் பொன்தேடிவரும் விருப்பத்தால் நடந்துபோனார்.

**விளக்கம்** : தான் ஈட்டியது துய்த்தலும், அறம்செய்தலுமே சிறந்தது என்பதை;

" தம்இல் இருந்து தமதுபாத்து உண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு " ( உலகப்பொதுமறை. 1107 ) என்று வலியுறுத்தும்.

( 472 ) **தலைவி இளவேனில் பருவம் கண்டு புலம்பல்**

நரைஆனின் மீதுஅமர் தோகை யிடத்(து)அமர் நாயகன்வெண்
பிறையானின் வீடாம் சிராமலை அன்னாய் பெருந்தகையார்
முறையானின் வேங்கை கொணரப் பிரிந்தார் மொழிஉருவில்
குறையானின் காளக் குயில்கொக்கில் கூவல்உட் கொண்டிலரே.

**குறிப்புரை** : நரை ஆன்= வெண்மையான் விடை. முறையானின்= முறைப்படி. வேங்கை= பொன். மொழிஉருவில் குறையான் = குரலில் குறைவில்லாததான. காளக் குயில்= கருங்குயில். இன்கொக்கில்= இனிய மாமரத்தில். உட்கொண்டிலர்= நினைத்தாரிலர்.

**பொழிப்புரை** : வெண்மையான விடைமேல் உமையம்மையை இடப்பாகம்கொண்டு அமர்ந்த தலைவனாகிய வெண்பிறை சூடிய சிவபிரானின் இருப்பிடமாகிய சிராமலை ஒத்ததோழியே ! தலைவன் முறைப்படி பொன்சம்பாதித்துவர உன்னைப்பிரிந்து சென்றார். இளவேனில் பருவம் வந்தது என்பதைத்தான் கூவும்குரலின் மூலம் அறிவிக்கும் குறைவில்லாத கருமையான குயில் இனியமாமரத்தில் கூவுவதையும் அவர்தன் மனத்தில் கொள்ளவில்லை.

( 473 ) **தோழி தலைவியை ஆற்றுவித்தல்**

பாஇயம் பும்சீர்ச் சிராமலை யார்குளப் பார்வையினால்
ஏஇயம் பும்விழி மானே முனம்பட்(டு) எழுந்தமதன்
மாஇயம் பும்குயில் காளன் வசந்தன் வளம்பெருகு
பூஇயம் பும்விழா விற்குவந் தார்பொற்குப் போனவரே.

**குறிப்புரை** : பா இயம்பும்= பாடல்கள் புகழும். குளப்பார்வை= நுதற்கண்நோக்கு. ஏ இயம்பும்= அம்பினை ஒத்தது என்று சொல்லும். முனம் பட்டு= முற்காலத்தில் நீறாகி. மா இயம்பும் குயில்= அழகுறக்கூவும் குயில். காளன்= எக்காளமாக உடையவன். வசந்தன்= வசந்தகாலத்துக்கு உரிய மன்மதன். பூ இயம்பும்= பொலிவைப்பறைசாற்றும். பொற்குப் போனவர்= பொன்தேடிச் சென்றவர்.

**பொழிப்புரை** : அம்பு என்னுமாறுள்ள கண்களுடையவளே ! பாடல்கள் புகழும் சிறப்புவாய்ந்த சிராமலை இறைவனின் நுதற்கண்நோக்கால் முற்காலத்தில் நீறான மன்மதன் தோன்றி, அழகுறக் கூவும் குயிலாகிய எக்காளமுடையனான வசந்தனின் வளமைபெருகும் பொலிவைக்கூறும் விழாவிற்கு - காமன் திருவிழாவிற்கு - முன்பு பொன்தேடச் சென்ற தலைவர் வந்துவிட்டார்.

**விளக்கம்** : இன்றும் சிற்றூர்களில் இளவேனிற்காலத்தில் காமன்திருவிழா நடப்பதைக்காணலாம்.

( 474 ) **தலைமகன் தலைமகளது உருவுவெளிப்பாடு கண்டு சொல்லல்**

நிலைதரு துங்கச் சிராமலை யார்அருள் நீர்மையினால்
சிலைதரும் அம்பும் பிறையும் மதியும் திருமழையும்
விலைதரு முத்தும் இருமலை யும்கொண்ட மின்கொடிதான்
தலைதரும் இப்பா சறைஎலாம் தோன்றித் தழைதருமே.

**குறிப்புரை** : உருவு வெளிப்பாடு= மனத்தில் நினைத்துக்கொண்டிருக்கும் பொருள் / தலைவியின் உருவம் நோக்குமிடமெல்லாம் தோன்றுதல். துங்கம்= உயர்வு. அருள் நீர்மை= அருளும்தன்மை. சிலை, அம்பு, பிறை, மதி, மழை = இவை முறையே; புருவம், கண். நெற்றி, முகம், கூந்தல், பற்கள், இருமுலைகள், தலைவி ஆகியவற்றைக் குறித்தன. விலை தரும் - வில் + ஐ + தரும்= ஒளிவீசும். தலைதரும்= தலைசிறந்த. தழைதரும்= செழித்துத் தோன்றும்.

**பொழிப்புரை** : நிலையான உயர்வைத் தனக்கேஉரிய சிராமலை இறைவனது அருளும் தன்மையால், தலைவியாகிய மின்னற்கொடி, விற்களாகிய புருவங்கள் தந்த அம்புகளாகிய கண்கள், பிறையாகிய நெற்றி, முழுநிலவாகிய முகம், கார்மேகமாகிய அழகிய கூந்தல், ஒளிவீசும் முத்துகளாகிய பற்கள், இரு மலைகள் ஆகிய முலைகள் கொண்டு தலைசிறந்த இந்தபாசறை எங்கும்செழித்துத் தோன்றும்.

**இலக்கணக்குறிப்பு :** இச்செய்யுள் உருவகவணி.

**(475 )** **பாசறை முற்றி மீண்டு ஊர்வயின் வந்த தலைமகன் பாகற்கு உரைத்தல்**

எழில்மலி தேர்மிசை ஏ(று)என்றாய் பாக இறங்குகென்றாய்
பொழில்மலி வாசச் சிராமலை நாதர் பொருப்பிடத்தே
தொழில்மலி வாயிலின் விட்டாய் இமைப்பில் தொடுத்தமைபு
கழின்மலி மாநளன் ஒப்பரோ தேர்விடு கைக்(கு)உனையே.

**குறிப்புரை:** பாக= தேர்ப்பாகனே. தொழில்மலி வாயில்= வீட்டின் வேலைபாடு மிக்க வாயில். இமைப்பில் தொடுத்தமை= கண்இமைக்கும் நேரத்தில் தேரோட்டி வீட்டில் விட்டமை.

**பொழிப்புரை :** அழகு மிக்க தேரில் ஏறுக என்று சொல்லி முடித்தஅளவில் சோலைகள் மிகுதியால் மணக்கும் சிராமலை இறைவனது மலைக்கண் வேலைப்பாடமைந்த வீட்டுவாயிலில் இறங்குங்கள் என்று கண் இமைக்கும் நேரத்துக்குள் தேரோட்டி முடித்த உனக்குத் தேரோட்டுவதில் தலைசிறந்த நளனும் ஒப்பாகமாட்டான்.

**இலகணக்குறிப்பு :** இச்செய்யுள் உயர்வுநவிற்சியணி, உவமை விலக்கணியுமாம்.

**( 476 )** **தலைமகளோடு கூடியிருந்த தலைவன் கார்ப்பருவம் கண்டு மகிழ்ந்து உரைத்தல்**

மந்தர நேர்மயில் மாமுலை தோய்ந்து மகிழ்ந்தனமால்
சுந்தர நாதன் கவிகொள் சிராமலைச் சோதிஇறை
சுந்தர நீள்புகழ் ராமநா ராயணன் கைக்கொடைபோல்
அந்தரம் ஆர்மழை பெய்கமன் வாழி அணிஉலகே.

**குறிப்புரை :** மந்தரம் நேர் மாமுலை. மந்தரம்= மந்தரமலை. அந்தரமார்= வானில்பொருந்திய. மன் அணி உலகு= பெருமைபொருந்திய அழகிய உலகம்.

**பொழிப்புரை :** மந்தரமலை ஒத்த அழகிய முலைகளையுடைய மயில்போன்றவளைக் கூடி மகிழ்ந்தோம். சுந்தரநாதன் ஆகிய என் இக்கோவைக்கவிகளை ஏற்ற சிராமலையில் எழுந்தருளியுள்ள ஒளிவடிவான இறைவன் அருளால், அழகிய நீண்ட புகழுடைய ராமநாராயணன் கைகளால் வழங்கும் கொடைபோல் வானத்துமழை பொழிக. பெருமைபொருந்திய அழகிய உலகம் வாழ்க.

**இலக்கணக்குறிப்பு :** மகிழ்ந்தனம் :- தன்மைப்பன்மை வினைமுற்று. பெய்க - வேண்டிக்கோடல் பொருளில் வந்த ககரஈற்று வியங்கோள் வினைமுற்று. இச்செய்யுளில் இருஉவமைஅணிகள் உள.

( திரிசிராமலைக் கோவை முற்றிற்று )

**வாழ்த்து**

வாழி திருசிர மாமலை வாழி மகிழ்சிவன்தாள்
வாழி திருஉமை வாழி மறைநான்கும் வாழிமழை
வாழி திருமன்னன் வாழி திருத்தமிழ் வாழிநிலம்
வாழி திருசிர மாமலைக் கோவையும் மாநிலத்தே.

இதன்பொருள் வெளிப்படை.

**இலக்கணக்குறிப்பு :** இச்செய்யுள் சொல்பொருள் பின்வருநிலையணி.

**தனிவிருத்தம்**

என்தந்தான் என்தந்தான் திரிசிராப் பள்ளிநகர் ஏத்த வந்த
மன்றம்தார் புகழாளன் ராமநா ராயணமால் மகிழ என்பீர்
பொன்தந்தான் பொருள்தந்தான் ஊண்தந்தான் உடைதந்தான் புகழும் தந்தான்
மின்அம்தார் மணிதந்தான் அணிதந்தான் என்(று)என்றே இசைப்பன் யானே.

- அ. சுந்தரநாதன்.

( மணிமின் அம் தார் என்று கூட்டுக ) என்தந்தான்= என்ன கொடுத்தான். மன்றம்= நறுமணம்.

**இலக்கணக்குறிப்பு :** என்தந்தான் என்தந்தான் - அடுக்குத்தொடர்.

**திருச்சிற்றம்பலம்**